# பதஞ்சலி யோகம்

## ஒரு விஞ்ஞான விளக்கம்

**பாகம்-6**

**ஓஷோ**

தமிழில் :
மா கைவல்யப்ரியா





**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை – 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

**PATHANJALIYOGAM : ORU VIGYANA VILAKKAM - 6 (Tamil)**



Originally published in English under the title:
The Alpha and the Omega, Volume - 6


For more information : www.osho.com
A Comprehensive multilingual web site featuring Osho's meditations, books and tapes and an online tour of the meditation resort at Osho Commune International.

For sale in India, Sri Lanka, Nepal, Bangalesh, Bhutan & Maldives only.



| | | |
|---|---|---|
| Translated by | : | **Ma Kaivalyapriya** |
| Coordination by | : | **Dhyan Sanjay** |
| Publishing Editor | : | **S. Chockalingam** |
| First Edition | : | 2006 |
| Second Edition | : | August, 2012 |
| Third Edition | : | 2019 |
| Pages | : | **352** |
| Price | : | **Rs. 350/-** |
| ISBN | : | 81-8345-040-7 |
| Printed at | : | Sree Durga Printers, Chennai |

C8013333

Published by :
**KAVITHA PUBLICATION**
8, Masilamani Street, Pandy Bazaar,
T. Nagar, Chennai - 600 017
Ph: 044-4216 1657 What'sapp : +91-7402222787
e-mail: kavitha_publication@yahoo.com
Website : www.kavithapublication.in

# அறிமுகவுரை

இது பதஞ்சலியின் யோக சூத்திரம் பற்றிய ஒரு நூல்தான், ஆனால், அதைவிட மிகவும் கூடுதலான விசயங்களைக் கொண்டது. முதலாவதாக இதனை கற்றறிவாளருக்கே பொருத்தமான இன்னொரு கட்டுரை என்று எண்ணிவிடக் கூடாது. பகவான் ரஜ்னீஷ் யோகாவின் நிறைவான குறிக்கோளை எட்டியவர் 'என்பதுடன், அந்த இடத்தில் இருந்து கொண்டு அகமுகப் பயணம் பற்றிய பதஞ்சலியின் விஞ்ஞானத்துக்கு விளக்கமளிக்கிறார். உண்மையில் ஆராய்ச்சி முறையெல்லாம் கடந்த ஒருவரால் மட்டுமே கொடுக்கக்கூடிய விளக்கத்தை அவர் வழங்கிக் கொண்டிருக்கிறார். அவருடைய மனத்தால் உணரும் திறனும் உறுதியான நிலையில் இருப்பது. அந்த உறுதிநிலை மனித வலிமையின் எல்லைகளை எல்லாம் கடந்து செல்வதால் அடையப்படுவது. ஆ க, நீங்கள் பதஞ்சலியின் மாணவராக விரும்பினால், அதைத் தொடங்குவதற்கு பகவான் ஸ்ரீ அவர்களுடைய 'தி ஆல்பா அண்ட் ஒமேகா'வைவிடச் சிறந்த இடம் இருக்க முடியாது.

இரண்டாவதாக, இந்நூலில் பாதியளவுக்கு இருப்பது உலகெங்கிலும் இருந்து வந்த பார்வையாளர்களும், பகவான் ஸ்ரீயின் சீடர்களும் எழுப்பிய கேள்விகளுக்கு அவர் வழங்கிய பதில்கள்தாம். இந்தக் கேள்விகள் பதஞ்சலி பற்றியதாக இருக்கலாம் அல்லது இல்லாமலும் இருக்கலாம். அவை மெய்ப்பொருளைத் தேடுகிறவர் களின் கேள்விகள். அவை சாதாரணமான அல்லது அசாதாரணமான பிரச்சினைகளை அறிந்து கொள்ளும் ஆர்வ இயல்புகளை, சத்யம், அமைதி, இறைமை (நீங்கள் எப்படி அழைத்தாலும்) வழியில் உள்ளவர்கள் பற்றிய விசாரணைகளைக் கொண்டது.

இங்கே பகவான் ஸ்ரீ அவர்களை சீடர்களுக்குக் குருவாய் நீங்கள் பார்க்கிறீர்கள். இங்கே பகவான் ஸ்ரீ நம் ஒவ்வொருவருக்கும் விடையளிக்கிறார். மனித சாத்தியத்துக்கு அப்பாற்பட்ட தன்மை

(Transcendence)யே மறுபடியும் விடையளிக்கிறது. தனது முன்னிலையில் வைக்கப்பட்ட சந்தேகங்களை அது ஒரு முடிவுக்குக் கொண்டு வருகிறது. நீங்கள் தேர்ந்து கொள்வதாயின் தலைசிறந்த அதே தன்மையை நீங்களும் அடைய முடியும்.

பதஞ்சலி மற்றும் கடந்த காலத்திய குருமார்களைப் போலெல்லாம் பகவான் ஸ்ரீ எந்தவொரு மார்க்கத்திடமும் தன்னை ஒப்படைத்துக் கொள்ளவில்லை. எனவேதான் அவருடைய உரைகள் வெவ்வேறு மார்க்கங்களை - பதஞ்சலி, புத்தர், ஜென், லாவோட்சு, தந்த்ரா, இயேசு, ஹாஸிடிஸம், சூஃபிஸம் என்று பலவற்றையும் பற்றியதாயிருக்கிறது. எல்லாப் பாதைகளும் அவருடையதுதான். நீங்கள் பகவான் ஸ்ரீயிடம் வந்தால் உங்களுடைய தனிப்பட்ட பாதையும் அவருடையதாகும். உங்கள் பாதையில் அவர் ஒளியாய் இருப்பார். தனக்கேயுரிய தனித்தன்மையைக் கடந்தவராய் அவர் உங்களோடு ஒன்றிவிடுவார், உங்கள் வழியில் உங்களை வழி நடத்துகிறவராய் இருப்பார்.

பதஞ்சலியின் யோக விஞ்ஞானத்தின் அடியாழங்களைத் தொடுவதற்கு இந்நூலை நீங்கள் பயன்படுத்த முடியும். ஆனால், பதஞ்சலியுடனே போல் பகவான் ஸ்ரீயுடனும் நெருங்கிய தொடர்பு கொள்ள நீங்கள் இந்நூலைப் பயன்படுத்திக் கொள்ள முடியும். பதஞ்சலியின் விஞ்ஞானத்தில் நீங்கள் தொடுவது செயல்நுட்பவியலை (methodology)த்தான். எனில், பதஞ்சலியிலும் பகவான் ஸ்ரீயிலும் குறிக்கோளையே நீங்கள் தொட்டு விடுகிறீர்கள்.

பகவான் ஸ்ரீ இன்னமும் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறார். நீங்கள் அவரிடம் வந்தால் அந்தக் குறிக்கோள் உங்களைத் தொட்டுக் கொண்டிருப்பதை அனுபவித்துணர்வீர்கள்.

- சுவாமி பிரேம் சின்மயா

# பொருளடக்கம்

# 1. ஒரு வாழ்க்கை ஒரு கண்ணாடி

ஒரு சமயம் நான் சில நண்பர்களுடன் மலைமேல் இருந்த போது இது நடந்தது. 'எதிரொலி முனை' (எக்கோ பாயின்ட்) என்று சொல்லப்பட்ட இடத்தைப் பார்ப்பதற்காகச் சென்றோம். அதுவும் குன்றுகளால் சூழப்பட்ட, மிகவும் அமைதியான, ரம்மியமான ஓர் இடம். நண்பர்களில் ஒருவர் நாய் போல குரைக்க ஆரம்பித்தார். எல்லாக் குன்றுகளும் எதிரொலித்தன. முழு இடமும் ஆயிரக் கணக்கான நாய்கள் இருப்பது போன்ற உணர்வை ஏற்படுத்தின. பின் மற்றொருவர் பௌத்த மந்திரத்தை ஓத (பாட) ஆரம்பித்தார்: "சாபி சன்கார் அனிச்சா. சாபி தம்மா அனட்டா. கத்தே, கத்தே, பாராகத்தே, பாராசன்கேட். போதி ஸ்வாஹா." குன்றுகள் பௌத்தர்களாகி அதை திரும்ப எதிரொலித்தன. மந்திரத்தின் பொருள்: "எல்லாமே நிலையற்றவை, எதுவுமே நிலையானவை அல்ல. எல்லாமே தொடர்ந்து மாறிக்கொண்டே இருக்கின்றன, எதுவுமே நிலையாக இல்லை. எல்லாமே அகமற்றதாக (மையம் இல்லாததாக) உள்ளன. போயின, போயின, முடிவிலே போயின, எல்லாமே போயின - வார்த்தை, அறிவு, முக்தி நிலையும் கூட.

என்னுடன் இருந்த நண்பர்களிடம் வாழ்க்கை கூட இதுபோல் எக்கோ பாயின்ட்தான் என்று கூறினேன். நீங்கள் குரைத்தால் அதுவும் உங்களைக் குரைக்கும். அழகிய மந்திரத்தை ஓதினீர்களானால், வாழ்க்கை அந்த அழகிய மந்திரத்தின் ஒரு பிரதிபலிப்பாக மாறும். ஒரு வாழ்க்கை ஒரு கண்ணாடி. கோடிக்கணக்கான கண்ணாடிகள் உங்களைச் சுற்றி உள்ளன - ஒவ்வொரு முகமும் ஒரு கண்ணாடியே; ஒவ்வொரு பாறையும் கண்ணாடியே; ஒவ்வொரு மேகமும் ஒரு கண்ணாடியே. எல்லா உறவுகளும் கண்ணாடிகளே. எந்த வழியில் வாழ்க்கையோடு நீங்கள் தொடர்பு கொள்கிறீர்களோ, அந்த முறையிலே அது உங்களைப் பிரதிபலிக்கும். வாழ்க்கை உங்களை

நோக்கி குரைக்கும் போது அதனுடன் கோபம் கொள்ளாதீர்கள். அந்த சங்கிலித் தொடரை நீங்களே ஆரம்பித்து விட்டீர்கள். ஆரம்பத்தில் நீங்கள் ஏதாவது செய்திருப்பதன் காரணமாகவே அதை ஏற்படுத்திக் கொண்டீர்கள். வாழ்வை மாற்றியமைக்க முயல வேண்டியதில்லை; உங்களை மாற்றிக் கொண்டீர்களானால் வாழ்வும் மாறியமையும்.

இவை இரண்டுவிதமான அணுகுமுறைகள்: ஒன்று கம்யூனிஸ்டிக் என்று அதைக் கூறுகிறேன், சொல்கிறேன். அது, "வாழ்வை மாற்றியமை. அதன்பின் தான் உன்னால் மகிழ்வாக இருக்க முடியும்" என்று சொல்கிறது. மற்றொன்று ரிலீஜியஸ் (மத சம்பந்தமானது) என்கிறேன். அது, உன்னை மாற்றிக்கொள், உடனே வாழ்வு அழகிய ஒன்றாகி விடுகிறது" என்கிறது. சமுதாயத்தை, உலகை மாற்ற வேண்டிய தேவையில்லை. அந்த (முதலில் கூறிய) வழியில் செல்வாயானால் தவறான திசையிலே செல்வதோடு அது எங்கும் அழைத்துச் செல்வதில்லை. முதலிலே, அதை உன்னால் மாற்ற முடியாது. அது மிகவும் பரந்தது. இது நடக்கவே முடியாதது. அது சிக்கலான ஒன்று. நீங்களோ இங்கே சிறிது நேரமே உள்ளீர்கள். வாழ்க்கையோ மிகப் பழைமையானது. அத்துடன் எப்போதும், எப்போதுமே இருந்து கொண்டே இருக்கும். நீங்கள் ஒரு விருந்தினனே; ஓர் இரவு தங்குகிறர்கள், சென்று விட்டீர்கள்; கத்தே, கத்தே - போயின, என்றுமே போயின. அதை மாற்றுவதைப் பற்றி எப்படி உங்களால் கற்பனை பண்ண முடியும்?

சுத்த முட்டாள்தனம், வாழ்வு மாற்றப்பட முடியும் என அது சொல்கிறது. அதில் அதிகக் கவர்ச்சி உள்ளது. இந்த கம்யூனிஸ்டிக் நோக்கு முறையில் ஆழமான கவர்ச்சி உள்ளது. அது உண்மை என்ற காரணத்தால் அல்ல - மற்றொரு (மூலம்) ஸ்தானத்திலிருந்து வருகிறது. ஏனெனில் அது உங்களைப் பொறுப்பாளியாக்குவதில்லை, அதுவே அதனிடம் ஈர்ப்பு. உங்களைத் தவிர மற்ற அனைத்துமே பொறுப்பாகிறது. நீங்கள் அதற்கு பலியாகி விட்டீர்கள்." முழு வாழ்வும் பொறுப்பு - வாழ்க்கையை மாற்று" - இது சாதாரண மனத்திற்கு ஈர்ப்பாகிறது. ஏனென்றால் எந்த மனமுமே தன்னை பொறுப்பாளியாக்க விரும்புவதில்லை.

எப்பொழுதெல்லாம் நீங்கள் துக்கத்திலிருக்கிறீர்களோ அப்போது பொறுப்பை மற்றவர் மேல் சுமத்தவே விரும்புகிறீர்கள். யாரேனும் செய்யலாம், ஏதேனும் காரணம் காட்டலாம், ஆனால் பின்

நீங்கள் பாரமற்றவராகி விடுகிறீர்கள். இப்போது நீங்கள் துக்கமாக இருப்பது உங்களுக்குத் தெரிகிறது. ஏனெனில் இந்த மனிதன் அல்லது அந்தப் பெண் அல்லது இந்தவித சமுதாயம், இந்த அரசாங்கம் இந்த சமுதாய அமைப்பு, இந்தப பொருளாதாரம் - எதுவோ - அல்லது முடிவிலே கடவுளே பொறுப்பு அல்லது விதி. இவை எல்லாம் கம்யூனிஸ்டிக் கருத்துகள்; பொறுப்பை அடுத்தவர்கள் மேல் போடும் அந்த வினாடியே நீங்கள் கம்யூனிஸ்ட் வாதியாகி விடுகிறீர்கள். நீங்கள் கம்யூனிஸ்ட் ஆகிவிட்டீர்கள். நீங்கள் மதவாதியே இல்லை.

இறைவன் மேல்கூட பொறுப்பை ஏற்றும் போது நீங்கள் கம்யூனிஸ்ட் ஆகிவிட்டீர்கள். என்னைப் புரிந்துகொள்ள முயலுங்கள். ஏனெனில் கம்யூனிஸ்ட்களுக்கு கடவுள் நம்பிக்கை இல்லை. ஆனால், மற்றவர் மேல் பொறுப்பை சுமத்தும் முழுக் கருத்தும் கம்யூனிஸ்டிக் காகும் - அப்போது கடவுளும் மாற்றப்பட வேண்டும்.

கோயில்களில் மக்கள் இதைத்தான் செய்துகொண்டே இருக்கிறார்கள். அவர்கள் அங்கு போய் பிரார்த்திப்பது கடவுளை மாற்றுவதற்கே. அந்த மக்களெல்லாம் கம்யூனிஸ்ட்டுகளே. அவர்கள் மதம் என்ற போர்வையிலே மறைந்திருக்கலாம். அவர்கள் கம்யூனிஸ்ட்டுகளே, நீங்கள் என்ன பிரார்த்தனை பண்ணுகிறீர்கள்? நீங்கள் கடவுளிடம், “இதைச் செய், அதைச் செய்யாதே”; என்னுடைய மனைவி நோயுற்றிருக்கிறாள். அவளை ஆரோக்கியமாக்கு” என்று சொல்கிறீர்கள். நீங்கள் முழுமையாய் ‘நீயே பொறுப்பு’ என கூறுகிறீர்கள். நீங்கள் முறையிடுகிறீர்கள். ஆழத்தில் உங்கள் பிரார்த்தனை ஒரு முறையீடே. நீங்கள் மிகவும் மரியாதையாகப் பேசலாம், ஆனால் உங்கள் மரியாதை போலியானதே. நீங்கள் அவரை முகஸ்துதி செய்தாலும் உள்ளே “நீயே காரணம் - ஏதாவது செய்” என்பதே.

இந்த மனோபாவத்தை நான் கம்யூனிஸ்ட் மனோபாவம் என்கிறேன். இதன்மூலம் இந்த மனோபாவத்தை, “நான் பொறுப்பாளியல்ல. நான் பாதிக்கப்பட்டவன். முழு வாழ்வுமே பொறுப்பு” என்று குறிப்பிடுகிறேன். மதம் கூறும் மனப்பான்மை “வாழ்வு தெளிவாக பிரதிபலிக்கிறது” என்பதே.

வாழ்வு செய்பவர் அல்லர்; அது ஒரு கண்ணாடி. அது எதுவுமே உங்களுக்குச் செய்வதில்லை, ஏனென்றால் இதே வாழ்க்கை புத்தாவிடம் வேறுவிதமாக நடந்து கொள்கிறது. வாழ்க்கை அதுவே;

அது உங்களிடம் வேறுவிதமாக நடந்து கொள்கிறது. கண்ணாடி அவ்வளவே, ஆனால் நீங்கள் கண்ணாடி முன்பு வரும்போது உங்களுடைய முகத்தை அது பிரதிபலிக்கிறது. உங்களுடைய முகம் ஒரு புத்தரின் முகம் போல் இல்லையென்றால் கண்ணாடியால் என்ன செய்ய முடியும்? புத்தர் கண்ணாடி முன்பு வந்தபோது அது புத்த நிலையை பிரதிபலிக்கிறது.

நான் அந்த மாதிரி அனுபவம் அடைந்ததாலே இதை உங்களுக்குச் சொல்கிறேன். ஒருமுறை உங்கள் முகம் மாற்றமடைந்தால் கண்ணாடியும் மாறுகிறது; ஏனெனில் கண்ணாடிக்கென நிலையான கருத்து கிடையாது. கண்ணாடி அப்படியே எதிரொலிக்கிறது, பிரதிபலிக்கிறது. அது எதுவுமே சொல்வதில்லை. அது அப்படியே காண்பிக்கிறது - அது உங்களைக் காண்பிக்கிறது. வாழ்க்கை துக்ககரமாக இருக்கிறதென்றால் நீங்களே அந்தத் தொடரை ஆரம்பித்தீர்கள். எல்லோரும் உங்களுக்கு எதிராக இருக்கிறார்கள் என்றால் நீங்களே அதை துவக்கினீர்கள். எல்லோருமே பகை உணர்வோடு இருக்கிறார்கள் என்றால் நீங்களே அந்தத் தொடரை ஆரம்பிதீர்கள்.

காரணத்தை மாற்றுங்கள். நீங்களே காரணம். மதம் உங்களை பொறுப்பாளியாக்குகிறது - அதே விதத்தில் உங்களை விடுதலையும் ஆக்குகிறது. ஏனெனில் தேர்ந்தெடுப்பது உங்களது சுதந்திரம். துக்கமாகவோ, சந்தோஷமாகவோ இருப்பது உங்களைப் பொறுத்ததே. யாருமே இதில் செய்வதற்கு ஒன்றுமில்லை. உலகம் அதேவிதமாகவே உள்ளது. நீங்கள் நடனமாடத் துவங்கினால் உலக முழுமையுமே உங்களோடு நடனமாடும்.

அழும்போது தனியாக அழு; சிரிக்கும் போது உலக முழுமையும் உங்களோடு சிரிக்கும் என்பார்கள். இல்லை, அது உண்மையானதல்ல. நீங்கள் அழும்போது உலகம் முழுவதும் அதையே பிரதிபலிக்கும்; நீங்கள் சிரிக்கும்போதுகூட முழு உலகமும் அதையே பிரதிபலிக்கும். நீங்கள் அழும்போது உலகம் முழுவதும் அழவேண்டும் போலவே நினைக்கிறது, நீங்கள் துக்கமாக இருக்கும்போது நிலவைப் பாருங்கள் - நிலவு துக்கமாகவே தெரிகிறது; நட்சத்திரங்களைப் பாருங்கள் - அவை மிகவும் அவநம்பிக்கை கொண்ட (சோர்வுற்ற) மனிதரைப் போல தெரிகின்றன; நதியைப் பாருங்கள் - அது ஓட்டமில்லாமல், உற்சாகமற்று இருண்டிருப்பதாக தெரிகிறது. நீங்கள் மகிழ்வாக

இருக்கும்போது அதே நிலவைப் பாருங்கள் - அது புன்னகைக்கிறது; அதே நட்சத்திரங்கள் நடனமாடுகின்றன; அதே நதி இசையோடு சலசலக்கிறது; எல்லா இருளும் மறைத்து விட்டது.

நரகங்களும், சொர்க்கங்களும் இங்கில்லை. உங்களுக்கு சொர்க்கம் உங்களுள்ளே இருக்கிறதென்றால் அது இதே உலகமே... இங்கு ஒரே உலகம்தான்! வேறு ஒன்றுமில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் உங்களுள் சொர்க்கத்தில் நிறைந்தீர்களானால், உலகம் அதைப் பிரதிபலிக்கும். நீங்கள் நரகத்தில் நிறைந்திருந்தால் உலகத்தினால் உதவ முடியாது, அதையே பிரதிபலிக்கும்.

உங்களுக்கு நீங்களே காரணம் என உணர்ந்தால் மதத்தின் திசையிலே செல்ல ஆரம்பித்து விட்டீர்கள். மதம் தனி மனிதப் புரட்சியையே நம்புகிறது. வேறு எதுவும் கிடையாது - மற்றவை தவறானவையே, போலியான புரட்சிகளே. அவை மாற்றம் ஏற்படுத்து வது போல காணப்படும்; ஆனால் மாற்றம் ஏற்படுத்துவதில்லை. அவை மாற்றத்தைப் பற்றி அதிக பரபரப்பை உண்டாக்கும் - ஒன்றுமே மாறுவதில்லை. நீங்கள் மாறியமையாமல் எதையும் மாற்றுவது என்பது முடியாது.

இந்த சூத்திரங்கள் இந்தப் பொறுப்புகளைப் பற்றியது; தனி மனிதம் பொறுப்புகள். ஆரம்பத்தில் உங்களுக்கு சிறிது பாரமாகத் தோன்றும்; 'நானே பொறுப்பாளி' என்பது, நீங்கள் இந்த பாரத்தை யார் மேலும் சுமத்த முடியாது. ஆனால் நன்றாகத் தெரிந்து கொள்ளுங்கள், நீங்களே பொறுப்பு என்றால் பின் அங்கே நம்பிக்கை உள்ளது. நீங்கள் ஏதாவது செய்யலாம். மற்றவர்கள் பொறுப்பாளிகள் என்றால், அங்கு நம்பிக்கை இல்லை, ஏனெனில் உங்களால் என்ன செய்ய முடியும்? நீங்கள் தியானம் பண்ணிக் கொண்டிருக்கலாம், ஆனால் மற்றவர்கள் தொல்லைகளை உருவாக்குகிறார்கள், நீங்கள் பாதிக்கப்படுவீர்கள். நீங்கள் ஒரு புத்தராகலாம், ஆனால் உலகம் முழுவதும் நரகமாக இருந்து கொண்டிருக்கும். நீங்கள் கஷ்டப்படுவீர்கள். ஆரம்பத்திலே எல்லா சுதந்திரமும் (சுயேச்சையும்) சுமையாகவே உணரப்பட்டது - ஆகவே மக்கள் சுதந்திரத்தைக் கண்டு அஞ்சினர்.

எரிக்ப்ஃரோம் ஓர் அழகிய புத்தகம் எழுதி உள்ளார் - "சுதந்திரத்தின் பயம்" (சுயேச்சையின் பயம்) அதன் தலைப்பு, எனக்குப் பிடிக்கும். மக்கள் சுதந்திரத்தைக் கண்டு ஏன் அதிக பயம் கொள்கின்றனர்? வேறொரு முறையில் ஒருவர் சிந்திக்க வேண்டும்;

அவர்கள் சுதந்திரத்தைக் கண்டு பயப்படக்கூடாது. அதற்கு நேர்மாறாக சுதந்திரத்தை எல்லோரும் விரும்புவதாகவே நினைக்கிறோம். யாரும் அடி ஆழத்திலே சுதந்திரத்தை விரும்புவதில்லை என்பது என்னுடைய கணிப்பும்கூட - ஏனெனில் சுதந்திரம் ஒரு பெரிய பொறுப்பாகும். அப்போதுதான் நீங்கள் பொறுப்பாளியாவீர்கள். பின் நீங்கள் பொறுப்பை அடுத்தவர்கள் தோள்மேல் சுமத்த மாட்டீர்கள். பின்பு உங்களுக்கு எந்த ஆறுதலும் இல்லை. நீங்கள் துன்பமடைந்தால் உங்களது சொந்தக் காரணத்தாலே நீங்கள் உண்டு பண்ணினீர்கள்.

ஆனால், அந்த சுமையின் மூலமாக ஒரு புதிய கதவு திறக்கிறது: அதை நீங்கள் எறிந்து விடலாம். நானே என்னுடைய துக்கத்தை உண்டு பண்ணுகிறேன் என்றால் நானே உண்டுபண்ணுவதையும் விட்டு விடலாம். நான் சைக்கிளை பெடல் செய்துகொண்டே இருக்கிறேன், துக்கத்தோடு இருக்கிறேன், அதோடு களைப்பாகவும் இருக்கிறேன். 'நிறுத்து அதை' என்று தொடர்ந்து சொல்லிக் கொண்டிருக்கிறேன்... அதே சமயம் தொடர்ந்து பெடல் செய்து கொண்டிருக்கிறேன்... நானே பெடல் செய்வதை நிறுத்த வேண்டும், உடனே சைக்கிள் நின்று விடும். யாருமே அதைப் பெடல் செய்வதில்லை.

நீயே பொறுப்பாளி. இதுவே கர்ம வினையின் ஆழமான பொருளாகும். ஒருமுறை நானே காரணம் என்பதை ஆழமாகப் புரிந்து கொண்டவுடனேயே பாதி வேலை முடிந்து விடுகிறது. என்னுடைய சுக, துக்கத்திற்கு நானே பொறுப்பாளியாக இருந்து வந்திருக்கிறேன் என்பதை உணர்ந்தவுடனேயே சமுதாயம், உலகம் இவற்றிடமிருந்து விடுதலையடைந்து விடுகிறீர்கள். இப்போது உங்களுடைய சொந்த உலகத்தை வாழ்வதற்கு தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். இந்த உலகம் ஒன்றே! - நினைவில் கொள்ளுங்கள். ஆனால் இப்போது நீங்கள் தேர்ந்தெடுக்கலாம். நீங்கள் நடனமாடலாம், முழுமையும் உங்களுடன் நடனமாடுகிறது.

பதஞ்சலியினுடைய இந்த சூத்திரங்கள் மிகுந்த அர்த்த முள்ளவை.

யோகியானவன் அஹிம்சையில் ஸ்திரமாக நிலைத்த போது அவன் முன்னிலையில் இருப்பவர்களிடமிருந்து பகை உணர்வு விலகி விடுகிறது.

## சாதனா பாதா (சாதன பாதம்)

*தொடர்ச்சி...*

*35. யோகியானவன் அஹிம்சையில் ஸ்திரமாக நிலைத்த போது, அவனது முன்னிலையில் இருப்பவர்களிடமிருந்து பகை உணர்வு விலகி விடுகிறது.*

*36. யோகியானவன் சத்தியத்தில் ஸ்திரமாக நிலைத்த போதும் செயல் செய்யாத போதும் அதன் பலனை அடைகிறான்.*

*37. யோகியானவன் நேர்மையில் ஸ்திரமாக நிற்கும் போது ஆன்மிகச் செல்வங்கள் தானே வந்தடைகின்றன.*

*38. யோகியானவன் பிரம்மச்சரியத்தில் ஸ்திரமாக நிலைத்த போது வீர்ய லாபமடைகிறான்.*

*39. யோகியானவன் பொருளுடையாமையில் ஸ்திரமாக நிலைத்த போது பிரபஞ்ச இருப்பின் (existence) "எப்படி" "எதன் காரணமாக" என்ற ஞானம் உதயமாகிறது.*

நிறைய விஷயங்கள் அடங்கி உள்ளன. முதலில் இந்தியாவில் நாம் 'அன்பு' என்ற வார்த்தையை ஒருபோதும் உபயோகித்ததில்லை. எப்போழுதுமே 'அஹிம்சை' என்ற வார்த்தையையே உபயோகிக் கிறோம். அஹிம்சா பிரதிஷ்தயம். இயேசு 'அன்பு' என்பதை உபயோகிக்கிறார். மகாவீரர், பதஞ்சலி, புத்தர் ஆகியோர் 'அன்பு' என்ற வார்த்தையை ஒருபோதும் உபயோகித்தது இல்லை. அவர்கள் 'அஹிம்சை' என்பதையே உபயோகித்தனர். ஏன்? 'அன்பு' அதைவிட நல்ல வார்த்தையாகத் தெரிகிறது, அதிக உடன்பாடானது, கவிதை நயமிக்கது... 'அஹிம்சை' அழகற்ற வார்த்தையாகத் தெரிகிறது. எதிர்மறை. அதில் ஏதோ இருக்கிறது. நீங்கள் அன்பு என்று சொல்லும் போது ஒரு நுண்ணிய ஆதிக்கத்திற்கு நகர்கின்றீர்கள். "நான் உன்னை நேகிக்கிறேன்" என்று சொல்லியபோது என்னுடைய மையத்தில் இருந்து உங்களுடையதற்குச் செல்கிறேன். இந்த ஆதிக்கம் அழகியது, ஆனால் ஆதிக்கமே. பதஞ்சலி 'அஹிம்சை' என்கிறார். இது எதிர்நிலை. சாத்வீக நிலை. "நான் உன்னைத் துன்பப் படுத்த மாட்டேன்" என்பதையே நான் சொல்கின்றேன்: அவ்வளவே.

"உன்னை நான் மகிழ்விப்பேன்" என்று அன்பு சொல்கிறது - அது முடியாதது. யாரையும் மகிழ்விக்க யாரால் முடியும். அன்பு வாக்குறுதி அளிக்கிறது. எல்லா வாக்குறுதிகளும் உண்மையல்ல. எப்படி உங்களால் யாரையும் மகிழ்விக்க முடியும்? ஒவ்வொருவரும் அவர்களுக்கு அவர்களே பொறுப்பானால் எப்படி உங்களால் யாரையும் மகிழ்வடையச் செய்ய முடியுமென எண்ண முடியும். "நான் உன்னிடம் அன்பு செலுத்துகிறேன்" என்று சொல்லியபோது, நிறைய வாக்குறுதிகளை உண்டுபண்ணுகின்றேன். அழகிய தோட்டங்களைக் காண்பிக்கின்றேன்... நான் உங்களை கனவுகளை நோக்கி அழைக் கின்றேன். பதஞ்சலி அந்த வார்த்தையை உபயோகிப்பதில்லை; ஏனெனில் ஆழத்திலே நான், "உன்னை மகிழ்விக்கிறேன், என் பக்கத்தில் வா, என்னிடம் நெருங்கி வா, நான் உன்னை மகிழ்விக்கக் காத்திருக்கிறேன்" என்பது முடியாத ஒன்று. யாருமே எவரையுமே

மகிழ்விக்க முடியாது. "நான் உன்னைத் துன்பப்படுத்த மாட்டேன்" என்பதைத்தான் என்னால் சொல்ல முடியும். என்னால், "துன்பப் படுத்தாமல் இருக்க முடியும்" என்பதைச் சொல்ல முடியும். ஆனால், "உன்னை மகிழ்விப்பேன்" என்று எப்படி என்னால் சொல்ல முடியும்.

அதனாலேயே எல்லா அன்புமே ஏமாற்றத்திற்கு எடுத்துச் ெல்கிறது. காதலர்கள் ஒருவருக்கொருவர் உறுதியளிக்கின்றனர் - தெரிந்தோ தெரியாமலோ - அழகிய ரோஜாக்கள், சொர்க்கம்; ஒவ்வொருவரும் உறுதியளித்ததைப் பற்றி எண்ணுகின்றனர் - பின் அது ஒருபோதும் நிறைவேற்றப்படுவதில்லை. உங்களைத் தவிர. யாருமே உங்களை மகிழ்விக்க முடியாது - உங்களைத் தவிர. நீங்கள் காதலிக்க ஆரம்பித்தீர்களானால், ஓர் அழகிய வாழ்க்கை, இன்ப மூட்டுகின்ற, மாயாஜாலம் நிறைந்த உலகம் பெண் கொடுக்கப் போகிறாள் என ஆண் நினைக்கிறான், ஆண் தன்னை முடிவான சொர்க்கத்திற்கு வழிநடததி அழைத்துச் செல்வான் என பெண் எண்ணுகிறாள், யாரும் எவரையும் வழிநடத்த முடியாது. அதனாலே காதலர்கள் ஏமாற்றத்திற்குள்ளாகிறார்கள். போலியான உறுதியளிப்பு. ஒருவரை ஒருவர் ஏமாற்றிக் கொண்டார்கள் என்பதல்ல. தங்களையே ஏமாற்றிக் கொண்டனர். அவர்கள் வேண்டுமென்றே ஒருவரை ஒருவர் ஏமாற்றிக்கொள்ளவில்லை. அவர்களுக்குத் தெரியவில்லை. அவர்கள் என்ன சொல்லிக் கொள்கிறார்கள் என்பதை அவர்கள் உணரவில்லை.

மகாவீரர், புத்தர், பதஞ்சலி அழகற்ற சொல்லை உபயோகிக் கின்றனர். "ஹிம்சை இல்லை" "அஹிம்சை" இது பார்ப்பதற்கு நன்றாக இல்லை. முழுவதும் எதிர்நிலை. அது "ஹிம்சை இல்லை" என்று சொல்லுகிறது, அவ்வளவே. "நான் உன்னைத் துன்பப்படுத்த மாட்டேன்" அந்த அளவே நிறைவேற்ற முடியும். நீங்கள் துன்பப்பட மாட்டீர்கள் என்பதை உறுதியளிக்க முடியாது. இருந்த போதிலும் உங்களுடைய காயத்தை, உங்களுடைய துக்கத்தை நீங்களே உருவாக்கிய காரணத்தால் நீங்கள் துன்பமடைந்ததாக உணரலாம். "நான் அதற்குச் சம்பந்தப்பட்டவன் அல்லன், அதில் நான் பங்குகொள்ள மாட்டேன். நான் துன்பப்படுத்த மாட்டேன்" என்பதைத்தான் பதஞ்சலியால் சொல்ல முடியும்.

"யோகியானவன் ஸ்திரமாக நிலைத்தபோது" அஹிம்சை என்ற மனோபாவத்தில், நான் யாரையும் துன்பப்படுத்துவதில்லை என்றதில் அவனது முன்னிலையில் இருப்பவர்களிடமிருந்து பகைமை உணர்வு

விலகி விடுகிறது. அப்படிப்பட்ட மனிதர் எந்த வகையிலும் சிந்திப்பதில்லை, கனவு காண்பதில்லை. உணர்வுடனோ, உணர்வற்றோ யாரையும் துன்பப்படுத்த வேண்டுமென்ற ஆவலில்லாமல் - அவருடைய முன்னிலையில் பகைமை விலகுதல் என்பது நடைபெறுகிறது. ஆனால் அதை முடிவு செய்யும் முன்பு மிக அதிகமான பிரச்சினைகள் எழுகின்றன.

இயேசு சிலுவையில் அறையப்பட்டார்: பகைமை விலக்கப்பட வில்லை. அதனாலே ஜைனர்களைக் கேட்டீர்களானால் இவர் (இயேசு) ஞானமடையாத காரணத்தால் மக்கள் அவரை சிலுவையில் அறைந்தார்கள் என்பார்கள். ஆனால் மகாவீரருக்கும் அதுவே நடந்தது. அவருடைய நிர்வாணத்திற்குப் பின் கல்லெறியப்பட்டார். புத்தருக்கும் அதுவே நடந்தது - ஆனால் சித்ரவதையல்ல, கல்லெறியப்பட்டார், அவமரியாதைக்குள்ளானார், மக்கள் கொலை செய்ய முயற்சித்தனர். அப்போது இதை எப்படிப் புரிந்து கொள்வது. ஜைனர்கள், பௌத்தர்களுக்கென விளக்கங்கள் உள்ளன. இயேசு சம்பந்தம் என்றால் அவர் ஞானமடையவில்லை. என்பார்கள். மகாவீரரைப் பற்றியதென்றால் முந்தைய வாழ்க்கைகளின் கணக்குகளை முடித்தார் என்பார்கள். இரண்டுமே தவறானவை. ஒருவர் ஞானமடைந்தால் அவர் கணக்குகளை முடித்து விட்டார், எல்லாக் கர்மங்களையும் நிறைவு செய்து விட்டார், அங்கு ஒன்றும் இல்லை.

இருந்தபோதிலும் சில நிகழ்ச்சிகள் உள்ளன; இயேசு சிலுவையில் அறையப்பட்டார். சாக்ரடீஸ் விஷமிடப்பட்டார். அல்-ஹில்லஜ் மன்சூர் மிகக் கொடுமையான முறையில் கொலை செய்யப்பட்டார். மகாவீரர் பல சமயங்களில் கல்லெறியப்பட்டார், அவமரியாதைக்குள்ளாகி கிராமத்திற்கு வெளியே அனுப்பப்பட்டார். புத்தருக்கு பலமுறை கொலை முயற்சி நடந்தன. அப்போது பதஞ்சலியினுடைய சூத்திரத்தை எப்படி விளக்குவது? சூத்திரம் உண்மையானால் இந்த விஷயங்கள் நடந்திருக்கக்கூடாது. இந்த விஷயங்கள் நடந்திருக்கின்றன என்றால் இரண்டு சாத்தியக்கூறுகள் உள்ளன. அல்-ஹில்லஜ் மன்சூர், இயேசு, மகாவீரர், புத்தர் இவர்கள் எல்லாம் ஞானம் அடையவில்லை அல்லது பொது விதியிலிருந்து சில விதிவிலக்காக உள்ளன என்பதாகும். இவை சில விதிவிலக்குகளே.

எப்போது ஒரு மனிதன் அஹிம்சையில் நிலைத்திருக்கிறானோ அப்போது மனிதர்களைத் தவிர வாழ்வு முழுதுமாக அவனிடம்

அஹிம்சையில் இருக்கும். மனிதன் வக்ர புத்தியுள்ளவன், கண்ணாடி தெளிவாக இல்லை. வாழ்வு, மரங்கள், மிருகங்கள் ஒரு புத்தரிடம் அஹிம்சையாக உள்ளன.

புத்தரின் ஒன்றுவிட்ட சகோதரர்களில் ஒருவர் தேவையில்லாமல் அவருடன் போட்டி மனப்பான்மையுடன் இருந்தார். புத்தர் யாருடனும் போட்டியிடுபவர் அல்லர். அவரும் புத்தர் மிகப்பெரிய மனிதராகி விட்டார், நான் ஒன்றுமில்லாதவனாய் பின்தங்கி விட்டேன் எனத் தொடர்ந்து எண்ணி வந்தார். தான் புத்தர் எனச் சொல்லிக் கொள்வதற்காக ஒவ்வொரு வழியிலும் சீடர்களைச் சேகரிப்பதற்கு முயன்றார். யாருமே அவரைக் கவனிப்பதாக இல்லை. ஆனாலும் சில முட்டாள்கள் சேர்ந்தனர். பின் அவர் புத்தரிடம் மிகவும் விரோதமாகிக் கொல்லவும் முயன்றார்.

ஒரு குன்றின் அருகில் ஒரு மரத்தடியில் புத்தர் தியானம் பண்ணிக் கொண்டிருந்த போது புத்தரின் ஒன்றுவிட்ட சகோதரர் தேவதத்தர் குன்றின் மேலிருந்து பெரிய பாறை ஒன்றை உருளச் செய்ததாகச் சொல்லப்படுகிறது. புத்தர் நசுங்கி விடுவதற்கான சாத்தியக்கூறு இருந்தது. ஆனால் எப்படியோ பாறை தன்னுடைய பாதையை மாற்றிக் கொண்டது. புத்தர் தொடப்படாமல் அப்படியே இருந்தார். யாரோ ஒருவர் என்ன நடந்தது எனக் கேட்க புத்தர், "ஒரு பாறை எனது சகோதரன் தேவதத்தனைவிட இரக்கம் கொண்டு பாதையை மாற்றிக் கொண்டான்" என்று கூறினார்.

மதம் பிடித்த யானை ஒன்று தேவதத்தரால் புத்தருக்கு எதிராக வெளியனுப்பப்பட்டது. யானையோ மதம் பிடித்தது; வேகமாக பாய்ந்து சென்றது. சீடர்கள் புத்தரை முழுவதுமாக மறந்துவிட்ட நிலையில் தப்பிவிட்டனர். புத்தர் தொடர்ந்து அமைதியாக மரத்தடியில் அமர்ந்திருந்தார். யானை அருகில் வந்தது - என்னவோ நடந்தது - புத்தருடைய பாதங்களில் தலைவணங்கியது. "என்ன நடந்தது?" என மக்கள் கேட்க, புத்தரும், "ஒரு மதம் பிடித்த யானைகூட தேவதத்தரைப் போல அவ்வளவு மதம் இல்லை. இந்த மதம் பிடித்த யானையிலும்கூட ஏதோ கொஞ்சம் பகுத்தறிவு மீதம் உள்ளது" என்றார்.

சிறந்த மனோதத்துவ நிபுணர்களில் ஒருவரான டெல்காடோ (Delgado) மனித மூளையைப் பற்றி ஆழ்ந்த ஆராய்ச்சி செய்து வந்தார். அவர் எலக்ரோட்ஸ் (electrodes) என்பவற்றுடன் ஆராய்ச்சி செய்ய

முயன்று கொண்டிருந்தார். யானை நின்று தலைவணங்கிய போது அதுபோல ஏதாவது நடந்திருக்க வேண்டும். டெல்காடோ (Delgado) ஓர் எருதுவின் மூளையில் எலெக்ரோட்ஸ் (electrodes) வைத்தார். அவை எங்கிருந்தாவது ரேடியோ, வயர்லெஸ் (radio, wireless) மூலமாக இயக்கப்பட முடியும். அவர் விசையை அழுத்தினார். இதைக் காணுவதற்காக ஆயிரக்கணக்கான மக்கள் திரண்டிருந்தனர். பின் அவர் விசையை அழுத்தியதன் மூலமாக மூளையில் எங்கிருந்து கோபம் எழுகிறதோ அந்த மையத்திற்கு உந்துதல் கொடுத்தார். அந்த எருது கோபமும், பைத்தியமும் அடைந்தது. அது மூர்க்கத்துடன் டெல்கோடாவை (Delgoda) நோக்கிப் பாய்ந்து சென்றது. மக்கள் மூச்சற்ற நிலையில் பார்த்துக் கொண்டிருந்தனர். ஏனென்றால் ஓர் அடி தூரத்திலே உறுதியாக மரணம் உள்ளது. டெல்காடோ மற்றொரு விசையை அழுத்தவும் உடனடியாக உள்ளே என்னவோ நடைபெற எருது நின்றுவிட்டது - ஓர் அடி தூரத்தில், மரணம் ஓர் அடி தூரத்தில்.

டெல்காடோ (Delgoda) மின்சாரக் கருவியின் மூலம் இதைச் செய்தார். ஆனால் அதே சாத்தியக்கூறுகள் உள்ளன; புத்தர் ஒன்றும் செய்யாத போதும் இது நடந்தது - ஆழ்ந்த அஹிம்சையானது அந்த யானையின் மூளையிலிருந்த எதையோ இயக்கியதால் அது பைத்தியமாக இல்லை, புரிந்து கொண்டது, உணர்ந்தது; தலை வணங்கியது.

மனித இனம் சரியான கண்ணாடியாக இல்லை. எதிரொலிப்பதில் குன்றுகள் போல தூய்மையாக இல்லை. மனித இனம் வக்ரமாக உள்ளதால், சாத்தியக்கூறுகள் உள்ளன. இயேசு ஞானமடைந்தவர் என்பதை மறுப்பதற்கான எந்த விளக்கமும் முற்பிறவிகளிலும் நான் காணவில்லை. விளக்கம் இதுவே. வாழ்வு உயிரோட்டமுள்ளதாக இருக்கும். போதே தன்னைப் பிரதிபலிக்க முடியும். மனிதன் உயிரற்ற நிலையில் உள்ளான்; நீங்கள் அதிகம் உணர்வோடு இருப்பதில்லை. அப்படி உணர்வோடு இருந்தாலும் ஒரு புத்தரை சந்திக்க வந்தால் - நீங்கள் அதிகம் உணர்வோடு இருப்பதில்லை. அவரும் மற்றவர்களைப் போல அதே எலும்புகள், அதே தோல், அதே உடல் கொண்டவர் என்றே சொல்லுகிறீர்கள் - எல்லை அதேதான் - ஆனால் அந்த எல்லையில் உள்ள அந்தச் சுடர் யார்?

உங்களுள் உள்ள அதை உணர்ந்த போதே உங்களால் உணர முடியும், உங்களுள் உள்ள புத்த நிலையை (Buddhahood) அறிந்து

கொண்ட போதே ஒரு புத்தரை உங்களால் கண்டு கொள்ள முடியும். அங்கிருந்து பாலம் ஏற்படுகிறது. உங்களுக்குள் புத்த நிலையை, தெய்விகத்தை உணரவில்லை என்றால் ஒரு புத்தரை தெரிந்து கொள்வது, அவருடைய அஹிம்சையை, அவருடைய மாற்றத்தை, உங்களுடைய பைத்தியக்காரத்தனத்தின் பகுதியில்லை என்பதைத் தெரிந்து கொள்வது என்பது முடியாது.

அதனாலேதான் வக்ர புத்தி கொண்ட மனிதர்களால் மகாவீரர் கல்லெறியப்பட்டார். ஓர் இயற்கை நியதி அவர்களுடன் செயல்படவில்லை: மற்ற வகையில் நியதி முழுதும் சரியானதே. நீங்கள் அமைதியோடு ஒரு புத்தரின் முன்னிலையில் வந்தீர்களானால் திடீரென உங்களுள் ஏற்படும் ஒரு மாற்றத்தை உணர்வீர்கள். உங்களால் பகை உணர்வுடன் இருத்தல் என்பது முடியாது.

அதனால்தான் ஒரு புத்தரின் முன்னிலையில் வருவதற்கு பயம் இருக்கிறது. அவரிடம் இருந்து தொலைதூரத்தில் உள்ளபோது பகைமை உணர்வோடு இருக்கின்றீர்கள். அவர் முன்பு எதிரெதிராக வந்தபோது அது மிக மிகக் கடினமாகி விடுகிறது. நீங்கள் அவர் முன்னிலையில் இருந்தால், பைத்திய நிலையில் இருந்தாலும் அவருடைய முன்னிலை காந்த சக்தியாக வேலை செய்யும் சாத்தியம் உள்ளது. நீங்கள் உங்களது எல்லா முட்டாள்தனங்களிலிருந்தும் மாறிவிடுவதோடு உள்ள முழுத்தன்மையுமே மாற்றமடையக் கூடிய சாத்தியக்கூறுகள் உள்ளன. அதனாலேதான் மகாவீரர், புத்தர், இயேசு, லாவோத்சு ஆகியவர்களை மக்கள் எப்போதுமே தவிர்க்கின்றனர். அவர்கள் அருகில் மக்கள் செல்வதில்லை. பொது இடங்களில் அவர்களைப் பற்றிய விஷயங்களை சேகரித்துக் கொண்டு அதில் நம்பிக்கை கொள்ள ஆரம்பித்து விடுகின்றனர். என்ன நடந்தது என்பதை அவர்கள் சென்று பார்ப்பதில்லை.

அவர்கள் அருகில் வருகின்றபோது, மக்கள் தங்களைச் சுற்றி அபத்தமான, அர்த்தமற்றவற்றைச் சேகரித்துக் கொள்வதோடு, உயிரற்ற நிலையில் இருக்கின்றனர். அவர்களுக்கென நிலையாக நிறைய கருத்துகளைக் கொண்டுள்ளதால், அவர்களுடைய கண்ணாடி இதற்கு மேல் வேலை செய்வதில்லை. அவர்களுடைய கண்ணாடி தூசியினால் மூடப்பட்டுள்ளது. ஒரு கண்ணாடி பிரதிபலிக்கும். ஆனால் தூசியினால் மூடப்பட்டிருக்கும் போது நீங்கள் உங்கள் முகத்தைப் பார்த்துக்கொண்டே இருந்தாலும் உங்கள் முகம் பிரதிபலிப்பதில்லை.

மிருகங்கள், மரங்கள், பறவைகள் கூட புரிந்து கொண்டுள்ளன. புத்தர் நிர்வாணமடைந்தபோது பூக்கும் காலம் இல்லாத போதும் பூக்கள் மலர்ந்திருந்தன எனச் சொல்லப்படுகிறது. இது புத்தருக்கு மட்டும் நிகழவில்லை. பல சமயங்களில் இது நடந்துள்ளது. இது இல்லாத ஒன்றல்ல (கட்டுக்கதையல்ல) மரங்கள் மிகவும் மகிழ்ச்சி அடைந்தன. ஆகவே பௌத்தர்கள் போதி மரத்தைப் பாதுகாத்து வருகின்றனர். அதனடியில்தான் புத்தர் நிர்வாணமடைந்தார். உலகில் நடைபெற்ற மிகச்சிறந்த நிகழ்ச்சிகளில் ஒன்றை அது கண்கூடாகக் கண்டது. கண்கூடாகக் கண்டவற்றில் இது ஒன்றே விட்டுவிடப்பட்டுள்ளது. நிர்வாணமடைந்த அந்த இரவில் புத்தருக்கு என்ன நடந்தது என்ற உண்மையான சரித்திரத்தைத் தொடர்ந்து சுமந்து வந்து கொண்டிருக்கிறது.

போதி மரம் உலகத்திலேயே மிகவும் புத்திசாலியானது என இப்போது விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். அதனிடம் உள்ள இரசாயனப் பொருள்கள் புத்திசாலித்தனத்திற்கு மிகவும் அவசியமானவை, அவை இல்லாமல் மனம் புத்திசாலித்தனமாக இருக்க முடியாது. மற்ற மரங்கள் போதி மரங்களைப் போல் கிடையாது. இதுதான் உலகத்திலேயே புத்திசாலியான மரமாக இருக்கலாம். புத்தர் மற்றொரு கோணத்தில் மலர்ச்சியடைந்ததை கண்கூடாகக் கண்டது. வாழ்வின் முழுமையில் ஒரு தலைசிறந்த சிகரமான காலத்தை அது அறிந்துள்ளது.

ஆனால், மனிதனின் கண்ணாடி நம்பிக்கைகள், கொள்கைகள் என்று தூசிகளால் மூடப்பட்டுள்ளது.

இப்போது இரண்டு மூன்று தினங்களுக்கு முன்பு ஒரு குடும்பம் சந்நியாசம் எடுத்துக் கொண்டது. குடும்பத்திலிருந்த சிறிய பையனும்கூட சந்நியாசம் எடுத்துக் கொண்டான். மிக அழகிய பெயர்களில் ஒன்றான சுவாமி கிருஷ்ண பாரதி என்பதைக் கொடுத்தேன். ஆனால் கிருஷ்ணா "இந்தப் பெயர் பெண்ணின் பெயர் போல் உள்ளது" என அவன் மறுத்து விட்டான். அது ஜைனக் குடும்பம். அவர்களுக்கு கிருஷ்ணனிடம் ஈர்ப்பு இல்லை. அந்தப் பெயர் பெண்ணின் பெயர் போல் தெரிந்தது. உடை அணிந்திருக்கும் விதம், நடனமாடுவது, முகம், நீண்ட கேசம் எல்லாம் ஜைனர்களுக்கு கிருஷ்ணன் பெண்ணைப் போன்ற தோற்றத்தை அளித்திருக்கும். அவன் முற்காலத்தில் பிறந்தது நல்லதாய் போயிற்று. இப்போது பிறந்திருந்தான் என்றால் அரசாங்கம் அவரது கேசத்தை வெட்டியிருக்கும். அவரது நீண்ட கேசம், புல்லாங்குழல் இவற்றோடு

ஒரு ஹிப்பி (hippy) போல காணப்பட்டிருப்பார். அந்தப் பையன், "இந்தப் பெயர் பெண்ணின் பெயர் போல இருப்பதால் வேறு ஏதாவது பெயர் கொடுங்கள்" என்று சொன்னான்.

ஜைனன் ஒருவன் கிருஷ்ணனைச் சந்தித்தால் அறிந்து கொள்ள மாட்டான். ஓர் இந்து மகாவீரரைப் பார்க்கச் சென்றால் அவரைத் தெரிந்து கொள்ள மாட்டான். நம்பிக்கைகள் என்ற தூசி சேகரிக்கப்பட்டுள்ளது. நீங்கள் சரிவர பார்க்க முடியாத அளவிற்கு உங்கள் பார்வை மறைக்கப்பட்டுள்ளது. நீங்கள் முகமதியனானால் உங்களால் கீதை படிக்க முடியாது. நீங்கள் இந்துவானால் குரான் வாசிக்க முடியாது, சாத்தியமில்லை. ஏனென்றால் உங்கள் இந்து மதம் எப்போதும் இடையில் வந்து விடுகிறது. எல்லா மதமும் ஒன்று என்று சொல்லும் காந்திகூட குரானிலிருந்து தேர்ந்தெடுத்த பகுதிகள் முழுவதுமான மொழிபெயர்ப்புகளே, அது கீதையிலிருந்து மொழி பெயர்ப்பு செய்தது போலவே உள்ளன. மற்ற பகுதிகள் விடப்பட்டன. அவர் கீதையையும் குரானையும் படித்துவிட்டு அவருடைய கொள்கைகளுக்கு இணைந்து செல்கின்ற சில பகுதிகளைத் தேர்ந்தெடுத்து பின் எல்லாம் ஒன்று என்று கூறுகின்றார். ஆனால் கீதைக்குப் புறம்பாச் சொல்லும் உண்மையான பகுதிகள் குரானை ஒரு குரானாக்குகின்றன.

நம்பிக்கைகள், கருத்துகள், கொள்கைகள், ஒழுங்குமுறைகள், தத்துவங்கள் எல்லாம் கொண்டுள்ள மனமானது ஸ்தம்பித்து நிற்கும் மனதாகும். அதோடு ஓர் அடிமையாக, தடையின்றி நகருவது என்பது இனி அதற்கு இல்லை, மிகவும் அதிகமாக பிணைக்கப்பட்டுள்ளது, அதிகமான பந்தத்திலுள்ள. ஒரு புத்தரைக் காண வேண்டுமென்றால் உங்களுக்கு சுதந்திரம் தேவையாக உள்ளது. முழு சுதந்திரத்துடன் பாரமில்லாமல், தப்பபிப்பிராயங்கள் இல்லாமல், நம்பிக்கைகள் சூழ்ந்தில்லாத மனம் வேண்டும்.

இந்த சூத்திரங்கள் முழுமையானவை. "யோகியானவன் அஹிம்சையில் ஸ்திரமாக நிலைத்தபோது அவனது முன்னிலையில் இருப்பவர்களிடமிருந்து பகை உணர்வு விலகி விடுகிறது." திடீரென அன்பு உண்டாகிறது. எந்தக் காரணமும் இல்லாமலேயே, அவருடைய முன்னிலை வேலை செய்கிறது. அவருடைய இருப்பு, அவருடைய சக்தி புலத்தினுள் (energy field) நீங்கள் நகரும் போது முன்பிருந்த நீங்கள் இனி இல்லை.

அதனாலேயே முன்பு மக்கள் வசீகரிக்கப்பட்டதாக நினைத்தார்கள். யாருமே உங்களை வசீகரிக்கவில்லை. ஆனால் வசீகரிப்பது ஏற்பட்டது. அவர்களுடைய முன்னிலையின் சிறப்பு சாந்தப்படுத்துவதாக இருக்கிறது. அவர்களுடைய முன்னிலையின் சிறப்பு உங்களை அமைதியாக்கும். அவர்களது முன்னிலையில் உங்களது உள்பேச்சு (inner talk) நின்றுவிடும். உங்களுக்கு நீங்கள் இருப்பதே தெரியவில்லை - எப்படியோ மாற்றம் ஏற்பட்டதாக அறிந்து கொள்கிறீர்கள். இல்லத்திற்குச் சென்ற பின்பு நீங்கள் அதேபோல் பழைய நீங்களே. பின்பு நீங்கள் கடந்து சென்றவற்றை நினைவுபடுத்திக் கொள்ளும்போது நீங்கள் வசீகரிக்கப்பட்டு விட்டதாகவே எண்ணுகிறீர்கள். யாரும் வசீகரிப்பதில்லை. ஆனால் புத்தர் வசீகரிக்கிறார், இயேசு வசீகரிக்கிறார் என்பது எப்போதும் இருந்துகொண்டே இருக்கிறது. உங்களை யாரும் வசீகரிப்பதில்லை. ஆனால் அவர்களின் இருப்புத்தன்மை (being) சாந்தப்படுத்துவதாக இருப்பதால், நீங்கள் தூக்கத்தில் இருப்பதாக உணர்கிறீர்கள். நீங்கள் நன்றாக தூங்காத காரணத்தால், அவர்களுடைய இருப்புத்தன்மை (being) உங்களைத் தளர்வாக்குகிறது.

அவர்களுடைய சக்திப் புலத்தின் (energy field) ஆதரவில் இருக்கும்போது, ஏதேனும் சில மறைந்திருந்தவை மேலே வருகின்றன. ஏதேனும் சில மேலுள்ளவை கீழ் செல்கின்றன. உங்களது முழு அமைப்புமே மாறி விடுகின்றது. இனி நீங்கள் அதே மனிதரல்லர். இந்தச் செயல்முறையைப் புரிந்து கொண்டீர்களானால், இந்துக்களின் உபயோகத்தில் இருந்து கொண்டிருக்கும் சத்சங்கம் என்ற வார்த்தையைப் புரிந்து கொள்வீர்கள்; ஞானமடைந்தவர்கள் முன்னிலையில் இருத்தல். வேறு எதுவும் தேவையில்லை. முன்னிலையே போதுமானது என்பதை மேற்கத்தியருக்குப் புரிந்துகொள்ள இயலாத ஒன்றாகும். சத்சங்கம் என்பது சத்தியத்தை அடைந்தவர்கள் முன்னிலையில் இருப்பது என்பதாகும் - அவருடன் இருப்பது, அவருடைய சக்திப் புலத்தினுள் (energy field) இருப்பது - அவருடைய சக்தியை உண்பது.

கடைசி இரவு இயேசு தன்னுடைய நண்பர்களிடமிருந்து விடைபெறும் போது, ரொட்டியைத் துண்டாக்கி அவருடைய சீடர்களுக்குக் கொடுத்து, "இதைச் சாப்பிடு; இது நான்" எனக் கூறினார். இது சாத்தியமானதே. இயேசு போன்றவர்கள் ரொட்டியைக்

கையிலெடுத்த போது அது இனி பழைய ஒன்றல்ல. அது புனிதமாகி விடுகிறது. இயேசு, "இது நான்" என்று சொல்லிய போது, அதன் பொருள்படவே சொன்னார். ஒரு மாஸ்டர் முன்னிலையில் இருப்பது, அவரை உணவாக்கிக் கொள்வது, அவருடன் இருப்பது, அவருள் இருப்பது - இது அதன் பொருள்படவே சொல்லப்பட்டது.

இந்துக்களின் பழைய வேதங்கள் மாஸ்டருடன் இருப்பதென்பது அவருடைய கருப்பையில் இருப்பது போலாகும் என்று சொல்கிறது. அந்த சக்திப் புலமே (energy field) கருப்பை. நீங்கள் அவருடைய கருப்பையில் இருக்கின்ற போது, உங்களது இருப்புத் தன்மை (being) உள் மாற்றம், வெளி மாற்றம் அத்துடன் உங்களது முழுத்தன்மையின் மாற்றம் ஏற்பட்டு, ஒரு புதிய இருப்பு பிறப்பெடுக்கிறது. மாஸ்டர் மூலமாக ஒருவர் புதிய பிறவி எடுக்கிறார் - த்விஜன் - இரு பிறப்பாளன் ஆகிறார். ஒரு பிறப்பு பெற்றோர்கள் - தாய், தந்தை மூலமாக; மற்றொரு பிறப்பு மாஸ்டர் மூலமாக - அது உணர்வு, ஆத்மாவின் பிறப்பு.

ஒரு புத்தரின் முன்னிலையில் இருப்பது என்பது ஒரு புத்தராக ஆகும் அந்த வழியிலே இருப்பதாகும். வேறு ஒன்றும் தேவையில்லை. அவருடைய முன்னிலையில் கிரகித்துக் கொள்வீர்களானால், அவருடைய முன்னிலையை வேலை செய்ய அனுமதித்தீர்களானால், நீங்கள் சாத்வீகமாக இருந்தீர்களானால், அதை உண்பவராக இருந்தீர்களானால், எளிதில் ஏற்றுக் கொள்பவராக இருந்தீர்களானால் எல்லாமே நடைபெறும்.

இந்துக்களிடம் இரண்டு வார்த்தைகள் உள்ளன. ஒன்று சத்சங்கம். இது மேற்கத்தியரால் ஏற்றுக்கொள்ள முடியாது. ஏனெனில் அவர்கள் உபதேசம் ஏதாவது கொடுக்கப்பட வேண்டும் என்பார்கள். இந்துக்கள் முன்னிலையே போதும், எந்த உபதேசமும் தேவையில்லை என்பார்கள். மற்றொரு வார்த்தை தரிசனம். ஒருவரைப் பார்ப்பது, அவருடைய கண்களை ஊடுருவிப் பார்ப்பது என்ற இதுவும் கூட புரிந்து கொள்வது கடினமே. தரிசனம் என்பது பார்ப்பது. மேற்கத்தியர்கள் என்னிடம் வருவது கேள்விகள் கேட்பதற்கே. அவர்கள் இங்கு சில நாட்கள் தொடர்ந்து இருக்கும் போது புரிந்து கொள்ளுகிறார்கள். பின் கேள்விகள் உபயோகமற்றவை என்பதை உணர ஆரம்பித்து விடுகிறார்கள். அவர்கள் என்னிடம், "எனக்குச் சொல்வதற்கு ஒன்றுமில்லை, இங்கிருப்பதே போதுமானது"

என்கின்றனர். என்னுடன் இங்கிருப்பதே போதும் என்பதை அவர்கள் புரிந்து கொள்வதற்குக் கொஞ்சம் காலமெடுக்கிறது.

கேள்விகளைக் கொண்டு வருவதென்பது தடையைக் கொண்டு வருவதாகும். கேள்வியோடு வருவதென்பது ஒரு தடையோடு வருவதே. கேள்விகள் இல்லாமல், கேட்பதற்கு ஒன்றுமில்லாமல், அப்படியே சும்மாயிருப்பது - இதுவே தடைகள் இல்லாமல் வருவதாகும். பின் சக்தியானது மிதந்து, சந்தித்து ஒன்றாகி விடுகிறது - நீங்கள் என்னுடைய கருப்பையின் பாகமாகி விடுகிறீர்கள். நான் உங்களில் மிதப்பேன். ஆனால் உங்களுக்கு கேள்விகள் இருக்குமானால், மனம் மேலே உள்ளது. கேள்விகள் இல்லையென்றால் உங்களது இருப்புத் தன்மை (being) அங்கிருக்கிறது திறந்ததாக, மென்மையாக.

**யோகியானவன் சத்தியத்தில் ஸ்திரமாக நிலைத்த போதும் செயலில் ஈடுபடாத போதும் அதன் பலனை அனுபவிக்கிறான்.**

இது இன்றும் மிகக் கடினமானது. யோகியானவன் சத்தியத்தில் நிலைத்த போது: சத்திய பிரதிஷ்த்யம். கிழக்கத்திய வேத நூல்கள் 'உண்மை' என்று சொல்லும்போது. உண்மை பேச வேண்டுமென்ற பொருளில் சொல்லவில்லை என்பதை ஆரம்பத்திலிருந்தே கவனத்தில் கொள்ள வேண்டும். உண்மையாக, நான் நானாக, உள்ளே அணுவளவுகூட போலித்தனமில்லாமல் இருப்பது "சத்தியத்தில் நிலைத்தல்" என்பதாகும். அப்படிப்பட்ட மனிதர் உண்மையைத்தான் பேசுவார். ஆனால் அது முக்கியமான விஷயமல்ல. அப்படிப்பட்ட மனிதர் உண்மையிலேயே வாழ்வார் - அதுவே நோக்கம். மேற்கு நாடுகள் உண்மை என்பது சத்தியம், உண்மை பேசுவது அவ்வளவே. கிழக்கே அதுவாகவே இருப்பது. பேசுவது தானே தொடரும். அது முக்கியமான விஷயம் கிடையவே கிடையாது - அது நிழலே, ஆனால் உண்மையில் இருப்பது என்பது, முழுதுமாக தன்னில் இருப்பதே, எந்த முகமூடியும் இல்லாமல், தனிப்பட்ட குணம் (personality) எதுவும் இல்லாமல் சும்மா அப்படியே சாரமாக மட்டுமே இருப்பதாகும்.

பெர்சனாலிட்டி (personality) என்ற வார்த்தை பொருள் பொதிந்தது. அது கிரேக்க மூலம் பெர்சோனா (persona) என்பதிலிருந்து வருகின்றது. பெர்சோனா (persona) என்பதன் பொருள் மூகமூடி (mask) கிரேக்க நாடகங்களில் நடிகர்கள் முகமூடிகளை

உபயோகித்தனர். அவர்கள் பெர்சோனாஸ் (personas) என்று அழைக்கப்பட்டனர். உண்மை பின்னால் மறைந்து உள்ளது. பெர்சோனா (persona) முகமூடி உலகிற்குத் தெரிகிறது - அது முகம்.

பெர்சனாலிட்டி (personality) எதுவும் இல்லாமல் சாரம் மட்டுமே... ஜென் மக்கள், "உன்னுடைய உண்மையான முகத்தைக் கண்டுபிடி" என்பார்கள். தியானம் என்பது அவ்வளவே. அவர்கள் தங்களுடைய சீடர்களிடம், "பின்நோக்கிச் செல், நீ பிறப்பதற்கு முன்பு உனக்கிருந்த முகத்தைக் கண்டுபிடி. அதுவே உண்மை" எனக் கூறினர். நீங்கள் பிறப்பதற்கு முன். ஏனென்றால் நீங்கள் பிறந்த அந்த நொடியிலிருந்து குடும்பம் ஆரம்பித்து விடுகிறது. குடும்பத்தினுடைய பகுதியாக ஆன அந்த நொடியிலேயே நீங்கள் பொய்யின் பாகமாகி விடுகிறீர்கள். சமூகத்தின் பகுதி ஆன அந்த நொடியிலேயே நீங்கள் பெரிய பொய்யின் பாகமாகி விடுகின்றனர். எல்லாச் சமூகங்களும் பொய்களே - அழகாக அலங்கரிக்கப்பட்டவை, ஆனால் பொய்களே. நீங்கள் உலகத்தினுள் நுழையும் முன் இருந்த மூலமான, அசலான, கன்னித் தன்மையான முகத்தைக் கண்டுபிடிக்க வேண்டும்.

ஒருவர் பின்புறமும், உள்ளும் நகர வேண்டும். உங்களுடைய இருப்புத் தன்மையின் (being) சாரத்தை, மையத்தை (center) உணர வேண்டும். அதற்கு அப்பால் செல்வதற்கான சாத்தியக் கூறுகள் இல்லை. நீங்கள் தொடர்ந்து நீக்கிக் கொண்டே செல்ல வேண்டும்: உடல் நீங்கள் அல்ல, உடல் மாறிக்கொண்டே இருக்கிறது; மனம் நீங்கள் அல்ல, மனம் எப்போதும் அசைவிலேயே இருக்கிறது - எண்ணங்கள், எண்ணங்கள், எண்ணங்கள். இது ஒரு செயல் முறையாக உள்ளது. உணர்வுகள் நீங்கள் அல்ல, அவை வந்து போகின்றன. நீங்கள் தொடர்ந்து, தொடர்ந்து, தொடர்ந்து இருந்து கொண்டிருக்கிறீர்கள். உடல் வந்து போய்விடும். எப்போதும் இருந்து கொண்டு, பின்னால் மறைந்துள்ள ஒன்றே உண்மையாகும். அதுவாய் இருப்பதே இதன் பொருளாகும். சத்திய பிரதிஷ்தயம் - யார் ஒருவர் சத்தியத்தில் நிலைத்திருக்கிறாரோ.

"... அவர் செயல் செய்யாத போதும் அதன் பலனை அடைகிறார்." இங்கு லாவோத்சு சொல்வதை உங்களால் புரிந்து கொள்ள முடியும். நீங்கள் உங்கள் இருப்புத் தன்மையினுடைய (being) உண்மையுடன் இணைந்து விடுவீர்கள். ஆனால் நீங்கள் எதுவும் செய்யத் தேவையில்லை - காரியங்கள் தானே நடைபெறும்.

அப்படியே நீங்கள் உங்கள் படுக்கையில் படுத்து உறங்குவது என்பதல்ல. ஆனால் நீங்கள் செய்பவர் அல்லர்: முழுமை உங்களில் இருந்து செயல்பட ஆரம்பித்து விடும். நீங்கள் முழுமையின் செயல் புரிபவராக, கருவியாக ஆகிவிடுவீர்கள்; கிருஷ்ணர் நிமித்தம் என்கிறார்: முழுமையின் கருவி மட்டுமே - உங்கள் மூலமாகப் பாய்கிறான், வேலை செய்கிறான். நீங்கள் பலனைப் பற்றி கவலைப்படத் தேவையில்லை. நீங்கள் வினாடிக்கு வினாடி வாழ்ந்து வருவீர்களானால் முழுமை கவனித்துக் கொள்ளும், எல்லாம் நல்லபடியாகப் பொருந்தி இருக்கும்.

ஒருமுறை உங்களுடைய இருப்புத் தன்மையில் (being) நிலைத்து விட்டீர்களானால், நீங்கள் முழுமையில் நிலைத்து விட்டீர்கள். ஏனெனில் நீங்கள் முழுமையான பாகமே, பகுதியே. உங்கள் முகம் சமூகத்தின் பாகமே, உங்கள் பெர்சனாலிட்டி (personality) உலகின் பகுதியே, உங்கள் இருப்புத்தன்மை (being) உங்கள் சாரம் முழுமையான பகுதியாகும். நீங்களெல்லாம் ஆழத்தில் மறைந்துள்ள கடவுள்களே. ஆனால் மேல் பகுதியில் நீங்கள் ஒரு திருடனாக இருக்கலாம், ஒரு சந்நியாசியாக இருக்கலாம். ஒரு நல்ல மனிதன், ஒரு கெட்ட மனிதன், ஒரு கொலைகாரன், ஒரு நீதிபதி - ஆயிரத்தெரு நடிப்பாக, விளையாட்டுகளாக - ஆனால் கீழே ஆழத்திலே நீங்கள் ஒரு கடவுளே. ஒருமுறை நீங்கள் கடவுள்தன்மையில் நிலைத்து விட்டீர்களானால் முழுமை உங்கள் மூலம் செயல் புரியத் துவங்கி விடுகிறது.

நீங்கள் பார்க்கவில்லையா? எந்த மரங்களும் பூக்களைப்பற்றி கவலை கொள்வதில்லை. அவை வருகின்றன. எந்த நதியும் சமுத்திரத்தை அடைவது பற்றி கவலை கொள்வதில்லை. நியூராடிக் (newrotic) ஆவதில்லை. சைகோஅணலிஸ்ஸை (psychognalysis) கலந்து ஆலோசிப்பதில்லை. ஆனால் எளிமையாகக் கடலை அடைகிறது. நட்சத்திரங்களும் நகர்ந்து கொண்டே இருக்கின்றன. அங்கு தொல்லைகள் ஏதும் இல்லை, இலக்கு ஒருபோதும் தவறுவதில்லை. மனிதன் மட்டுமே அதிகப் பளுவான கவலைகளை சுமந்து செல்கிறான்: என்ன செய்வது, என்ன செய்யக்கூடாது; எது நல்லது, எது தீயது; எப்படி இலக்கை அடைவது, எப்படி முந்துவது - எப்படி அடுத்தவர்களை அடைய விடாமல் தடுப்பது, எப்படி எல்லோரிலும் முதலாவதாக அடைவது என்பது. "எப்படி ஆவது"

(become) இதை புத்தர் தன்ஹா என்ற நோய் என்கிறார், ஆவதான நோய்.

ஒருவர் சத்தியத்தில் நிலைத்த போது ஆகிவிட்டார். இப்போது ஆவது என்ற நோய் இல்லை. அவர் இருப்புத்தன்மையை (being) அடைந்து விட்டார். ஆவ்து என்பது நோய். இருப்புத்தன்மை (being) என்பது ஆரோக்யம். நீங்கள் உங்களுள் நகருவீர்களானால் இருப்புத்தன்மை (being) இப்பொழுதே கிடைப்பதாக உள்ளது.

நான் ஒரு ஜென் சந்நியாசியைப் பற்றிக் கேட்டிருக்கிறேன். அவர் ஞானமடைவதற்கு முன் அரசாங்க சேவையில் ஒரு சிறிய அதிகாரியாக இருந்தார். அவர் அவருடைய மாஸ்டரிடம் வந்து தான் ஒரு சந்நியாசியாக விரும்புவதாகச் சொன்னார். அவர் உலகைத் துறக்க எண்ணினார். மாஸ்டரும், "அதற்குத் தேவையில்லை இருப்புத்தன்மை (being) எங்கிருந்தாலும் அடைய முடியும். அதற்காக ஆஸ்ரமம் வருவதற்குத் தேவை இல்லை. நீ எங்கிருந்தாலும் அடைய முடியும். தொடர்ந்து அப்படியே இரு, நிகழ்வதற்கு விட்டுவிடு" என்று கூறினார்.

அந்த மனிதர் தியானம் பண்ணுவதற்கு ஆரம்பித்து விட்டார். தியானம் என்பது அப்படியே எதுவும் செய்யாமல் அமைதியாக அமர்ந்திருப்பது, எண்ணங்கள் வந்து போகும். ஒருவர் அப்படியே சாட்சியாக, கண்டனம் செய்யாமல், பாராட்டாமல் - எடை போடாமல் சாதாரணமாக அவற்றைப் பார்ப்பது, விலகி நின்று அலட்சியமாக இருப்பதுவே.

ஆண்டுகள் கடந்தன. ஒருநாள் அவருடைய அலுவலகத்தில் உட்கார்ந்து ஏதோ சில அலுவலக வேலைகளைச் செய்து கொண்டிருந்தார். மழை அப்போதுதான் ஆரம்பித்திருந்தது - திடீரென ஓர் இடி முழக்கம் ஏற்பட அவர் அதிர்ச்சிக்குள்ளாகி அவருடைய இருப்புத் தன்மையினுள் (being) எறியப்பட்டு, சிரிப்பதற்கு ஆரம்பித்து விட்டார். இதன்பின் அவர் சிரிப்பதை ஒருபோதும் நிறுத்தவில்லை - என்று சொல்லப்படுகிறது. அவர் சிரித்துக் கொண்டே மாஸ்டரிடம் சென்று, "திடீரென ஏற்பட்ட இடிமுழக்கத்தினால் நான் விழித்துக் கொண்டேன், என்னுள் பார்த்தேன் - அந்தப் பழைய மனிதன் அங்கு அவனுடைய எல்லா சரள பாவத்துடனும், தாராளமாக இருந்தான். நான் தேடுகிறேன், தேடிக் கொண்டிருக்கிறேன், தேடிக்கொண்டிருக் கிறேன், இந்தப் பழைய மனிதன், இந்தப் புராதன மனிதன், அவன்

அப்படியே அங்கே என்னுள் முழுதும் சரளமாக, ஓய்வாக அமர்ந்திருக்கிறான்'' என்றார்.

திடீரென ஏற்பட்ட ஓர் இடி முழக்கம்... அப்படியே நீங்கள் ஏற்றுக்கொள்ளும் பாவத்துடன் இருந்தீர்களானால், ஏதாவது, அதை உடனே தொடங்குகிறது. மாஸ்டரிடமிருந்து வரும் ஒரு கூச்சல், மாஸ்டரிடமிருந்து வருகின்ற ஒரு தாக்குதல், மாஸ்டரிடமிருந்து வருகின்ற பார்வை - திடீரென ஏற்படுகின்ற இடிமுழக்கம் - ஏதேனும் ஒன்று... நீங்கள் எதைத் தேடுகிறீர்களோ அதுவே நீங்கள் உங்களுள் பார்ப்பது என்ற ஒன்றே தேவைப்படுகிறது. ஒருவர் நிலைத்தவர் ஆகிவிட்டால் பின் முழுமையின் செயல் புரிபவராகி விடுகிறார். முழுமையின் செயல் புரிபவராகி விடுவது என்பது எல்லாமே. பின் எல்லாமே தொடர்ந்திருப்பதில்லை. உங்களது நதி கடலை நோக்கி ஓடுகிறது. உங்களுடைய மரங்கள் தொடர்ந்து மலர்ந்து கொண்டிருக்கின்றன, பூக்கின்றன.

"யோகியானவன் சத்தியத்தில் ஸ்திரமாக நிலைத்தபோதும், செயல் செய்யாத போதும் அதன் பலனை அடைகிறான்.'' பின் அங்கே செய்வதற்கு ஒன்றுமில்லை. எல்லாம்தானே நடைபெறும். நீங்கள் செய்யவில்லை என்பதல்ல - நினைவில் கொள்ளுங்கள். ஆனால் முழுமையே அதைச் செய்தது; நீங்கள் செய்பவர் அல்லர்.

யோகியானவன் நேர்மையில் ஸ்திரமாக நிற்கும் போது ஆன்மிகச் செல்வங்கள் தானே வந்தடைகின்றன.

நீங்கள் செல்வங்களை எப்போதும் தேடிக்கொண்டே இருக்கிறீர்கள். அவை நழுவி விடும், அவை கானல் நீர், அவை தோன்றும், நீண்ட பயணத்திற்குப் பின் நீங்கள் அதை அடையும் போது அவை அங்கிருப்பதில்லை. ஏனென்றால் உண்மையான செல்வங்கள் உங்களின் பின்பு மறைந்துள்ளன. நீங்கள் அதுவே! வேறு தெய்வங்கள் இல்லை, நீங்களே அந்தச் செல்வங்கள்.

ஒருவர் பிறர் பொருளை விரும்பாத ஸ்திதியில் நிற்கும் போது - அஸ்தேய பிரதிஷ்தயம். அஸ்தேய என்ற வார்த்தை (நயனம், திருடாமை என்று பொருள்படுகிறது. இதைப் புரிந்து கொள்ள வேண்டும். 'நேர்மை' அந்த அர்த்தத்தை எடுத்துச் செல்வதில்லை. நேர்மை அதனுடைய பகுதியே, அம்சங்களில் ஒன்றே ஆனால் திருடாமை என்பது முற்றிலும் வேறானது.

நீங்கள் ஒரு திருடனாக இல்லாமல் இருக்கலாம். ஆனால் மற்றவர்களுடைய உடைமைகளின் மேல் பொறாமைப்பட்டீர்களானால், நீங்கள் திருடரே. ஒருவருடைய கார் கடந்து செல்வதை நீங்கள் பார்க்கும்போது பகைமை எழுகிறது, பொறாமை ஏற்படுகிறது, அல்லது பேராசை - அந்தக் காரை சொந்தமாக்கிக் கொள்ள வேண்டுமென்ற ஆசை வருகின்றது - நீங்கள் ஒரு திருட்டைச் செய்து விட்டீர்கள். எந்த நீதிமன்றமும் உங்களைப் பிடிக்க முடியாது. ஆனால் முழுமையின் நீதிமன்றத்தில் நீங்கள் பிடிபட்டு விட்டீர்கள். திருட்டு செய்யப்பட்டது. திருடாமை என்பது ஆசைப்படாத மனம், ஏனெனில் ஆசையோடு எப்படி நீங்கள் திருடனாக இல்லாமல் இருப்பீர்கள்? மனமானது நிறைய, நிறைய சொந்தமாக்கிக் கொள்ள தொடர்ந்து முயன்று கொண்டிருக்கிறது. எப்பொழுதெல்லாம் நீங்கள் சொந்தமாக்கிக் கொள்ள விரும்புகிறீர்களோ, அப்போது யாரிடமிருந்தாவது நீங்கள் எடுத்துக்கொள்ள வேண்டும். அது ஒரு திருட்டே. நீங்கள் அதைச் செய்யவில்லை, ஆனால் மனம் முன்பே அதைச் செய்து விட்டது.

பொறாமை இல்லாமல், போட்டி இல்லாமல் இருக்கின்ற மனதே திருடாமை என்பதாகும். ஒரு சிறந்த புரட்சி நிகழும். இந்த திருடாமை என்பது உங்கள் மையத்தினுள் (being) இருந்தால், திடீரென உங்கள் செல்வத்தினுள் இறங்கி விடுவீர்கள், ஏனெனில் நீங்கள் ஒரு திருடனாக இருந்தால் - போட்டியுடன், பேராசையுடன், பொறாமையுடன் - எப்போதும் மற்றவர்களுடைய செல்வத்திலேயே உங்களது பார்வை இருக்கும். அப்படித்தான் நீங்கள் உங்களது சொந்த செல்வங்களை இழந்து விடுகின்றீர்கள். கண்கள் எப்போதும் மற்றவர்களுடைய செல்வங்களைப் பார்ப்பதும், அதை நோக்கி நகர்ந்தும் கொண்டிருக்கின்றன. யார் எதை எடுத்துச் செல்கின்றனர், யாருக்கு என்ன இருக்கிறது என்று. நீங்கள் அதிகம் அடைய வேண்டும் என்று முயலும் போது, உங்களிடம் முன்பே இருந்த ஒன்றை நீங்கள் இழந்து விடுகின்றீர்கள். 'அதிகம்' என்ற ஒன்றால் நீங்கள் ஓய்வில்லாமல், அமைதியில்லாமல், எப்போதும் நகர்ந்து கொண்டே இருக்கின்றீர்கள்.

ஒரு குறிப்பிட்ட வெளியில் (space) உங்களின் சொந்த செல்வங்கள் கண்டுபிடிக்கப்பட முடியும், அந்த குறிப்பிட்ட வெளி, நீங்கள் பொறாமை இல்லாமல், அடுத்தவர்கள் என்ன வைத்திருக்கிறார்கள் என்று கவலைப்படாமல் இருக்கும் போதே கிடைக்கும். நீங்கள் உங்கள் கண்களை மூடிக் கொள்ளுங்கள்; இந்த

உலகம் ஒரு பொருட்டல்ல. வைத்திருத்திருத்தல் இனி பொருளுடையது அல்ல என்றபின் இருப்புத்தன்மை (being) வெளிப்படுத்தப்படும்.

இரண்டுவிதமான மனிதர்கள் இங்குள்ளனர். அதிகம் வைத்திருப்பதில் விருப்பம் உள்ளவர்கள், தாங்கள் அதிகமாக இருப்பதில் விருப்பம் உள்ளவர்கள். அதிகம் வைத்திருப்பதில் விருப்பம் உள்ளவராக இருந்தால், பொருள் எவையாயினும் அதிகம் வைத்திருப்பதில் வித்தியாசம் இல்லை - நீங்கள் பணத்தைச் சேகரித்துக் கொண்டே செல்லலாம். நீங்கள் அறிவை சேகரித்துக் கொண்டே செல்லலாம். கௌரவம், அதிகாரம் இவற்றைச் சேகரித்துக் கொண்டே செல்லலாம். எவையெல்லாம் சேகரிக்க விரும்புகிறீர்களோ, அவையெல்லாம் சேகரித்துக் கொண்டே செல்லலாம். நீங்கள் வைத்திருப்பதில் விருப்பம் உள்ளவர்களானால், நீங்கள் நழுவ விடுகிறீர்கள். வைத்திருப்பதற்கு இந்த தொடர்ந்த முயற்சியும் தேவையில்லை. முன்பே நீங்கள் உங்களுள் இந்த செல்வங்களை வைத்திருக்கிறீர்கள். யோகியானவன் பிறர் பொருளை விரும்பாத நிலையில், ஆன்மிகச் செல்வங்கள் தானே வந்தடைகின்றன.

பிரம்மச்சர்ய பிரதிஷ்தயம் வீர்யலாபம், யோகியானவன் பிரம்மச்சரியத்தில் ஸ்திரமாக நிலைத்தபோது, வீர்ய லாபமடைகிறான்.

சமஸ்கிருதத்திலிருந்து மொழி பெயர்ப்பது என்பது கிட்டத்தட்ட முடியாத ஒன்று. நூற்றாண்டு, நூற்றாண்டுளாகப் பண்படுத்தப்பட்டு, ஆன்ம விகாரம், தியானத்தினால் மற்ற எந்த மொழிக்கும் இல்லாத, தனக்கென ஒரு சுகந்தத்தை சமஸ்கிருதம் அடைந்துள்ளது. உதாரணமாக பிரம்மச்சரியம் என்ற வார்த்தையை மொழி பெயர்ப்பது முடியாதது. அது "கடவுள் போல் நடந்து கொள்வது" கடவுளாகவே இருப்பது என்ற பொருள்படும். சாதாரணமாக அது காமத்தில் தன்னடக்கத்தோடு இருப்பது (sexual continence) என்றே மொழி பெயர்க்கப்பட்டது. அதிக வித்தியாசம் உள்ளது.

அது திருமணம் ஆகாமல் (celibacy) இருக்கும் நிலையல்ல - புரிந்து கொள்ள வேண்டும். நீங்கள் திருமணமாகாமல் இருக்கலாம். ஆனால பிரம்மச்சரியத்தை அடையாமல் இருக்கலாம். ஆனால் பிரம்மச்சரியத்தை அடைந்தீர்களானால் நீங்கள் திருமணமாகாதவர் ஆகிவிடுகிறீர்கள்.

திருமணமாகாமல் இருப்பதென்பது அடக்குமுறையாகும். உங்களது காமசக்தியை அடக்குவீர்கள். அந்த அடக்குமுறை முழுவதுமாக மாறி அமைவதற்கு எடுத்துச் செல்லாது. ஆனால் சில வழிகள் உள்ளன. அவற்றின் மூலம் உங்களது கடவுள் தன்மை உங்களுக்கு வெளிப்படுத்தப்படும். உடனடியாக காமம் மறைந்து விடும். அது நசுக்கப்படவில்லை. அந்தக் கடவுள் தன்மையில் சக்தியானது முழுவதும் வேறான ஓர் உருவை எடுக்கிறது. உங்கள் பக்கம் எந்த முயற்சியும் இல்லாமல் நீங்கள் செலிபேட் (celibate) ஆகிவிடுகிறீர்கள். முயற்சி அங்கிருந்தால்தான் பின் அது அடக்குமுறையாகி விடும். செலிபஸி (celibacy) பிரம்மச்சரியத்தின் பலனாக நிகழ்கிறது.

பின் எப்படி பிரம்மச்சரியத்தை அடைவது - "யோகியானவன் பிரம்மச்சரியத்தில் ஸ்திரமாக நிலைத்தபோது....?" நீங்கள் ஹிம்சையற்று, அஹிம்சையில் ஸ்திரமாக நிலைத்தபோது, நீங்கள் சத்தியத்தில் ஸ்திரமாக நிலைத்தபோது, நீங்கள் நேர்மையில் ஸ்திரமாக நிலைத்தபோது, ஒரு கடவுள் போல் நிலைத்திருப்பது என்பது எளிமையானது. நீங்கள் கடவுளே. நீங்கள் மற்றவர்களுக்குத் தீங்கு செய்யாதபோது, சங்கிலித் தொடரை ஏற்படுத்துவதில்லை. உங்கள் விலங்குகளை வெட்டி விடுகிறீர்கள், விடுதலையாகி விடுகிறீர்கள். நடிப்பதற்கு முயலாமல் நீங்கள் உண்மையாக இருப்பீர்களானால், உங்களைச் சுற்றி முகமூடிகள் ஏற்பட முயலாமல் இருப்பீர்களானால், உங்களது மையத்திற்கு (very core) உண்மையுள்ளவர்களாக இருக்கிறீர்கள் - காம சக்தி ஏற்கெனவே மாற்றம் அடைந்து கொண்டிருக்கிறது.

நீங்கள் மூர்க்கமாக இருக்கும்போது அங்கே காம சக்தி அதிகமாக இருப்பதைக் கவனித்திருக்கறீர்களா? உண்மையில் கணவன், மனைவியர் தங்களுள் சண்டையிட்டுக் கொண்டார் களானால் அந்த இரவில் அவர்கள் நன்றாக அன்பு செய்வார்கள். ஏன் இது நடைபெறுகிறது? மூர்க்கத்தனம் காமசக்தியை உருவாக்குகிறது. அதிக மூர்க்கமாக இருக்கும் மனிதர் அதிக காம உணர்வு உள்ளவராக இருப்பார். அஹிம்சை காமசக்தியை மாற்றமடையச் செய்கிறது. நீங்கள் ஒருவருக்கும் தீங்கு செய்ய விருப்பம் இல்லாமல் இருப்பீர் களானால், உங்களுக்கு ஆழ்ந்த அன்பு, பிரியம், மற்றவர்களிடம் கருணை இருக்குமானால், உங்கள் காம ஆசைகள் தணிந்து போகின்றதைக் காண்பீர்கள்.

காமம் குறிப்பிட்ட கூட்டத்துடன்தான் இருக்க முடியம். கோபம், மூர்க்கத்தனம், வெறுப்பு, பொறாமை, போட்டி மனப்பான்மை, பேராசை இவை எல்லாம் அங்கே இருக்க வேண்டும். காமம் அந்தக் கூட்டத்தின் பாகமாக இருக்கும். நீங்கள் மற்றவற்றை விட்டுவிட்டீர்களானால், காலப்போக்கில் காமம் அதன் உந்துதலை இழந்து விடுவதை அறிந்து கொள்வீர்கள். அது காமத்தைவிட மேன்மேலும் பிரியமாகி வருகிறது, மேலும் மேலும் அன்பாகி வருகிறது, மேலும் மேலும் கருணை யாகிறது - அதே சக்தி மேல் நோக்கிச் செல்கிறது; உயர் தளத்தின் மேலே.

ஒருவர் பிரம்மச்சரியத்தில் நிலைத்திருப்பது திருமணமாகாத நிலையினால் அல்ல. யார் காமத்தை அடக்கி உள்ளார்களோ, அவர்கள் அதிகக் கோபம், அதிக மூர்க்கத்தனம் உடையவர்களாகி விடுகின்றனர் என்பதை நீங்கள் கண்டு கொள்ளலாம். அதனால்தான் முழு மனித சரித்திரத்தில் சேனைகள் திருமணமாகாமல் இருக்கும் நிலைக்குக் கட்டாயப்படுத்தப்பட்டார்கள். ஒருமுறை திருமணமாகாமல் இருக்கும் நிலையில் தொடர்ந்திருப்பதற்கு கட்டாயப்படுத்தப்பட்டால், அவர்கள் அதிக மூர்க்கத்தனமாகி விடுகிறார்கள். காமத்தின் மூலம் வெளியேற்றப்படும் சக்தியானது வெளியேற்றப்படவில்லை.

உண்மையில் மூர்க்கத்தனத்திற்கும், அடக்கப்பட்ட காம சக்திக்கும் இடையில் ஆழ்ந்த சம்பந்தம் உள்ளதென்பதை மனோதத்துவ நிபுணர்கள் கண்டுள்ளனர். எல்லாக் கொடுமையான ஆயுதங்கள் - ஒரு கத்தி - ஓர் ஈட்டி - ஒரு வாள் ஒருவர் மீது செலுத்துவார்களானால் அது காம சக்தியை பெண்ணிடம் செலுத்துவது போலாகும். மற்றவர்களுடைய உடல் பெண்ணின் உடல் போலாகி உங்கள் ஆயுதங்கள் படைப்பாற்றல் சின்னம் (phallic symbols) ஆகிவிடுகிறது. அது இயந்திரத் துபபாக்கியிலிருந்து வரும் குண்டாக இருக்கலாம், நீங்கள் தொலை தூரத்தில் இருக்கலாம். ஆனால் இரண்டும் ஒன்றே. உங்களுடைய காம சக்தி எப்பொழுதெல்லாம் அடக்கப்படுகிறதோ, அப்போது எப்படி அடுத்தவர்களுடைய உடல்களுள் உட்செலுத்துவது ஏன்ற வழிகளையும், உபாயங்களையும் நீங்கள் கண்டுபிடிப்பீர்கள். போர் விரர்கள் பெண் நண்பர்கள் வைத்துக்கொள்ள அனுமதிக்கப்படுவதில்லை. அமெரிக்கப் போர் வீரர்கள் மட்டும் அனுமதிக்கப்பட்டனர் - அவர்கள் எல்லா இடத்திலும் தோற்கடிக்கப்படுவார்கள். உலகத்தில் அவர்களால் சண்டையிட

முடியாது. அமெரிக்கப்போர் வீரர்களால் சண்டையிட முடியாது. நீங்கள் காமத்தில் திருப்தியடைந்தவர்கள் ஆனால் போரிடும் ஆர்வம் மறைந்து விடும். அவை சம்பந்தப்பட்டவை.

அதனாலேதான் இது நடந்தது. எப்பொழுதெல்லாம் ஒரு கலாசாரம் மிகவும் முன்னேற்றமடைந்திருக்கிறதோ, அது ஓர் அதிக முன்னேற்றமடையாத கலாசாரத்திடம் எப்போதும் தோல்வியடைந்து விடுகிறது. இந்தியா ஹூன்ஸ், டர்க்கிகள், முஸ்லிம்களால் தோற்கடிக்கப்பட்டது – அவர்கள் மிகவும் முன்னேற்றமடையாத ஓர் உலகத்திலிருந்து வந்தவர்கள். அவர்கள் மிகவும் முன்னேற்றமடைந்த ஒரு கலாசாரத்தைத் தோற்கடித்து விட்டனர். எப்பொழுதெல்லாம் ஒரு கலாசாரம் முன்னேற்றமடைந்திருக்கிறதோ, அது மிகவும் திருப்தி உடையதாக, நிறைவாக இருக்கும். எல்லாம் நல்ல முறையில் சென்று கொண்டிருக்கும் போது யார் சண்டையிட விரும்புவார்கள்? எல்லாம் மிகவும் அமைதியாக இருக்கும் போது கொல்லவும், கொல்லப்படவும் யார் தங்களை தொந்தரவு செய்து கொள்வார்கள். யார் வந்தார்களோ அவர்கள் சரியான காட்டுமிராண்டிகள், முழுவதும் கலாசாரமற்ற வர்கள், காமத்தில் மிகவும் ஏமாற்றமடைந்தவர்கள். ஒரு சேனை நன்றாகப் போரிட வேண்டுமென்று விரும்பினீர்களானால், அந்த சேனையை காமத்தில் ஏமாற்றமடையச் செய்யுங்கள். பின் அவர்கள் போரிடுவார்கள். ஏனென்றால் போரிடுதல் காமத்தின் அடையாளமாகி விடுகிறது.

தற்சமயம் இது வியட்நாமில் நடந்தது. கம்யூனிஸ்ட் வெற்றி பெற்று அமெரிக்கா தோற்றுவிட்டது என்பதல்ல. ஓர் உயர்ந்த கலாசாரம் தோற்கடிக்கப்படுகிறது என்பது தெளிவாகிறது. ஒரு தாழ்ந்த கலாசாரம், ஏழ்மையான நாடு எல்லா வழிகளிலும் அதிருப்தி உடையது. காமத்தில் மிக ஆழமாக அடக்கப்பட்ட நிலையில் உள்ளது. அது கட்டாயம் வெற்றி பெறும். எப்பொழுதெல்லாம் ஓர் ஏழ்மையான நாடு, ஒரு வளமான நாட்டுடன் யுத்தத்தில் ஈடுபடும்போது, முடிவில் வளமான நாடு தோற்கடிக்கப்படுகிறது. இதை நீங்கள் சுலபமாகப் பார்க்கலாம். ஒரு செல்வந்தக் குடும்பம் ஓர் ஏழைக் குடும்பத்துடன் சண்டையிட ஆரம்பித்தால், செல்வந்தக் குடும்பம் தோற்று விடுகிறது – ஏனெனில் நீங்கள் செல்வந்தராக இருக்கும் போது திருப்தி அடைகிறீர்கள், சண்டையிட வேண்டுமென்ற அதிக உத்வேகம் இல்லாமல் போய் விடுகிறது. சண்டையிடும் போது நீங்கள் இழக்கப் போகிறீர்கள். ஆகவே நீங்கள் சண்டையிடுவதைத் தவிர்க்கிறீர்கள். ஏழ்மையில்

உள்ளவனுக்கு இழப்பதற்கு ஒன்றுமில்லை - எதற்காக அவன் சண்டையிடுவதைத் தவிர்க்க வேண்டும். உண்மையில் அவன் அதை அனுபவிக்கிறான். அவனுக்கு எல்லாமே அடைய வேண்டும், இழப்பதற்கு ஒன்றுமில்லை.

தனி மனித வாழ்க்கையிலும் இதுபோல் நடைபெறுகின்றது. நீங்கள் அஹிம்சையாக ஆகிவிட்டால், நீங்கள் சத்தியத்தில் நிலைத்திருப்பவராகி விட்டால், நீங்கள் திருடாமையால் நிலைத்திருப்பவராகி விட்டால், திடீரென காமம் பேராவலை இழந்து விடுகிறது. அந்த தீவிர உணர்ச்சியானது பைத்தியமாக இனி இல்லை. அது மென்மையாகி விட்டது. முடிவில் மறைந்து விடுகிறது.

அது மறைந்து விட்டபோது, காமத்தில் அடைபட்டிருந்த சக்தியானது விடுவிக்கப்படுகிறது. அந்த சக்தி உங்களது சேமிப்பாகி விடுகிறது. அதனாலே பதஞ்சலி, "யோகியானவன் பிரம்மச்சரியத்தில் ஸ்திரமாக நிலைத்தபோது வீர்ய லாபமடைகிறான்" என்று சொல்லுகிறார். மிக மிக அதிகமான சக்தி அடையப்பட்டது. நீங்கள் சிறந்த விளையாட்டு வீரராகவோ, குத்துச்சண்டையிடுபவராகவோ ஆகிவிட்டீர்கள் என்பதால் அல்ல. அந்த சக்தி முழுவதும் வேறுபாடான கோணம் உடையது. அந்த சக்தி சண்டையிடுவதற்கல்ல. உண்மையில் அந்த சக்தி ஆண் தன்மை உடையதல்ல. அது பெண் தன்மை உடையது. அதை அடைந்த யோகிகள் அனைவரும் அதிகப் பெண் தன்மை உடையவர்களாக ஆகிவிட்டனர். புத்தர், அவரது முகம், அவரது உடல், அதன் வட்டத்தன்மை, மென்மை, பெண்மையின் தன்மை கொண்டதாக இருப்பதைப் பாருங்கள்.

இந்துக்கள் நன்றாகச் செய்துள்ளார்கள் - புத்தர், மகாவீரர், கிருஷ்ணர், ராமர் ஆகியவர்களை அவர்கள் ஒருபோதும் மீசை, தாடியுடன் வர்ணம் தீட்டியதில்லை. ஹார்மோன்கள் (hormones) இல்லாத காரணத்தால் அவர்களுக்கு மீசை, தாடி இல்லை என்பதில்லை - அவர்களுக்கு அழகிய மீசை இருந்திருக்கும் - ஆனால் இந்துக்கள் அந்த எண்ணத்தை விட்டுவிட்டனர். ஏனென்றால் மீசை தாடியுடன் அவர்கள் காண்பதற்கு அதிக ஆண்தன்மை உள்ளவர்களாக தோன்றுவார்கள். ஆனால் எல்லாக் கருத்துகளும் பெண் தன்மை வழியிலேயே வெளிப்படுத்த வேண்டும்: வட்டமான புத்தரின் உடல், மிருதுத்தன்மை சலவைக்கல் அதிக உதவி பண்ணியுள்ளது. சலவைக்கல் அதற்குப் பெண் தன்மையைக்

கொடுக்கிறது. நீத்ஸே, புத்தர் இயேசுவை 'பெண்மை தன்மை' உள்ளவர்கள் என்று கிண்டல் பண்ணுகிறார். அவருடைய கிண்டல் முற்றிலும் அர்த்தமில்லாதது, ஆனால் அவர் சரியான கருத்தை யூகித்தறிந்துள்ளார், அவர்களை பெண் தன்மை உள்ளவர்கள் என்று கூறுவதன் மூலம்.

காம சக்தி மறையும் போது அது எங்கு போகும்? அது வெளிவருவதில்லை. அது ஓர் உள்ளிருக்கும் குளமாகி (pool) விடுகிறது. ஒருவர் முழுவதும் பலம் உள்ளவராக, சக்தி நிறைந்தவராக உணர்கிறார். அதை உபயோகிக்கிறார், அதோடு சண்டையிடுகிறார் என்பதல்ல; இப்போது சண்டையிடும் உத்வேகம் இல்லை. ஒருவர் பலம் மிக உடையவராகும் போது சண்டையிடுவது முடியாது. பலமில்லாதவர்களே சண்டையிடுவார்கள். தங்களுடைய பலத்தைப் பற்றி பயப்படுபவர்களே - தாங்கள் பலமுள்ள்வர்கள் என நிரூபிப்பதற்காக சண்டையிடுவார்கள். உண்மையில் பலசாலியான மக்கள் சண்டையிட மாட்டார்கள். அவர்கள் எல்லாவற்றையுமே ஒரு விளையாட்டாக, குழந்தைத் தனமானதாகவே காணுவார்கள்.

யோகியானவன் பொருளுடையாமையில் ஸ்திரமாக நிலைத்த போது பிரபஞ்ச இருப்பின் (existence) "எப்படி" "எதன் காரணமாக" என்ற ஞானம் உதயமாகிறது.

யோகியானவன் பொருளடையாமையில் நிற்கும் போது, தன்னைத் தவிர எதையும் வைத்துக் கொள்வதில்லை. அவன் ஓர் அரசனாக இருக்கலாம், அவன் அரண்மனையில் வாழலாம். ஆனால் அதை தனக்கென வைத்துக் கொள்வதில்லை. அது சென்று விடுமானால் அவனுடைய மனதில் சிறு சலனம் கூட ஏற்படுவதில்லை.

ஒரு சிறந்த யோகியினுடைய கதை: அவருடைய பெயர் ஜனகர். நூற்றாண்டுகளாக இந்தியா அவரை வழிபட்டு வருகிறது. அவரைப்போல யாரையுமே இந்தியா வழிபடவில்லை, ஏனென்றால் அவர் ஒருவிதத்தில் தனித்தன்மை வாய்ந்தவர். புத்தர் தன்னுடைய அரண்மனையை, இராஜ்யத்தை விட்டு வெளிவந்தார்; ஜனகர் ஒருபோதும் வெளிவரவில்லை. புத்தரும், மகாவீரரும் ஆயிரத்தில் ஒருவர், முழு சரித்திரமுமே அவர்களைக் கொண்டது. ஜனகர் தனித்தன்மை உடையவராக காணப்படுகிறார். அவர் அந்த உதாரணத்தைப் பின்பற்றவில்லை. அவர் அரண்மனையிலேயே தொடர்ந்து இருந்தார், அரசனாகவே தொடர்ந்து இருந்தார்.

ஓர் இள வயதினன் உண்மையைத் தேடுபவன், அவனுடைய குரு, "இப்போது நீ ஜனகரிடம் போ. உன்னுடைய கடைசி உபதேசம் அவரால் நடைபெறும். என்னால் எவையெல்லாம் கற்பிக்க முடியுமோ அவை எல்லாம் கற்பித்து விட்டேன். ஆனால், நான் ஒரு பிச்சைக்காரன். உலகத்தைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது; அதை நான் துறந்து விட்டேன். உலகத்தைப் பற்றி அறிந்துள்ள மனிதரிடம் நீ அவசியம் செல்ல வேண்டும். இது உனக்குக் கடைசி உபதேசமாக இருக்கும். துறப்பதற்கு முன் நீ உலகத்தைப் பற்றி அறிந்துள்ளவரிடம் கட்டாயமாக கேட்க வேண்டும். அதைப்பற்றி எனக்குத் தெரியாது. அதனால் ஜனக ராஜாவிடம் செல்" என்று சொன்னார்.

சீடன் கொஞ்சம் தயங்கினான். ஏனென்றால் அவன் துறப்பதற்கு தயாராக இருந்தான். ஆனால் ஜனகர் ஞானமடைந்த மனிதர் என்பதை அவனால் நம்ப முடியவில்லை. அவர் ஞானமடைந்து விட்டார் என்றால் ஏன் அவர் அரண்மனையில் இருக்கிறார்? சாதாரண தர்க்கம். அவர் எல்லாவற்றையும் கட்டாயம் துறந்துவிட வேண்டும். அவர் எதையும் கட்டாயமாக வைத்துக் கொள்ளக்கூடாது. ஏனென்றால் அது அடிப்படை விஷயங்களில் ஒன்று - பொருளுடையாமை ஆவது; பொருளுடையாமையில் நிலைத்து நிற்பது, பொருளுடையாமை என்ற அந்த நெறியில் (austerity) நிற்றல். ஒருவர் மிக எளிமையாக, மிகக் கபடமில்லாமல் ஆனபோது ஏன் அவர் அரசராக வாழ்கிறார்? மாஸ்டர் சொல்லி விட்டார். அவர் சென்றே தீரவேண்டும். தயக்கத்தோடு, வேண்டா வெறுப்பாக சென்றடைந்தான்.

அன்று மாலையே அவன் அங்கு சென்றான். ஜனகர் அவனை இராஜ சபைக்கு அழைத்தார். அங்கு களியாட்டம் அதிகமாக இருந்தது. அழகிய பெண்கள் நடனமாடிக் கொண்டிருந்தனர். மது, மாது ஒவ்வொருவரும் எறக்குறைய மது அருந்திய நிலையில் இருந்தனர். ஓர் ஆஸ்ரமத்திலிருந்து சென்றிருந்த இந்த இள வயதினனுக்குத் தன் கண்களையே நம்பமுடியவில்லை. அவனுடைய மாஸ்டரை நம்ப முடியவில்லை - அந்த முட்டாள் ஏன் தன்னை இங்கு அனுப்பி வைத்துள்ளார், எதற்காக? அவன் மிகவும் கலவரமடைந்து உடனடியாக போய்விட விரும்பினான். ஆனால் ஜனகர், "அது மரியாதைக் குறைவானது. நீ இங்கு வந்துள்ளாய். ஓர் இரவாவது இங்கு தங்கிச் செல். நாளைக் காலை போய்விடலாம். நீ ஏன் அதிகக் கலவரமடைந்துள்ளாய்? சிறிது நேரம் ஓய்வெடுத்துக் கொள். காலையில் எந்தக் காரணத்திற்காக நீ வந்துள்ளாய் என்பதைக் கேட்கிறேன்" என்றார்.

அந்த இளவயதினன், "இப்போது எதுவும் கேட்கத் தேவையில்லை, நான் என் கண்களாலேயே இங்கு என்ன நடைபெறுகிறது என்பதைப் பார்த்தேன்" என்றான்.

ஜனகர் சிரித்தார். அந்த இளவயதினன் கவனிக்கப்பட்டான் - நன்கு உணவளிக்கப்பட்டான், குளியலும், மஸாஜூம் செய்யப்பட்டது; அழகிய அறை, விலையுயர்ந்த படுக்கை கொடுக்கப்பட்டது. கால்நடையாக காட்டு ஆஸ்ரமத்திலிருந்து தலைநகருக்கு வந்ததால் களைப்படைந்திருந்தான். ஓய்வு கொள்ள விரும்பினான். படுக்கையில் படுத்த அந்த வினாடியில், ஒரு வாள் ஒரு மிக மெல்லிய நூலினால் கட்டப்பட்டு அவனுக்கு மேலே தொங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தான். அவனால நம்பவே முடியவில்லை. இவை எல்லாம் எந்த நோக்கத்திற்காக, மிகவும் நல்ல முறையில் அவன் வரவேற்கப் பட்டான். இப்போது இந்தப் பரிகாசம் ஏன். முழு இரவும் அவனால தூங்கவே முடியவில்லை - தொடர்ந்து அந்த பயம். அவனால் படுக்கையை அனுபவிக்க முடியவில்லை - வாள் அவனுக்கு மேலே தொங்கிக் கொண்டிருக்கிறது.

காலையில் அரசர், "நன்றாகத் தூங்கினாயா?" என்று விசாரித்தார்.

அவன், "எப்படி என்னால் தூங்க முடியும்? என்ன அபத்தமாக பேசுகிறீர்கள் என்னிடம்? எல்லாம் சரிதான். ஆனால் வாள் அப்படியே ஒரு மெல்லிய நூலால் கட்டப்பட்டு தொங்கிக் கொண்டிருந்தது. எந்த வினாடியும் அது விழலாம். ஒரு மெல்லிய காற்று, நான் கொல்லப்பட்டு விடுவேன்" என்றான்.

அரசர், "அப்படியா, உன்னால் படுக்கையை அனுபவிக்க முடியவில்லையா? இந்த அரண்மனையில் எங்களிடமிருந்த படுக்கையில் மிகவும் அழகானது, உனக்கு நான் கொடுத்த இந்த அறை மிகவும் சொகுசானது" என்றார்.

அவன், "நான் அந்த அறை, அந்தப் படுக்கையை நினைவில் கொள்ளவே இல்லை. நான் ஒருபோதும் இதுபோன்ற துன்பத்தில் இல்லை - ஏனெனில் அந்த வாளின் காரணமாகவே" என்றான்.

அரசர், "அப்போ இது பரவாயில்லை. நீ செல்ல வேண்டாம். நான் இந்த அரண்மனையில் இருக்கிறேன். ஆனால் வாளானது எனக்கு மேலே தொங்கிக் கொண்டிருக்கிறது. மரணம் என்ற வாள். அந்த நூலோ இதைவிட மெல்லியது. எந்த வினாடியும் நான் மரணமடையலாம்" என்றார்.

ஒருவர் மரணத்தை நினைவில் கொள்ளும் போது ஒருவரால் எப்படி எதையும் வைத்துக் கொள்ள முடியும். இடம் அங்குள்ளது, அரண்மனை அங்குள்ளது, அரசாட்சி அங்குள்ளது - ஆனால் மரணம், மற்ற எல்லாவற்றையும் விட அதிகமாக அங்குள்ளது. எப்படி ஒருவரால் பொருள் வைத்துக்கொள்ள முடியும். அங்கு மரணம் இருக்கும் போது, அதை ஒருவர் நினைவில் கொள்ளும் போது, ஒருவர் பொருளற்றவராக, எதையும் வைத்துக் கொள்ளாதவராகி விடுகிறார். பின் ஒருவர், "நான் என்னை மட்டுமே வைத்துக்கொள்ள முடியும், மரணம் மற்ற எல்லாவற்றையும் எடுத்துக் கொள்ளும்" என்பதை அறிந்து கொள்கிறார்.

"யோகியானவன் பொருளுடையாமையால் ஸ்திரமாக நிலைத்த போது "எப்படி" "எதன் காரணமாக" என்ற பிரபஞ்ச இருப்பின் (ι xistence) ஞானம் உதயமாகிறது." ஒருவர் எதையும் தனக்கென வைத்துக் கொள்ளாதவராகி விடும்போது, சக்தியானது இனி வெளியே செல்லுவது என்பதில்லை. வைத்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசையின் காரணத்தினாலேயே சக்தியானது வெளிநோக்கிச் செல்கிறது. நீங்கள் எதுவுமே வைத்துக்கொள்ள முடியாது என்பதை உணர்ந்தபோது - நீங்கள் உலகத்தினுள் வந்துள்ளீர்கள். அதிலிருந்து வெளியே சென்று விடுவீர்கள். உங்களுக்கு முன்பும் உலகம் இருந்தது; உங்களுக்குப் பின்னும் அது இருக்கும்... எதுவுமே வைத்துக்கொள்ள முடியாது; வைத்துக்கொள்ளலாம் என்ற எண்ணமே முட்டாள் தனமானது. அதை நீங்கள் உணர்ந்த அந்த வினாடியே, உடனடியாக, உலகை வைத்துக்கொள்ள வேண்டுமென ஆயிரத்தொரு திசைகளிலே சென்று கொண்டிருந்த உங்களது முழு சக்தியும் உள்நோக்கிச் செல்கிறது, பதஞ்சலி..... "அங்கு நான் யார், எங்கிருந்து வந்தேன் என்ற பிரபஞ்ச இருப்பின் (existence) ஞானம் உதயமாகிறது" என்கிறார். நீங்கள் எங்கிருந்து வந்தீர்கள், நீங்கள் யார் என்பதைப் பின்பு தெரிந்து கொள்கிறீர்கள். நீங்கள் பின்பு வாழ்க்கையின் மூல ஊற்றை, பிரபஞ்ச இருப்பை (existence) எதிர்கொள்வீர்கள். பின் நீங்கள் மூல ஊற்றுடன் எதிரெதிராக இருப்பீர்கள். அந்த மூல ஊற்றே கடவுள்; தொடக்கமும், முடிவும். ஆல்ஃபா (Alpha) ஒமேகா (Omega).

○

நீங்கள் சத்சங்கம் என்பது ஒரு ஞானமடைந்த, ஒரு விடுதலை அடைந்த மனிதரின் முன்னிலையில் இருப்பது, எவ்வளவு முக்கியம் என்பது பற்றி நிறைய எங்களிடம் பேசுகின்றீர்கள். இருந்த போதிலும் உங்களுடைய பல சந்நியாசிகள் அவர்களுடைய வாழ்க்கையை உங்களிடமிருந்து தூரத்தில் கழிக்கின்றனர். நாங்கள் எல்லோரும் இங்கே பூனாவில் உங்களுடன் எப்போதும் இருப்பதற்கு எங்கள் எல்லோரையும் வைத்துக் கொள்வீர்களா? அது உங்களைப் பொறுத்ததே.

இல்லை. முன்னிலையில் அதிகமாக இருப்பதென்பது (overdose) ஒவர்டோஸ் ஆக இருக்கலாம். உதவி செய்வதைவிட அது உங்களைத் தொல்லைப்படுத்தும். எல்லாமே எப்போதும் சம அளவில், சமநிலையில் இருக்க வேண்டும். ஏதாவது இனிப்பாக உள்ளதை நீங்கள் உங்களால் இயல்வதை விட அதிகமாகச் சாப்பிடலாம். உங்கள் தேவையை மறந்து விடலாம். நீங்கள் உங்களிடம் திணித்துக் கொள்ளலாம். சத்சங்கம் ஓர் இனிப்பு... உலகத்திலேயே மிக இனிப்பான பொருள் அது. உண்மையில் போதை உண்டாக்குவது... நீங்கள் ஒரு குடிகாரன் ஆகிவிடலாம். அது உங்களை விடுதலை செய்யாது. அது ஒரு புதிய பந்தத்தை ஏற்படுத்தும்.

மாஸ்டரின் (master) அருகில் இருப்பது என்பது ஒரு பந்தமாக ஆகலாம். அல்லது விடுதலையாக்கலாம். அருகில் இருப்பதனால், நீங்கள் விடுதலை அடைந்து விடவேண்டுமென்ற தேவையில்லை. நீங்கள் அஜீரணமடைவீர்கள்; நீங்கள் முன்னிலைக்குப் போதை கொண்டவ்ராகி விடுவீர்கள். இல்லை, அது நல்லதல்ல. எப்பொழுதெல்லாம் யாராவது அவருடைய சொந்த வெளியில் இருக்கும் தேவையிருப்பதாக நான் உணர்ந்தால், எப்பொழுதெல்லாம் யாராவது என்னிடமிருந்து தொலைவில் செல்ல வேண்டுமென்று உணர்ந்தால் அவனை தொலைவிற்கு அனுப்புகிறேன். பசியை உண்டாக்குவது நல்லது, பின் திருப்தி ஆழமாகச் செல்லும். என்னுடன் அதிகம் இருப்பீர்களானால் என்னை மறந்து போன நிலையில்

இருக்கலாம். அஜீரணம் மட்டும் அல்ல என்னை முழுவதுமாக மறந்தும் விடலாம்.

ஷீலா அமெரிக்காவில் இருந்தபோது என்னுடன் நெருங்கி இருந்ததாக, அன்றொரு நாள் சொன்னாள். இப்போது அவள் இங்கிருக்கிறாள். வெகு தொலைவில் தள்ளப்பட்டதாக உணர்கிறாள். இது எப்படி நடக்கும்? அவள் அதிக வேதனையடைந்தாள், குழப்பமடைந்தாள். இது எளிமையானது. அவள் அமெரிக்காவில் இருந்தபோது தொடர்ந்து என்னைப் பற்றியே எண்ணிக்கொண்டு இருந்தாள், இங்கு வந்தபின்பு என்னருகில் இருக்கிறாள். அவள் ஒரு கனவில் வாழ்கிறாள். அந்தக் கனவில் என்னுடன் நெருங்கி இருப்பதாக உணர்கிறாள். இப்போது அவள் இங்கிருக்கும் போது எப்படி கனவு காண முடியும்? உண்மையிலே நான் இங்கிருக்கிறேன். கனவுகள் இனி தேவையில்லை. நான் இங்கே மிக அதிகமாக இருப்பதால் என்னைப் பற்றி மறப்பதற்கு ஆரம்பித்து விட்டாள் - ஆகவே தொலை தூரத்தில் இருப்பதாக அவள் உணர்கிறாள்.

விஷயங்கள் சிக்கலானவை. சில சமயங்களில் நான் உங்களைத் தொலைவிற்கு அனுப்புவது என்னை அதிகம் உணர்வதற்கே. ஒரு பிரிவு தேவை அப்பொழுதுதான் நீங்கள் மறுபடியும் அருகில் வரமுடியும். மாஸ்டருடன் இருப்பது, மாஸ்டரிடமிருந்து விலகி இருப்பது என்ற ரிதம் (rhythm) இருக்க வேண்டும். அந்த ரிதத்திலே பல சாத்தியக்கூறுகள் திறக்கின்றன. ஏனென்றால் முடிவிலே நீங்கள் உங்களுடையதிலேயே இருக்க வேண்டும். மாஸ்டர் எப்போதும் உங்களுடன் இருக்க முடியாது. ஒருநாள் திடீரென நான் மறைந்து விடுவேன் - "தூசுகளின் துகளாக". உங்களால் என்னைத் தேடிக் கண்டுகொள்ள முடியாது. பின்பு நீங்கள் என்னிடம் அதிக போதைக்குள்ளாகி விட்டால். நான் இல்லாமல் உங்களால் இருக்க முடியாது. நீங்கள் தேவையில்லாமல் துன்பமடைவீர்கள், நான் இங்கிருப்பது உங்களைப் பேரானந்தம் அடைய திறமை உள்ளவர் ஆக்குவதற்கே. சில சமயங்களில் நீங்கள் உலகினுள் தொலை தூரத்திற்குச் செல்வது நல்லது, உங்கள் சொந்த வெளியை வைத்திருங்கள், அதனுள் செல்லுங்கள், அதனுள் வாழ்ந்திருங்கள்.

இங்கே என்னுடன் இருந்தபோது எவையெல்லாம் அடைந்தீர்களோ அவற்றை வாழ்க்கையில் சாதித்தறியுங்கள். ஏனென்றால் ஆஸ்ரமம் வாழ்க்கையினுள் இல்லை. ஓர் ஆஸ்ரமம்

உயர்ந்த அளவில் ஓர் ஒழுங்குமுறையாக இருக்க முடியும். அது வாழ்க்கையின் ஒரு மாற்று அல்ல. அது ஒரு பள்ளியாக இருக்க முடியும். அங்கே உங்களுக்கு சில நொடி நேரக் காட்சிகள் கிடைக்கும். பின் நீங்கள் அந்தக் காட்சிகளைச் சுமந்து கொண்டு உலகினுள் செல்லுங்கள் - அங்கே பிரமாணம், சோதனை. அவை உண்மையென அங்கே நிரூபிக்கப்பட்டால், அதன் பின்பே அவை உண்மையானவை.

ஆஸ்ரமத்தினுள் வாழ்வது, ஒரு விடுதலையடைந்த மனிதருடன் வாழ்வது, அவருடைய சக்தி புலத்தினுள் (inner field) வாழ்வது, அநேக சமயங்களில் நீங்கள் ஏதோ அடைந்து விட்டதாக ஏமாற்றமடையலாம். அது உங்களால் அடையப்பட்டதல்ல, அந்த காந்த சக்தியின் காரணத்தால் நீங்கள் புதிய கோணத்தை ஸ்பரிசிக்கிறீர்கள். ஆனால் நான் அங்கு இல்லாத போது, ஆஸ்ரம சூழல் அங்கு இல்லாதபோது நீங்கள் சாதாரண தினப்படி உலகத்திலேயே இருக்கிறீர்கள், அந்த உலகச் சந்தை, அந்த அலுவலகம், அந்தத் தொழிற்சாலை - நீங்கள் இங்கு அடைந்த குறிக்கோளை எடுத்துச் செல்வீர்களானால் அது உங்களை தொல்லைப்படுத்துவதில்லை, பின் உண்மையிலே நீங்கள் எதையோ அடைந்து விட்டீர்கள். இல்லையென்றால் நீங்கள் இங்கு ஒரு கனவில், ஒரு மாயையில் வாழ்கிறீர்கள். முடியாது, உங்களையெல்லாம் என்னால் இங்கு வைத்துக்கொள்ள முடியும் என்றாலும், பின்பும் நான் உங்களை அனுப்பி இருப்பேன். நான் இப்போது செய்வது போலவே உண்மையில் செய்திருப்பேன். அதில் எந்தவித மாற்றமும் இருந்திருக்காது. இது அப்படியே உதவியாக இருந்திருக்கும்.

உங்களைத் தொலைவில் அனுப்பும்போது வருத்தப்படாதீர்கள். உங்களுக்கு அது தேவை. அதுபோல உங்களை நான் இங்கிருக்கச் சொல்லும் போது ரொம்பவும் உயர்வாக எண்ணாதீர்கள். நான் குறிப்பிட்ட கொள்கை எதுவும் உண்டாக்கவில்லை. ஏனென்றால் விஷயங்கள் மிகவும் சிக்கலானவை. ஒவ்வொரு மனிதரும் தனித்தன்மை வாய்ந்தவர்களே!

சில சமயங்களில் சிலரை இங்கு இருப்பதற்கு அனுமதிப்பேன். அவர் மிகவும் உயிரோட்டம் இல்லாதவராக இருப்பதோடு, வளர்ச்சியடைய அதிகக் காலம் எடுக்கும் என்பதால். சிலர் சீக்கிரத்தில் வளர்ச்சி அடைந்து விடுகின்றனர் - பின் சில வாரங்களில் நான், "போ" எனச் சொல்வேன். இங்கே இருப்பதனால் உயர்வாகி விட்டதாக

எண்ண வேண்டாம், அதேபோல் வெளியே அனுப்பி விட்டாலும் வருத்தப்பட வேண்டாம். சில சமயங்களில் சிலரை நான் வைத்துக் கொள்வேன். ஏனென்றால் அவன் மிகவும் சமநிலை உடையவனாக, அளவுக்கு அதிகமாகச் சாப்பிட்டு, ஓவர்டோஸ் (overdose) என்ற நோய்க்குப் பலியாகி விடுவான் என்ற பயம் இல்லாத போது; நான் அவனை அனுமதிப்பேன்.

சில சமயங்களில் யாரோ ஒருவர், ஏதோ சிறிதளவு அடைந்துள்ளார்கள் என்று நான் உணர்ந்தால் பின்பும்கூட அவனை அனுப்பி விடுவேன்; ஏனெனில் நீங்கள் அடைந்துள்ளீர்களா இல்லையா என்பதற்கு உலகம் மட்டுமே அத்தாட்சி ஆகும். ஆஸ்ரமத்தின் தனிமையில், வேறுபட்ட சூழலில் உங்களுக்கு ஒரு விநாடி நேர ஒளி கிடைத்திருக்கலாம், ஏனென்றால் நீங்கள் இங்கிருக்கும் மொத்த மனதின் பகுதியாகி விடுகிறீர்கள். நீங்கள் என்னுடைய அலைகளின் மேல் மிதக்க ஆரம்பித்து விடுகிறீர்கள். அது உங்களுடையதல்ல. ஆனால் நீங்கள் இல்லத்திற்குச் சென்றபோது உங்களுடைய சொந்த அலைகள் மேல் மிதக்கிறீர்கள் - சிறியதாக இருக்கலாம், அதனால் பரவாயில்லை. ஏனென்றால் அவை உங்களுக்குச் சொந்தமானவை, உங்களுக்கு உண்மையானவை, முடிவில் அவை மட்டுமே உங்களை அடுத்த கரைக்கு எடுத்துச் செல்லும். நான் வழியை சுட்டிக் காட்டத்தான் முடியும்.

மாஸ்டர் ஒருவர் பந்தமாகக் கூடாது; வெகு சுலபத்தில் ஒரு மாஸ்டர் பந்தமாகி விடுவார். அன்பு எப்பொழுதுமே பந்தமாக மாற்றப்பட முடியும். அது எப்போதும் சிறைவாசமாகவும் ஆக முடியும். அன்பு என்பது ஒரு சுயேச்சையாக இருக்க வேண்டும். அது உங்களை எல்லா விலங்குகளிலிருந்தும், பந்தத்திலிருந்தும் விடுதலை அடைய உதவ வேண்டும். அதனால் நான் தொடர்ந்து என்னை விழிப்போடு வைத்துக்கொள்ள வேண்டும்; யார் அனுப்பப்பட வேண்டும். யார் இங்கு தங்குவதற்கு அனுமதிக்கப்பட வேண்டும், எவ்வளவு...

ஓர் இசைவு (rhythm) தேவை சில சமயங்களில் என்னுடன் இருப்பது, சில சமயங்களில் என்னுடன் இல்லாமல் இருப்பது. ஒருநாள் வரும், இதை நீங்கள் உணர்வீர்கள். பின்பு நான் உங்களுடன் மகிழ்வாக இருப்பேன். என்னுடனோ அல்லது என்னுடன் இல்லாமலோ எந்த வகையிலும் நீங்கள் அதேபோல் தொடர்ந்து இருப்பீர்கள். இங்கே ஆஸ்ரமத்தில் இருந்தாலும் தியானம் பண்ணிக்கொண்டோ அல்லது

கடைத்தெருவில் வேலை செய்துகொண்டோ இருந்தாலும் நீங்கள் அதேபோல் தொடர்ந்திருப்பீர்கள் - எதுவும் உங்களைத் தொடுவதில்லை. பின்பு நீங்கள் என்னை மகிழ்வடையச் செய்கிறீர்கள். பின் நீங்கள் நிறைவடைகிறீர்கள்.

○

**திருமணத்திற்கு எதிராக வாதாடிய போதும் மக்களிடம் திருமணம் செய்து கொள்ளச் சொல்கிறீர்களே, ஏன்?**

இது அநுராகியிடமிருந்து.

திருமணமென்பது எனக்கு உயிரற்ற பொருள். அது ஒரு நிறுவனம் (ஸ்தாபனம்), உன்னால் ஒரு நிறுவனத்தில் வாழ முடியாது. பைத்தியக்கார மக்களே நிறுவனத்தில் வாழ்வார்கள். இது அன்பிற்கு ஒரு மாற்று. அன்பு ஆபத்தானது. அன்பாக இருப்பது என்பது புயலில் எப்போதும் இருப்பது. உங்களுக்குத் துணிவு தேவை; உங்களுக்கு விழிப்பு தேவை, நீங்கள் எதற்கும் தயாராக இருக்க வேண்டும். அன்பில் எந்தப் பாதுகாப்பும் இல்லை. அன்பு பாதுகாப்பின்மையே. திருமணம் பாதுகாப்பானது. ரிஜிஸ்டரி ஆபீஸ் (Registry Office) போலீஸ், கோர்ட் அதன் பின்னே உள்ளது. மாநிலம், சமூகம், மதம் - அவை எல்லாம் பின் இருக்கின்றன. திருமணம் என்பது சமுதாய நிகழ்ச்சியாகும். அன்பு, தனிமனிதருடைய, தனிப்பட்ட, நெருக்கமான ஒன்றாகும்.

ஏனென்றால் அன்பு ஆபத்தானது, பாதுகாப்பில்லாதது - அன்பு எங்கு எடுத்துச் செல்லும் என்பது ஒருவருக்கும் தெரியாது. அது அடைய வேண்டிய இடம் ஏதும் இல்லாமல் நகரும் ஒரு மேகத்தைப் போன்றது. அன்பு மறைந்துள்ள மேகம், எங்கிருக்கிறது என்பது தெரியாது. எந்த வினாடியில், எங்கிருக்கிறது என்பதை யாரும் தெரிந்து கொள்ள முடியாது. கணிக்க முடியாதது. எந்த சோதிடரும் அன்பைப் பற்றி எதுவும் கணிக்க முடியாது. திருமணத்தைப் பற்றி - சோதிடர்கள் மிக மிக உதவி உள்ளவர்கள். அவர்களால் கணிக்க முடியும்.

மனிதன் திருமணத்தை ஏற்படுத்த வேண்டும். ஏனென்றால் தெரியாத ஒன்றைக் கண்டு மனிதனுக்குப் பயம் உள்ளது. வாழ்க்கையின் எல்லா படித்தரங்களிலும், பிரபஞ்ச இருப்பிலும்

(existence), மனிதன் ஒரு மாற்று உண்டாக்கி உள்ளான். அன்பிற்கு - திருமணம், உண்மையான மதத்திற்கு பிரிவுகள் - அவை திருமணங்கள் போன்றவை. ஹிந்துயிஸம், மொகமெனிஸம், கிறிஸ்டியானிட்டி, ஜெயினிஸம் - இவை உண்மையான மதங்கள் அல்ல. உண்மையான மதத்திற்குப் பெயர் இல்லை. அது அன்பைப் போல் உள்ளது. ஆனால் அன்பு ஆபத்தானது என்பதால், நீங்கள் எதிர்காலத்தைப் பற்றி பயத்துடன் இருப்பதால், நீங்கள் சில பாதுகாப்புகள் வேண்டுமென விரும்புகிறீர்கள். நீங்கள் வாழ்க்கையை விட இன்சூரன்ஸ் கம்பெனிகளில் அதிக நம்பிக்கைக் கொண்டுள்ளீர் கள். அதனால்தான் நீங்கள் திருமணத்தை உருவாக்கியிருக்கிறீர்கள்.

அன்பைவிட திருமணம் அதிக நிலையானது. அன்பு அழியாததாக இருக்கலாம். ஆனால் அது நிலையானதல்ல. அது எப்போதும், எப்போதும் தொடரலாம். ஆனால் அது தொடர்வதற்கு எந்த அகத் தேவையும் இல்லை. அது ஒரு மலரைப்போல், காலையில் மலர்ந்து, மாலையில் சென்று விட்டது. அது ஒரு பாறைபோல் அல்ல. திருமணம் அதிக நிலையானது; நீங்கள் அதை நம்ப முடியும். வயதான காலத்தில் அது உதவியாக இருக்கும்.

அது கஷ்டங்களைத் தவிர்ப்பதற்கான வழியாகும். ஆனால் எப்போதெல்லாம் கஷ்டங்களையும் சவால்களையும் தவிர்க்கிறீர் களோ அப்போது உங்களுடைய வளர்ச்சியையும்கூட தவிர்க்கிறீர்கள். திருமணம் ஆகியவர்கள் ஒருபோதும் வளர்ச்சி அடைவதில்லை. காதலர்கள் வளர்கின்றனர். ஏனென்றால் ஒவ்வொரு வினாடியும் சவால்களை சந்திக்க வேண்டியுள்ளது - பாதுகாப்பின்மையுடன்.

திருமணம் என்பது ஒரு சடங்கு (சம்பிரதாயம்) ஒரு சட்டப்பூர்வமான பந்தம். திருமணம் ஒரு நரகம், ஆனால் சில சமயங்களில் மக்களுக்கு அது தேவைப்படுகிறது. என்ன செய்வது? அதனால் நான் அவர்களைத் திருமணம் செய்து கொள்ளும்படி சொல்ல வேண்டியதிருக்கிறது. அதனுடைய நரகத்தினுள் அவர்கள் கடந்து செல்ல வேண்டியிருக்கிறது. அவர்கள் அந்த நரகத்தினுள் கடந்து செல்லவில்லை என்றால் புரிந்துகொள்ள மாட்டார்கள். திருமணத்தினுள் அன்பு வளர முடியாது என்று நான் சொல்லவில்லை; அது வளர முடியும், ஆனால் அங்கு அதற்குத் தேவையில்லை. அன்பிலே திருமணம் வளருவதில்லை என்று சொல்லவில்லை. அது வளர முடியும், ஆனால் அங்கு அதற்குத் தேவையில்லை. தர்க்கப்பூர்வமான தேவை அதிலே இல்லை.

அன்பு திருமணமாக முடியும். ஆனால் அது முழுதும் மாறுபட்ட வகையான திருமணமாகும். இது சமுதாய சம்பிரதாயம் அல்ல. இது ஒரு ஸ்தாபனமல்ல, இது ஒரு பந்தமல்ல, அன்பு திருமணமாகும் போது, இரண்டு தனி மனிதர்கள் ஒன்று சேர்ந்து வாழ முடிவு பண்ணியதாகும் - ஆனால் முழு சுதந்திரத்துடன், ஒருவரை ஒருவர் உடைமையாக்கிக் கொள்ளாமல். அன்பு ஒருவரை ஒருவர் உடைமையாக்கிக் கொள்ளாதது. அது சுதந்திரம் கொடுக்கிறது. எப்போது அன்பு வளர்ந்து திருமணத்தில் செல்கிறதோ, திருமணம் சாதாரணமானதல்ல. அது முற்றிலும் அசாதாரணமானது. அதற்கு ரிஜிஸ்டரி ஆபீஸுடன் எந்த ஒன்றும் இல்லை. உங்களுக்கு ரிஜிஸ்டரி ஆபீஸின் தேவைகூட இருக்கலாம், சமுதாய ஒப்புதல் தேவையிருக் கலாம். ஆனால் அவை எல்லாம் சும்மா மேல்மட்டத்திற்கே. அவை எல்லாம் அதனுடைய மையத்திற்கு (central core) இல்லை. மையத்தினுள் இருதயமே, மையத்தினுள் சுதந்திரமே.

சில சமயங்களில் திருமணத்திலிருந்தும் கூட அன்பு வளர முடியும். ஆனால் அது அபூர்வமாகவே நடைபெறுகிறது. அதிகபக்ஷம் (பெரும்பாலாக) அன்யோன்யம், ஒருவிதமான அனுதாபம் - ஆனால் அன்பு கிடையாது. அன்பு உணர்ச்சி மிக்கது; அனுதாபம் சுவாரஸ்யமில்லாதது. அன்பு உயிரோட்டமுள்ளது. அனுதாபம் ரொம்ப ரொம்ப ஆர்வமற்றது.

ஆனால் நான் ஏன் மக்களைத் திருமணம் செய்துகொள்ளச் சொல்லுகிறேன்? அவர்கள் பாதுகாப்பின் பின்பாக இருப்பதாக நான் பார்த்தால், அவர்கள் பயப்படுவதைப் பார்த்தால், திருமணம் இல்லையென்றால் அன்பினுள் செல்ல முடியாது என்றால் அவர்களை திருமணம் செய்து கொள்ளும்படி சொல்வேன். ஆனால் அதற்கு அப்பால் செல்வதற்கு அவர்களுக்கு நான் உதவி செய்துகொண்டே இருப்பேன். அதைக் கடந்து செல்வதற்கு அவர்களுக்கு நான் உதவி செய்துகொண்டே இருப்பேன். திருமணத்தைக் கடந்து செல்ல வேண்டும். அதற்கப்புறமே உண்மையான திருமணம் நிகழும். திருமணம் முழுதும் மறந்து விடப்பட வேண்டியது. நீங்கள் அன்பு வைத்துள்ள மற்றவர் உண்மையில் எப்போதும் ஓர் அந்நியராக தொடர்ந்து இருக்க வேண்டும். ஒருபோதும் சலுகை எடுத்துக் கொள்ளக் கூடாது. இருவர் அந்நியர் போல் வாழும்போது, அங்கே அதற்கு அழகுள்ளது, எளிமைமிக்க, கபடமில்லாத அழகு அதற்குள்ளது.

ஒவ்வொருவரும் ஓர் அந்நியரே; உங்களால் ஒரு மனிதரை தெரிந்து கொள்ள முடியாது. அறிவு மிகவும் மேலோட்டமானது. ஒரு மனிதர் மிகவும் ஆழ்ந்த, அறிவுள்ள, எண்ணற்ற இரகசியங்கள் உள்ளவர். அதனாலேதான் ஒவ்வொருவரும் உள்ளே ஒரு கடவுளை எடுத்துச்செல்கின்றனர் என்று நாம் சொல்கிறோம். எப்படி உங்களால் ஒரு கடவுளை அறிந்துகொள்ள முடியும்? அதிகபக்ஷம் நீங்கள் புற எல்லையைத் தொட முடியும்? ஒரு மனிதரைப்பற்றி அதிகம் தெரிந்து கொள்ளும் பொழுது, நீங்கள் எளிமையாகி விடுகிறீர்கள். இரகசியம் தொடப்படவில்லை என நீங்கள் அதிகமாக உணர்வீர்கள். உண்மையில் இரகசியமானது. மிக மிக ஆழமானது. நீங்கள் அதிகம் தெரிந்து கொள்ளும் போது, நீங்கள் தெரிந்து கொண்டது குறைவானது என உணர்வீர்கள்.

காதலர்கள் உண்மையில் அன்பில் இருந்தார்கள் என்றால், அவர்கள் மற்றவரை ஒருபோதும் ஒரு தெரிந்த வஸ்துவாக்க மாட்டார்கள். ஏனென்றால் பொருள்கள் மட்டுமே தெரிந்து கொள்ளக்கூடியது - மனிதர்கள் ஒருபோதும் இல்லை. பொருள்கள் மட்டுமே அறிவின் பகுதியாக ஆக முடியும். ஒரு மனிதன் - ஓர் இரகசியம் - மிகச்சிறந்த இரகசியம் அங்குள்ளது.

திருமணத்தைக் கடந்து செல்ல வேண்டும். சட்டப்பூர்வமான, சம்பிரதாயமான குடும்பம் என்ற கேள்வியில்லை - அவை எல்லாம் அர்த்தமற்றவை. தேவைதான், நீங்கள் சமுதாயத்தில் வாழ்வதால்; ஆனால் கடந்து செல்ல வேண்டும். அதோடு முடிந்து விடாதீர்கள். ஒருவரை சொந்தமாக்க முயலாதீர்கள். மற்றவர், கணவர் என எண்ண ஆரம்பிக்காதீர்கள். அந்த மனிதருடைய அழகை, ஓர் அழகற்ற பொருளாக்கி விடுகிறீர்கள் - கணவன் என்று. இந்தப் பெண் என்னுடைய மனைவி என்று ஒருபோதும் சொல்லாதீர்கள். அந்த அந்நியர் இனி அங்கு இல்லை. அதை நீங்கள் மிகவும் அவமரியாதையான நிலைக்கு இறக்கி விட்டீர்கள். பொருள்களின் மிகச் சாதாரண நிலைக்கு. மனைவியர், கணவன்மார்கள் உலகத்தைச் சார்ந்தவர்கள். காதலர்கள் அடுத்த கரையைச் சார்ந்தவர்கள்.

மற்றவருடைய புனிதத் தன்மையை கடவுள் தன்மையை நினைவில் கொள்ளுங்கள். அதன் மேல் ஒருபோதும் ஆக்கிரமிக்காதீர்கள். ஒருபோதும் எல்லை மீறிச் செல்லாதீர்கள். ஒரு காதலர் எப்போதும் தயங்குபவரே. அவன் எப்போதும் நீங்களாக இருப்பதற்கு

அவன் இடைவெளியைக் (space) கொடுப்பான். அவன் நன்றி உள்ளவனாக இருப்பான். அவன் ஒருபோதும் நீங்கள் அவனுடைய உடைமை என எண்ணுவதில்லை. சில சமயங்களில், அபூர்வமான விநாடிகளில் நீங்கள் உங்களுடைய மிகவும் உள்ளான (சந்நிதியில்) அவனை நுழைவதற்கு, உங்களுடன் இருப்பதற்கு அனுமதித்த போது அவன் நன்றி உள்ளவனாக இருப்பான். அவன் எப்போதும் நன்றியுடனேயே இருக்கிறான்.

ஆனால் கணவன், மனைவியை எப்போதும் குறை கூறிக் கொண்டே இருக்கின்றனர், ஒருபோதும் நன்றியுடன் இல்லை - எப்போதும் சண்டையிட்டுக் கொண்டு. நீங்கள் அவர்களது சண்டையை கவனித்தீர்களானால் அது விகாரமாக இருக்கும். அன்பின் முழு அழகும் மறைந்து விடுகிறது. மனைவி, கணவன், குழந்தைகள், அன்றைய தினம், தினப்படி வாழ்க்கை முறை என்ற சாதாரணமான உண்மை மட்டும் இருக்கிறது. இனி தெரியாத ஒன்று (unknown) அதை ஸ்பரிசிப்பதில்லை. அதனால்தான் சுற்றிலும் குப்பைகள் சேர்கப்படுவதை நீங்கள் பார்ப்பீர்கள் - ஒரு மனைவி பார்ப்பதற்கு சுவாரஸ்யமில்லாமல், ஒரு கணவன் பார்ப்பதற்கு சுவாரஸ்யமில்லாமல். வாழ்க்கை அதன் பொருளை, துடிப்பை, முக்கியத்துவத்தை இழந்து விட்டது. அது இனி ஒரு கவிதையாக இல்லை. அது மந்தமாகி விடுகிறது.

அன்பு கவிதை. திருமணம் சாதாரண உடை நடை, சாதாரண நடைமுறைக்கு நல்லது. நீங்கள் காய்கறிகள் வாங்குகிறீர்கள் என்றால் நல்லது; ஆனால் நீங்கள் ஆகாயத்தைப் பார்க்கும் போது, கடவுளுடன் பேசும்போது, போதுமானதல்ல - கவிதை தேவைப்படுகிறது. சாதாரண வாழ்க்கை உரைநடை போன்றது. ஒரு தெய்விக வாழ்க்கை கவிதை போன்றது. ஒரு வித்தியாசமான இணைப்பு, ஒரு வித்தியாசமான ஸ்வரம்; ஒருவகையில் தெரியாத ஒன்றும், இரகசியமானதும் ஆகும்.

நான் திருமணத்தை ஆதரிப்பதில்லை. என்னைத் தப்பாகப் புரிந்துகொள்ள வேண்டாம். நான் திருமணமாகாமல் மக்களுடன் வாழுங்கள் என்று சொல்லவில்லை. சமுதாயம் எதைச் செய்ய வேண்டுமென விரும்புகிறதோ அதைச் செய்யுங்கள். ஆனால் அதை முழுதுமாக எடுத்துக் கொள்ளாதீர்கள். அது மேல்மட்டமே. அதற்கு அப்பால் செல்லுங்கள். உங்களுக்கு இதுதான் தேவை என நான் என்னும்போது திருமணம் செய்துகொள்ளச் சொல்கிறேன்.

நீங்கள் நரகத்தினுள் செல்ல வேண்டிய தேவையிருப்பதாக நான் எண்ணினால், உங்களை அனுமதிப்பேன், - தள்ளவும் செய்வேன் - நரகத்தினுள் செல்லும்படி, ஏனென்றால் அது உங்களுக்குத் தேவை, அப்போதுதான் நீங்கள் வளர்வீர்கள்.



**நான் இங்கு நான்கு வாரங்களாக இருந்து கொண்டிருக்கிறேன். ஆயினும் என்னால் தெருவில் உள்ள துன்பத்துடன், என் கண்களை மூடிக் கொள்வதைத் தவிர, அதோடு ஈடு கொடுக்க முடியவில்லை. ஆஸ்ரமத்தில் எதுவெல்லாம் தளர்த்திக் கொண்டு வந்ததை, வீட்டிற்கு நான் சென்ற போது மறைந்து விட்டதாகத் தோன்றுகிறது. தயவு செய்து இதைப்பற்றி ஏதேனும் சொல்லுங்கள்.**

**நா**ன் முன்பே சொல்லி விட்டேன். இந்தக் கேள்விக்குப் பதிலளித்து விட்டேன். நீங்கள் இங்கே அகத் தேடுதலுக்காக (inner search) இருக்கிறீர்கள் என்றால், தயவு செய்து நீங்கள் இங்கு என்னுடன் இருக்கும் சில நாட்களுக்கு உலகத்தை மறந்து விடுங்கள். அது கடினமெனத் தெரிகிறது. அதனாலே இப்போது ஒரே ஒரு வழிதான் உள்ளது - துன்பப்படுங்கள், எவ்வளவு துன்பம் முடியுமோ அவ்வளவு. போய் பிச்சைக்காரர்களுடன் உட்கார்ந்து அழுது புலம்பி, துன்பப்பட்டு அதோடு முடித்துக் கொள்ளுங்கள். நரகத்தை விரும்பினால் அதனுள் செல்லுங்கள்.

இது ஓர் அகங்கார பாவம். இது கருணை என்று நீங்கள் எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள். இது முட்டாள்தனம் - ஏனென்றால் நீங்கள் துன்பப்படுவதன் மூலம் தெருவில் இருக்கும் எந்தப் பிச்சைக்காரனும் உதவி செய்யப்படுவதில்லை. அங்கு நூறு கஷ்டப்படுபவர்கள் இருந்தால் உங்களுடைய துக்கம் அவர்களோடு நூற்று ஒன்றாக்கும். நீங்கள் துக்கப்படுவதன் மூலம் எப்படி உதவ முடியும்? ஆனால் அது ஆழ்ந்த அகங்காரம், அது நல்லதாக உணர்கிறது, "நான் ரொம்பவும் அன்புடன் இருக்கிறேன், அதிகக் கருணையுடன். நான் மற்ற கடினமான மக்களைப் போல கல் போல் இல்லை, எனக்கு இதயமிருக்கிறது. நான் தெருக்களைக் கடந்து செல்லும்போது மிக ஏழ்மையான நிலை சுற்றியிருப்பதைப் பார்ப்பதால் துன்பமடை

கிறேன்.'' இது புனிதமான அகங்காரம் - பார்ப்பதற்கு புனிதமாகத் தெரிகிறது. ஆனால் அடி ஆழத்திலே புனிதமற்றது.

உங்களை அறிந்து கொள்வதற்கு நீங்கள் இங்கு உள்ளீர்கள். சந்தர்ப்பத்தை இழந்து விடாதீர்கள். அங்கே பிச்சைக்காரர்கள் இருந்து கொண்டிருப்பார்கள்; பின்பு நீங்கள் கவலைப்பட்டுக் கொள்ளலாம். அவர்கள் உலகத்தை விட்டு அவ்வளவு சீக்கிரம் சென்றுவிட மாட்டார்கள் – பயப்பட வேண்டாம். நீங்கள் எப்போதும் அவர்களைக் கண்டுகொள்ளலாம். கவலைப்பட வேண்டாம். இந்தியாவிற்கு வந்து நீங்கள் எப்போதும் கவலைப்படலாம். அதற்கு எந்த அவசரமும் இல்லை. நான் எப்போதும் இங்கிருக்க மாட்டேன். நினைவில் கொள்ளுங்கள்.

அடுத்தமுறை நீங்கள் வரும்போது, பிச்சைக்காரர்கள் அங்கிருப்பார்கள் – நான் இங்கில்லாமல் இருக்கலாம். அதனால் நீங்கள் கொஞ்சம் விழிப்போடு இருப்பிர்கள். ஆனால் என்னுடன் இருக்கும் இந்த சந்தர்ப்பத்தை உபயோகித்துக் கொள்ளுங்கள். இதை முட்டாள்தனமாக வீணாக்கி விடாதீர்கள். ஆனால் நீங்கள் அதிலிருந்து வெளிவரமுடியவில்லை என எண்ணுவீர்களானால், ஒரே வழி பின்பு என்னை மறந்து விடுவதுதான்.போய் பிச்சைக்காரர்களுடன் எவ்வளவு முடியுமோ அவ்வளவு துக்கப்பட்டுக் கொள்ளுங்கள். அவ்வாறுதான் நீங்கள் அதிலிருந்து வெளிவரலாம். உங்களுக்கு உதவி தேவை உள்ளது. அதனுள் செல்லுங்கள். நான் காத்திருப்பேன். அதை முடித்து விட்டபின் வாருங்கள்.

**நீங்கள் எங்கள் எல்லோர் மேலும் எப்படி ஒரே நேரத்தில் வேலை செய்கிறீர்கள் அதன் ரகசியம் என்ன?**

இதில் இரகசியம் ஒன்றும் இல்லை. ஏனென்றால் நான் உங்களிடம் அன்பு செலுத்துகிறேன். நீங்கள் அநேகர் அல்லர். என்னுடைய அன்பு உங்களைச் சூழும்போது நீங்கள் ஒன்றாகி விடுகிறீர்கள். நான் உண்மையில் தனி மனிதர்களை உருவாக்குவதில்லை. அப்போது அது கடினமானது. நான் உங்களைப் பார்க்கும் போது, உங்களைப் பார்ப்பதே இல்லை. உங்களை முழுமையின் பகுதியாகவே பார்க்கிறேன். என்னுடைய அன்பில் நீங்கள் எல்லோரும் ஒன்றே. நீங்கள் சரணடைந்த அந்த வினாடியே ஓர் அகங்காரமாக இருந்த நீங்கள் மறைந்து விடுகிறீர்கள். நீங்கள் எல்லையற்ற ஒரு நிகழ்வில் ஒரு பகுதியாகி விடுகிறீர்கள். நீங்கள் ஒரு துளிபோல் நீங்கள்

சரணடையும் போது கடலினுடைய பாகமாகி விடுகிறீர்கள். நான் கடன்மேல் வேலை செல்கிறேன் துளியுடன் அல்ல.

உண்மையில் நான் வேலை செய்கிறேன் என்பது சரியானது இல்லை. இது வேலை அல்ல. அந்த வழி நான் இருக்கிறேன் என்பதே. அது நடைபெறுகிறது. இல்லையென்றால் செய்ய முடியாது. ஒரு முறை உங்கள் இதயத்தை என்னோடு துடிப்பதற்கு விட்டுவிட்டீர்களானால், அது வேலை செய்ய ஆரம்பித்து விடும். உண்மையில் இது ஒரு கேள்வி உங்களால் முடிவு செய்யப்பட வேண்டும். நான் வேலை செய்வதை நீங்கள் விரும்பினீர்களானால், அனுமதியுங்கள். நான் முன்பே வேலை செய்ய ஆரம்பித்து விட்டேன்.

நீங்கள் உலகம் முழுவதும் இருபத்தைந்தாயிரம் பேர் இருக்கலாம். நீங்கள் இருபத்தைந்து லட்சம் ஆகலாம், அது எந்த வித்யாசமும் உண்டாக்குவதில்லை, என்னுடைய வேலை தொடர்ந்து அதுவாகவே இருக்கிறது. முழு உலகமும் சந்நியாசிகளாக மாற்றப்பட்ட போது என்னுடைய வேலை தொடர்ந்து அதுவாகவே இருக்கும் இது ஒரு தீபம் ஓர் அறையினுள் எரிவதைப்போல் செயல்படுகிறது. பின் பத்து மனிதர்கள் அறையினுள் நுழைகின்றனர். தீபம் அதிகம் எரிகிறது என்பதில்லை. முழு அமைதியில், தனிமையில் எரிந்து கொண்டிருக்கிறது. ஒருவன் நுழைந்தான், அவன் பார்க்கிறான். இப்போது பத்துப் போர் நுழைந்தனர். அவர்கள் பார்க்கின்றனர். கோடிக் கணக்கில் நுழைந்தனர். அவர்களும் பார்க்கின்றனர். அங்கு தீபம் எப்போதும் எரிந்து கொண்டே இருக்கிறது. அங்கு ஒருவரும் இல்லாத போதும் கூட எரிந்து கொண்டே இருக்கிறது.

ஒருவரும் இல்லையென்றாலும் நான் தொடர்ந்து அதே வழியில் செயல்பட்டுக் கொண்டே இரகசியமும் கிடையாது. உண்மையில் வேலை கிடையாது. அது அன்பே. நீங்கள் அன்பின் நிலையை அடைந்து விட்டீர்களானால், நீங்கள் ஒளி நிலையை அடைந்து விட்டீர்கள். அது தொடர்ந்து எரிந்து கொண்டிருக்கிறது. சுடர் அங்கிருக்கிறது. யார் ஒருவன் அவனுடைய கண்களைத் திறக்கத் தயாராக இருக்கிறானோ அவன் பயன் அடைகிறான்.

O

உங்களிடமிருந்து சந்நியாசம்பெற்றுக் கொள்ளவில்லை என்றால் உங்களிடமிருந்து பிரிந்து போயிருப்பேன். மேலும் என்னுடைய

முந்தைய மாஸ்டர் இப்போது ஏற்றுக் கொள்ள மாட்டார், ஏனென்றால் ஒரு வேளை நான் அவருக்கு நம்பிக்கைத் துரோகம் செய்து விட்டேன், நம்பிக்கை இழந்துவிட்டேன் என்பதால் எவ்வகையி லேனும் உங்களிடம் நம்பிக்கை இழக்க நான் விரும்பவில்லை. இப்போது ஞானம் அடைவதற்கு நான் பேராவல் கொள்ளவில்லை. நீங்கள் என்னை உங்கள் காலடியில் வைத்துக்கொள்வீர்களானால் குரு என்ற முறையில் உங்கள் கடமையைச் செய்துள்ளதாக எண்ணுவேன்.

நிறைய விஷயங்கள் புரிந்து கொள்ள வேண்டும். அவை உபயோகமாக இருக்கும். முதல் விஷயம்: யாருக்காகவும் நிறைவேற்ற வேண்டுமென்ற கடமை எனக்கில்லை. கடமை என்பது ஒரு கண்ணிய மற்ற வார்த்தை, எனக்கு இது ஒரு நான்கெழுத்து வார்த்தை. மிக அசுத்தமானது. அன்பு ஒரு கடமையல்ல. நீங்கள் மக்களிடம் அன்பு செலுத்தும்போது உதவி செய்கின்றீர்கள், நீங்கள் இன்பமடைகிறீர்கள். அது ஒரு கடமையல்ல, ஒரு சுமையுமல்ல எதைச் செய்வதற்கும் ஒருவரும் என்னைக் கட்டாயப்படுத்துவதில்லை. நான் அதைச் செய்வதற்கும் எந்த வழியிலும் கடமைப்பட்டவன் அல்லன். அன்பு செயல்படுகிறது அவ்வளவே.

அன்பு மரணமடையும் போதே கடமை உள்ளே நுழைகிறது. நீங்கள், “அலுவலகத்திற்கு சென்று வேலை செய்யும் கடமை எனக்குள்ளது. ஏனென்றால் எனக்குத் திருமணமாகி குழந்தைகள் உள்ளனர், அதனால் கடமை நிறைவேற்றப்பட வேண்டும்.” என்று சொல்கின்றீர்கள். நீங்கள் உங்கள் மனைவி, குழந்தைகளிடம் அன்பு செலுத்துவதில்லை. ஆகையால் “கடமை” என்ற வார்த்தை அர்த்தமுள்ளதாகிறது. உங்களுடைய வயதான தாயார் மரணத் தருவாயில் இருக்கும்போது நீங்கள், “இது ஒரு கடமை, போய் அவளுக்கு சேவை செய்ய வேண்டும்” என்று சொல்கிறீர்கள். நீங்கள் அவளிடம் அன்பு செலுத்தவில்லை. அன்பு செலுத்தினால் நீங்கள் எப்படி “கடமை” என்ற வார்த்தையை உபயோகிப்பீர்கள்.

(தெருவில்) சாலையில் ஒரு போலீஸ் (policeman) நின்று கொண்டு கடமையை நிறைவேற்றுகிறான். அது சரியே, போக்குவரத்தில் குழப்பம் உண்டாக்கும் மக்களை அவன் விரும்புவதில்லை. நீங்கள் உங்கள் அலுவலகத்திற்குச் சென்று ஒரு வேலை உங்கள் கடமையைச் செய்கிறீர்கள். ஆனால் உங்கள் குழந்தைகளுக்காக கடமையைச் நிறைவேற்றுகிறேன் என்று சொல்லும்போது, அந்த வார்த்தையை

உபயோகிப்பதன் மூலம் ஒரு பாபச் செயலை செய்கின்றீர்கள். நீங்கள் குழந்தைகளிடம் அன்பு செலுத்துவதில்லை. நீங்கள் முன்பே சுமப்பவர் ஆகிவிட்டீர்கள்.

எனக்கு நிறைவேற்ற எந்தக் கடமையும் இல்லை. நான் உங்களிடம் அன்பு செலுத்துகிறேன், ஆயினும் நிறைய விஷயங்கள் நிகழ்கின்றன. என்னிடம் நன்றி சொல்வதற்கு அங்கு ஒன்றும் இல்லை. ஏனென்றால் நான் எந்தக் கடமையும் செய்யவில்லை. நான் ஒரு கடமையைச் செய்தால், நீங்கள் என்னிடம் நன்றி உள்ளவர்களாக இருக்க வேண்டும். இது அன்பு அவ்வளவே.

உண்மையில் உங்களிடம் அன்பைப் பொழிவதற்கு என்னை அனுமதித்ததற்கு நான் நன்றி உள்ளவனாக இருக்கிறேன். நீங்கள் மறுத்திருக்கலாம். இது தான் அன்பின் இரகசியம். நீங்கள் அதிகம் அன்பு செலுத்தினால் அது அதிகம் வளருகிறது. அதை அதிகம் பகிர்ந்து கொள்வீர்கள். ஆனால், ஜீவாதாரமான (உயிர் நிலையான) நீருற்று திறக்கப்பட்டு அதிகமாகப் பாய்ந்து பகிர்ந்து கொள்ளத் தயாராகிறது. நிறையக் கொடுக்கும்போது நிறைய அடைகிறீர்கள். நான் களைப்படையவில்லை. நான் எந்த வழியிலும் அதனால் தளர்வடையவில்லை அது அழகானது.

முதல் விஷயம்; உங்கள் சார்பாக நிறைவேற்றுவதற்கு எனக்கு எந்தக் கடமையும் இல்லை. கடமையை நிறைவேற்றும் ஒரு குரு உனக்குத் தேவையிருந்தால், ஒரு தப்பான மனிதரிடம் வந்துள்ளாய். வேறு எங்காவது செல். சிறந்த கடமைகளை நிறைவேற்றும் நிறைய குருமார்கள் உள்ளனர். நான் என்னை அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். நான் எதற்கு எந்தக் கடமையையும் நிறைவேற்ற வேண்டும்? நான் என்னிடத்திலேயே மகிழ்ந்து கொண்டிருக்கிறேன். ஏதாவது நான் செய்தாலும் அது மகிழ்வூட்டுவதே, ஒரு கொண்டாட்டமே.

“உங்களிமிருந்து சந்நியாசம் பெற்றுக் கொள்ளவில்லை என்றால் உங்களிடமிருந்து பிரிந்து சென்றிருப்பேன்” அந்த எண்ணம் வந்தவுடனேயே நீங்கள் பிரிந்து சென்று விட்டீர்கள். உடலளவில் நீங்கள் சுற்றிக் கொண்டிருக்கலாம், அது பொருளற்றது. “உங்களிடமிருந்து சந்நியாசம் பெற்றுக் கொள்ள வில்லையென்றால், உங்களிடமிருந்து பிரிந்து சென்றிருப்பேன்.” என்று சொன்னீர்களானால், முன்பே பிரிந்து சென்று விட்டீர்கள், சந்நியாசம் மதிப்பற்றது. தயவு செய்து அதை திரும்பக் கொடுத்துவிடவும். ஏனென்றால் அது

ஒரு பந்தம். "நான் பிரிந்து சென்றிருப்பேன்" என்று நீங்கள் ஒரு விலக்கை உங்கள் மேல் உருவாக்கிக் கொண்டிருக்கிறது. விட்டு விடவும். நான் இங்கே உங்களை விடுதலையடையச்செய்ய இருக்கிறனே அல்லாமல் விலங்கிட அல்ல. அதைப்பற்றி மறந்துவிடவும்.

"மேலும் என்னுடைய முந்தைய மாஸ்டர் இப்போது என்னை ஏற்றுக் கொள்ளாமல் இருக்கலாம், ஏனென்றால் ஒரு வேளை நான் அவருக்கு நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்டேன், என்னுடைய நம்பிக்கையை இழந்துவிட்டேன் என்பதால்" அதை நீங்கள் தான் முடிவு செய்து கொள்ள வேண்டும். முந்தைய குரு ஏற்றுக்கொள்ள வில்லையென்றால், நீங்கள் ஒரு புதிய மாஸ்டரிடம் செல்லலாம், அல்லது அங்கு போய் மறுபடி முயற்சி செய்யலாம். பழையவர் உண்மையில் ஒரு மாஸ்டராக இருந்தால், அ்வர் ஆயிரத்தொருமுறை ஏற்றுக் கொள்வார், ஏனென்றால் ஒரு சீடன் நம்பிக்கைத்துரோகம் பண்ணும்போது ஒன்றுமில்லாத அதைப்பற்றி பரபரப்பு ஏற்படுத்த வேண்டியதில்லை. இது இயற்கையே. அறிவில்லாதவர்களிடம் (அஞ்ஞானிகளிடம்) அதிகம் எதிர்பார்ப்பதற்கு இல்லை. போய் பழைய மாஸ்டரிடம் முயற்சி செய்யவும். அவர் உங்களுக்காக காத்திருக்கலாம். அவர் மன்னிக்கவில்லை என்றால், அவர் மாஸ்டரே/குரு கிடையாது. அப்போது இன்னொருவரை எங்காவது கண்டு பிடிக்கவும்.

"எவ்வகையிலேனும் உங்களிடம் நம்பிக்கை இழக்க விரும்ப வில்லை" எதற்காக இந்த எண்ணம் உதயமாகிறது? உங்களுக்கு நம்பிக்கை இல்லை; நீங்கள் முன்பே அதை இழந்து விட்டீர்கள். உண்மையில் உங்களுக்கு அது ஒரு போதும் இல்லை. இது முரண்பாடு போல் தோன்றலாம், ஆனால் இதுவே உண்மை. முதலிலே ஒருபோதும் நம்பிக்கை அங்கில்லாத காரணத்தால் அந்த நம்பிக்கை இல்லையென்றால் அதை உங்களால் இழக்க முடியும், உங்களுக்கு இருக்குமானால் அங்கே சாத்தியக் கூறு இல்லை. அதை இழப்பதற்கான முழு சாத்திய கூறும் இல்லை, ஏனென்றால் நம்பிக்கையில் நீங்கள் உங்களையே இழந்து விடுகின்றீர்கள். இப்போது யாரும் பின்னால் நிற்பதில்லை. யாரால் திரும்ப எடுத்துக் கொண்டு வீடு செல்ல முடியும்?

"இப்போது நான் ஞானம் அடைவதற்கு பேராவல் கொள்ள வில்லை" நீங்கள் பேராவல் கொண்டுள்ளீர்கள்; இல்லையென்றால் என்னுடைய பாதங்களைப் பற்றியிருப்பதற்கு தேவை என்ன உள்ளது?

என்னுடைய பாதங்கள் மதிப்பற்றவை. எதற்கு அவற்றை பற்றிக் கொண்டு இருக்கிறீர்கள். அவைகள் உங்களுக்கு என்ன கொடுக்கப் போகின்றன. அடி ஆழத்திலே பற்றியிருத்தல். இப்போது மிக நுண்மையாக இருக்கலாம். மிக மென்மையாக, அவ்வளவு முரட்டுத்தனம் இல்லாமல், ஆனாலும் அது இருந்து கொண்டிருக்கிறது. "நீங்கள் என்னை உங்கள் பாதங்களில் வைத்துக் கொள்வீர்களானால்" ஏன்? என்னுடைய பாதங்கள் உங்களுக்கு என்ன செய்தன? என்ன குற்றம்? எதனால் என்னுடைய பாதங்களுக்கு எதிராக உள்ளீர்கள்? அதற்கு என்ன தேவை உள்ளது? என்ன விஷயம்?

இரண்டு நாட்களுக்கு முன் ஒரு மிகவும் அறிவில்லாத பெண் என்னைப் பார்ப்பதற்கு வந்தாள். "நான் கடவுளைத் தேடுகிறேன்" என்று கூறியதாலேயே அவள் அறிவில்லாதவள், எதற்காக அவள் கடவுளைத் தேடிக் கொண்டிருக்கிறாள். கடவுள் அவளுக்கு என்ன தப்பு பண்ணினார் எனக் கேட்டேன். நான், "நீயும் மற்ற எதற்காகவோ தேடிக்கொண்டிருக்கலாம் - மகிழ்ச்சி, பேரானந்தம் (bliss) பாவசம் (ecstasy) போன்றவை...?" அவள், "இல்லை எனக்கு மகிழ்ச்சி பேரானந்தம் போன்றவற்றில் ஆர்வம் இல்லை. நான் கடவுளைத் தேடுகிறேன்" என்றால் "ஆனால் எதற்காக" அவள் நான் "எதற்காக" என்று கேட்டதால் மிகக் கோபமடைந்தாள், உடனே அவள் சென்று விட்டாள். ஒருவர் எதற்காக கடவுளைத் தேட வேண்டும்? என்ன நோக்கம்? முற்றிலும் முட்டாள் தனமாகத் தெரிகிறது. ஒருவர் கடவுளைத் தேடுவது பேரானந்தத்தோடு இருப்பதற்கே ஒருவர் பரவசமாக இருப்பதற்கே தன்னை உணர்தலைத் தேடுகிறார்; துக்கப்படுவதற்கல்ல. ஒருவர் உண்மையைத் தேடுவது நிரந்தரமான பேரானந்தத்தில் இருப்பதற்கே.

உண்மையில் ஒவ்வொருவரும் இன்பத்தை நாடுபவரே (hedonist) வேறு வகையில் இருக்க முடியாது. எந்த சாத்தியக்கூறும் இல்லை. மக்கள் தாங்கள் இன்பத்தை நாடுபவர் அல்லர் என்று சொல்லும்போது ஏதோ ஒரு வகையில் முட்டாள்களே. அவர்கள் என்ன சொல்கிறார்கள் என்பது அவர்களுக்குப் புரிவதில்லை. உங்கள் இன்பமே பிரதானம் என்றும் கொள்கை (கோட்பாடு) (hedonism) இந்த உலகைச் சேர்ந்ததாகவும் மற்ற உலகைச் சேர்ந்ததாகவும் இருக்கலாம். அது பொருட்டல்ல - ஆனால் ஒவ்வொருவரும் இன்பத்தை நாடுபவரே. ஒவ்வொருவனும் தன்னுடைய மகிழ்ச்சியையே தேடிக் கொண்டிருக் கிறான். ஒவ்வொருவரும் அடி ஆழத்திலே சுயநலவாதியே.

இல்லையென்றால் இது முடியாது. நான் இதைக் குறை கூறவில்லை. இது நினைவில் இருக்கட்டும். இந்த வகைதான் இருக்க வேண்டும்.

ஜனங்களுக்கு சேவை செய்ய விரும்புவதாக என்னிடம் வந்து மக்கள் சொல்லுகின்றனர். எதற்காக? யாரோ ஒருவர் ஆற்றில் மூழ்கிக் கொண்டிருக்கும்போது நீங்கள் உங்கள் உயிரை அபாயத்திற்கு உள்ளாக்கி ஆற்றில் குதித்து அந்த மனிதன் வெளிவருவதற்கு உதவி பண்ணுகிறீர்கள், நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? நீங்கள் அந்த மனிதருக்கு உதவிபுரிந்ததை சேவை பண்ணியதை, உங்களுடைய வாழ்க்கையை அபாயத்திற்கு உரியதாக்கியதை, நீங்கள் ஒரு பிறர் நலம் விரும்புவர் என்று எண்ணும் போது, நீங்கள் ஆழத்திற்குச் செல்லவில்லை. அந்த மனிதருக்கு உதவியதன் மூலம் நீங்கள் மிக்க மகிழ்ச்சி அடைகிறீர்கள். நீங்கள் உதவவில்லை என்றால் குற்ற உணர்வடைகிறீர்கள். நீங்கள் கவனிக்காமல் சென்றிருந்தால், உங்கள் இதயம் என்றைக்கும் குற்ற உணர்வை சுமந்து கொண்டிருக்கும். நீங்கள் துக்கமடைந்து இருப்பீர்கள். உங்கள் கனவுகளில் அந்த மனிதன் மூழ்குவதையும், நீங்கள் காப்பாற்றவில்லை என்பதையும் காப்பாற்றியிருக்கலாம் என்பதையும் திரும்பத் திரும்ப காண்பீர்கள்.

நீங்கள் ஒரு மனிதரை ஆற்றிலிருந்து காப்பாற்றியபோது மகிழ்ச்சியடைகிறீர்கள். உண்மையில் நீங்கள் அந்த மனிதரிடம் நன்றி உள்ளவராக இருக்க வேண்டும். "நீங்கள் உண்மையில் அற்புதமானவர், நான் அங்கே கடந்து சென்ற போது, நீங்கள் சரியான நேரத்தில் மூழ்கினீர்கள், நீங்கள் எனக்கு அப்படிப்பட ஒரு மகிழ்ச்சியைக் கொடுத்தீர்கள். நான் ஒரு மனிதருக்கு உதவ முடியும் என்ற பூரண திருப்தியைக் கொடுத்தீர்கள், நான் உலகத்தில் ஓர் உபயோகமற்ற கழிவுப் பொருளாக இல்லாமல் ஏதோ உபயோகமாக இருக்க முடியும் என்ற உணர்வு நன்றாக உள்ளது" உங்கள் காலடிகள் நடனத்தின் பின் இருக்கும். உங்கள் கண்களில் அதிக ஒளியிருக்கும், நீங்கள் உங்கள் மையத்தில் இருப்பதாக உணர்வீர்கள். உங்களுடைய சொந்தக் கண்களில் நீங்கள் மிகவும் உயர்ந்து விட்டதாக காண்பீர்கள். இது இன்பமே பிரதானம் (hedonism) என்னும் கோட்பாடே.

யாரும் எவரையும் காப்பாற்ற முடியாது - ஒவ்வொருவரும் தன்னுடைய சொந்த மகிழ்ச்சியையே தேடிக் கொண்டிருக்கின்றனர். ஞானமடைதல், பூரணமான மகிழ்ச்சி என்பதைத் தவிர வேறில்லை, அது ஒரு தடவை அடைந்து விட்டால் இழக்கப்படுவதில்லை. அந்த

நிலையை அடைவதற்கு பேராவல் கொள்வதை எப்படி விட்டுவிடுவீர்கள்? அது அங்குள்ளது; இல்லை என்றால் நீங்கள் ஏன் என் பாதங்களைப் பற்றிக் கொள்ள வேண்டும்?

விழிப்போடிருங்கள். உங்களுடைய சொந்த ஆசைகளைப்பற்றி விழிப்புடன் அறிந்து கொள்ளுங்கள். ஏனென்றால் நீங்கள் விழிப்பாக இருக்கும்போதுதான் உங்களால் புரிந்து கொள்ளமுடியும், புரிந்து கொள்வதன் மூலம் அங்கே மாற்றம் ஏற்படும்.

எல்லா பேராவல்களையும் விட்டு விடாதவரையில் ஞானம் அடைய முடியாது என்பதை நானறிவேன். ஆகையினாலே உங்களிடம் சொல்லிக் கொண்டே இருக்கிறேன். இப்போது நீங்கள் நான் பேராவல் கொள்ளவில்லை என்று சொல்கிறீர்கள். பின்பு நீங்கள் இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? நீங்கள் புரிந்து கொண்டிருந்தால், நீங்கள் "நான் போராவல் கொள்ளவிலலை" என்று சொல்ல மாட்டீர்கள்; "நான் பேராவல் கொண்டுள்ளேன்" என்றும் சொல்லமாட்டீர்கள். புரிந்து கொண்டீர்களானால் பேராவல் மறைந்துவிடும். எந்த் அடையாளமும் இல்லாமல் அது பின்னால் எதிர்மறையை விட்டுச் செல்லாது; நீங்கள் "நான் பேராவல் கொள்ளவில்லை" எனச் சொல்ல மாட்டீர்கள். ஒளிமயமாகி விடுவீர்கள், முழுதும் பேரானந்தம் அடைந்து, எந்த ஆசைகளினாலும் அசுத்தமாக்கப்படாமல் இருப்பீர்கள்.

அதற்காக நீங்கள் தொடர்ந்து விழிப்புடன் இருக்க வேண்டும் ஏனெனில் ஆசை அநேக உருவெடுத்து உங்களைப் பலப்பல வழிகளில் ஏமாற்றும். அது ஆசை என்பதையே நீங்கள் மறந்து விடுவீர்கள். அது ஏதேனும் ஒன்றாக பாவனை (பாசாங்கு) பண்ணும். ஆசை பாவனை பண்ணும், ஆனால் உங்களால் புரிந்து கொள்ள முடியும்: யார் ஒருவர் ஆசைப்படவில்லையோ, அங்கு கேட்பதற்கு ஒன்றும் இல்லை. பிரபஞ்ச இருப்பு (existence) எங்கெல்லாம் எடுத்துச் செல்லக் கருதுகிறதோ அதை அனுமதித்து, சாதாரணமாக இருக்கிறார். நீங்கள் ஆசையை விட்டுவிட்ட போது முழுமை உங்களை எடுத்துக் கொள்கிறது; நீங்கள் நதியோடு மிதக்கலாம். பின்பு உங்களுக்கென தனியான எந்த குறிக்கோளும் இல்லை.

சில தினங்களுக்கு முன்பு "இடியட்" (idiot) என்ற வார்த்தைக்குப் பொருள் சொல்லிக் கொண்டிருந்தேன். அதன் அடிப்படை கிரேக்க மொழியாகும்; கிரேக்க வார்த்தை "இடியோடிக்கி" (idiotiki) ஆகும்.

அது "தனிப்பட்ட லட்சியம்" என்ற பொருள்படும். ஒரு மனிதன் தனக்கென ஒரு லட்சியம், தனக்கென ஓர் உலகம் முழுமைக்கு எதிராக வைத்திருப்பவன் ஓர் இடியட் (idiot).

நீ முழுமையுடன் இருக்கும்போது - நதியில் நீந்துவது கூட இல்லை. நதி எங்கெல்லாம் இழுத்துச் செல்கிறதோ அதோடு மிதந்து செல்கிறாய் - பின்பு ஒவ்வொரு வினாடியும் ஞானமடைந்த நிலையிலேயே வாழ்ந்து கொண்டிருக்கிறாய். ஞானமடைய வேண்டு மென்ற பேராவல் மறையும் போது ஞானமடைதல் நிகழும், தோன்றும். கேள்விகள் கேட்பதற்கு இதுவரை தோன்றவில்லை. பேராவல் அங்குள்ளது. விழிப்போடு இருக்கவும்.



ஒருவர் எப்படி வருந்தாமல் இருப்பது?

இது பரிதாபகரமான பத்திக் (Pathik) யிடமிருந்து அவன் தேவையில்லாமல் பரிதாப நிலைக்கு உள்ளாகிக் கொண்டிருக்கிறான். இப்போது, "எப்படி வருந்தாமல் இருப்பது?" வருந்துவதை, நிறுத்துவதற்கு என்ன தேவை உள்ளது? நீங்கள் வருந்துவதை தடை செய்வதற்கு முயலுவீர்களானால், நீங்கள் ஒரு புதிய வருத்தத்தை உருவாக்குகிறீர்கள்; எப்படி வருந்துவதை தடைசெய்வது. பின் நீங்கள் வருத்தத்தைப்பற்றி வருந்த ஆரம்பித்து விடுகிறீர்கள். பின் அதை இரு மடங்காக்கி விடுகிறீ;ரகள்.

டேல்கார்னகி (Dale Carnegie) எப்படி வருந்துவதை நிறுத்துவதும் வாழத் துவங்குவதும் என்ற ஒரு புத்தகம் எழுதி உள்ளார். இந்த மக்கள் நிறைய கவலைகளை உருவாக்குவார்கள். ஏனென்றால் அவர்கள் உங்கள் கவலைகள் நிறுத்தப்படும் என்ற ஆசையை உங்களுக்கு ஏற்படுத்துவார்கள். அவற்றைத் தடை செய்ய முடியாது. ஆனால் மறைந்து விடும் என்பது எனக்குத் தெரியும். அவற்றைத் தடைசெய்ய முடியாது, ஆனால் அவை மறைந்துவிடும். அவற்றைப்பற்றி உங்களால் ஒன்றும் செய்ய முடியாது. நீங்கள் அவற்றை அனுமதித்து, அவற்றைப்பற்றி ஒரு சிறிதும் கஷ்டப்படாமல் இருந்தால் அவை மறைந்துவிடும். இந்த மனம் எது கவலைகளை உருவாக்குகிறதோ அது எப்படி தடைசெய்வது என்ற ஒரு புதிய கவலையை உருவாக்கிறது. இப்போது நீங்கள் ஆசை வெறிக்கொண்ட பைத்தியமாகி

விடுகிறீர்கள்; ஒரு நாய் தன்னுடைய சொந்த வாலையே துரத்துவது போல இப்போது நீங்கள் ஆகிவிடுகிறீர்கள்.

ஒரு நாயைக் கவனியுங்கள்; அது ஓர் அழகிய காட்சி. இந்தியாவில் குளிர்காலத்தில் நாய்கள் காலையில் உட்கார்ந்து கொண்டு தாங்களே குளிர் காய்ந்து கொண்டு அனுபவித்துக் கொண்டிருப்பதை எந்த இடத்திலாவது நீங்கள் பார்த்திருக்கலாம். திடீரென அவை தங்கள் பக்கமாக அவற்றுடைய வால் இருப்பதை தெரிந்து கொள்கின்றன. அப்படியோர் ஆசை கிளம்பி, அவைகள் குதிக்கின்றன. ஆனால் பின்பு வால் குதித்து இன்னும் பின்னால் போகிறது. இது ஒரு நாய்க்கு சகித்துக் கொள்வதற்கு மிகவும் அதிகம், இது முடியாது. இது கஷ்டப்படுத்துகிறது; இந்த சாதாரண வால் விளையாட்டு விளையாடுகிறது - ஒரு சிறந்த நாயுடன்? அவன் பைத்தியமாகி விடுகிறான் - சுற்றிச் சுற்றி போகிறான். அவன் மூச்சு வாங்கிக் கொண்டு, களைப்பாக இருப்பதை நீங்கள் பார்க்கலாம். என்ன நடக்கிறது என்பதை அவனால் நம்ப முடியவில்லை. அவனால் இந்த வாலைப் பிடிக்க முடியவில்லை.

நாயைப் போல் இருக்காதீர்கள். உங்களுடைய சொந்த வாலைத் துரத்திக்கொண்டு, டேல் கார்னகியை (Dale Carnegie) கவனியாதீர்கள். அவர்கள் உங்கள் சொந்த வாலைத் துரத்துங்கள், பைத்தியமாகுங்கள் என்ற அந்த ஒரே முறையைத் தான் உங்களுக்கு கற்றுத் தருவார்கள். அங்கு ஒரு வழி உள்ளது; ஒரு முறையல்ல - ஒரு வழி - கவலைகள் மறைந்து விடும். நீங்கள் அவற்றை அலட்சியமாக விலகி நின்று (தொடர்பில்லாமல்) பாருங்கள். அவை உங்களைச் சார்ந்தவை அல்ல என்பது போல் கவனியுங்கள். அவை அங்கு இருக்கின்றன; நீங்கள் அதை ஏற்றுக்கொள்ளுங்கள். வானத்தில் மேகங்கள் நகருவதுபோல் மனதில் எண்ணங்கள் உள் ஆகாயத்தில் நகருகின்றன, சாலையில் போக்குவரத்து நகர்ந்து கொண்டிருப்பதுபோல் எண்ணங்கள் உள் சாலையில் நகர்ந்து கொண்டிருக்கின்றன. நீங்கள் அப்படியே கவனியுங்கள்.

ஒரு பஸ்ஸிற்காக (பேருந்திற்காக) சாலையின் ஓரத்தில் காத்திருக்கும்போது என்ன செய்வீர்கள்? அப்படியே சாதாரணமாக நீங்கள் கவனித்துக் கொண்டிருப்பீர்கள். போக்குவரத்து நடந்து கொண்டிருக்கிறது; உங்களுக்கு சம்பந்தம் இல்லை. உங்களுக்கு சம்பந்தம் இல்லாதபோது கவலைகள் நழுவ ஆரம்பித்துவிடுகின்றன.

உங்களது சம்பந்தம் அவற்றுக்கு சாந்தி கொடுக்கிறது. நீங்கள் உணவளிக்கிறீர்கள், நீங்கள் ஆற்றல் கொடுக்கிறீர்கள் பின்பு அவற்றை எப்படி தடை செய்வது என்று கேட்கின்றீர்கள். நீங்கள் அவறை எப்படி நிறுத்துவது என்று கேட்பதற்கு முன்பே அவை உங்களை வெற்றி கொண்டு விடுகின்றன.

தப்பான ஒரு கேள்வியை கேட்காதீர்கள். கவலைகள் இருப்பது இயற்கையே. வாழ்வு ஒரு பரந்த சிக்கலான தோற்றம் (நிகழ்வு) கவலைகள் அங்கு நிச்சயமாக இருக்கத்தான் செய்யும். கவனிப்பவராக இருங்கள், செய்பவராக அல்லாமல், எப்படி தடைசெய்வது எனக் கேட்காதீர்கள், எப்படி நிறுத்துவது என்று கேட்கும் போது, என்ன செய்வது என்று கேட்கிறீர்கள். ஒன்றும் செய்ய முடியாது. ஏற்றுக் கொள்ளுங்கள் - அவை இருக்கின்றன. அவற்றைப் பாருங்கள், அவற்றை ஒவ்வொரு கோணத்திலிருந்தும் கவனியுங்கள், அவை என்னவென்று தடைசெய்வதை மறந்து விடுங்கள், திடிரென ஒரு நாள் நீங்கள் கவனிப்பதன் மூலம், பார்ப்பதன் மூலம் ஓர் இடைவெளி ஏற்படுவதை தெளிவாக அறிந்து கொள்வீர்கள். கவலைகள் இனி அங்கில்லை. போக்குவரத்து நின்றுவிட்டது, சாலை காலியாக உள்ளது, ஒருவரும் கடந்து செல்லவில்லை. அந்த வெறுமையில் கடவுள் கடந்து செல்கிறார். அந்த வெறுமையில் திடீரென உங்களுக்கு உங்களுடைய புத்த இயற்கை நிலை (Buddha-Nature) ஒரு வினாடி நேரமும் உங்களது அகத்தின் பூரண நிலையும் கிடைக்கிறது. எல்லாம் உங்களுக்கு ஆசீர்வாதமாகிறது.

ஆனால் நீங்கள் அதை தடை செய்ய முடியாது. அதை ஏற்றுக்கொள்ளுங்கள், அதை அனுமதியுங்கள், கவனியுங்கள் ஒரு மிக அலட்சியமான, அக்கறையில்லாத பார்வையோடு, அவை ஒன்றுமில்லாதவை போல, அவைகள் எண்ணக் குமிழிகளே. அவை உண்மையில் விஷயங்கள் இல்லை. நீங்கள் அவற்றைப்பற்றி அக்கறை கொண்டீர்களானால் அப்போது அவை அதிக விஷயங்கள் ஆகும். அவை அதிக விஷயங்கள் ஆகும்போது நீங்கள் அதிகம் அக்கறை கொள்கிறீர்கள். இப்போது நீங்கள் ஒரு தொடரும் சூழலை ஏற்படுத்துகிறீர்கள். சுழலில் இருந்து வெளியே குதித்து விடுங்கள்.

○

**தீர்மானம் செய்தலுக்கும், பகுத்தறிதலுக்கும் இடையில் வித்தியாசம் உள்ளதா?**

ஆமாம். ஏராளமான வித்தியாசம். ஒரு தீர்மானம் செய்வது என்பது உங்களுடைய நம்பிக்கைகள், கொள்கைகள், எண்ணங்கள் இவற்றில் இருந்து வருகிறது; தீர்மானம் செய்வது உங்களுடைய இறந்த காலத்தில் இருந்தும், உங்களுடைய அறிவிலிருந்தும் வெளிவருகிறது. பகுத்தறிதல் உங்களுடைய நிகழ்காலத்திலிருந்து வெளிவருகிறது. விழிப்புநிலையிலிருந்து இயங்குகிறது.

உதாரணமாக, மது அருந்துபவரை பார்க்கிறீர்கள், உடனே அங்கு ஒரு தீர்மானம் ஏற்படுகிறது. இந்த மனிதன் நல்லது செய்யவில்லை. "மது அருந்துபவன் உடனே ஒரு நிந்தனை செய்வது - இது தீர்மானம் செய்தல். உங்களுக்கு, எது நல்லது எது கெட்டது என்ற எந்த நம்பிக்கைகளும் இல்லையென்றால் எப்படி நீங்கள் உடனே தீர்மானம் செய்வீர்கள் - அந்த மனிதனைப்பற்றி எதுவுமே தெரியாமல், அவனுடைய சூழ்நிலை தெரியாமல், அவனுடைய பிரச்சினைகள் தெரியாமல், அவனுடைய துன்பங்கள் தெரியாமல்? அந்த மனிதனுடைய முழு வாழ்க்கையையும் அறிந்து கொள்ளாமல் எப்படி உங்களால் தீர்மானம் பண்ணமுடியும்? ஒரு பாகத்தைக் கொண்டு எப்படி தீர்மானிப்பீர்கள்? இந்த மனிதன் கெட்டவன் என்று எப்படி உங்களால் சொல்லமுடியும்? அவன் குடிகாரனாக இல்லாமல் இருந்திருந்தால், அவன் நல்லவனாக இருந்திருப்பான் என்று நினைக்கிறீர்களா? அவன் இதை விட மோசமாக இருப்பதற்கும் முடியும்.

இது நிறைய மது அருந்துபவர்களுடன் என்னுடைய அனுபவமாகும். அவர்கள் நல்ல மனிதர்கள், மிகவும் நுண்மையானவர்கள், நம்புபவர்கள், கபடமில்லாதவர்கள், எளிமையானவர்கள் - குழந்தைப்போன்ற கபடமற்ற தன்மை உள்ளவர்கள். பின்பு ஏன் அவர்கள் மது அருந்துகின்றனர்? உலகம் அவர்களுக்கு அளவுக்கு அதிகம்; அதோடு அவர்களுக்கு ஈடுகொடுக்க முடியவில்லை. அவர்கள் இந்த உலகத்திற்காக செய்யப்பட்டவர்கள் அல்லர்; அது அதிக கபடமானது. அவர்கள் அதை மறந்துவிட விரும்புகின்றனர், என்ன செய்வது என்பது அவர்களுக்கு தெரியவில்லை - மது கைக்கு வருகிறது; தியானம் ஒருவர் தேட வேண்டும்.

இது என்னுடைய அபிப்பிராயம்; மது அருந்துபவர் எல்லோருக்கும் தியானம் தேவை: அவர்கள் தியானத்தை தேடிக் கொண்டிருக்

கிறார்கள். பரவசநிலைய ஆழத்தில் தேடிக் கொண்டிருக்கிறார்கள். அந்தக் கதவை அவர்களால் கண்டு கொள்ள முடியவில்லை. இருளில் தடவிக் கொண்டு மதுவின் மேல் இடறி விழுந்து விடுகின்றனர். மது கடைத் தெருவில் சுலபமாகக் கிடைக்கிறது. தியானம் சுலபமாகக் கிடைப்பதில்லை. ஆனால் அவர்களுடைய ஆழமான தேடுதல் தியானமாகும்.

உலகம் முழுதிலும் போதை மருந்துகள் எடுத்துக் கொள்ளும் மக்கள் உள்பரவசத்தை (inner ecstasy) தேடுபவர்களே. அவர்கள் உணர்வுடன் கூடிய இருதயத்தையே உருவாக்க முயலுகின்றனர். அவர்களால் சரியான வழி, சரியான மார்க்கம் கண்டு பிடிக்க முடியவில்லை. சரியான மார்க்கம் சுலபமாகக் கிடைப்பதில்லை. போதைப் பொருள்களே கிடைக்கின்றன. போதைப் பொருள்கள் தவறான ஒரு விநாடி நேர அனுபவத்தை அளிக்கின்றன. அவை உங்கள் மனதில் இராசயன நிலைமையை உண்டாக்குகின்றன. அதில் நீங்கள் மிகத்தீவிரமாக, உணர்வு மிகுதியாக, உணர ஆரம்பிக்கிறீர்கள். அவை உங்களுக்கு உண்மையான தியானத்தை அளிக்க முடியாது, ஆனால் அவை தியானத்தின் தவறான பதிவுகளைக் கொடுக்க முடியும்.

நான் அறிந்து கொண்டது இதுவே; யார் ஒருவர் தேடுதலில் இருக்கிறார்களோ, அவர்கள் தப்பான காட்சிகளுக்கு பலியாகி விடுகிறார்கள். ஆனால் அவன் தேடுதலில் இருக்கிறான். என்றாவது ஒரு நாள் அவன் அதிலிருந்து வெளிவருவான், ஏனென்றால் அது ஓர் உண்மையான பொருளாக இருக்க முடியாது; அது எப்போதும் ஏமாற்றிக் கொண்டிருக்க முடியாது. ஒரு நாள் இல்லாவிட்டால் மற்றொருநாள் அவன் தன்னையே இரசாயனப் பொருள்கள் மூலம் முட்டாளாக்கிக் கொள்வதைப் பார்பான். ஆனால் தேடுதல் அங்கிருக்கிறது. ஒருபோதும் மது எடுத்துக் கொள்ளாத மக்கள் ஒருபோதும் போதைப்பொருள்கள் எடுத்துக் கொள்ளாத மக்கள் ஒரு வழியில் அவர்கள் கெட்ட மனிதர்கள் அல்லர் - நல்ல மனிதர்கள் மதிப்பிற்குரிய மக்கள் - அவர்கள் தியானத்தை தேடுவது என்பது இல்லவே இல்லை.

ஆகையால் எப்படி தீர்மானிப்பது தேடுதலில் உள்ள அந்த மனிதனை எப்படி கெட்டவன் என்று சொல்வது? தேடுதல் இல்லவே இல்லாத அந்த மனிதனை எப்படி நல்ல மனிதன் என்று அழைக்க

முடியும்? அந்த மது அருந்துபவன் என்றோ ஒரு நாள் தெய்விகத்தைக் கண்டு கொள்ளலாம். ஏனெனில் அவன் அந்தத் தேடுதலில் இருக்கிறான். தெய்விகத்தைக் கண்டு கொள்கிற வரையிலும் அவனுடைய மது அருந்தும் பழக்கத்திலிருந்து மேலே செல்ல மாட்டான். ஏனெனில் அது மட்டுமே திருப்தி அளிக்கிறது. பின் தவறானவை மறைந்துவிடும். ஆனால் மதிப்பிற்குரியவன் ஒவ்வொரு ஞாயிறும் சர்ச்சிற்கு (Church) செல்லுபவன் மது அருந்த மாட்டான், புகை பிடிப்பது கூட கிடையாது, பைபிள் வாசிப்பான். கொரான், கீதை... இந்த மனிதனிடம் தேடுதல் என்பது இல்லவே இல்லை. யார் கெட்டவர்? எப்படி பகுத்தறிவது?

இப்பொழுது உலகம் முழுவதிலும் போதைப் பொருள்களைப் பற்றி அதிகக் கவலை உள்ளது, புதிய தலைமுறையினரைப்பற்றி, இளைய தலைமுறையினர் - அவர்கள் எல்லாம் போதைப் பொருள்களில் விருப்பம் உள்ளவராக இருக்கின்றனர். என்ன நடக்கிறது? எப்படி தீர்மானிப்பது? அதைப் பற்றி என்ன சொல்வது? நீங்கள் உணர்வுடன் இருந்தீர்களானால் தீர்மானிப்பது என்பது அவ்வளவு எளிதல்ல. நீங்கள் உணர்வற்றவராக இருந்தால் அவை தவறானவை, அல்லது அவை தவறானவை அல்ல என எளிதில் தீர்மானித்து விடலாம். பின்பு போதைப் பொருள்கள் ஆதரிக்கும் மக்கள் உள்ளனர், டைமோதி லியரி (Timothy Leary) இன்னும் சிலர், "இது பரவசமூட்டுவது" என்கின்றனர். மதுவிற்கு எதிராக உள்ள மக்கள், ஸ்தாபனங்கள், "இது அழிவைத் தரக்கூடியது" என்கின்றனர்.

ஆனால் உண்மையான சூழ்நிலை என்ன? போதைப்பொருள்கள் எடுத்துக் கொள்ளும் மக்கள் வியட்நாமையோ, காஷ்மீரையோ, மத்திய கிழக்கி நாடுகளையோ உருவாக்குவதில்லை. போதைப் பொருள்கள் எடுத்துக் கொள்ளும் மக்கள் எங்கும் எந்த யுத்தத்தையும் உருவாக்குவதில்லை. அவர்கள் முஜிபுர் ரஹ்மானைக் (Mujibur Rahman) கொல்லவில்லை. அவர்கள் யாரையும் கொல்வதில்லை. இருந்த போதிலும் நீங்கள் அவர்கள் அழிவை உண்டாக்குபவர்கள் என்று எண்ணினால், அவர்கள் அழிவைத் தங்களுக்கே தேடிக் கொள்பவர்களாக இருப்பார்க்ள. ஆனால் யார் ஒருவருக்கும் அல்ல. அவர்கள் யாருடைய வாழ்க்கையிலும் தலையிடுவதில்லை. மரியாதைக்குரிய இந்த மக்கள் உலகம் முழுவதிலும் உள்ள பயங்கரமான ஹிம்சைக்கு பொறுப்பானவர்கள். முஜிபுர் ரஹ்மான் (Mujibur Rahman) அவருடைய குடும்பம் முழுவதையும் கொன்ற

(கொலை செய்த) இந்த மக்கள் இப்போது ஜனாதிபதியாக அதுவாக, இதுவாக ஆகியுள்ளனர். அவர்கள் மரியாதைக்குரியவர்கள்.

யார் உண்மையில் குற்றவாளிகள்? ரிச்சர்டு நிக்ஸன் (Richard Nixon) போதைப் பொருள் எடுத்துக் கொள்ளவில்லை, உங்களுக்குத் தெரியுமா? அடால்ஃப் ஹிட்லர் (Adolf Hitler) மதுவை ஒரு போதும் தொட்டதில்லை, ஒரு போதும் புகைப் பிடித்ததில்லை. முழுதும் மரக்கறி உணவு உண்பவரே, இப்போது யாராவது இதைவிட குற்றவாளி பார்த்திருக்கிறீர்களா? அவன் ஒரு சரியான ஜைனன்- மரக்கறி உண்பவன், புகை பிடிக்காதவன், மது அருந்தாதவன், மிக ஒழுக்கமுள்ள வாழ்வு வாழ்ந்தவன் (மணி) நேரப்படி இருந்தவன். ஆனாலும் உலகத்தில் நரகத்தை உண்டாக்கியவன். நான், அவன் கொஞ்சம் மதுவை எடுத்துக் கொண்டிருந்தானானால், அது நன்றாக இருந்திருக்குமோ? என எண்ணுவேன். பின் அந்த மனிதன் அவ்வளவு ஹிம்சையாக இருந்திருக்க மாட்டான். அவன் புகைப்பிடித்திருப்பானால் - முட்டாள் தனமாக, ஆனால் கபடமற்ற புகைபிடிக்கும் விளையாட்டு... அவன் அவ்வளவு கொடூரமாக இருந்திருக்க மாட்டான், ஏனென்றால் புகை பிடிப்பது ஆழ்ந்த உணர்ச்சிகளை தூய்மை செய்வது (catharsis).

அதனால் நீங்கள் எப்பொழுதெல்லாம் கோபத்தை உணர்கிறீர்களோ, புகைபிடிக்க விரும்புகிறீர்கள், எப்பொழுதெல்லாம் எரிச்சல் அடைகிறீர்களோ, எப்பொழுதெல்லாம் உள்ளே குழப்பமாக, கலக்கமடையும் போது நீங்கள் புகை பிடிக்க விரும்புகிறீர்கள், அது உதவி செய்யும் இவை மற்றவற்றைவிட செய்வதற்கு நல்லவை. நீங்கள் ஒரு மந்திரத்தை உபயோகிக்கலாம். "ராம் ராம் ராம்" என்று நீங்கள் சொல்லலாம். புகைபிடிப்பது நுட்பமான மந்திரம்: நீங்கள் புகையை உள்ளிழுத்து, வெளிவிட்டு, உள்ளிழுத்து, வெளிவிட்டு... திரும்பத் திரும்ப செய்வது, புகைப்பிடிப்பதன் மூலம் ஓதுவது. நீங்கள் "ராம் ராம் ராம்" என்றும் சொல்லலாம் - அதுவும் உதவும். நீங்கள் கோபமாக இருக்கும்போது முயற்சி செய்யுங்கள்: "ராம் ராம் ராம்" ஓதுங்கள். அது மற்றவற்றை விட சிறந்த வழி, ஆனால் அதே தான் - அதிக வித்தியாச மில்லை.

அடால்ஃப் ஹிட்லர் (Adolf Hitlar) யாரோ ஒருவருடைய மனைவி மேல் காதல் கொண்டிருந்தால், அவர் கெட்ட மனிதர் என்ற கண்டனத்திற்கு உள்ளாகியிருப்பார். ஆனால் அவர் அவ்வளவு

கொடுமையாக இருந்திருக்க மாட்டார், வெளிவிட்டு, ஓய்வாக... இந்த உலகம் நன்றாக இருந்திருக்கும்.

ஆகையால் என்ன செய்வது? எப்படி தீர்மானிப்பது? விஷயங்கள் சிக்கலானவை. நான், நீங்கள் "போய் மது அருந்துபவராகி விடுங்கள்" என்று சொல்லவில்லை. "போய் போதைப் பொருள்களை எடுத்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லவில்லை. வாழ்க்கையின் சிக்கலான தன்மை அப்படிப்பட்டது. ஆகவே, ஒருவர் தீர்மானிக்கக் கூடாது என்று சொல்கிறேன். தீர்மானிப்பது முட்டாள்தனமான மனங்களைச் சேர்ந்தது. அவை எப்போதும் தீம்ானிக்கத் தயாராக இருக்கின்றன. ஒரு பெரிய நாவலின் (Novel) ஒரு பகுதியான ஒரு துண்டு காகிதம் தற்செயலாக உங்களிடம் வருகிறது. நீங்கள் ஒரு சில வரிகளைப் வாசிக்கிறீர்கள். அதுவும் முழுதுமாக அல்ல. ஒரு சில, ஒரு பக்கத்தின் ஒரு பகுதி.. நீங்கள் தீர்மானிக்கிறீர்கள். இது போலதான் உங்கள் தீர்மானித்தல் உள்ளது. இதுபோலவே நீங்கள் அதைச் செய்கிறீர்கள். ஒ மனிதனுடைய வாழ்க்கையின் ஒரு பகுதி உங்கள் கண்களுக்கு வருகிறது. நீங்கள் முழுமனிதரையும் தீர்மானிக்கிறீர்கள். அவன் கெட்டவன், அவன் நல்லவன் என்று தீர்மானித்தல் விவேகமுள்ளவர்களுக்கு அழகு அல்ல.

இது இயேசுவோடு நடந்தது. ஒரு பெண் அவரிடம் கொண்டு வரப்பட்டாள். முழு நகரமும் பைத்தியமாக இருந்தது. உண்மையில் சிறிய விஷயங்களுக்கும், ஒன்றுமில்லாதவற்றுக்கும் முட்டாள் ஜனங்களும், கூட்டமும் எப்போதும் பைத்தியமாக இருக்கின்றன. அவர்கள், "இந்தப் பெண் ஒரு பாபச் செயலை செய்துள்ளாள். அவள் ஒரு மனிதனிடம் காதல் தொடர்பு வைத்துக் கொண்டு இருந்தாள் - சட்ட விரோதமானது. ஆகையால் அவளை வைத்துக் கொண்டு என்ன செய்வது? பழைய வேதம் அவளை கல்லெறிந்து கொல்லுங்கள் எனச் சொல்கிறது".

அவர்கள் இரண்டு பறவைகளை ஒரு கல்லினால் கொல்ல விரும்பினார்கள். அந்தப் பெண், இயேசுவும் கூட. ஏனென்றால் இயேசு, "ஆமாம், பழைய வேதம் சரியானதே, அவளைக் கொன்றுவிடுங்கள்" என்று சொன்னாரானால், பின் அவர்கள், "பகைவனை நேசியுங்கள் என்ற உங்களுடைய போதனைகள் என்னாவது? உங்களுடைய மறுகன்னத்தைக் கொடுங்கள். உங்கள் கன்னத்தில் யாராவது அறைந்தால் மற்ற கன்னத் கொடுங்கள் என்ற உங்கள் போதனைகள் என்னாவது? மன்னித்து விடுங்கள் என்பது

என்னாவது? நீங்கள் இதைப்பற்றி முழுவதும் மறந்து விட்டீர்களா? எனக் கேட்பார்கள். இயேசு பழைய வேதங்கள் தவறானவைகள் என்று சொல்வாரானால் அவர் ஒரு மாறுபட்ட கருத்துள்ளவர் (heretic) புரட்சியாளர் - அவர் மதத்திற்கு புறம்பானவர்! அவர் கொல்லப்பட வேண்டும். மக்கள் அதற்குத் தயாராக இருந்தனர். உண்மையில் அவர்கள் அந்த பெண்ணிடம் அதிகக்கவலை கொள்ளவில்லை. இயேசுவிடம் அதிகக்கவலை கொண்டனர். இயேசுவை பொறியில் இடுவதற்கு இந்தப் பெண்ணை காரணமாக்க எண்ணினர்.

இயேசு சிறிது நேரம் சிந்தித்தார். தீர்மானித்தல் எப்பொழுதும் உடனடியே, ஏனென்றால் அது முன்பே செய்யப்பட்டது (ready made) அது உடனடியாக போலத் தோற்றமளிக்கும். அது உடனடியாக அல்ல. அது முன்பே செய்யப்பட்டது. உங்களுக்கு முன்பே கிடைத்துவிட்டது. ஒரு விழிப்புள்ள மனிதர் தயங்குவார், சுற்றிப் பார்ப்பார், பரிவு கொள்வார், தன்னுடைய உணர்வு அவயவங்களை (feelers) சுற்றி அனுப்புவார் - என்ன சூழ்நிலை உள்ளது? அவர் எந்த ஏழைப் பெண் அங்கே அமர்ந்திருப்பதைப் பார்த்தார், கண்ணீர் வடிந்து கொண்டிருந்தது. இந்த கோபமான மனிதர்களைப் பார்த்தார். அவர் அந்த முழு சூழ்நிலையையும் உணர்ந்த பின், "ஆமாம் வேதம் சொல்கிறது அந்தப் பெண்ணை கல்லெறிந்து கொன்றுவிடும்படி, ஆனால் முதல் கல் பாபமும் ஒரு போதும் செய்யாத ஒரு மனிதரால் எறியப்பட வேண்டும். நீங்கள் ஒரு பெண்ணுடன் காமத்தை அனுபவிக்கவில்லையென்றால் உங்கள் மனத்தினால் அனுபவிக்க வில்லையென்றால் பின்பு கற்களை எடுங்கள்" என்று சொன்னார்.

அவர்கள் ஓர் ஆற்றின் அருகில் அமர்ந்திருந்தனர். சுற்றிலும் கற்கள் கிடந்தன. முன்பாக நின்ற மனிதர்கள் - நகரத்தில் உள்ள மதிப்பிற்குரிய மக்கள் - அவர்கள் பின்னோக்கிச் செல்ல ஆரம்பித்து விட்டார்கள். இப்போது இது மிக அதிகம். விரைவில் மக்கள் மறைந்து விட்டனர். இயேசு மட்டும் அந்தப்பெண்ணுடன் விடப்பட்டார். அந்தப் பெண் இயேசுவை மிக ஆழமாக உணர்ந்தாள்.

சூழ்நிலையைப் பாருங்கள்: அந்த மதிப்பிற்குரியவர்கள் இயேசுவை உணர முடியவில்லை. ஆனால் பாபி உணர்ந்தாள்.

அவள் அவருடைய காலடியில் வீழ்ந்தாள், அவள், "நான் பாபம் பண்ணிவிட்டேன், என்னை மன்னித்துவிடுங்கள்" என்றாள். இயேசு "அது உனக்கும் கடவுளுக்கும் இடையில். தீர்மானிப்பதற்கு நான் யார்?

நீ ஏதாவது தப்பான காரியம் செய்திருந்தால் இனி இதை திரும்பச் செய்யாதே. இதை நினைவில் கொள், அவ்வளவே. ஆனால் தீர்மானிப்பதற்கோ, நீ ஒரு பாபி என்று சொல்வதற்கோ நான் யார்? அது உனக்கும் கடவுளுக்கும் இடையில்" என்றார்.

ஒரு விவேகமுள்ள மனிதர் சூழ்நிலைக்கு தக்கவாறு இயங்குவார் - தீர்மானம் செய்வதன் மூலம் அல்ல, ஆனால் பகுத்தறிதல் மூலம் அவர், "ஆமாம், அது சரி; வேதம் சரியானது, இந்தப் பெண்ணை கொல்லுங்கள்" என்று சொன்னார். பின்பு அவர் பகுத்தறிதலை உருவாக்கினார், "இப்போது யார் அவர்கள் அளவில் பாபிகள் இல்லையோ அவர்கள் தங்கள் கைகளில் கற்களை எடுத்து அவளை கொல்லட்டும்." இது பகுத்தறிதல். இது உணர்விலிருந்து வெளிவந்தது. இது உயிரற்ற தீர்மானித்தல் அல்ல. அவர் வேதத்தை பின்பற்ற வில்லை. அவர் தன்னுடைய சொந்த வேதத்தை அந்த வினாடியில் உருவாக்கினார்! ஒரு விவேகமான மனிதர் எந்த வழிகாட்டும் புத்தங்களையும் பின்பற்றுவதில்லை; ஒரு விவேகமுள்ள மனிதருக்கு அவருடைய சொந்த விவேகமே வழிகாட்டியாகும்; அது ஒரு போதும் தவறுவதில்லை, என்பதை நான் சொல்கிறேன். ஒருபோதும் தவறுதில்லை. அது எப்போதும் உண்மையானதே, அந்த வினாடிக்கும் உண்மையானதே.

பத்ம சம்பவா, "இரும்புப் பறவைகள் பறக்கும் போது, தர்மா சிவப்பு மனிதனின் நிலத்திற்கு வரும்" தீர்க்க தரிசனத்தை நிறைவு செய்வது உங்கள் வேலையின் பகுதியா? என்று சொல்கிறார்.

நான் யாருடைய தீர்க்க தரிசனத்தையும் நிறைவேற்ற இங்கு இல்லை. நான் ஏன்? அவனுடைய பயணத்தை அவன் ஏன் என் மேல் கட்டாயமாக்குகிறான். நான் இங்கிருப்பது நானாக இருப்பதற்கே. நான் ஒரு தீர்க்க தரிசி அல்லர், நான் யாரோ ஒருவரை அவருடைய பாபங்களிலிருந்து விடுதலை செய்ய இங்கில்லை. நான் ஒரு மத சகாப்தம் கொண்டுவர இங்கில்லை. இவை எல்லாம் சாதாரணமானவை முட்டாள் தனமானதும் கூட.

நான் என்னை அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். நீயும் உன்னை அனுபவிக்க விருமபினால் என்னுடைய மகிழ்ச்சியில் பங்கு பெறலாம். அவ்வளவே. எனக்கு வாழ்க்கை ஓர் ஆபத்தான விவகாரம் அல்ல. தீர்க்க தரிசிகள் வாழ்க்கையை மிக ஆபத்தாக எடுத்துக் கொள்கிறார்கள். துறவிகள் கபடமற்றவர்கள்! தீர்க்க தரிசிகள்.

எப்போதும் ஆபத்தானவர்கள். புத்தர் ஒரு தீர்க்கதரிசி அல்லர்; உண்மையில் இந்தியா தீர்க்க தரிசிகளை உற்பத்தி பண்ணவில்லை. தீர்க்க தரிசிகள் யூத மதத்தின் குறிப்பிட்ட நிகழ்வுகள் (phenomenon). நாம் கோடிக்கணக்கான முனிவர்களை உற்பத்திப் பண்ணி உள்ளோம் - ஆனால் அவர்கள் கள்ளம் இல்லாத மக்கள். பூக்களைப் போல் நீங்கள் அதில் மகிழ்வடையலாம், அதிக உபயோகம் இல்லை. உண்மையில் தீர்க்கதரிசிகள் மதத்தில் உள்ள அரசியல் வாதிகளே. உலகம் முழுவதையும் அவர்கள் மாற்ற வேண்டும். அவர்களுக்கு குறிக்கோள் உள்ளது. அதை நிறைவேற்ற வேண்டும். இதைச் செய்ய வேண்டும், அதைச் செய்ய வேண்டும்.

எனக்கு எந்தக் குறிக்கோளும் இல்லை; நான் மதப்பிரசாரகன் அல்லன். நான் பிரசாரங்கள் தீர்க்க தரிசிகள் இல்லாத உலகையே விரும்புகிறேன். அதனால் மக்கள் தங்களுடைய சொந்த வாழ்க்கையை வாழ்வதற்கு விடப்படுகிறார்கள். தீர்க்க தரிசிகள் ஒருபோதும் அனுமதிப்பதில்லை. அவர்கள் எப்போதும் உங்கள் பின்பே இருப்பார்கள் - தீர்மானத்துடன், அவர்கள் எப்போதும் உங்கள் பின்பே இருப்பார்கள். கொள்கைகளுடன் பின்பற்றுவதற்காக அவர்கள் எப்போதும் உங்களை நரகத்தில் எறிவதற்கோ அல்லது சொர்க்கத்தைப் பரிசளிப்பதற்கோ அங்கு இருப்பார்கள்.

எனக்கு ஒன்றுமில்லை - நரகம் ஏதும் இல்லை உங்களை எறிவதற்கு, சொர்க்கம் ஏதும் இல்லை. உங்களுக்கு கொடுப்பதற்கு - ஒரு மகிழ்வான இருப்பு. அது முடியும். நீங்கள் அது நிகழ்வதற்கு அனுமதித்தால் அது முடியும்.

எனக்கு வாழ்க்கை ஓர் ஆபத்தான தொடர்பல்ல. உண்மையில் எல்லையற்ற பிரபஞ்ச இருப்பில் (eternity of existence) வாழ்க்கை என்பது ஓர் ஊர்க்கதை பேசுதலே, வேறில்லை. நான் இங்கே ஊர்க்கதை பேசிக்கொண்டிருக்கிறேன்; நீங்கள் கவனித்துக் கொண்டிருக்கிறீர்கள், அவ்வளவே, நீங்கள் அனுபவித்தால் இங்கிருக்கிறீர்கள். நான் அனுபவித்தால் நான் இங்கிருக்கிறேன். ஒருவரை ஒருவர் அனுபவிக்க கடினமாகி விட்டதென்றால் நாம் பிரிந்து விட வேண்டியது தான். பந்தம் ஒன்றும் இல்லை.

நான் யாரையும் அனுமதிப்பதில்லை - அவன் ஒரு பத்மசம்பவாக இருக்கலாம் - அவனுடைய பொறியை என் மேல் போடுவதற்கு.

○

40. யோகியானவன் தூய்மை அடைந்தபோது அவனுள் தன் சொந்த உடல்மேல் வெறுப்பு ஏற்படுகிறது. மற்றவர்களுடன் ஸ்தூலமான தொடர்பு கொள்வதற்கு விரும்புவதில்லை.

41. மனத்தூய்மையிலிருந்து உற்சாகம் (மகிழ்ச்சி) மன ஒருமைப் பாட்டு சக்தி, புலனடக்கம், தன்னை - உணர்வதற்கான தகுதி ஏற்படுகிறது.

42. மனத்திருப்தி பரம சந்தோஷத்தை கொண்டு வருகிறது.

அஹிம்சை, பொருளுடையாமை, திருடாமை, இருப்புத் தன்மையில் உண்மையுடன் இருப்பது தூய்மையைக் கொடுக்கும். இவை பதஞ்சலிக்கு ஒழுக்கம் சார்ந்த கொள்கைகள் (moralistic concepts) அல்ல; இதை எப்போதும் மனதில் கொள்ள வேண்டும். மேற்கு நாடுகளில், அவர்களுக்கு ஒழுக்க நெறியில் வாழ்பவர்களாக இருக்க வேண்டுமென்று கற்றுக் கொடுக்கப்பட்டது. கிழக்கு நாடுகளில் அகத்தூய்மையோடு இருப்பதாக ஒழுக்க நெறிகள் உள்ளவராக இல்லாமல். மேற்கிலே பிறர் நலம் கருதும் தன்மையே குறிக்கோளாக கற்றுக் கொடுக்கப்பட்டது. கிழக்கிலே பிறர் நலம் கருதும் தன்மை அதில் எதுவும் இல்லை. அது முழுதும் சுயநலமே. அது உங்களது அகத்தூய்மையாகும். அது உங்களுக்குத் தூய்மை அளிக்கும். தூய்மையின் மூலம் நடக்க முடியாதவை, நடப்பதாகின்றன. அடைய முடியாதவை அடையப்படுகின்றன. தூய்மையின் மூலம் உங்களுடைய முரட்டுத்தனமான இருப்புத் தன்மை (being) மறைந்துவிடுகிறது. நீங்கள் நுண்மையாக, மென்மையாக ஆகிவிடுகிறீர்கள். தூய்மையின் மூலம் தெய்வத்தின் கோயிலாகி விடுகிறீர்கள் தூய்மையின் மூலம் முழுமை வருவதற்கு, உள்ளிருப்பதற்கு அழைப்பிதழ் அனுப்பப் படுகிறது. ஒரு நாள் கடல் வந்து துணியுடன் கலந்துவிடுகிறது.

மேற்கில் உள்ளதைப்போல் அவர்களுக்கு ஒழுக்கம் சார்ந்த கொள்கைகள் கற்பிக்கப்படும் போது அல்லது இந்தியாவிலும் கூட மகாத்மா காந்தி கற்பித்தது போல் கற்பிக்கப்பட்டால் அவற்றின் தரம் முழுதும் மாறிவிடுகிறது. நீங்கள் "நீ அஹிம்மையாக இருக்க வேண்டும் ஏனென்றால் ஹிம்சை அடுத்தவர்களுக்குத் துன்பம் கொடுக்கும் யாரையும் துன்பப்படுத்தாதே, மனித இனம் ஒரு குடும்பம், வருத்தபடுத்துவது, மனித இனம் ஒரு குடும்பம், வருத்த படுத்துவது பாபமாகும்" என்று நீங்கள் சொல்லும்போது எல்லாவற்றையும் முழுதும் மாறுபட்ட கோணத்திற்குத் திருப்பி விட்டீர்கள். பதஞ்சலி, "அஹிம்சையாக இரு. அது உன்னைத் தூய்மையாக்கும். யாரையும் துன்பப் படுத்தாதே – யாரையும் துன்பப்படுத்த எண்ணவும் செய்யாதே

ஏனென்றால் அந்த வழியில் நினைப்பதற்கு ஆரம்பித்த அந்த வினாடியே உள்ளே தூய்மையற்ற நிலையிலே விழுந்துவிடுகிறாய்" என்று சொல்கிறார். கேள்வி அடுத்தவரைப் பற்றியதல்ல, உன்னைப் பற்றியதே. இருந்தாலும் ஒருவர் அஹிம்சையாக இருக்கும்போது மற்றவர்கள் பயனடைகின்றனர். ஆனால் அது அஹிம்சையாகவே இருப்பது என்ற குறிக்கோள் ஆகாது. அது உப-பொருள் அது நிழல்.

நீங்கள் மற்றவர்கள் வருத்தமடையக் கூடாது என்பதற்காக அஹிம்சையாக இருந்தால், உண்மையில் நீங்கள் அஹிம்சையில் இல்லை. பின், நீங்கள் ஒரு நல்ல சமுதாய பிரஜை கலாசாரமுடையவர், ஆனால் தெய்விகம், உங்கள் இருப்புத்தன்மையில் (being) நிகழவில்லை. உங்களுடைய அஹிம்சை உங்களுக்கும், மற்றவர் களுக்கும் இடையே வழவழப்பாக்கக் கூடியது. உங்கள் வாழ்க்கை சுமுகமாக இருக்கும், ஆனால் தூய்மையாக அல்ல, ஏனென்றால் குறிக்கோள் முழுத்தன்மையுமே மாற்றி விடுகிறது. மற்றவர்களைப் பாதுகாப்பது என்பது குறிக்கோள் இல்லை. அவர்கள் பாதுகாக்கப் படுவார்கள், அது மற்றொரு விஷயம். நீங்கள் தூய்மையாகி அதனால் முடிவான தூய்மையை உணர்வதே குறிக்கோளாகும்.

கீழை மதங்கள் சுயநலத்தில் தொடர்ந்து உள்ளன. ஏனெனில் அதுவாகவே இருப்பதற்கு அங்கு வேறு வழியில்லை என்பதை அவை அறிந்துள்ளன. யாரோ ஒருவர் சுயநலமாக இருக்கும்போது மற்றவர்கள் அளவற்ற பயன்பெறுகின்றனர். உண்மையில் எல்லாம் பிறர் நலம் கருதும் தன்மையும் உண்மையான போலியில்லாத பிறர் நலம் கருதும் தன்மையும் ஆழ்ந்த சுயநலத்திலிருந்தே மலர்ச்சி யடைகின்றன. அவை எதிரிடையானவைகள் அல்ல. அவை எதிர் நிலைகள் அல்ல, பிறர் நலம் கருதும் தன்மை என்ற மலர் யார் ஆழ்ந்த சுய நலத்தில் இருக்கிறாரோ அவருடைய இருப்புத் தன்மையில் (being) மலரும். சுயநலமாக இருப்பது என்பது இயற்கையே. மக்களைக் கட்டாயப்படுத்துவது என்பது அவர்களை செயற்கையாக ஆக்குவதற்கே. எவையெல்லாம் செயற்கையோ அவை கடவுளின் வழியல்ல. எவையெல்லாம் செயற்கையோ அவையெல்லாம் அடக்கு முறையாகின்றன. அவை உங்களுக்குத் தூய்மையைக் கொண்டு வருவதில்லை.

அதனால் இதை நினைவில் கொள்ள வேண்டும். இது ஒழுக்க நெறியின் குறிக்கோள் அல்ல. உண்மையில் கீழை நாடுகளில் ஒழுக்க

நெறிகள் குறிக்கோளாகக் கற்பிக்கப்படவில்லை. அது மதத்தின் நிழலே. தெய்விகம் நிகழும் போது, ஒழுக்க நெறிகளும் தானே நிகழும் - ஒருவர் அதைப்பற்றி தொந்தரவு கொள்ள வேண்டியதில்லை. கவலை அடைய வேண்டியதில்லை; அது தானாகவே வரும். மேற்கு நாடுகளில் ஒழுக்கநெறி குறிக்கோளாக கற்பிக்கப்பட்டது; உண்மையில் மதமாகவே; கீழை நாட்டு வேதங்களில் பத்துக் கட்டளை போன்றவை இல்லை.

ஒரு வாழ்க்கை கட்டளைகளைப் பின்பற்றும் வாழ்க்கையாக இருத்தல் கூடாது. இல்லையென்றால் நீங்கள் ஓர் அடிமையாகி விடுவீர்கள். சொர்க்கத்தை அடிமைத்தனத்தின் மூலம் அடைந்தீர் களானால் உங்கள் சொர்க்கம் போதுமான அளவுள்ள சொர்க்கமாக இராது. அடிமைத்தனம் அதனுடைய பாகமாக இருக்கும். சுதந்திரம், உரிமை உங்கள் வளர்ச்சியில் இயற்கையான பாகமாக இருக்க வேண்டும்.

ஆகையால் இவை தூய்மைப்படுத்தும் நடவடிக்கைகள் ஆகும். அவை உங்களைத் தூய்மைப்படுத்தும்; அவை உங்களுக்கு உள் ஆரோக்யத்தைக் கொடுக்கும்.

பதஞ்சலி, யோகியானவன் தூய்மையடைந்தபோது அவனுள் தன் சொந்த உடல்மேல் வெறுப்பு ஏற்படுகிறது, மற்றவர்களுடன் ஸ்தூலமான தொடர்பு கொள்வதற்கு விரும்புவதில்லை என்கிறார்.

ஜுகுப்சா (jugupsa) என்ற வார்த்தையில் சில கஷ்டங்கள் உள்ளன. எல்லா மொழிபெயர்ப்புகளிலும் இது "வெறுப்பு" என்று மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. ஏனென்றால் ஆங்கிலத்தில் இணையான வார்த்தை இல்லை. அது வெறுப்பு இல்லை, இல்லவே இல்லை; அந்த வார்த்தையே தவறானது. வெறுப்பு என்ற அந்த வார்த்தை, வெறுப்புண்டாக்குகிறது. ஒரு யோகியை எண்ணும்போது, அவனுள் தன்னுடைய சொந்த உடல் மேல் வெறுப்பு உண்டாகிறது என்பது நம்பமுடியாதது. ஏனென்றால் யோகிகள் தங்களது உடலிடம் அக்கறை கொண்டதைப்போல யாருமே எப்பொழுதுமே அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. அவர்கள் தங்களுடைய உடலை கவனித்துக் கொண்டதுபோல யாருமே கவனித்துக் கொள்வில்லை. அவர்களுக்கு அழகிய உடல்கள் இருந்தன. மகாவீரர் அல்லது புத்தரைப் பாருங்கள் - அழகிய உடல்கள் - மிகவும் சரியான அமைப்பில், கண்ணுக்கு இனியதாக பொருள்களில் நிறம் அமைந்திருப்பது போல

(symphonies). இல்லை, அது முடியாதது. வெறுப்பு தவறான வார்த்தை முதலில் இதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

ஜுகுப்சா (jugupsa) வெறுப்பு என்று பொருள்படவில்லை. இதன் அர்த்தம் மிகவும் கடினமானது. நான் உங்களுக்கு விளக்கிச் சொல்ல வேண்டும். மூன்று விதமான மனிதர்கள் உள்ளனர். ஒன்று, தங்கள் உடல்மேல் பைத்தியமான விருப்பம் வைத்திருப்பவர்கள். உண்மையில் அதே எண்ணத்துடன் இருப்பவர்கள். குறிப்பாகப் பெண்கள் - முழுதும் உடல் சம்பந்தபட்டவர்கள். ஒரு பெண்ணைப் பாருங்கள். அவள் கண்ணாடியைப் பார்க்கும்போது மகிழ்வாக இருப்பதைப்போல ஒரு போதும் இருப்பதில்லை. தற்காதல் (தன்மேல்) கொண்டு (narcissistic) மணிக் கணக்கில் கண்ணாடி முன்னால் தங்களை அர்பணித்துக் கொள்கிறார்கள். அதே எண்ணத்துடன் கண்ணாடி முன் இருப்பது என்பதில் தவறு ஒன்றும் இல்லை. ஆனால் அதன் முன்னால் மணிக்கணக்கில் அங்கிருப்பது அதே எண்ணத்துடன் இருப்பதாக உள்ளது. இது முதல் வகை, தொடர்ந்து உடல் மேலேயே அதே எண்ணமாக இருப்பவர். தான் உடலையும் கடந்தும் இருக்கிறான் என்பதையே மறந்து விட்டவன், மாற்றம் அடைதல் மறந்து விட்டது; அவன் உடல் மட்டுமாக ஆகிவிடுகிறான். அவன் உடலை வைத்திருப்பதில்லை, உடல் அவனை கொண்டிருக்கிறது. இது முதல் வகையான மனிதன்.

இரண்டாவது வகையான மனிதன் முதல் வகைக்கு எதிரானவன். அவனும் அதே எண்ணத்தில் உள்ளவன் தான் - பின் திசையில், அவன் உடலுக்கு எதிராக இருக்கிறான். அதனுடன் வெறுப் படைந்துள்ளான். அவன் கண்ணாடியை உடைத்து விட்டான். அவன் தன்னுடைய உடலை கோடிக்கணக்கான வழிகளில் வருத்திக் கொண்டிருக்கிறான்; அவன் அதை வெறுக்கிறான். முதல்வகை அதை விரும்புகிறது, அதே எண்ணத்துடன்; மற்றொன்று மற்றொரு எல்லைக்கு செல்கிறது - அவன் அதை வெறுக்கிறான். அவன் தற்கொலை செய்து கொள்ள விருமபுகிறான்.

இரண்டாவது வகையை உங்களால் கண்டு கொள்ள முடியும். அவர்கள் யோகிகள் போல பாவனை செய்யலாம். ஒரு யோகியால் வெறுக்க முடியாது. அது எந்தப் பொருள் என்ற கேள்வியில்லை. யோகியால் வெறுக்க முடியாது ஏனென்றால் வெறுப்பு தூய்மையற்ற நிலையை உருவாக்குகிறது. யாரையாவது வெறுத்தல் அல்லது

எதையாவது அல்லது தனது சொந்த உடல் என்ற கேள்வியில்லை. வெறுக்கப்படும் பொருள் எவையாயினும் வெறுப்பு தூய்மை யின்மையைக் கொண்டு வருகிறது. யோகியால் உடலை வெறுக்க முடியாது. இந்த மாதிரியான வக்ரமான யோகிகள் வாரணாசித் தெருக்களில் முட்கள் மேல் படுத்திருப்பது, அல்லது கூரிய இரும்பாணியின் மேல், தங்களுடைய உடம்பை வதைத்துக் கொண்டிருப்பதை நீங்கள் காணலாம். இது ஒரு பெண் கண்ணாடியின் முன் தன்மேல் காதல் அதிகம் கொண்டிருப்பதற்கு எதிர் நிலையாகும்.

உபவாசம் தன்னளவில் நல்லதாகவோ அல்லது கெட்டதாகவோ இருக்க முடியும். உபவாசம் உடலை வதைப்பதற்கு ஒரு வழியாக இருப்பதானால் பின் அது கெட்டது. அது ஹிம்சையாகும். மற்றவர்களிடம் ஹிம்சையாக இல்லாத மக்கள், தங்களுடைய ஹிம்சையை அடுத்தவர்கள் மேல் இல்லாமல் அடக்கி அஹிம்சையாக ஆகிவிட்டார்கள். அவர்களுடைய ஹிம்சை ஒரு புதிய வழியை ஆரம்பிக்கிறது. வெளியேற்றும் முறையாக தங்களுடைய சொந்த உடலிடம் ஹிம்சை பண்ணத் துவங்கி விடுகின்றன. இது என்னுடைய கணிப்பாகும். வக்ர புத்தியுள்ள மனிதர்களைப்பற்றி கதைகள் உள்ளன. தங்களுடைய சொந்தக் கண்களையே அழித்துக்கொள்கின்றனர். அதனால் அழகிய பெண்களைப் பார்க்க முடியாது. அவர்களைப் பற்றிய கதைகள் ஆயிரக்கணக்கில் - விதிவிலக்கல்ல.

ரஷ்யாவில் புரட்சிக்கு முன்பாக ஒரு பிரிவினர் தங்களுடைய ஆயிரக்கணக்கான பின்பற்றுபவர்களுடன், இன உறுப்புகளை வெட்டிக் கொண்டு இருந்தனர் - உடல் மேல் ஆழ்ந்த வெறுப்பினால் அவர்களால் குழந்தைகளை உற்பத்தி பண்ண முடியாது. ஆனால் எப்படி பின்பற்றுபவர்கள் எண்ணிக்கையை அதிகமாக்குவது (உயாத்துவது) - ஏனென்றால் ஒவ்வொரு நிறுவனமும் விரும்புவதே? அதனால் அவர்கள் கஷ்டத்தில் இருந்தனர். அவர்கள் குழந்தைகளை தத்தெடுத்துக் கொண்டு, தங்களது இன உறுப்புகளை வெட்டிக் கொண்டனர். உடலுக்கெதிரான ஒரு பாபச் செயல்.

கிறிஸ்துவ மதத்தில் பிரிவுகள் இருந்தன. அவர்களுடைய ஒரே பிரார்த்தனை தினமும் காலையில் தங்களுடைய சொந்த உடலை சாட்டையால் அடித்துக்கொள்வது. நீலமாக ஆகும்வரை உடலை சாட்டையால் அதிகமாக அடித்துக் கொண்டவரே மிகச் சிறந்த

துறவியாக கருதப்பட்டார். உடல் மேல் எல்லாம் ஒழுங்கற்ற தோல்கள், இரத்தம் ஓடுகிறது. இது சிறந்த துறவிகளின் வாழ்க்கை வரலாற்றில் எழுதப்பட்டுள்ளது. காலையில் சாட்டையினால் எத்தனை முறை அடித்துக்கொண்டார்கள் - நூறு முறை, இருநூறு முறை, முந்நூறு முறை; அதுவும் இந்தியாவில் ஜைனத் துறவிகள் தங்களுடைய வாழ்நாட்களை எண்ணிக் கொண்டு, எத்தனை நாட்கள் வருடத்தில் உபவாசம் இருந்தார்கள் என்று - நூறு நாட்கள், ஐம்பது நாட்கள் எத்தனை நாட்கள் என்பது போல், தன்னுடைய உடலை உபவாசம் ஏறக்குறைய பட்டினி போடுபவரே மிகச் சிறந்தவர்.

கிறிஸ்துவ மதத்தில் பாதிரியர்கள் இருந்தனர். ஆணிகள் உள்ள அவர்களது காலணிகள் அவர்களுடைய உடலினிடையே புகுந்து கொள்ளும். அவர்கள் அந்தக் காலணிகளுடன் நடப்பதால், அவர்களுடைய பாதங்களில் தொடர்ந்து காயங்களைச் சுமந்து கொண்டிருந்தனர், இரத்தம் ஓடிக் கொண்டிருக்கும், சீழ் சேகரிக்கப்பட்டிருக்கும் அவர்கள் மிகச் சிறந்த துறவிகள்.

ஒருவர் மதத்தை விஞ்ஞானப் பூர்வமாக நோக்குவாரானால் அதன் தொண்ணூறு சதவிகிதம் பேத்தலாஜிகல் (pathological) என்பதை நிரூபிக்கும். இவர்களுக்கு மன சம்பந்தப்பட்ட சிகிச்சைகள் தேவை உள்ளன. இவர்கள் மத சம்பந்தப்பட்டவர்கள் என்று அழைப்பது முட்டாள் தனமே. அவர்கள் சாதாரணமான நிலையில் கூட இல்லை. அவர்கள் பைத்தியங்களே.

இவை இரண்டும் வகைகள். பின்பு இவை இரண்டிற்கும் இடையில் - சரியாக இடையில் மூன்றாவதாகும், அவர்களுக்கு பதஞ்சலி ஜுகுப்சா என்ற வார்த்தையை உபயோகிக்கிறார். அவன்தன் சொந்த உடல்மேல் வெறுப்படைவதில்லை. அவன் அதே எண்ணமாக இருப்பவனும் இல்லை. அவன் ஆழ்ந்த சமநிலையில் உள்ளான். அவன் தன்னுடைய உடலைக் கவனித்துக் கொள்வான். ஏனென்றால் உடல் ஒரு வாகனம். அதை ஒரு புனிதமான பொருளாகக் கருதுகிறான். அதைக் கடவுள் உருவாக்கினார்; எவையெல்லாம் கடவுள் உருவாக்குகிறாரோ அது எப்படி புனிதமல்லாததாகக் கருதமுடியும். அது ஓர் ஆலயம். அதை நிந்தனை பண்ணலாகாது. அதை பைத்தியமாக அனுபவிப்பது உங்களை அதில் இழக்கச்செய்யும்.

ஆலயம் விக்ரகமாக ஆகக்கூடாது; ஆலயம் கருவறையாக ஆகக்கூடாது. கருவறையானது உள்ளகமாகும் (innermost core)

ஆழ்ந்த அடையாளம் கண்டு கொள்ளாமை (non-identificaiton) தேவைப்படுகிறது. ஒருவர், "நான் உயிரில் இருக்கிறேன், ஆனால் உடம்பையும் கடந்துள்ளேன், என்பதை அறிந்துகொள்ள வேண்டும். நான் உடம்பினுள் இருக்கிறேன். ஆனால் உடம்பல்ல. நான் உடம்பில் இருக்கிறேன். ஆனால் அதன் எல்லைக்குள் கட்டுப்பட்டல்ல; நான் உடலில் இருக்கிறேன். ஆனால் அதற்கு அப்பாலும் கூட" என்பதைத் தெரிந்து கொள்ளவேண்டும். உடல் எல்லைக்குட்பட்டதாக இருக்கக்கூடாது. ஓர் அழகிய தங்குமிடம்; ஒருவர் அதற்கு நன்றி உள்ளவராக இருக்க வேண்டும். அதனுடன் சண்டையிடத் தேவை யில்லை. அதனுடன் சண்டையிடுவது முட்டாள்தனமானது. குழந்தைத் தனமானதும் கூட. அது சரியான முறையில் உபயோகிக்கப்பட வேண்டும்.

ஜுகுப்சா (jugupsa) சொல்கிறது... நான் மொழிபெயர்க்க வேண்டுமானால், யோகியானவன் உடலைப்பற்றிய தவறான எண்ணத்தை நீக்கி விட்டான் என்றே சொல்வேன். அவன், உடல்மூலம் ஆன்மா (soul) தேடிக் கொண்டிருக்கும் பேரானந்தம் (bliss) கிடைக்கும் என்று எண்ணுவதில்லை. ஆனால் அதற்கு மாறாக உடலை அழிப்பதன் மூலம் பரமானந்தம் அடைய முடியும் என்று எண்ணுவதில்லை. அவன் இரட்டைகளைத் துறந்துவிடுகிறான். அவன் உடலில் விருந்தினன் போல் வாழ்வதோடு, அதைக் கோயில் போலக் கருதுகிறான்.

"யோகியானவன் தூய்மையடைந்த போது அவனுள் சொந்த உடலை ஜுகுப்சா என எண்ணுகிறான். மற்றவருடன் ஸ்தூலமான தொடர்பு கொள்வதற்கு விரும்புவதில்லை. நீங்கள் உடலுடன் அதிகமாகத் தொடர்பு கொண்டீர்களானால் எப்போதும் மற்ற உடல்களுடன் தொடர்பு கொள்ள நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள். மற்ற உடல்களுடன் தொடர்பு கொள்ள பேரவாக் (lust) கொள்வீர்கள் (காமம் அடைவீர்கள்). அதை நீங்கள் அன்பு எனச் சொல்கிறீர்கள். அது அன்பு அல்ல அது காம இச்சையே - ஏனென்றால் உடல் தனியாக இருக்க முடியாது. அது மற்ற உடல்கள் என்ற வலைப்பின்னலுள் இருக்கிறது.

குழந்தை தாயின் கருப்பையால் சுமக்கப் படுகிறது. ஒன்பது மாதங்கள் தாயின் உடல், குழந்தையின் உடலுக்கு உணவளிக்கிறது. கிளைகள் மரத்தின் மூலம் வளருவது போல, குழந்தையின் உடல்

தாயின் உடல் மூலம் வளருகிறது. குழந்தை தயாரானவுடன் கருப்பையிலிருந்து வந்த போதும் ஆழ்ந்த தொடர்புடன் தொடர்ந்து இருந்து வருகின்றன. தாயினுடைய மார்பகங்கள் மூலம், பால் மட்டும் அல்லாமல் உடலினுடைய வெது வெதுப்பும் எடுத்துக் கொள்கிறது. அது உடலின் தேவை.

குழந்தை தாயினுடைய வெதுவெதுப்பை இழந்து விடுமானால், அது ஒரு போதும் ஆரோக்யமாக இருப்பதில்லை. உடல் எப்போதும் கஷ்டப்பட்டுக் கொண்டு இருக்கும். அவனுக்கும் உணவு, பால், வைட்டமின்கள் - தேவையான எல்லாமே கொடுத்தாலும், தாயினுடைய அந்த வெதுவெதுப்பு அதுவும் மிகவும் அன்புடன் கொடுக்கப்படவில்லையானால் ஏனென்றால் நீங்கள் ஒருவரிடம் அன்பு செலுத்தவில்லை என்றால் உஷ்ணம் உண்டாகலாம், அது உங்கள் உடலிருந்து மற்றவர் உடலுக்கு கடந்து செல்லலாம், ஆனால் வெதுவெதுப்பு இல்லை. உஷ்ணம் அன்பின் மூலமாக வெதுவெதுப்பாகிறது. அது தன்மையில் முற்றிலும் வேறுபட்ட கோணமுடையது. அது உஷ்ணமில்லை. இல்லையென்றால் நீங்கள் குழந்தைக்கு உஷ்ணம் கொடுக்கலாம். இப்போது நிறைய ஆராய்ச்சிகள் செய்யப்பட்டுள்ளன. குழந்தை, உஷ்ணம் கொடுக்கும் அறையில் வைக்கப்பட்டது - அது உதவவில்லை. தாயின் உடல் சில நுண்ணிய அன்பின் அதிர்வுகளைக் கொடுக்கிறது; ஏற்றுக்கொள்ளக் கூடிய, அன்பு கொள்ளக் கூடிய தேவையிருக்கக்கூடியது. அதுவே நிலைத்திருக்கச் செய்கிறது.

அதனாலே மனிதன் வாழ்க்கை முழுவதிலும் தொடர்ந்து பெண்ணின் உடலுக்குப்பின் செல்கிறான், நாடிச் செல்கிறான், தேடிச் செல்கிறான். பெண் வாழ்க்கை முழுவதிலும் ஆணின் உடலை நாடிச் செல்கிறாள். எதிரிடையான இனம் கவரும் தன்மை உடையது. ஏனென்றால் உடலினுடைய மாறுபட்ட தன்மை உதவுகிறது, மாறுபட்ட தன்மையே இறுக்கத்தையும், சக்தியையும் கொடுக்கிறது. நீங்கள் அதன் மூலம் உணவளிக்கப் படுகிறீர்கள், நீங்கள் அதன் மூலம் பலமடைகிறீர்கள்.

இது இயற்கையானதே, அதில் தவறு ஒன்றும் இல்லை, ஆனால் அஹிம்சை மூலமாக பொருளுடையாமையின் மூலமாக, உண்மையாக இருப்பதன் மூலமாக ஒருவர் மேன் மேலும் தூய்மையடையும் போது உணர்வின் (consciousness) மையம்

உடலிலிருந்து இருப்புத்தன்மையில் (being) மாற்றப்படுகிறது. இருப்புத்தன்மை தொடர்ந்து முழுதுமாக ஏகாந்தத்தில் இருக்கிறது.

அதனாலேயே ஒரு மனிதன், அதிக உடற்பற்றுள்ளவன் ஒரு போதும் விடுதலையடைவதில்லை. பற்றுடைமை பலவிதமான பந்தங்களுக்கு எடுத்துச்செல்லும், சிறைவாசத்தைக் கொடுக்கும். நீ ஒரு பெண்ணை விரும்பலாம், நீ ஓர் ஆணை விரும்பலாம். அடி ஆழத்தில் தடுக்கவும் (எதிர்க்கவும்) செய்கிறாய் - ஏனென்றால் காதலன் ஒரு பந்தமும் கூட. அஅது முடமாக்குகிறது, உறவு முறைகள் உணவும் அளிக்கிறது, சிறைப்படுத்தவும் செய்கிறது. அது இல்லாமல் நீ வாழ முடியாது, அதோடு வாழவும் முடியாது. இதுவே எல்லா காதலர்களுடைய பிரச்சினையாகும். அவர்களால் தனியாக வாழமுடியாது. அவர்களால் ஒன்று சேர்ந்தும் வாழமுடியாது. அவர்கள் தனியாக இருந்த போது ஒருவரை ஒருவர் நினைத்துக் கொள்வார்கள். சேர்ந்திருக்கு போது சண்டையிடுவார்கள்.

ஏன் இது நடைபெறுகிறது? இந்த அமைப்பு எளிமையானது. நீங்கள் விரும்பும், உங்களை விரும்புகின்ற ஒரு பெண்ணுடன் இல்லாதபோது நீங்கள் பெண்ணின் உடலிலிருந்து பொழிகின்ற வெதுவெதுப்பு தன்மைக்காக பசியோடு இருப்பதாக உணர்கிறீர்கள். நீங்கள் பெண்ணுடன் இருக்கும்போது பட்டினியால் வாடவில்லை. நீங்கள் பசியோடு இல்லை. நீங்கள் நன்கு உணவளிக்கப்பட்டுள்ளீர்கள். விரைவில் நிறைய எடுத்துக்கொள்வதால் சலித்துக் கொள்கிறீர்கள். இப்போது நீங்கள் பிரிந்திருக்க விலகியிருக்க, தனித்திருக்க விரும்புகிறீர்கள். எல்லாக் காதலர்களும், சேர்ந்திருக்கும் போது, "தனித்திருந்தால் எவ்வளவு அழகாக இருக்கும்" என்று எண்ணு வார்கள். தனித்திருக்கும்போது அவர்கள் கற்பனை செய்வார்கள். கனவு காண்பார்கள். "சேர்ந்திருந்தால் எவ்வளவு அழகாக இருக்கும்" என எண்ணுவர்.

உடலுக்கு ஒன்று சேர்ந்திருப்பது தேவைப்படுகிறது. உங்களுடைய ஆன்மாவிற்கு (inner most soul) ஏகாந்தம் தேவைப்படுகிறது. இதுவே பிரச்சினையாகும். உங்களுடைய ஆன்மாவிற்கு தொடர்ந்து ஏகாந்தமாக இருக்க முடியும். அது ஹிமாலயத்தின் உச்சி, ஆகாயத்திற்கெதிராக உயரமாக நிற்கிறது. உங்களுடைய ஆன்மா ஏகாந்தத்தில் இருக்கும் போது வளர்ச்சியடைகிறது. ஆனால் உங்களுடைய உடலிற்கு தொடர்புகள்

தேவைப்படுகிறது. உடலுக்கு கூட்டம் வேண்டியதிருக்கிறது. வெது வெதுப்பு, சங்கங்கள், சமுதாயங்கள், கழகங்கள், வேண்டியதிருக் கிறது. எங்கெல்லாம் நீங்கள் அதிக மனிதர்களுடன் இருக்கிறீர்களோ, உடல் நன்றாக இருப்பதாக உணர்கிறது. கூட்டத்தில் உங்கள் ஆன்மா பட்டினியாக இருப்பதாக உணரலாம். ஏனெனில் அதற்கு ஏகாந்தத்தின் மூலமாக உணவளிக்கப்படுகிறது. ஏகாந்தத்தில் உங்கள் ஆன்மா முற்றுப்பெற்றிருக்கிறது. ஆனால் உடல் உறவுகளுக்காக பசியோடு இருப்பதாக உணர்கிறது.

வாழ்க்கையில் இதை நீங்கள் புரிந்து கொள்ளாவிட்டால், தேவையில்லாமல், நீங்கள் மிகத்துன்பமடைவீர்கள். இதை நீங்கள் புரிந்து கொண்டால் ஓர் இணைப்பை (இசைவு) (rhythm) உருவாக்குகிறீர்கள். நீங்கள் உடல்த் தேவையையும் நிறை வேற்றுகிறீர்கள், ஆன்மத் தேவையையுங்கூட நிறைவேற்றுகின்றீர்கள். சில சமயங்களில் உறவுகளில் செல்கின்றீர்கள், சில நேரங்களில் சேர்ந்து வாழ்கின்றீர்கள். சில நேரங்களில் தனித்து வாழ்கிறீர்கள், சில சமயங்களில் சிகரமாகி விடுகிறீர்கள் - ஆகையால் முழுதுமாக ஏகாந்தம், மற்றொருவர் என்ற பாவனையே நினைவில் இல்லை இதுவே இசைவு (rhythm).

யாராவது ஏகாந்தத்தை அடைந்த போது ஒன்று திரட்டப்பட்ட உணர்வானது மாற்றமடைகிறது. யோகம் என்பது அதைப் பற்றியே. உடலில் இருந்து எப்படி ஆன்மாவிற்கு ஒன்று திரட்டுவது? (குவிப்பது) பொருளிலிருந்து பொருளைக் கடந்ததற்கு, கண்ணுக்குப் புலப்படுபவற்றிலிருந்து கண்ணுக்குப் புலப்படாதவற்றுக்கு, தெரிந்த வற்றிடமிருந்து தெரியாதவற்றுக்கு - உலகிலிருந்து கடவுளிடம். இது குவித்தலுடைய (focus) மாற்றமே. குவித்தல் (focus) முற்றுமாக மாறிவிடும் போது, யோகியானவன் தன்னுடைய ஏகாந்தத்தில், பேரானந்தத்தில், மகிழ்வுடன் இருக்கும்போது சாதாரண, அடுத்தவர்களுடன் இருக்க வேண்டுமென்ற உடலினுடைய பேராவல் காலப்போக்கில் மறைந்து விடுகிறது.

யோகியானவன் தூய்மையடைந்த போது தன்னுடைய உடலைப்பற்றிய தவறான எண்ணத்தை நீக்கிவிட்டான் (disillusionment); இப்போது அவன் தேடிக் கொண்டிருக்கும் சொர்க்கம் உடல் மூலம் அடைய முடியாது, அவன் கனவு கண்டு கொண்டிருந்த பேரானந்தம் உடல் மூலம் அடைய முடியாது.

என்பதைத் தெரிந்து கொள்கிறான். உடலால் இது முடியாது. எல்லைக்குட்பட்டதன் மூலம் எல்லையற்றதை அடைய முயலுகிறீர்கள். விஷயங்கள் மூலம், மரணமற்றதை அடைய முயலுகிறீர்கள். உடலில் எந்தக் குற்றமும் இல்லை. உங்களுடைய முயற்சி அபத்தமானது. உடல் மேல் கோபம் கொள்ளாதீர்கள். உடல் ஊகங்களுக்கு ஒன்றும் செய்யவில்லை. இது யாரோ ஒருவர் கண்கள் மூலமாக கவனிக்கத் துவங்கியது போல் உள்ளது. இப்போது கண்கள் மேல் குற்றமில்லை, கண்கள் பார்ப்பதற்காகச் செய்யப்பட்டுள்ளன, கேட்பதற்கு அல்ல. உடல் வஸ்துக்களினால் ஆகியது. அது உருவமற்ற வகைகளினால் ஆகவில்லை. அது மரணத்திற்குட்பட்டது. அது மரணமற்றதாக இருத்தல் முடியாது. நீங்கள் முடியாதவற்றையே கேட்கிறீர்கள், அதைக் கேட்காதீர்கள்.

இது தன்னுடைய உடலைப்பற்றிய தவறான எண்ணத்தை போக்கிக்கொள்வதாகும். தவறான எண்ணத்தை நீக்கிவிடுவது என்பது நிகழும் போது, "... மற்றவர்களுடன் ஸ்தூலமான தொடர்பு கொள்வதற்கு விரும்புவதில்லை" பின் மற்றவர்களுடன் ஸ்தூலமான தொடர்பு கொள்ளும் தேவை காலப் போக்கில் மறைந்து விடுகிறது. உண்மையில இதுவே சரியான தருணம். அந்த மனிதன் கருப்பையிலிருந்து வெளிவந்து விட்டான் என்பது. அதற்கு முன்பு அல்ல.

சில மனிதர்கள் கருப்பையிலிருந்து வெளி வருவதே இல்லை. மரணத் தருவாயில் அவர்கள் இருக்கும் போது கூட, அவர்களுக்கு அடுத்தவர்களுடைய இருப்பு (முன்னிலை) அடுத்தவர்களுடைய தொடர்பு, உறவு முறை தொடர்ந்து தேவைப்படுகிறது. ஸ்தூலமாக அவர்கள் அநேக ஆண்டுகளுக்கு முன் வெளிவந்து விட்டனர், அந்த மனிதன் என்பது, தொண்நூறாக இருக்கலாம். தொண்ணூறு வருடங்கள் அவள் தொடர்புடனே வாழ்ந்து வருகிறான், நாடுகிறான், எப்போதும் உடல்த் தொடர்பிற்கு பேராவல் கொள்பவனாக உள்ளான். அவள் இழந்துவிட்ட கருப்பையில் அவனுடைய கனவுகளில் திரும்பத் திரும்ப வாழ்ந்து கொண்டிருக்கிறான். எப்பொழுதெல்லாம் ஒரு மனிதன் ஒரு பெண்ணிடம் காதல் கொண்டு எவையேனும் எண்ணுவானால், அது முக்கியமான விஷயமல்ல. அவன் திரும்பவும் கருப்பையில் விழுகிறான் என்று சொல்லப்படுகிறது. இருக்கலாம். இது ஏறக்குறைய முடியும் - ஏனென்றால் நான் இருக்கலாம் எனச் சொல்வது, இன்னும் விஞ்ஞானப் பூர்வமாக நிரூபிக்கப்பட்ட

அநுமானம் அல்ல. பெண்ணின் உடலினுள் நுழைவது என்ற உந்துதல், காம உந்துதல் என்பது, கருப்பையில் நுழைய வேண்டும் என்பதல்லாமல் வேறில்லை. எல்லாக் காம உணர்வும் எப்படி மறுபடியும் கருப்பையில் நுழையலாம் என்பதே. மனிதன் எல்லா வழிகளிலும் தன்னுடைய உடலை எப்படி சுகமாக வைத்துக் கொள்வது என்பதைக் கண்டு பிடித்து உள்ளான். அவன் வெளியே ஒரு கருப்பையை உருவாக்க முயற்சி செய்து கொண்டிருக்கிறான் என மனோதத்துவ நிபுணர்கள் கூறுகின்றனர். ஒரு சுகமான அறையைப் பாருங்கள். உண்மையிலேயே அது சுகமானதாக இருந்தால், அது கருப்பையிலிருப்பதைப் போல் வெதுவெதுப்பாக, அடக்கமாக, பட்டுப்போல், வெல்வெட் போல - தாயினுடைய தோலின் உள் அரவணைப்பு என்ற சில விளக்கங்களில் சம்பந்தம் உள்ளதாக இருக்கும். தலையணைகள், படுக்கை - எல்லாம் சுகமான உணர்வை கொடுக்கின்றன. இவையெல்லாம் கருப்பையைப் போன்றதாக உள்ளன.

இப்போது மேற்கில் சிறிய கருப்பை போன்ற தொட்டிகளை செய்துள்ளனர். அந்தத் தொட்டிகளில், தாயினுடைய கருப்பையில் இருக்கும் அதே உஷ்ணநிலையில் வெதுவெதுப்பான தண்ணீரை நிரப்புகின்றனர். அடர்ந்த இருளில் மனிதன் அந்தத் தொட்டிகளினுள் மிதக்கிறான், அது முழுதும் சுகமானது. அடர்ந்த இருளில், கருப்பையில் இருப்பது போல் அவர்கள் அவற்றை தியானத் தொட்டிகள் என்று அழைக்கின்றனர். அது உதவுகிறது, ஒருவர் மிக, மிக அமைதியாக இருப்பதாக உணர்கிறார், அக மகிழ்ச்சி எழுந்து நீங்கள் திரும்பவும் ஒரு குழந்தையாய் ஆகிவிடுகிறீர்கள். கருவில் இருக்கும் குழந்தை ஒரு குறிப்பிட்ட உஷ்ணநிலை உள்ள திரவத்தில் கருப்பையில் மிதக்கிறது. அந்தத் திரவம் கடலில் உள்ள கூட்டுப் பொருள் அனைத்தையும் கொண்டுள்ளது. அதே உப்பு நீர், அதே கூட்டுப் பொருளுடன் அதனாலேயேதான் விஞ்ஞானிகள் மனிதன் மீன்களிலிருந்து உருவாகி உள்ளான் என அறிந்து கொண்டுள்ளனர். ஏனென்றால் கருப்பையினுள் கடலினுடைய சூழ்நிலை பராமரிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது.

எல்லா சுகங்களும் அடி ஆழத்தில் கருப்பைபோன்றதே. எப்பொழுதெல்லாம் ஒரு பெண்ணுடன் சுருண்டு படுத்திருக் கிறீர்களோ, நன்றாக இருப்பதாக நீங்கள் உணர்கிறீர்கள். ஒவ்வொரு மனிதனும் எவ்வளவு வயதானாலும் மறுபடியும் ஒரு குழந்தையாகி

விடுகிறான். ஒவ்வொரு பெண்ணும் எவ்வளவு இளமையாக இருந்தாலும் மறுபடியும் ஒரு தாயாகி விடுகிறாள். எப்பொழுதெல்லாம் காதலில் இருக்கிறார்களோ, பெண் தாயினுடைய பாத்திரத்தில் நடிக்கிறாள், மனிதன் குழந்தையினுடைய பாத்திரத்தில் நடிக்கிறான். ஒரு இளவயதான பெண் தாயாகி விடுகிறாள், வயதான மனிதன் குழந்தையாகி விடுகிறான்.

ஒரு யோகியினுள் இந்த உந்துதல் மறைந்து விடுகிறது - உண்மையில் இந்த உந்துதலுடன் தான் பிறக்கிறான். இந்தியாவில் நாம் அவனை துவிஜ "இரு பிறப்பாளன்" என்று அழைக்கிறோம். இது அவனுடைய இரண்டாவது, உண்மையான பிறப்பு. இப்போது இன்னோர் உடல் வேண்டுமென்ற தேவை இனி அவனுக்கு இல்லை. அவன் எல்லாவற்றிற்கும் மேலான ஒளியாகி (மாற்றமடைந்த ஒளி)விடுகிறான். இப்போது அவன் பூமிக்கு மேல் மிதக்க முடியும். அவன் ஒரு மலராகி விட்டான் - ஒரு மலராக இல்லை. ஏனென்றால் மலரும் கூட பூமியில் வேரூன்றியதே... அவன் மலரின் நறுமணமாகி விட்டான். முழுதும் சுதந்திரமாக பூமியில் எந்த வேரும் இல்லாமல் ஆகாயத்தில் நகர்கிறான். அடுத்த உடல்களுடன் தொடர்பு கொள்ள வேண்டுமென்ற அவனுடைய ஆசை மறைந்துவிடுகிறது.

மனத்தூய்மையிலிருந்து உற்சாகம் மன ஒருமைப்பாட்டின் சக்தி, புலனடக்கம், தன்னை - உணர்வதற்கான தகுதி ஏற்படுகிறது.

இந்த மனிதன் பேரானந்தத்தில் இருக்கிறான். இப்போது இந்த மனிதன் மற்றவர்களோடு தொடர்பு கொள்வது என்பது தேவையில்லாமல் தன்னுடைய சுயேச்சையில் பேரானந்தத்துடன் இருக்கிறான், மிகுந்த உற்சாகமாக, கொண்டாட்டத்துடன் அவனுடைய ஒவ்வொரு வினாடியும் ஆழ்ந்த மகிழ்ச்சியில் உள்ளது. நீங்கள் அதிகமாக உடலில் வேரூன்றியிருந்தீர்கள் (நிலைத்திருந்தீர்கள்) ஆனால் அதிக வருத்தம் அடைகிறீர்கள், ஏனென்றால் உடல் மொத்தமானது. அது கனமான பொருள். நீங்கள் உடலிலிருந்து அதிகம் கடந்து செல்வீர்களானால், நீங்கள் கனமற்றவர்களாகி விடுகிறீர்கள். இயேசு அவரைப் பின்பற்றுபவர்களிடம், "வாருங்கள், என்னைத் தொடருங்கள், என்னுடைய சுமை லேசானது. யாரெல்லாம் கனமான சுமை சுமக்கிறீர்களோ, வாருங்கள், என்னைத் தொடருங்கள் என்னுடைய சுமை லேசானது, கனமில்லாதது" என்று சொல்கிறார்.

மனத் தூய்மையிலிருந்து உற்சாகம் ஏற்படுகிறது. நீங்கள் வருத்தத்துடன் எப்போதும் உற்சாகமற்று எப்போதும் துக்கத்துடன் இருப்பீர்களானால் உங்களுடைய துக்கத்திற்கு நேரடியாக ஒன்றும் செய்ய இயலாது. ஏதாவது செய்யலாம் என்பது பயனற்றது என்பது உறுதியாகி விடும். நீங்கள் வருத்தத்துடன் துக்கத்துடன் உற்சாகமற்று, எப்போதும் கனமான, சுமையுடன் இயங்குவீர்களானால், இது நோயல்ல. இது நோயின் அறிகுறியாகும் என்பதை கீழை நாடுகள் தெரிந்துள்ளன. நீங்கள் அடி ஆழத்தில் உடல் சம்பந்தப்பட்டவர்களாக இருப்பதே அந்த வியாதி. ஆகையால் எப்படி உங்களுடைய இருளை அகற்றுவது என்பதல்ல, உங்களை சந்தோஷமாக்குவது என்பது கேள்வியல்ல. உடலுடன் உங்களுக்குள்ள கவனத்தை மாற்றுவதற்கு எப்படி உதவுவது; உடலுடன் சிக்கிக்கொண்டிருப்பதை மிகக் கொஞ்சமாக்குவதற்கு உங்களுக்கு எப்படி உதவி பண்ணலாம் என்பதே கேள்வி.

தினமும் மக்கள் என்னிடம் வருகின்றனர். அவர்கள், "நாங்கள் வருத்தத்துடன், துக்கத்துடன் இருக்கிறோம். ஒவ்வொரு நாளும் காலையில் மறுபடியும் ஒரு நம்பிக்கையில்லாத நாளாக அன்றைய தினத்தைப் பார்க்க வேண்டியதிருக்கிறது. எப்படியோ படுக்கையை விட்டு வெளிவந்துவிட்டோம், நம்பிக்கை இல்லாமல்... நாங்கள் அதிக நாட்கள் வாழ்ந்துள்ளோம் என்பதை அறிவோம். அதே துன்பமான நாட்கள் மறுபடி மறுபடியும் (திரும்பத்திரும்ப). ஆகையால் என்ன செய்வது? தாங்கள் எங்கள் வருத்தத்திலிருந்து வெளிவர ஏதாவது கொடுங்கள்" என்று சொல்கின்றனர். நேரடியாக எதுவுமே செய்ய முடியாது, மறைமுகமாக ஏதாவது செய்ய முடியும். இது அறிகுறியாகும். இது காரணமல்ல. நீங்கள் அறிகுறிக்குச் சிகிச்சை செல்வீர்களானால், நோய் மறைவதில்லை.

மேலை நாட்டு மனோ தத்துவம் அறிகுறிகளுக்கே சிகிச்சை செய்து கொண்டிருக்கிறது. யோகம் என்ற மனோதத்துவம் காரணங்களுக்கே சிகிச்சை அளிக்கிறது. மேற்கத்திய (உளநூல்) மனோதத்துவ சாஸ்திரம் தொடர்ந்து சென்று கொண்டிருக்கிறது: எவையெல்லாம் நீங்கள் சொல்கிறீர்களோ, அவை உங்கள் அறிகுறிகள், அவர்கள் அதை வைத்துக்கொண்டு அதை அகற்றி விட ஆரம்பித்து விடுகிறார்கள். அவர்கள் வெற்றி பெறவில்லை. மேற்கத்திய மனோதத்துவ சாஸ்திரம் ஒரு முழுதோல்வியடைந்த

ஏமாற்றும் முறை என நிரூபிக்கப்பட்டுள்ளது. இப்பொழுது அது ஒரு மிகப் பெரிய ஸ்தாபனம், மனோதத்துவ நிபுணர்கள் அதைச் சொல்ல முடியாது. அவர்களுடைய முழு வாழ்க்கையும் அவர்களுடைய அதிகமான ஊதியங்களும் அதைச் சார்ந்துள்ளது. மிக அதிக அளவில் ஊதியம் பெறும் உத்தியோகங்களில் அவர்களுடைய ஒன்று. அவர்களால் உண்மையை ஏற்றுக் கொள்ள முடியாது. இப்போது அவர்கள் ஒருவருக்கும் உதவவில்லை என்பதை அறிந்துள்ளனர். அதிக பக்ஷம் (உயர்ந்த அளவில்) அவர்கள் நீடிக்கச் செய்யலாம், நம்பிக்கை கொடுக்கலாம், அவர்கள் உங்கள் துக்கத்துடன் நீங்கள் இணங்கிச் செல்வதற்கு உதவலாம். ஆனால் அதன்மூலம் எந்த மாற்றமும் நிகழாது. காலப்போக்கில் ஒருவர் துக்கத்தோடு இசைந்து சென்று விடுகிறார், அது அங்கே இருக்கத்தான் செய்யும் என்ற உண்மையை ஏற்றுக் கொள்பவராகி விடுகிறார். ஒருவர் அதைப்பற்றி அதிக கவலை கொள்வதில்லை. ஆனால் எதுவுமே மாற்றமடைய வில்லை.

இப்போது அவர்களுக்குத் தெரியும், ஆனால் மனோதத்துவ சாஸ்திரம் இப்போது வளர்ந்து கொண்டிருக்கும் ஒரு உத்யோக மாகும், ஆயிரக்கணக்கானவர்கள் அதில் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். உண்மையில் ஆடம்பரமான வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக் கின்றனர். அதில் அதிகக் கண்டுபிடிப்புகள் - முழு விஷயமுமே ஒரு ஏமாற்று, மோசடி, ஒருவருமே இதனால் உதவி பெறவில்லை என்பதை யார் சொல்வார்கள்? அது அப்படிதான் இருக்கும், ஏனெனில் அறிகுறிகள் மாற்றப்பட முடியாது. அதற்கு நீங்கள் வர்ணமடிக்கலாம், ஆனால் அடி ஆழத்தில் அவை தொடர்ந்து அதுவாகவே இருந்துவிடும். நீங்கள் புதிய பெயர்கள், புதிய முத்திரைகள் கொடுக்கலாம், ஆனால் ஒரு வித்யாசமும் செய்யப்படுவதில்லை.

காரணம் இருக்கிறது, அது மாற்றப்பட வேண்டும்: நீங்கள் எந்த அளவில் உடலில் வேரூன்றி இருக்கிறீர்களோ, அந்த விகிதத்தில் (அளவில்) நீங்கள் வருத்தமடைகிறீர்கள். நீங்கள் உடலில் வேரூன்றாத போது அந்த அளவில் உற்சாகமுடன் இருக்கிறீர்கள். உடலிலிருந்து விடுபட்ட போது... உற்சாகம் அதிக உற்சாகம். நீங்கள் உடலிலிருந்து முழுதும் விடுபடும்போது ஒரு சுகந்தம் ஆகாயத்தில் மிதப்பது போல் நீங்கள் ஆகிவிடுகிறீர்கள். நீங்கள் பேரானந்தமாகிவிடுகிறீர்கள். இயேசு பேசுகின்ற பரமானந்தம், ஆசீர்வாதம் புத்தரின் நிர்வாணம், மகாவீரர் அதற்கு அப்படியே சரியான வார்த்தை கைவல்யம், ஏகாந்தம்

என்பதைக் கொடுத்துள்ளார். நீங்கள் முழுதும் சுதந்திரமாகி, ஏகாந்தமாகி விடுகிறீர்கள். இப்போது எதுவுமே தேவையில்லை. உங்களுக்கு நீங்களே போதுமானது. இதுவே அடைய வேண்டிய இலக்காகும். ஆனால் மிகவும் எச்சரிக்கையோடு செல்லும்போதும் அறிகுறி களுடன் சிக்கிக் கொள்ளாமல் இருக்கும் போதுமே நீங்கள் இலக்கைச் சென்றடையமுடியும்.

யாரோ ஒருவருக்கு காய்ச்சலாக உள்ளது. உடல் சூடாக உள்ளது. உஷ்ண நிலை உயரத்திற்கு போய் விட்டது, என்றால் இது ஓர் அறிகுறி. உஷ்ணநிலை நூற்று மூன்று, நூற்று நான்கு, ஐந்தாக இருக்கலாம். இது அறிகுறியே. உடலின் உஷ்ணத்தைக் குணப்படுத்த முயலாதீர்கள். உங்களால் குணப்படுத்த முடியும். நீங்கள் அந்த மனிதனை பனிக்கட்டியின் குளிர்ச்சி உள்ள தொடுகின்ற தண்ணீரின் அடியில் வைக்கலாம். ஆரம்பத்தில் அது உதவி செய்யப்படுவது போல் தோன்றும், ஆனால் நீங்கள் அவனை நோயிலிருந்து குணப்படுத்த முடியாது என்பதை நினைவில் கொள்ளுங்கள். அவன் மரண மடைவான். ஏனென்றால் காய்ச்சல் ஓர் அறிகுறியே. காய்ச்சல் உடலி னுள் ஒரு பெரிய யுத்தம், மூலப் பொருள்களின் யுத்தம் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது என்பதைக் காண்பிக்கிறது. உடலின் மூலப் பொருள்கள் போராட்டத்தில் உள்ளன. அதனால் உஷ்ணம் உருவாகி யுள்ளது. அதனால் அங்கு காய்ச்சல் உள்ளது. உடல் சுகமாக இல்லை. ஓர் உள்நாட்டுப் போர் உடலினுள் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. உடலினு டைய சில மூலப்பொருள்கள் மற்றவற்றுடன் போரிட்டுக் கொண்டிருக் கின்றன, அன்னியப் பொருள்களாக இருக்கலாம். அவை போராட்டத் தில் உள்ளன. போராட்டத்தினால் உஷ்ணம் வெளி வந்துள்ளது.

உஷ்ணப் போர் ஆரம்பித்துள்ளது என்பதன் அறிவிப்பே. போருக்கு சிகிச்சை அளிக்கப்பட வேண்டும், உஷ்ண நிலைக்கல்ல. உஷ்ண நிலை, "இப்போது, விஷயங்கள் என்னைக் கடந்து சென்று விட்டன, நீங்கள் ஏதாவது செய்யுங்கள்" என உங்களுக்கு ஒரு செய்தியை அறிவிக்கிறது. "இப்போது விஷயங்கள் என்னைக் கடந்து சென்று விட்டன. என்னால் ஒன்றும் செய்யமுடியாது. ஏதாவது செய்யுங்கள். மருத்துவரிடம் செல்லுங்கள். உதவி எடுத்துக் கொள்ளுங்கள். எவையெல்லாம் செய்யமுடியுமோ, அதை நான் செய்து விட்டேன், ஆனால் இப்போது ஒன்றும் செய்ய முடியாது. போர் ஆரம்பிக்கப்பட்டுள்ளது" என உங்களுக்கு உடல் ஓர் அறிவிப்புக் கொடுக்கிறது.

ஒது போதும் அறிகுறிகளுக்கு சிகிச்சை அளிக்காதீர்கள், அறிகுறிகளுக்கு சிகிச்சை அளிப்பதில் நேரத்தை வீணாக்காதீர்கள் எப்பொழுதும் காரணத்திற்கே செல்லுங்கள்.

இது ஓர் அநுமானம் அல்ல, ஒரு கோட்பாடும் (கொள்கையும்) அல்ல - யோகம் கொள்கைகளில் நம்பிக்கை கொள்வதில்லை, பதஞ்சலி ஒரு தத்துவாதியல்லர். அவர் அக உலகின் ஒரு முழுதுமான விஞ்ஞானியாவார், எவையெல்லாம் அவர் சொல்லுகிராரோ, அவை லட்சக்கணக்கான யோகிகளால் உணரப்பட்டதால், எந்த விதிவிலக்கும் இல்லாமல், அப்படியே அவர் சொல்கிறார். சாதாரண வாழ்க்கையிலும் கூட நீங்கள் கவனித்தீர்களா? சாதார்ண வாழ்க்கையிலும் கவனித்திருப்பீர்கள், எப்பொழுதெல்லாம் ஒருவர் உற்சாகமாக இருக்கிறார் என்றால், அவர் உடல் நினைவில்லாமல் இருக்கிறார். எப்பொழுதெல்லாம் ஒருவருக்கு உடலை மறக்க முடியவில்லையோ அப்போது வருத்தமடைகிறார்.

உண்மையில் ஆயுர் வேதத்தில் ஆரோக்யத்தைப்பற்றி கொடுத்த சொற்பொருள் விளக்கம் குறிப்பிடத்தக்கவற்றில் மிகச்சிறந்த ஒன்று; உலகத்தில் எங்குமே எந்த ஒரு மருத்துவ விஞ்ஞானமும் இதுபோன்ற சொற்பொருள் விளக்கம் கொடுக்கவில்லை. மேற்கத்திய மருத்துவ முறையில் ஆரோக்கியத்தைப் பற்றிய சொற்பொருள் விளக்க வில்லை. அதிகமாகவும் அவர்கள் எங்கு நோய்கள் இல்லையோ பின் நீங்கள் ஆரோக்யமுடன் இருக்கிறீர்கள் என்று சொல்கிறீர்கள். இது ஆரோக்யத்தினுடைய விளக்கம் அல்ல. ஆரோக்யத்தைப் பற்றி விளக்கும் போது நீங்கள் நோயை உள்ளே கொண்டு வந்தீர்களானால் இது என்ன வகையான விளக்கம்? நீங்கள் "எப்போது நோய்கள் இல்லையோ அப்போது நீங்கள் ஆரோக்யமாய் இருக்கிறீர்கள்" என்று சொல்கிறீர்கள். இது எதிர்மறையான விளக்கம், உடன்பாடு அல்ல. ஆயுர் வேதம், நீங்கள் உடல் உணர்வின்றி இருக்கும் போது ஆரோக்யமாக உள்ளீர்கள் என்று சொல்கிறது. இது உண்மையில் மிக அதிக அழகுடையது. விதேகா: நீங்கள் உடலை உணராத போது - நீங்கள் ஏறக்குறைய உடல் இல்லாதவராகி விடுகிறீர்கள்.

இதை நீங்கள் கவனிக்க முடியும்: தலைவலி வரும் போதே தலை உள்ளே வருகிறது. யார் தலையைப்பற்றி தெரிந்து கொள்கிறார்? நீங்கள் ஒரு போதும் தலையை உணர்வதில்லை. தலைவலி உணர்வைக் கொண்டு வருகிறது; இல்லையென்றால் தலை இல்லாதவராக

உள்ளீர்கள். நீங்கள் தொடர்ந்து உங்கள் தலையைப் பற்றிய நினைவில் இருந்தீர்களானால் அங்கு ஏதோ தவறுள்ளது. சுவாசம் ஆரோக்யமாக இருந்தால் நீங்கள் அதைப்பற்றியே உணருவதில்லை, ஆனால் ஏதாவது சரியில்லை என்றால் - ஆஸ்துமா, பிராங்கைட்டீஸ் - ஏதோ சரியில்லை - அங்கு சுவர்சம் அதிகச் சத்தத்துடன் அதிக இரைச்சலுடன் பின்பு நீங்கள் உணர்கிறீர்கள். அதை உங்களால் மறக்க முடியாது. உங்கள் கால்கள் களைப்பாக இருக்கும் போது, அவை இருக்கின்றன என்பது உங்களுக்குத் தெரிகிறது. ஏதாவது தப்பாகச் சென்ற பின்பே நீங்கள் உணர்வடைகிறீர்கள், எல்லாமே சரியாகச் செயல்படும் போது அதை நீங்கள் மறந்து விடுகிறீர்கள்.

இதுதான் ஆரோக்யத்தின் சொற்பொருள் விளக்கமாகும். உடலை முழுதுமாக மறந்து விட்டீர்களானால் நீங்கள் ஆரோக்யமுடன் (நலமுடன்) இருக்கிறீர்கள். யாரால் உடலை முழுதுமாக மறந்து விட முடிகிறது? யோகி ஒருவரால். நம்மிடம் மூன்று வார்த்தைகள் உள்ளன: ரோகி, போகி, யோகி. ரோகி: நோயுற்ற ஒருவர்; போகி : உடலை அதிகம் அனுபவிப்பவர்; யோகி: உடலுக்கு அப்பால் சென்றவர். போகி (அபூர்வமாக) எப்போதாவது சில வினாடிகளுக்கு யோகத்தை அடைவார். சில வினாடிகள் உடலை மறந்தபோது, அவருடைய வாழ்க்கையில் தொண்ணூறு சதவிகிதம் ரோகியின் உலகத்திலேயே உள்ளார்ந்த அவனுடைய வாழ்க்கையில் ஒரே சதவிகிதம், அரிய வினாடிகள், அதில் யோகியாகி விடுகிறான். சில சமயங்களில் எல்லாம் சரியாக இயங்கும் போது ஹம்மிங் ஏற்படுகிறது. - அழகிய, சரியாக இயங்கும் கார் ஹம்மிங் செய்வது பாடுவது போல்; உங்களுடைய முழு அமைப்பும் அழகாக நன்றாக ஹம் செய்கிறது. இது எப்பொழுதுதாவது ஒரு போகியிடமும், ஒரு போதும் ரோகியிமில்லாமலும், எப்பொழுதும் ஒரு யோகிடமும் ஏற்படுகிறது. ரோகி நோயுற்றவன்; போகி உடலை மிக அதிகம் அனுபவித்து ரோகியின் பக்கம் சாய்பவன், சீக்கிரமோ, பின்போ நோயுற்றவனாகி மரணமடைகிறான்; யோகி; உடலைக் கடந்தவன், அதற்கப்பால் வாழ்கின்றான். பின்பு அவன் உற்சாகமாக இருக்கின்றான்.

ரோகி ஒருபோதும் உற்சாகமாக இருப்பதில்லை, போகி எப்பொழுதும், போகி எப்பொழுதாவது, எப்பொழுதும். உற்சாகம் அவனது இயற்கை. புலப்படும் (தெரிந்த) காரணம் எதுவும் இல்லாமலேயே தொடர்ந்து மகிழ்வாக இருந்து வருகின்றான்.

உங்களுடன் இந்த விஷயம் எதிர் நிலைதான்: புலப்படும் காரணம் எதுவும் இல்லாமலேயே நீங்கள் தொடர்ந்து சந்தோஷமில்லாமல் இருக்கிறீர்கள். யாராவது, "ஏன் நீங்கள் அதிக துக்கத்துடன் இருக்கிறீர்கள்?" என உங்களைக் கேட்டால், நீங்கள் உங்கள் தோள்களைக் குலுக்குகிறீர்கள். உங்களுக்கு எதனால் என்பது தெரியவில்லை. நீங்கள் துக்கமாக இருப்பதே உங்கள் வாழ்க்கை முறை என்று வைத்துள்ளீர்கள். உண்மையில், ஒரு துக்கமான மனிதனைப் பார்க்கும்போது, "நீ ஏன் துக்கமாக இருக்கிறாய்?" எனக் கேட்பதில்லை, நீங்கள் ஏற்றுக் கொள்கிறீர்கள். ஒரு மிகவும் சந்தோஷமான மனிதரைப் பார்க்கும் பொழுது, "என்ன விஷயம்? மிகச் சந்தோஷமாக இருக்கிறீர்கள்? என்ன நடந்தது?" எனக் கேட்கிறீர்கள். துக்கம் எப்போதும் இருப்பது என வைத்துக் கொள்ளப்பட்டுள்ளது, ஏற்றுக்கொள்ளப்பட்டது. மகிழ்ச்சி மிக அபூர்வமானது, விதிவிலக்கானது, அது ஏறக்குறைய உண்மை ஆனால் நம்ப முடியாதது. (Too good to be true).

இது நடைபெறுகிறது; மக்கள் என்னிடம் வருவார்கள். அவர்கள் தியானம் செய்ய ஆரம்பித்து, உண்மையில் அதனுள் செல்வார் களானால், விஷயங்கள் மாற்றமடைய ஆரம்பிக்கின்றன. அவர்கள் வந்த பொழுது, துக்கத்துடன், வருத்தத்துடன் இருந்தனர்; பின் ஏதோ ஒன்று வெடித்துத் திறந்தது - சந்தோஷம் ஆரம்பித்து விட்டது. அவர்களால் அதை நம்ப முடியவில்லை. அவர்கள் என்னிடம் ஓடி வந்து, "என்ன நடந்தது?" திடீரென நான் மிகவும் சந்தோஷமாக இருப்பதாக உணர்கிறேன். நான் கற்பனை பண்ணுகிறேனா?" எனச் சொல்வார்கள். அவர்களால் இது உண்மையாக இருக்க முடியும் என்பதை நம்பமுடியவில்லை. இந்த மனம், "நீங்கள் கற்பனை செய்கிறீர்கள், நீங்கள் துக்கமே வடிவெடுத்த ஒரு மனிதர், உங்களால் சந்தோஷமாக இருக்க முடியுமா? முடியாது" - எனச் சொல்லுகிறது. அவர்கள் என்னிடம் வந்து, "நாங்கள் கற்பனை செய்கிறோமா அல்லது நீங்கள் எங்களை வசியம் செய்தீர்களா?" எனக் கேட்கின்றனர்.

அவர்கள் துக்கமாக இருக்கும்போது யாரோ ஒருவர் அவர்களை வசியம் செய்துவிட்டார் என்று ஒரு போதும் எண்ணுவதில்லை. அவர்கள் துக்கமாக இருக்கும்போது, அவர்கள் அதைக் கற்பனை செய்கிறார்கள் என்று ஒரு போதும் எண்ணுவதில்லை, ஆனால் அவர்கள் மகிழ்வாக இருக்கும் போது, மகிழ்ச்சி ஓர் அபூர்வப் பொருளாக ஆகிவிடுகிறது, நம்பவே முடியாத அளவு அபூர்வப்

பொருளாகி விடுகிறது, நம்பவே முடியாத அளவு அபூர்வமானது அது, அவர்கள் கேட்பார்கள், "இது உண்மையா?" என்று.

ஆங்கிலத்தில் உங்களுக்கு ஒரு சொற்றொடர் உள்ளது "உண்மை ஆனால் நம்பமுடியாதது" (too good to be true); "கெட்டது ஆனால் நம்பமுடியாதது" (too bad to be true) என்ற சொற்றொடர். அந்தச் சொற்றொடர் அழிக்கப்பட வேண்டும். முழுதும் மறக்கப்பட வேண்டும். யாராவது ஏதாவது கெட்டது என்று சொன்னால் நீங்கள், "கெட்டது ஆனால் நம்ப முடியாதது" (too bad to be true) என்று சொல்ல வேண்டும். நம்ப முடியாதது, நீங்கள் கற்பனை பண்ணியுள்ளீர்கள். ஆனால் இல்லை, அது அப்படி இல்லை. துக்கம் இயற்கையான விஷயமாக உள்ளது; சந்தோசம் ஏதோ செயற்கையாக உள்ளது.

"மனத்தூய்மையிலிருந்து உற்சாகம், மன ஒருமைப்பாட்டின் சக்தி..." மக்கள் உடலில் வேரூன்றி தொடர்ந்து இருந்து கொண்டு மன ஒருமைப் பாட்டிற்காக முயற்சி செய்வார்கள்; பின் மன ஒருமைப்பாடு மிகவும் கஷ்டமானது (கடினமானது), ஏறக்குறைய முடியாதது. உங்களால் ஒரு வினாடிக்கு மனதை ஒருமைப் படுத்த முடியாது. மனம் அலைபாய்கிறது, ஆயிரத்தோர் எண்ணங்கள உதயமாகின்றன, நீங்கள் தெரிந்து கொள்ளும் முன்பே எங்கேயோ சென்றுவிட்டீர்கள். பகல்கனவு ஆரம்பித்து விட்டது. எப்பொழுதெல்லாம் மனதை ஏதேனும் ஒன்றின்மேல் ஒருமைப்படுத்த விரும்பும் போது ஏறக்குறைய முடியாது. ஆனால் காரணம் என்னவென்றால், நீங்கள் உடல்மூலம் பார்ப்பீர்களானால், மன ஒருமைப்பாடு முடியாதது. நீங்கள் உடலைக் கடந்து பார்க்கும் போது மன ஒருமைப்பாடு மிகவும் எளிமையானது.

இது நடந்தது, விவேகானந்தர் ஒரு தலை சிறந்த மேதையுடன் தங்கியிருந்தார். அவருடைய பெயர் டியூசென் (Deugsen). தலைசிறந்த மேதைகளில் ஒருவர், சமஸ்கிருத வேதங்களை மேற்கத்திய மொழிகளில் மொழி பெயர்த்தவர். குறிப்பாக டியூசென் (Deugsen) உபநிஷதங்களில் கவனம் செலுத்திக் கொண்டிருந்தார். அவர் மிகவும் கருத்தாழம் மிக்க மொழிபெயர்ப்பாளர்களில் ஒருவர். ஒரு புதிய புத்தகம் வந்து சேர்ந்தது. விவேகானந்தர், "நான் அதைப் பார்க்கலாமா? நான் படிப்பதற்கு அதை வைத்துக் கொள்ளவா?" எனக் கேட்டார் டியூசென் (Deugsen) "சரி நீங்கள் வைத்துக் கொள்ளலாம், நான் அதை

இன்னும் படிக்கவில்லை" என்றார். அரை மணி நேரத்திற்குப் பின்பு விவேகானந்தர் புத்தகத்தைத் திருப்பிக் கொடுத்து விட்டார். டியூசென்னால் (Deussen) அதை நம்பவே முடியவில்லை. அவ்வளவு பெரிய புத்தகம், படிப்பதற்கு ஒரு வாரம் தேவை, அதை நீங்கள் ஜீரணிக்க விரும்பினால் பின் இன்னும் அதிகம். அவர், "நீங்கள் அதனுள் சென்றீர்களா? உண்மையில் நீங்கள் அதைப் படித்தீர்களா; அல்லது அங்கும் இங்குமாகப் பார்த்தீர்களா?" எனக்கேட்டார். விவேகானந்தர், "நான் அதைப் படித்துவிட்டேன்" என்றார். டியூசென், "என்னால் அதை நம்பவே முடியவில்லை. பின்னால் நீங்கள் எனக்கு ஒரு சகாயம் பண்ண வேண்டும். நான் புத்தகத்தைப் படிக்கிறேன், புத்தகத்தைப் பற்றிய ஒருசில கேள்விகள் கேட்பேன்" என்றார்.

டியூசென் (Deussen)() அந்தப் புத்தகத்தை ஏழு நாட்கள் படித்தார், அதைக் கற்றுக் கொண்டார். பின்பு அவர் ஒரு சில கேள்விகள் கேட்டார். விவேகானந்தர் மிகவும் சரியாகப் பதிலளித்தார். அவருடைய வாழ்க்கை முழுதும் படித்துக் கொண்டிருப்பது போல. டியூசென் (Deussen) தன்னுடைய நினைவுக் குறிப்பில், "என்னால் இது முடியாதது, நான்," இது எப்படி முடியும்? எனக் கேட்டேன், விவேகானந்தர், "நீங்கள் உடல் மூலம் படித்தீர்களானால், மன ஒருமைப்பாடு இருக்க முடியாது. நீங்கள் உடலில் வேரூன்றி இருக்கவில்லையென்றால், நீங்கள் புத்தகத்தில் நேரடியாகச் சுற்றியிருப்பிர்கள். உங்களது உணர்வு நேரடியான தொடர்புடன் இருக்கிறது. புத்தக்கத்திற்கும், உங்களுக்கும் இடையில் ஒருவரும் ஒரு தடையாக நின்று கொண்டிருக்கவில்லை. பின் அரை மணி நேரமே போதுமானது; நீங்கள் அதனுடைய உட்கருத்தை கிரகித்துக் கொள்வீர்கள்" என்றார்.

இதுபோல; ஒரு சிறு குழந்தை வாசிக்கும் போது - அவனால் பெரிய வார்த்தையைப் படிக்க முடியாது; அவன் பெரிய வார்த்தைகளைச் சிறிய பகுதிகளாக்க வேண்டும். அவனால் முழு வாக்கியத்தையும் படிக்க முடியாது. நீங்கள் படிக்கும் பொழுது, முழு வாக்கியத்தையும் வாசிக்கிறீர்கள். உண்மையில் நீங்கள் ஒரு நல்ல வாசகராக இருந்தால் உங்களால் முழு பாராவையும் படிக்க முடியும் - அப்படியே ஒரு பார்வை, அது கடந்து விடுகிறது. உடல் தலையிட வில்லையென்றால், நீங்கள் முழுப் புத்தகத்தையும் அப்படியே கடந்து செல்வதன்மூலம் படித்து விடுவீர்கள். அங்கே சாத்யக் கூறுகள்

உள்ளன. உடலுடன் படித்தீர்களானால் நீங்கள் மறந்து விடலாம். நீங்கள் உடல் இல்லாமல் படித்தீர்களானால் அதை ஞாபகப்படுத்திக் கொள்ளும் தேவையில்லை; அதை நீங்கள் மறந்து விட மாட்டீர்கள் - ஏனென்றால் நீங்கள் அதைப் புரிந்து கொண்டுள்ளீர்கள்.

தூய்மையடைந்த, தூய்மையான உணர்வுள்ள தூய உடல் கொண்ட ஒரு மனிதனிடம் மன ஒருமைப்பாட்டின் சக்தி ஏற்படுகிறது (உதயமாகிறது). மன ஒருமைப்பாட்டின் புலனடக்கம் ஏற்படுகிறது. இவை எல்லம் பின் விளைவுகளே. நினைவில் கொள்ளுங்கள். அவற்றை பயிற்சி செய்வீர்களானால் அவற்றை அடைய மாட்டீர்கள். அவை நிகழும். அடிப்படை காரணம் விலக்கப்பட்டால், நீங்கள் உங்களை உடலாக கருதுவது இல்லாத போது, பின்பு "புலனடக்கம்" ஏற்படும். பின்பு அது உங்கள் கட்டுப்பாட்டினுள் இருக்கும். நீங்கள் எண்ணுவதற்கு விரும்புவீர்களானால் எண்ணுவீர்கள்; நீங்கள் எண்ணுவதற்கு விரும்பவில்லையென்றால் மனதிடம், "நிறுத்து" எனச் சொல்லுவீர்கள். அது ஓர் இயந்திர அமைப்பு, நீங்கள் அதைப் போடவும், நிறுத்தவும் செய்யலாம், ஆனால் தேர்ச்சி தேவை, நீங்கள் ஒரு மாஸ்டராக (ஆசானாக) இல்லையென்றால் மாஸ்டராக முயற்சி செய்தீர்களானால், நீங்கள் அதிகக் குழப்பத்தையும், கஷ்டங்களையும் உங்களுக்கு உண்டு பண்ணுகிறீர்கள். நீங்கள் மறுபடியும், மறுபடியும் தோற்கடிக்கப்படுகின்றீர்கள். புலன்கள் தொடர்ந்து தலைவனாக இருந்துவரும். அவற்றை வெற்றி கொள்வது அந்த வழியிலல்ல. உங்களை உடலில் இருந்து விலக்கிப் பார்ப்பதே அவற்றை வெற்றி கொள்வதற்கான வழியாகும். நீங்கள் உடலல்ல என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். பின் நீங்கள் மனம் அல்ல என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

நீங்கள் உங்களைச் சுற்றி உள்ளவற்றிடம் ஒரு சாட்சியாக ஆகிவிட வேண்டும். உடல் அங்கிருக்கிறது, அது முதல் வட்டம், பின்பு மனம் அங்கிருக்கிறது, இரண்டாவது வட்டம்; பின் இருதயம் அங்கிருக்கிறது, மூன்றாவது வட்டம், பின் அந்த மூன்று வட்டங்களுக்குப் பின் மையம் உள்ளது. அது நீங்கள். நீங்கள் உங்களிடம் மையம் கொண்டீர்களானால், இந்த மூன்று அடுக்குகளும் உங்களைப் பின் தொடரும். நீங்கள் மையம் கொள்ளவில்லையானால் பின்பு நீங்கள் அவற்றைத் தொடர வேண்டும்.

"... புலனடக்கம், தன்னை உணர்வதற்கான ஒரு தகுதி?"

இப்படியாக ஒருவர் தகுதியாகிறார், தன்னை உணர்வதற்கு திறமை உள்ளவராகிறார். ஒவ்வொருவரும் தன்னை உணர வேண்டுமென்று விரும்புகின்றனர், ஆனால் ஒருவரும் முதிர்ச்சியடைய விரும்பவில்லை. ஒவ்வொருவரும் அதை மந்திர வித்தைப் பொருளாக (மாயாஜாலப் பொருளாக) அடைய விரும்புகிறார்கள். மக்கள் என்னிடம் வந்து, "நாங்கள் தன்னை உணர்ந்தவர்களாகி விடுவதற்கு எங்களை ஆசீர்வதிக்க மாட்டீர்களா?" எனச் சொல்வார்கள். இது இவ்வளவு எளிமையாக, என்னுடைய ஆசீர்வாதங்கள் அதைச் செய்யுமானால், பின் நான் உலக முழுமைக்கும் ஆசீர்வதிக்கும் தொந்தரவு எடுத்துக்கொள்ள வேண்டும். மொத்தமாக ஆசீர்வாதம், உலகம் முழுமையும் ஞானம் அடையட்டும், புத்தர் முன்பே செய்திருக்கலாம், அதுபோல மகாவீரர் செய்திருக்கலாம் - முடிந்திருக்கும், எல்லோருமே ஞானமடைந்த வராகியிருப்பார்கள்.

அந்த வழியில் (முறையில்) செய்ய முடியாது. யாருமே உங்களை ஆசீர்வதிக்க முடியாது; நீங்கள் ஆழ்ந்த ஒழுக்க நெறிகளில் கடந்து செல்ல வேண்டும், உங்களுடைய இருப்புத் தன்மையின் (being) மையத்தை மாற்றவேண்டும், நீங்கள் தகுதிஉடையவராக ஆக வேண்டும். நீங்கள் சரியான வாகனமாக வேண்டும். இல்லையென்றால், சில சமயங்களில் இதுபோல் எதிர்பாராத விதமாக இது நடந்தது, யாரோ ஒருவர் தன் இருப்பில் (the self) இடறி விழுந்ததால் ஆனால் அது ஓர் அதிர்ச்சியாகி அது யார் ஒருவருக்கும் உதவுவதாக இல்லை. அது உங்கள் முழுத்தன்மையுமே விரிசல் அடையச் செய்கிறது. நீங்கள் பைத்தியமாகலாம். அது இதைப் போன்றது: ஒரு சக்தி வாய்ந்த மின்னோட்டம் உங்களைக் கடந்து செல்லும் போது, நீங்கள் அதற்குத் தயாராக வில்லையென்றால் - எல்லாமே தப்பாகிவிடும், தப்பாய்ப் போய்விடும். உருக்குக் கம்பி கூட அழிந்து, நீங்கள் மரணமடைந்து விடலாம்.

நீங்கள் தூய்மையடைய வேண்டும், உடலுடன் ஒன்றாத நிலையடைய வேண்டும். நீங்கள் ஒரு குறிப்பிட்ட தன்மையுள்ள சாட்சி பாவம் அடைய வேண்டும். அதற்கப்புறம், அந்த விகிதாசாரத்தில் மட்டும் தன்னைப்பற்றிய ஞானம் ஏற்பட முடியும். நீங்கள் அதை இலவசமாகப் பெற முடியாது. நீங்கள் அதற்கு ஊதியம் கொடுக்க வேண்டும் - உங்களுடைய இருப்புத்தன்மை (being) க்குரிய துறையில்

கொடுக்க வேண்டும். அதற்கு நீங்கள் பணம் கொடுக்கலாம் என்பதல்ல. எதுவுமே உதவியாக இராது. நீங்கள் அதற்கு இருப்புத்தன்மையின் (being) மூலமே கொடுக்க வேண்டும்'' தன்னை உணர்வதற்கான ஒரு தகுதி''

## மனதிருப்தி பரம சந்தோஷத்தைக் கொண்டு வருகிறது

இந்தத் தூய்மை முடிவில் மனதிருப்தியைக் கொண்டு வருகிறது. இந்த வார்த்தை மிகவும் பொருள் பொதிந்தவற்றில் ஒன்று; நீங்கள் அதைப் புரிந்து கொள்ள வேண்டும், அதை உணர வேண்டும், அதை மனதில் கிரகித்துக் கொள்ள வேண்டும். "மனத்திருப்தி" என்பது சூழ்நிலை எதுவாயினும் நீங்கள் எந்தப் புகாரும் சொல்லாமல், குறை கூறலும் இல்லாமல் அதை ஏற்றுக் கொள்வதாகும். நீங்கள் குறைகூறல் இல்லாமல் ஏற்றுக்கொள்வது மட்டுமன்றி நீங்கள் அதில் களிப்படைகிறீர்கள், ஆழ்ந்த நன்றியறிதலுடன், இந்த வினாடி சரியானதே. உங்கள் மனம் அதிலிருந்து நகர்ந்து செல்லாதிருந்தால், நீங்கள் எந்த இடமும் கேட்காத போது, நீங்கள் வேறு எந்த வழியும் கேட்காத போது, நீங்கள் ஒன்றுமே கேட்காதபோது, கேட்பது என்பது நழுவி விட்டபோது, நீங்கள் இங்கு இப்பொழுதில் இருக்கிறீர்கள், களிப்படைகிறீர்கள், பறவைகள் மரங்களில் பாடிக் கொண்டிருப்பது போல், பூக்கள் மரங்களில் மலர்வதுபோல், நட்சத்திரங்கள் நகர்வதுபோல, எல்லாமே, "இது எல்லாமே, முழுமையே, சரியானதே, அதனில் எந்த முன்னேற்றமும் சாத்தியமில்லை." என்பதாகிறது. எதிர்காலம் நழுவிய போது, நாளை மறைந்து விட்டபோது ... அங்கே மனத்திருப்தி. இப்பொழுது (now) என்பதே ஒரே நேரமானால், அது எல்லயற்றது. அங்கே மனத்திருப்தி உள்ளது. அந்த மனத்திருப்தியை பதஞ்சலி, "பரம சந்தோஷம்" என்கிறார்.

"மனத்திருப்தி பரம சந்தோஷத்தைக் கொண்டு வருகிறது." ஆகையால் மனத்திருப்தி யோகினுடைய ஒழுக்க நெறியாகும். அவன் திருப்தியுடன் இருக்கிறான். எதுவுமே உங்களுடன் அதிருப்தியை உருவாக்க முடியாதோ, எதுவுமே உங்களுள் அமைதியின்மையை உருவாக்க முடியாதோ, எதுவுமே உங்களை உங்கள் மையத்திலிருந்து வெளியே தள்ள முடியாதோ அங்கே பரம சந்தோஷம் ஏற்படுகிறது.

○

## தன்னுடைய இதயத்தில் அன்புள்ள ஒரு மனிதன் எப்படி சுயநலமாக இருக்க முடியும்?

அன்பு உலகத்திலேயே மிகுந்த சுயநலமுடைய விஷயமாகும். அன்பு என்பது அடிப்படையில் தன் மேல் அன்பு கொள்வதே. அதன்பின் தான் நீங்கள் யாரிடமாவது அன்பு செலுத்த முடியும். நீங்கள் உங்களிடம் அன்பு கொள்ளவில்லையானால், எவரிடமும் அன்பு செலுத்துவது என்பது ஏறக்குறைய முடியாதது. அன்பினது தரம் உங்களுள் வளர வேண்டும், பின் அதன் மணம் யாரோ ஒருவருக்குச் சென்றடையும். நீங்கள் உங்களிடம் அன்பு செலுத்தவில்லையென்றால் அடுத்தவர்களிடம் அன்பு செலுத்துவதாக பாசாங்கு பண்ணலாம். உங்கள் அன்பு போலித்தனமானது, தப்பானது, வஞ்சகமானது. நூற்றுக்கு தொண்ணூற்று ஒன்பது நிகழ்ச்சிகளில் இதுதான் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. ஏனென்றால் மனிதஇனத்திற்கு தடைகள் செய்யப்பட்டு, நிபந்தனைகள் விதிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு குழந்தையும் தன் மேல் அன்பு கொள்ளக்கூடாது. ஆனால் மற்றவர்கள் மேல் அன்பு செலுத்த வேண்டும் என்ற நிபந்தனை விதிக்கப் பட்டுள்ளது. இது முடியாதது. அது நடைபெற முடியாதது; அந்த வழியில் விஷயங்கள் இல்லை. ஒவ்வொரு குழந்தையும் சுயநலமாக இருக்கக்கூடாது எனக்கற்பிக்கப்படுகிறது. அதுவே இருப்புத் தன்மையின் (being) ஒரே வழியாக இருக்கிறது.

நீங்கள் சுயநலமாக இல்லையென்றால் நீங்கள் பிறர் நலம் கருதுபவராக இருக்க மாட்டீர்கள், நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் சுயநலமாக இல்லையென்றால், சுயநலமின்மையில் இருக்க மாட்டீர்கள், நினைவில் கொள்ளுக்ங்ள. ஓர் ஆழ்ந்த சுயநலவாதியே சுயநலமில்லாதவராக இருக்க முடியும். ஆனால் இது புரிந்து கொள் ளப்பட வேண்டும். ஏனென்றால் இது மாறுபட்டதாகக் காணப்படுகிறது.

சுயநலமாக இருப்பது என்பதன் பொருள் என்ன? முதல் அடிப்படை விஷயம் தன்னில் மையம் கொண்டிருப்பதே.

இரண்டாவது அடிப்படை விஷயம் எப்பொழுதும் தன்னுடைய பேரானந்தத்தை தேடுவதாகும். நீங்கள் தன்னில் மையம் கொண்டிருப்பீர்களானால், நீங்கள் எதைச் செய்தாலும் சுயநலம் உள்ளவராகவே இருப்பீர்கள். நீங்கள் மக்களுக்குச் சேவை செய்யலாம், ஆனால் நீங்கள் அதைச் செய்வது எதற்கென்றால் நீங்கள் அதில் இன்பமடைகிறீர்கள். ஏனென்றால் நீங்கள் அதைச் செய்வதில் சந்தோஷம், பரமானந்தம் அடைகின்றீர்கள். நீங்கள் நீங்களே தான், அதைச் செய்வதாக உணர்கிறீர்கள். நீங்கள் எந்தக் கடமையையும் செய்யவில்லை. மனிதகுலத்திற்கு நீங்கள் எந்த சேவையும் பண்ணவில்லை. நீங்கள் ஒரு தலைசிறந்த தியாகியும் அல்ல! நீங்கள் தியாகம் பண்ணவில்லை. இவையெல்லாம் அறிவற்ற வார்த்தைகள். நீங்கள் உங்களுடைய சொந்த வழியில் மகிழ்வுடன் இருக்கிறீர்கள். அது உங்களுக்கு நன்றாக உள்ளது. நீங்கள் மருத்துவமனைக்குச் சென்று அங்கு நோயாளிகளுக்குச் சேவை பண்ணுகிறீர்கள் அல்லது ஏழை மக்களிடம் சென்று அவர்களுக்குச் சேவை பண்ணுகிறீர்கள். நீங்கள் வளர்ச்சியடைகிறீர்கள். அடிஆழத்திலே, உங்களைப்பற்றி பரமானந்தமாக, அமைதியாக, மகிழ்வாக உணர்கிறீர்கள்.

ஒரு தன்னில் மையம் (self-centered) கொண்டிருக்கும். மனிதன் எப்போதும் அவனுடைய மகிழ்ச்சியையே தேடிக் கொண்டிருப்பான். நீங்கள் உங்கள் மகிழ்ச்சியை அதிக அளவில் தேடிக் கொண்டிருக்கும் போது அதே அதிக அளவில் மற்றவர்கள் மகிழ்வோடு இருப்பதற்கு உதவுகிறீர்கள். ஏனென்றால் உலகில் மகிழ்வாக இருப்பதற்கு அதுதான் ஒரே வழியாகும். உங்களைச் சுற்றி ஒவ்வொருவரும் மகிழ்வாக இல்லாவிடில், நீங்கள் மகிழ்வாக இருப்பதற்கு முடியாது, ஏனென்றால் மனிதன் ஒரு தீவு அல்ல. அவன் ஒரு பரந்த கண்டத்தின் பகுதியாவான். நீங்கள் மகிழ்வாக இருக்க விரும்பினால், உங்களைச் சுற்றியுள்ள மற்றவர்களையும் மகிழ்வுடன் இருப்பதற்கு நீங்கள் உதவி செய்ய வேண்டும். அதற்கப்புறம் தான் உங்களால் மகிழ்வாக இருக்க முடியும்.

உங்களைச்சுற்றி மகிழ்வான சூழ்நிலையை உருவாக்க வேண்டும். ஒவ்வொருவரும் துக்கமாக இருந்தால், நீங்கள் எப்படி மகிழ்வாக இருக்க முடியும்? நீங்கள் பாதிக்கப்படுவீர்கள், நீங்கள் ஒரு கல் இல்லை. நீங்கள் மிகவும் நுண்ணியமான இருப்பு (being) மிகவும் உணர்வுடையவர். உங்களைச்சுற்றி ஒவ்வொருவரும் துக்கமாக இருந்தால், அவர்களுடைய துக்கம் உங்களைப் பாதிக்கும். துக்கமற்ற

தொற்றும் நோய்களை போல தொற்றக் கூடியது. நீங்கள் மற்றவர்களுக்கு மகிழ்வாக இருப்பதற்கு உதவுவீர்களானால் முடிவில் நீங்கள் மகிழ்வுடன் இருப்பதற்கு உங்களுக்கே உதவி பண்ணிக் கொள்கிறீர்கள். ஒரு மனிதன் தன்னுடைய மகிழ்ச்சியில் அதிக ஆர்வத்துடன் இருக்கிறவன், எப்போதும் மற்றவர்களுடையதிலும் ஆர்வத்துடன் இருக்கிறான் - ஆனால் அவர்களுக்காக அல்ல. அடி ஆழத்தில் அவனுக்காகவே ஆர்வத்துடன் இருக்கிறான், அதனாலேயே தான் அவன் உதவுகிறான். உலகத்திலே ஒவ்வொரு வரும் சுயநலமாக இருப்பதற்கு கற்றுக் கொடுக்கப்பட்டால், உலகம் முழுமையுமே மகிழ்வாக இருக்கும். அங்கே துக்கத்திற்கே இடமில்லை.

நீங்கள் ஆரோக்யமாக இருக்க விரும்பினால், நோயாளிகளுக் கிடையில் உங்களால் வாழ முடியாது. எப்படி உங்களால் ஆரோக்யமாக இருக்க முடியும்? அது முடியாத ஒன்று. அது நியதிக்குப் புறம்பானது. நீங்கள் மற்றவர்கள் ஆரோக்யமாக இருக்க முடியும்? அது முடியாத ஒன்று. அது நியதிக்குப் புறம்பானது. நீங்கள் மற்றவர்கள் ஆரோக்யமாக இருப்பதற்கு உதவ வேண்டும். ஆரோக்யத்திலேதான் உங்களுடைய ஆரோக்யம் ஏற்பட முடியும்.

ஒவ்வொருவரும் சுயநலமாக இருப்பதற்குக் கற்றுக் கொடுங்கள்; சுயநலமின்மை அதிலிருந்து வளர்ச்சியடையும். சுயநலமின்மை முடிவில் சுயநலமே. ஆரம்பத்தில் அது சுயநலமின்மையாகத் தெரியும். ஆனால் முடிவில் அது உங்களை நிறைவடையச் செய்கிறது. பின் பெருகுகிறது. எவ்வளவு அதிக மனிதர்கள் உங்களைச் சுற்றி உள்ளார்களோ அவ்வளவு அதிக மகிழ்ச்சி, அந்த அளவு மகிழ்ச்சி தொடர்ந்து உங்கள் மேல் பொழிந்து கொண்டிருக்கிறது. நீங்கள் அளவில்லா மகிழ்ச்சியடைகிறீர்கள்.

ஆனால் உங்களை ஒருபோதும் மறந்துவிடாதீர்கள். நீங்கள் அந்த மாதிரி கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளீர்கள்... அரசியல்வாதிகள், மதகுருக்கள் அதையே செய்து வருகின்றனர், ஏனென்றால் அரசியல்வாதிகளுக்கும், மத குருமார்களுக்கும் உலகில் இருப்பதற்கு அதுதான் ஒரே வழியாகும். நீங்கள் துக்கமாக இருந்தால், மதகுருக்கள் தேவையாக உள்ளனர். நீங்கள் நோயுற்றவராக, மகிழ்வற்றவராக இருந்தால், அரசியல்வாதிகள் தேவை. நீங்கள் கலகம் செய்பவராக இருந்தால் பின்பு மன்னர்கள் தேவை. நீங்கள் நோயுற்றவராக இருந்தால்

மருத்துவர் தேவை. நீங்கள் குழப்பம் ஏற்படுத்துபவராக இருக்க வேண்டுமென அரசியல்வாதிகள் விரும்புகின்றனர். இல்லையென்றால் அவர்கள் யார்மேல் சட்டத்தை (சுமத்துவார்கள்) விதிப்பார்கள்? உங்களுடைய கலகத்தின் மூலம் அவர்கள் அரசாள்பவராகி விடுகின்றனர். அவர்கள் சுயநலமற்றவராக நீங்கள் இருக்க வேண்டுமெனக் கற்பிக்கின்றனர். அவர்கள் உங்களை நாட்டிற்காக தியாகம் பண்ணுபடி கடவுளுக்காக, மதத்திற்காக இஸ்லாம், இந்து மதம் - கொரானிற்காக, கீதைக்காக பைபிளிற்காக - எந்த வார்த்தையும் செய்யும் ஆனால் உங்களைத் தியாகம் பண்ணுங்கள் என கற்பிக்கின்றனர். நீங்கள் தியாகம் செய்தீர்களானால் மதகுரு தொடர்ந்து மகிழ்வாக இருக்கிறார், அரசியல்வாதி தொடர்ந்து மகிழ்வாக இருக்கிறார்.

மதகுருக்கள், அரசியல்வாதிகள் ஆழ்ந்த சதி ஆலோசனையில் இருக்கிறார்கள். அவர்கள் தாங்கள் என்ன செய்கின்றோம் என்ற உணர்வில்லாமல் அறிந்து கொள்ளாமல் இருக்கலாம், ஆனால் அவர்கள் நீங்கள் மகிழ்வாக இருப்பதை விரும்புவதில்லை. எப்பொழுதெல்லாம் நீங்கள் மகிழ்வுடன் இருப்பதை அவர்கள் பார்க்கிறார்களோ, அவர்கள் விழிப்படைந்துவிடுகிறார்கள். பின்பு நீங்கள் அவர்களுக்கு, அவர்களுடைய சமுதாயத்திற்கு, அவர்களுடைய ஸ்தாபிக்கப்பட்ட உலகத்திற்கு ஓர் ஆபத்தாகி விடுகின்றீர்கள். நீங்கள் ஆபத்தானவர்கள். ஒரு மகிழ்ச்சியான மனிதன் உலகத்திலே மிகவும் ஆபத்தானவன். அவன், அழிக்கக்கூடியவன் என்பதை நிரூபிக்கின்றான். ஏனென்றால் ஒரு மகிழ்வான மனிதன் ஒரு சுதந்திரமான மனிதனாவான். ஒரு மகிழ்வான மனிதன் போர்களைப் பற்றி வியட்நாம், இஸ்ரேல் என தொந்தரவு கொள்வதில்லை. மகிழ்ச்சிகரமான மனிதனுக்கு இவை பார்ப்பதற்கு நியூராடிக்காக (neurotic) முட்டாள்தனமாக உள்ளன.

ஒரு மகிழ்வான மனிதன் மகிழ்ச்சியோடு இருப்பதால் அவன் தனிமையில் மகிழ்வாக இருக்க விரும்புகிறான். அவன் தன்னுடைய தனிமை பாதுகாக்கப்பட வேண்டுமென விரும்புகிறான். அவன் மலர்களுடன், கவிதைகளுடன், இசையுடன் வாழ விரும்புகிறான். எதற்காக அவன் யுத்தங்களுக்குச் செல்வது பற்றியும், சொல்வப் படவும், மற்றவர்களைக் கொல்லவும் தொந்தரவு கொள்ள வேண்டும்? ஏன் ,அவன் கொலை செய்கிறவனாக, தற்கொலை செய்து கொள்பவனாக இருக்க வேண்டும்? சுய நலமில்லாதவர்களால் தான்

அதைச் செய்ய முடியும், ஏனென்றால் அந்தப் பரமானந்தத்தை அவர்களும் அடைய முடியும் என்பதை அவர்கள் ஒருபோதும் தெரிந்து கொண்டதில்லை. அதுவாக இருப்பது என்றால் என்ன; கொண்டாட்டம் என்பது என்ன, என்பதுபற்றி அவர்களுக்கு ஒருபோதும் எந்த அனுபவமும் இல்லை. அவர்கள் ஒருபோதும் நடனமாடியதில்லை. அவர்கள் எந்த தெய்விக ஒளியையும் அறிந்ததில்லை. அந்த எல்லா ஒளியும் ஆழ்ந்த மகிழ்ச்சியிலிருந்து, ஆழ்ந்த பூர்ண திருப்தியில், மனநிறைவிலிருந்து வருகிறது.

ஒரு சுயநலமில்லாத மனிதர் வேரோடு சாய்ந்தவர், மையத்திலிருந்து விலகியவர். அவன் ஆழ்ந்த நியூராஸிஸ்ஸில் (neurosis) இருக்கிறான் அவன் இயற்கைக்குப் புறம்பாக உள்ளான்; அவனால் முழுமையாகவும், ஆரோக்யமாகவும் இருக்க முடியாது. வாழ்க்கையின் மின்னோட்டத்திற்கு எதிராகச் சண்டையிட்டுக் கொண்டிருக்கிறான், இருப்பினும் (being) பிரபஞ்ச இருப்புடன் (existence) அவன் சுயநலமில்லாமல் இருக்க முடியாது - ஏனென்றால் ஒரு சுயநலமான மனிதனே சுயநலமில்லாத மனிதனாக இருக்க முடியும். உங்களிடம் மகிழ்ச்சி உள்ள போதே நீங்கள் அதைப் பகிர்ந்தளிக்க முடியும்; உங்களிடம் இல்லையென்றால் அதை எப்படி பகிர்ந்தளிப்பீர்கள்? பகிர்ந்தளிப்பதற்கு முதலில் ஒருவர் வைத்திருக்க வேண்டும். சுய நலமில்லாத மனிதன் எப்போதும் ஆழ்ந்த யோசனையுடன் ஆழத்தில் நோயுற்றவராக மிகுந்த மனவருத்தமுடையவராக இருக்கிறார். அவன் தன்னுடைய வாழ்க்கையையே நழுவவிட்டவன் (இழந்தவன்).

நினைவில் கொள்ளுங்கள். எப்பொழுதெல்லாம் நீங்கள் உங்கள் வாழ்க்கையை இழந்தீர்களோ அப்போது நீங்கள் கொலை முயற்சி செய்பவராக, தற்கொலை செய்து கொள்பவராகி விடுகிறீர்கள். எப்பொழுதெல்லாம் ஒரு மனிதர் துக்கத்தில் வாழ்கிறாரோ அவர் அழிக்க விரும்புகிறார். துக்கம் அழிவுத் தன்மையுடையது; மகிழ்ச்சி உருவாக்கும் தன்மையுடையது. அங்கே ஒரே ஓர் உருவாக்கும் தன்மையுடையது. அங்கே ஒரே ஓர் உருவாக்கும் தன்மை, அது பரமானந்தமாக, உற்சாகமாக, இன்பமூட்டுவதாக உள்ளது. நீங்கள் இன்பமடைந்தீர்களோ, ஏதாவது உருவாக்க வேண்டுமென்று நீங்கள் நினைக்கிறீர்கள், குழந்தைக்கு ஒரு பொம்மை, ஒரு கவிதை, ஒரு வர்ணப்படம் - ஏதாவது ஒன்று. எப்பொழுதெல்லாம் வாழ்க்கையில் இன்பமடைந்தீர்களானால் அதை எப்படி வெளிப்படுத்துவது? நீங்கள்

ஏதேனும் ஒன்றை உருவாக்குகிறீர்கள். ஆனால் துக்கமடைந்தீர்களானால், எதையாவது நசுக்க, அழிக்க நீங்கள் விரும்புகிறீர்கள். நீங்கள் ஓர் அரசியல்வாதியாக, போர் வீரராக ஆக விரும்புகிறீர்கள். நீங்கள் சில சூழ்நிலைகளை உருவாக்குவதன் மூலம் நீங்கள் அதில் தீங்கிழைப்பவராக ஆக விருமபுகிறீர்கள்.

அதனால்தான் பூமியில் எங்காவது அவ்வப்போது போர் மூளுகிறது. இது ஒரு மிகப் பெரிய வியாதி. எல்லா அரசியல் வாதிகளும் அமைதியைப் பற்றி பேசிக் கொண்டிருக்கின்றனர். அவர்கள் போருக்குத் தயாராகின்றனர்; அவர்கள் அமைதியைப் பற்றி பேசுகின்றனர். உண்மையில் அவர்கள், "நாங்கள் யுத்தத்திற்கு ஏற்பாடு செய்வது அமைதியை பாதுகாப்பதற்கே" என்று சொல்கின்றனர். மிகவும் பகுத்தறிவற்றது. நீங்கள் போருக்கு தயாராகிறீர்கள் என்றால், எப்படி உங்களால் அமைதியைப் பாதுகாக்க முடியும்? அமைதியைக் காக்க ஒருவர் அமைதியைத் தயார்ப்பண்ண வேண்டும்.

அதனாலேதான் உலக முழுவதும் உள்ள புதிய தலைமுறையினர் ஸ்தாபனங்களுக்கு மிகப் பெரிய ஆபத்தாக உள்ளனர். அவர்கள் மகிழ்வாக இருக்க வேண்டும் என்பதில் மட்டும் ஆர்வமாக உள்ளனர், அவர்கள் அன்பில் ஆர்வமாக உள்ளனர், தியானத்தில், இசையில், நடனத்தில் ஆர்வமாக உள்ளனர்... உலக முழுவதிலும் அரசியல்வாதிகள் மிக விழிப்புடன் இருந்து வருகிறார்கள். புதிய தலைமுறையினருக்கு அரசியலில் ஆர்வமில்லை. அது வலதுசாரியோ, இடது சாரியோ.. இல்லை. அவர்கள் ஆர்வமாக இல்லவே இல்லை. அவர்கள் கம்யூனிஸ்ட் இல்லை. அவர்கள் எந்த இடத்தையும் சேர்ந்தவர்கள் அல்லர்.

ஒரு மகிழ்வோடு இருக்கும் மனிதன் தன்னைச் சார்ந்தவனாக இருக்கிறான். எதற்காக அவன் ஒரு சங்கத்தைச் சார்ந்தவனாக இருக்க வேண்டும்? சங்கத்தைச் சார்ந்தவனாய் இருப்பதென்பது சில கூட்டத்தைச் சார்ந்தவனாக ஆவதாகும். ஏனெனில் அவன் அவனிடம் நிலைத்திருக்கவில்லை. அவன் சார்ந்தில்லை - அது அவனுக்கு மிக அதிகமான ஆழமான ஆவல் கொடுக்கிறது. அவன் சார்ந்திருப்பதற்கு ஒரு மாற்றை உருவாக்குகிறான். அவன் ஓர் அரசியல் கட்சியுடன், ஒரு புரட்சிகரமான கட்சியுடன் அல்லது ஏதாவது ஒரு மதத்தின் பகுதியாகி விடுகிறான். இப்போது அவன் சார்ந்திருப்பதாக உணர்கிறான். ஒரு கூட்டம் அங்குள்ளது. அதில் அவன் நிலைத்திருக்கிறான்.

ஒருவர் தன்னில் நிலைத்திருக்க வேண்டும் (வேரூன்றியிருக்க வேண்டும்) ஏனென்றால் அந்த வழியிலிருந்தே ஒருவர் நகர்ந்து ஆழத்தில் கடவுளிடம், பிரபஞ்ச இருப்பிடம் (existence) செல்கிறார். ஒரு கூட்டத்திற்கு உரியவராக இருந்தீர்களானால் ஒரு ஸ்தம்பித்த நிலைக்கு உரியவராகுகிறீர்கள். அங்கிருந்து மேலும் எந்த வளர்ச்சியும் சாத்தியமில்லை. அங்கே முடிவு வந்து விடுகிறது. ஒருபுறம் மட்டும் வழியாக ... வேறு எங்கும் செல்ல முடியாமல்.

ஆனால் அரசியல்வாதிகள் உங்களுடைய தியாகத்தைச் சார்ந்திருக்கிறார்கள். நீங்கள் மகிழ்வாக இருப்பதை விரும்புவதில்லை; உங்களுடைய புன்னகையை, உங்களுடைய சிரிப்பை அவர்கள் விரும்பவில்லை. அவர்கள் நீங்கள் துக்கமாக இருப்பதையே விரும்புகிறார்கள். இவ்வாறாக துக்கத்தில் நீங்கள் அழிப்பவராக, கோபமுள்ளவராக, மூர்க்கராக ஆகி விடுகிறீர்கள். பின்பு நீங்கள் உபயோகிக்கப்படுகின்றீர்கள். அவர்கள் நீங்கள் சுயநலமற்றவராக, தியாகியாக இருக்க வேண்டுமென்று கற்பிக்கிறார்கள். அவர்கள் "உங்கள் வாழ்க்கையைத் தியாகம் பண்ணுங்கள்" என்று கற்பிக்கின்றனர். இது பெரிய, முட்டாள்தனமான விளையாட்டாகக் காணப்படுகிறது.

நான் உங்களுக்குச் சுயநலமில்லாமல் இருங்கள் எனச் சொல்லிக் கொடுக்கப் போவதில்லை. ஏனென்றால், நீங்கள் சுயநலமாக இருக்கும் போது தானாகவே, எந்த முயற்சியும் இல்லாமல் சுயநலமற்றவராகி விடுகிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். நீங்கள் சுயநலமில்லாமல் இருந்தீர்களானால் உங்களை இழந்து விடுகின்றீர்கள், இப்போது நீங்கள் யாருடனும் தொடர்பு வைத்துக் கொள்ள முடியாது - அடிப்படையான தொடர்பு இல்லாமல் போய் விடுகிறது. முதல்படி (நிலை) இழக்கப்பட்டு விட்டது.

உலகத்தை, சமுதாயத்தை, கற்பனைக் கனவுகளை காரல் மார்க்ஸை (Carl Marx) மறந்து விடுங்கள். இவை எல்லாவற்றையும் மறந்து விடுங்கள். நீங்கள் சில வருடங்கள் மட்டும் இங்கிருக்கிறீர்கள். அனுபவியுங்கள், இன்பமுடன், மகிழ்வுடன் நடனத்துடன், அன்புடன் உங்களுடைய அன்பினாலும் நடனத்தினாலும், உங்களுடைய ஆழ்ந்த சுயநலத்தினாலும் ஒரு பொங்கி வழிந்தோடும் சக்தி ஆரம்பமாகிறது. உங்களால் மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ள முடிகிறது.

அன்பு என்று நான் சொல்வது, அதிக சுயநலமான விஷயங்களில் ஒன்று. இன்று ஆழமான சுயநல விஷயம் நீங்கள் விரும்பினால், பின் தியானம், பிரார்த்தனை வருகிறது. இன்றும் அதிக ஆழமான சுயநல விஷயம் வேண்டுமென்றால் பின்பு கடவுள் வருகின்றார். நீங்கள் கடவுளுடன் மற்றவர்கள் மூலம் உறவு கொள்ள முடியாது. அங்கே எந்த இடைநிலை வழியும் இல்லை. நீங்கள் கடவுளுடன் எதிரெதிராக இருக்க வேண்டும், அப்பொழுதே, எந்த இடைநிலையும் இல்லாமல் நீங்கள் மட்டும் உங்களுடைய மிகச்சிறந்த தனிமையில் உங்களுடைய மிக உயர்ந்த அனுபவத்தைச் சந்திப்பீர்கள்.

நான் சுயநலத்தையே கற்பிப்பேன். என்னுடைய சுயநலத்தைப் புரிந்து கொண்டீர்களானால், நீங்கள் எல்லா அழகானவற்றையும் (இனிமையாவகற்றையும்) எல்லா சுயநலமற்றவற்றையும் புரிந்து கொள்வீர்கள்.



**ஒருவன் சுயநலமாக இருப்பினும் தொடர்ந்து மற்றவர்களைப் தெரிந்து கொண்டு இருக்கிறானா இல்லையா?**

நீங்கள் உங்களைப் பற்றி தெரிந்து கொண்டிருந்தால் மற்றவர்களைப்பற்றியும் தெரிந்து கொண்டிருப்பீர்கள். அது எப்படி வேறொரு முறையில் இருக்க முடியும்? நீங்கள் உங்களைப்பற்றி தெரிந்து கொள்ளாவிடில் எப்படி மற்றவர்களைப் பற்றி தெரிந்து கொள்ள முடியும்? தெரிந்த நிலை முதலில் உங்களுள் நிகழ வேண்டும். தீபம் அங்கு முதலில் ஏற்றப்பட வேண்டும். சுடர் உங்களுள் எழ வேண்டும். அதற்கப்புறம் தான் வெளிச்சம் பரவி மற்றவர்களைச் சூழும். நீங்கள் இருளில், தெரிந்த நிலையில் இல்லாமல் வாழும்போது - எப்படி உங்களால் மற்றவர்களைப் பற்றி தெரிந்து கொள்ள முடியும். நீங்கள் சிந்தித்துக் கொண்டே, கனவு கண்டு கொண்டே இருந்தால், நீங்கள் மற்றவர்களைப்பற்றி தெரிந்து கொள்ளவில்லை.

ஒரு கணவன், "நான் என்னுடைய மனைவியையும், அவளுடைய உணர்வுகளைப் பற்றியும் அறிந்தவனாக இருக்கின்றேன்." எனச் சொல்லலாம். சாதாரணமாக முடியாதது, ஏனென்றால் கணவன் தன்னைப்பற்றியே அறிந்து கொள்ளாமல் இருக்கிறான். அவன் ஆழ்ந்த இருளில் உணர்வற்று வாழ்ந்து வருகிறான். அவனுக்கு கோபம்

எங்கிருந்து வருகிறது என்பது தெரியாது, அவனுக்கு பிரபஞ்ச இருப்பு (existence) எங்கிருந்து வருகிறது, பாய்கிறது என்பது தெரியாது. அவன், அவனைப்பற்றி அறிந்த நிலையில் இல்லை. அது உங்களுக்கு மிகவும் அருகில் உள்ள பொருள், நீங்கள் அறிந்திருக்க முடியும் அவன், "நான் என்னுடைய மனைவியை அறிந்து கொண்டுள்ளேன். அவளுடைய உணர்வுகளைப் பற்றியும் அறிந்து கொண்டுள்ளேன்" என்று சொல்லுகின்றான். முட்டாள் தனமானது அவன் தான் அறிந்து கொண்டதாக, சிந்தித்துக்கொண்டு, கனவுகண்டு கொண்டு இருக்கலாம். ஒவ்வொருவரும் தன்னுடைய சொந்தக் கனவுகளால் சூழப்பட்டு வாழ்ந்து வருகின்றனர். கனவுகளுக்குப் பின்னால் ஒருவருடைய சொந்தத் திட்டமிடுதல் (காட்டுதல்) மறைந்துள்ளது. ஒருவர் தொடர்ந்து, "நான் அறிந்து கொண்டிருக்கிறேன்" என எண்ணுகிறார்.

மனைவியைக் கேட்பீர்களானால், அவள், "அவன் என்னைப் பற்றி அறிந்து கொள்ளவே இல்லை" எனச் சொல்கிறாள். மனைவி கணவனைப் பற்றியும் அவனது தேவைகளைப் பற்றியும் அறிந்துள்ளதாக நினைக்கிறாள். அவள் நினைக்கும், உணரும் அந்தத் தேவைகள் அவனுடைய கணவனுடையது அல்ல. அதையே அவள் அவனுடைய தேவைகள் என்று நினைக்கிறாள். முரண்பாடு தெரிகிறது. இருவரும் அறிந்து கொண்டு உள்ளளார்கள், இருவரும் ஒருவர் மற்றொருவருக்காகப் பரிவு கொள்கிறார்கள். இருவரும் ஒருவர் மற்றொருவரிடம் கவனமாக இருக்கின்றனர்.

ஒருவன் முதலில் தன்னுடைய ஆழ்ந்த உள்ளுள்ள தன்னுடைய மூலத்தைப் (inner core of his being) பற்றிய பாடத்தைக் கற்றுக் கொள்ளவில்லையானால், யாரைப் பற்றியும் ஒருவரும் கவனமாக இருக்க முடியாது. முதலில் உங்களைப் பற்றிய கவனத்துடன் இருக்க வேண்டும். அதுவே அருகாமையில் நெருக்கத்தில் இருக்கும் விஷயமாகும். அங்கு அறிந்த நிலையில் இருப்பதற்கு கற்றுக் கொள்ளுங்கள்; பின்பு நீங்கள் மற்றவர்களைப் பற்றி அறிந்து கொள்ளலாம். பின்பு முதல் முறையாக திட்டமிடமாட்டீர்கள். நீங்கள் விளக்கம் சொல்லமாட்டீர்கள்; நீங்கள் நேரடியாகப் பார்ப்பீர்கள். மற்றவர்களை அவன் எப்படி இருக்கிறானோ 'அப்படியே பார்ப்பீர்கள்; நீங்கள் அவன் எப்படி இருக்க வேண்டுமென விருமபுகிறீர்களோ அப்படி அல்ல; அல்லது நீங்கள் நினைப்பது போல அவன் இருக்க வேண்டுமென்று பின் நீங்கள் உண்மை நிலையைப் பார்க்கிறீர்கள்.

கனவுகள் உங்கள் கண்களிலிருந்து விடுபடும்போது, உங்கள் கண்கள் முழுதுமாக கனவுகளாக இல்லாதபோது, அதன்பின் நீங்கள் அறிந்து கொண்டவராகி விடுகிறீர்கள், இல்லையென்றால் உங்கள் கண்கள் இருண்டுள்ளன. அதிக இருள், அதிகப் புகை அங்குள்ளது. நீங்கள் பார்க்கிறீர்கள், ஆனால் திரைக்குப் பின்பிருந்தே பார்க்கிறீர்கள், அந்தத் திரைகள் நீங்கள் பார்க்கும் எல்லாவற்றையும் குதர்க்கமாக அர்த்தம் செய்கிறது. அவை திரித்துக் கூறுகின்றன. அவை பிரதிபலிக்கவில்லை; அவை திட்டமிடுகின்றன. உங்களுடைய கனவுகள் மறையும்போது நீங்கள் விழிப்படைகிறீர்கள். விழிப்புடன் அறிந்த நிலையில் கவனத்துடன் இருக்கிறீர்கள்.

பின்பு உங்கள் கண்கள் ஒரு கேமிராவின் (camera) கண்கள் போல ஆகிவிடுகின்றன. நீங்கள் எது உள்ளதோ அதைப் பார்க்கிறீர்கள், நீங்கள் திட்டமிடுவதில்லை. நீங்கள் உண்மைநிலைக்கு எதுவும் பண்ணுவதில்லை. நீங்கள் உண்மைநிலை தன்னை வெளிப்படுத்துவதற்கு அனுமதிக்கிறீர்கள். உங்கள் கண்கள் எளிமையான, தெளிவான, களங்கமில்லாத விழியாக உள்ளன. அவை தெளிவாகப் பார்க்கின்றன. இப்போது நீங்கள் இருக்கின்ற நிலையில், உங்களால் பார்க்க முடியாது. உங்கள் கண்கள் முன்பே, தவறான அபிப்பிராயங்களுடன், நிரப்பப்பட்டுள்ளன. உங்களால் பார்க்கமுடியாது. உங்கள் கண்கள் காணுவதற்கு போதுமான அளவு காலியாக இல்லை.

உங்களால் எப்படி அடுத்தவர்களைப் பற்றி அறிந்து கொள்ள முடியும்? ஒரு புத்தர் மட்டுமே அறிந்து கொண்டிருக்க முடியும். யார் ஒருவர் தன்னுள் விழிப்படைந்துள்ளாரோ, அவரே அறிந்து கொள்ள முடியும். ஆனால் ஒரு புத்தர் மிகவும் சுயநலமுள்ளவர், ஒரு மகாவீரர் சுயநலமுள்ளவர். ஆனால் அவர்கள் லட்சக்கணக்கானவர்களுக்கு உதவுவார்கள். அவர்கள் லட்சக்கணக்கானவர்களை ஆசீர்வதிப்பவர்களாக ஆகிவிடுகின்றனர். யாரெல்லாம் தேவையுடன், தேடுபவராக உள்ளனரோ, அவர்கள் அவர்களுடைய ஒளியை உபயோகித்துக் கொள்ளலாம். அவர்கள் ஒளியேற்றப்பட்டவர்கள். இதுதான் ஞானமடைதல் என்பதன் அர்த்தமாகும்; அவர்களுடைய சுடர் எரிந்து கொண்டிருக்கிறது. நீங்கள் அதில் பங்கு பெறலாம். நீங்கள் உங்களுடைய சொந்தமான உள்சுடரை அதன் மூலம் ஏற்ற முடியும். நீங்கள் கலந்து கொள்பவராக ஆகலாம்.

அறிந்து கொள்ளும் நிலை உள்ளே (அகத்தில்) கற்றுக் கொள்ளப்பட வேண்டும். நீங்கள் உள்ளே, உங்களுள் விழித்துக்

கொண்டபோது, நீங்கள் முழு உலகத்திற்கும் விழிப்படைந்து உள்ளீர்கள். முழு பிரபஞ்ச இருப்பிற்கும் (existence) விழிப்படைந் துள்ளீர்கள். திடீரென மறைக்கும் பொருள்கள் விழுந்து விடுகின்றன, உங்கள் கண்கள் நிறைக்கப்பட்டு இனி இல்லை... காலியாக, ஏற்றுக் கொள்பவையாக, நிர்வாணமாக உள்ளன. நீங்கள் பார்க்கிறீர்கள். நீங்கள் திட்டமிடுவதில்லை நீங்கள் விளக்கம் சொல்வதில்லை. நீங்கள் திட்டமிடுவதற்கு ஒன்றும் இல்லை. நீங்கள் வெளியாக, உள்ளே ஒன்றுமற்ற நிலையாகி விடுகிறீர்கள்.

நம்பிக்கையற்றிருப்பது என்பது உங்களைப் பற்றியும் நம்பிக்கை இல்லாமல் இருப்பதையும் சேர்த்துக் கொண்டதா? நம்பிக்கை இல்லாமல் வளர்ச்சி எப்படி ஏற்பட முடியும்?

நம்பிக்கை மிகப் பெரிய தடைகளில் ஒன்றாகும், ஏனென்றால் நம்பிக்கையின் மூலம் கனவுகள் உருவாக்கப்படுகின்றன, நம்பிக்கையின் மூலம் எதிர்காலம் உருவாகிறது, நம்பிக்கை மூலம் காலம் உள்ளது. நான் நம்பிக்கையற்றிருப்பது என்று சொல்லும்போது நான் குறிப்பிடுவது இங்கே இப்பொழுதே நீங்கள் நம்பிக்கை கொண்டால், நீங்கு இங்கு இப்பொழுதிலிருந்து தூரத்திற்கு நகர்ந்து விட்டீர்கள்.

நீங்கள் நம்பிக்கையின் மூலம் வாழ்க்கையை ஒத்திப் போடுகிறீர்கள்; நீங்கள் "எல்லாவற்றையும் சரி செய்தபின் நாளை நான் வாழ்வேன்" எனச் சொல்லுகிறீர்கள். எல்லாவற்றையும் நீங்கள் அது எப்படி இருக்க வேண்டுமென நினைக்கிறீர்களோ அதுபோல இருந்தால் உங்களுக்குப் போதுமான செல்வம், அதிகாரம், பணம், கௌரவம் இருக்கும்போது பின்பு நீங்கள் வாழ்வீர்கள். நீங்கள் நாளை அது அங்கு இருக்குமென நம்பிக்கை கொள்கின்றீர்கள். நாளை இல்லையென்றால் நாளை மறுநாள் இந்த வருடம் இல்லையென்றால் பின் அடுத்த வருடம். இந்தப் பிறவியில் இல்லையென்றால் அடுத்த பிறவியில். கிழக்கில் நம்பிக்கை அதன் தாக்கப் பூர்வமான முடிவற்கே நீடிக்கப்பட்டுள்ளது. எதிர்காலத்தில் ஆயிரக்கணக்கான பிறவிகள் உங்களுக்காகக் காத்திருக்கின்றன. இது மனதினுடைய தந்திரமாகும். ஒருமுறை நீங்கள் மனதை நம்பிக்கை கொள்ளும்படி அனுமதித்தால் அவன் உங்களை ஓடும்படி செய்வான்.

வாழ்க்கை இந்த வினாடியில் மட்டுமே. வாழ்க்கைக்கு எந்தக் காலமும் கிடையாது. அதற்கு ஒரே ஒரு காலம் தான். நிகழ்காலம். இறந்த

காலம் ஞாபக சக்தியே. அது பிரபஞ்ச இருப்பின் (existence) பகுதியில்லை. அது கடந்துவிட்டது; அது இனி அங்கில்லை. மனதில் உள்ள பதிவுகளே எடுத்துச் செல்லப்படுகிறது, ஞாபகசக்தியின் கீறல்களே. எதிர்காலம் இல்லை. இது இன்னும் வரவில்லை. இந்த வினாடி மட்டும், இந்தக் குறுகிய வினாடி மட்டும். இந்தச் சிறிய, அணு போன்ற வினாடியே உள்ளது. நீங்கள் வாழ வேண்டுமென்றால், இதில் வாழ வேண்டும். நீங்கள் வாழ்க்கையை இழக்க விரும்பினால் பின்பு நம்பிக்கையில் வாழலாம்.

நான் நம்பிக்கையற்ற நிலை என்று சொல்லும்போது, நீங்கள் என்னைத் தவறாகப் புரிந்து கொள்ளலாம், ஏனெனில் நம்பிக்கையற்ற நிலை என்பது சொல்லும்போது, நீங்கள் சில நம்பிக்கைகள் தோல்வியடையும்போது, நீங்கள் எப்போதும் பொருள் கொள்கிறீர்கள். நான் நம்பிக்கையற்ற நிலை என்ற வார்த்தையை உபயோகிக்கும் போது, நான் சில நம்பிக்கைகள் நிறைவேறவில்லை என்ற அர்த்தத்தில் சொல்லவில்லை. நான் சொல்லுவது எல்லா நம்பிக்கைகளும் நிறைவேறவில்லை என்பதாகும். பின் நீங்கள் உண்மையில் நம்பிக்கையற்றவராக ஆகிவிடுகிறீர்கள். அது ஓர் அழகான வினாடியாகும். அது உற்சாகமற்ற வாழ்க்கை வழியல்ல, நீங்கள் வருத்தத்துடன் இருக்கிறீர்கள் என்பதல்ல.

நீங்கள் பலமுறைகளில் நம்பிக்கையற்ற நிலையை உணர்ந்திருப்பீர்கள் - நீங்கள் அன்பு கொண்ட பெண் நம்பிக்கைத் துரோகம் செய்த போது அல்லது - ஓர் ஆண் நம்பிக்கைத் துரோ்கம் செய்த போது - ஒரு நம்பிக்கை தோல்வியடைந்தது. ஆனால் அங்கே மற்றப் பெண்கள், மற்ற ஆண்கள் உள்ளனர். நம்பிக்கை இருக்க முடியும். அதனால் தேட முடியும். நாடிச் செல்லும். அதனால் புதிய பொய்த் தோற்றங்களை உருவாக்க முடியும். ஒரு பொய்த் தோற்றம் தோல்வியடைந்தாலும், நீங்கள் உண்மையைத் தெரிந்து கொள்பவராக ஆவதில்லை. நீங்கள் ஒரு வழியிலேயே சென்று கொண்டே இருக்கிறீர்கள். அங்கே அதற்கு ஒரு முடிவு வருகிறது. அங்கு இனி ஒன்றுமே இல்லை. ஒரு பாதாளம் உங்களைச் சந்திக்கிறது. எதிர் கொள்கிறது. ஒரு வழியில் தோல்வி ஏற்பட்டு விட்டது, ஆனால் அங்கே லட்சக்கணக்கான வழிகள் உள்ளன. வாழ்க்கை சிக்கலாக சுழன்று, சுழன்று செல்லும் வழியாகும். நீங்கள் மற்ற வழிகளில் செல்லலாம். நீங்கள் உண்மையில் நம்பிக்கையற்றவராக ஆகவில்லை.

ஒரு மனிதன் முழு வாழ்வையும் அதன் மொத்தத்தில் எதிர்கொள்ளும் போது, அங்கு எங்குமே செல்ல முடியாத போது, நம்பிக்கையற்றவனாகி விடுகிறான், கனவு காண்பதற்கு ஒன்றுமில்லை, நம்பிக்கை கொள்வதற்கு ஒன்றுமில்லை. அந்த நம்பிக்கையற்ற நிலையில், அங்கே வருத்தமான நிலை இல்லை. ஒருவர் வாழ்க்கையின் உண்மையை, அது உள்ளது போலவே தெளிவாக அறிந்து கொள்கிறார், வாழ்க்கை தோற்றுவிட்டதாக அல்ல. ஒருவர், "என்னுடைய நம்பிக்கை கொள்ளும் தன்மை தோல்வியடைந்து விட்டது" என்பதை தெளிவாக அறிந்து கொள்கிறார். வாழ்க்கை யாருடைய நம்பிக்கைகளையும் அனுமதிப்பதில்லை. அது யாருடைய நம்பிக்கைகளுடனும் தொடர்வதில்லை. அது யாருடைய கனவுகளையும் நிறைவேற்றுவதில்லை. வாழ்க்கை தோல்வி பெறவே இல்லை. உங்களுடைய நம்பிக்கை கொள்ளும் மனம் தான் தோல்வியடைந்துள்ளது. மனம் செயல்படுவதை நிறுத்தி விட்டது. ஒரு வினாடி நேரத்திற்கு ஒரு பேராபத்து போலத் தோன்றும், எல்லாம் முடிந்துவிட்டதாக ஆனால் நீங்கள் அந்தப் பேராபத்துடன் வாழ்வீர்களானால் உடனடியாக ஒரு புதிய வாழ்க்கை உங்களுள் உதயமாகிறது. புதியது, இளமையானது அந்த வினாடி.

வாழ்க்கை இங்கே - இப்பொழுதிற்குச் சேர்ந்தது. அது எங்கும் நகர்வதில்லை. அதற்கு எந்த உந்துதலும் அதனுள் இல்லை. அது ஒரு வகையில் நிராசையாகும். அது அனுபவிப்பது இல்லை என்பதல்ல - அது மட்டுமே அனுபவிக்கிறது. அங்கே ஆசைகள் இல்லையென்றால் உங்களுடைய முழு சக்தியும் இன்பமாய் விடுகிறது. நீங்கள் மகிழ்ச்சியில் துள்ளுகிறீர்கள். நீங்கள் தொடர்ந்து சென்று கொண்டிருக்கும் கொண்டாட்டத்தில் பங்குபெற ஆரம்பித்து விடுகிறீர்கள். அது ஒரு கிடையறாத தொடர்ச்சியான நிகழ்ச்சியாகும்.

நீங்கள் கனவு கொண்டிருப்பதால் அதை இழந்து விடுகிறீர்கள். நீங்கள் அதனுடைய பகுதியாக நம்பிக்கைகளை உருவாக்கியுள்ளீர்கள். நீங்கள் ஓர் "இடியட்" (idiot) ஆகிவிட்டீர்கள். தனிப்படை நம்பிக்கைகள் ஒருவர் கொண்டிருந்தால் "இடியட்" (idiot) என்பதன் பொருளாகும். யார் ஒருவர் முழுமையுடன் இயங்கவில்லையோ, தனியாக தன்னுடைய வழியில் இயங்குகிறாரோ, தன்னுடைய மனோ சக்தியை முழுமைக்கு எதிராக வைத்துள்ளாரோ - அவர் இடியட் ஆவார். அந்த வார்த்தையின் மூலம் "இடியட்" (idiot) என்பதன் பொருள் தனிப்பட்டது என்பதாகும். நம்பிக்கைகள் தனிப்பட்டவை

வாழ்க்கை பொதுவானது. நம்பிக்கைகள் தனி நபருடையது. பிரபஞ்ச இருப்பு (existence) எந்தத் தனி நபருக்கும் உரியதல்ல. எல்லாத் தனி நபரும் பிரபஞ்ச இருப்பைச் சார்ந்தவர்கள்.

உலகத்திலேயே, உங்களுடைய கனவுகள் தான் மிகவும் தனிப்பட்ட விஷயம் என்பதை நீங்கள் கவனித்துள்ளீர்களா? நீங்கள் உங்கள் காதலியைக் கூட அழைக்க முடியாது. நீங்கள் அங்கு தனிமையில் தான் இருக்க வேண்டும். ஏன் கனவுகள் உண்மையல்ல என்று கருதப்படுகின்றன? ஏனென்றால் அவை தனிப்பட்டவை. நீங்கள் யாரையும் உங்கள் கனவுகளுக்கு சாட்சியாக இருக்குமாறு அழைக்க முடியாது. அது முடியாதது.

நான் எகிப்து நாட்டின் ஒரு பாரோ (Pharaoh) (அரசன்) வைப்பற்றி கேள்விப் பட்டிருக்கிறேன். அவன் கொஞ்சம் திடச் சித்தம் இல்லாதவன், எப்போதும் மன்னர்கள் கொஞ்சம் நியூராடிக் (neurotic) தான். ஒரு நாள் அவன் கனவு கண்டான். அவனுடைய கனவில் அவனுடைய மந்திரிகளில் ஒருவரைப் பார்த்தான். அவன் மிகக் கோபமடைந்தான். அடுத்த நாள் நாடு முழுவதிலும் ஒருவரும் அவனுடைய கனவில் நுழைவதற்கு அனுமதிக்கப்படவில்லை என சட்டம் விதிக்கப்பட்டது. இது அத்து மீறிப் போவதாகும். யாராவது அவனுடைய கனவுகளில் நுழைவதாக, அத்துமீறுவதாக காணப் பட்டால் அவர்கள் உடனடியாகக் சொல்லப்பட்டனர். ஏனென்றால் அவர்கள் அவனுடைய கனவுகளில் நுழைந்ததனால்.

உங்கள் கனவுகள் உங்களுடையதே, ஒருவரும் நுழைய முடியாது. யாராவது நுழைந்தார்களானால் அது நீங்கள் கனவு காண்பதே; அவன் நுழைந்தான் என்பதல்ல. கனவுகள் தனிப்பட்டவை. அதனால் அவை உண்மையல்லாதவை. எந்த விஷயங்கள் ஆனாலும் தனிப்பட்டவை உண்மையற்றவையாகப் போய்விடுகின்றன. உண்மை பொதுவானது. நான் மரங்களைப் பார்க்க முடியும், நீங்களும் கூட மரங்களைப் பார்க்க முடியும், ஆனால் என்னுடைய கனவு - மரங்களை நான் மட்டுமே பார்க்க முடியும். நான் உங்களை வந்து பாருங்கள், ஒரு சாட்சியாய் இருங்கள் என்று கேட்க முடியாது.. அதனால்தான் காலையில் நானே, அது ஒரு கனவு உண்மையல்ல என்பதை உணர்கிறேன்.

உங்கள் நம்பிக்கைகள் உங்கள் நம்பிக்கைகளே. நீங்கள் நம்பிக்கையற்றவராக ஆகும்போது... நம்பிக்கையற்றவராக

ஆகுங்கள் என்று நான் சொல்லும்போது, "எல்லா நம்பிக்கைகளையும் விட்டு விடுங்கள்" என்பதே. நான் என்ன சொல்லுகின்றேன் என்றால், முழு நம்பிக்கையும்; தனிப்பட்ட ஆசைகளையும் உருவாக்காதீர்கள் என்பதே. இல்லாவிடில் நீங்கள் எப்போதும் துக்கத்தில் இருப்பீர்கள், எப்போதும் ஏமாற்றமடைகிறீர்கள் உங்கள் நம்பிக்கைகள் ஒருபோதும் நிறைவேற்றப்படுவதில்லை. ஏனென்றால் முழுமைக்கு அதன் சொந்த நோக்கம் (தனக்கென) உள்ளது. முழுமைக்கு அதற்கென திட்டமிடுதல் உள்ளது. முழுமைக்கு அதற்கென சொந்த விதி உள்ளது. நதி கடலை நோக்கிச் செல்கிறது. நதியின் ஒவ்வொரு துளியும் எங்கோ செல்வது பற்றி கனவு காண்கிறது. அது எப்படி நிறைவேற்றப்படமுடியும்? நதிகடலை அடைய வேண்டும். அந்தத் துணிகள் ஏமாற்றத்தினால் கஷ்டப்படுகின்றன. ஏனென்றால் அவை கனவு கொண்டிருக்கும் இலக்கை அடைய முடியாது.

ஒரு விவேகமுள்ள மனிதன் என்பவன் எந்தத் தனிபட்ட கனவும் காணாமல் இருக்கும் துளியைப்போன்றவன். ஒரு ஞானமடைந்த மனிதன் என்பவன் முழுமையுடன், நதியுடன் செல்பவன். அவன், "எங்கெல்லாம் நீங்கள் செல்கிறீர்களோ, நானும் கூட அங்கு செல்கிறேன், நான் ஏன் வருத்தப்பட வேண்டும்? நதி ஓடுகிறது; அது எங்கோ சென்றுதான் தீரவேண்டும். அது என்னுடைய வருத்தமல்ல" என்று சொல்லுகிறான். துளி அதனுடைய வருத்தத்தை விட்டு விட்டது. அது நம்பிக்கைகள் அற்ற, ஆசைகளற்ற வினாடி ஆகும். அந்த வினாடியில் துளி, நதியாகி விடுகிறது. அந்த வினாடியில அடிப்படையில் துளி கடலாகி விடுகிறது. அந்த வினாடியில் துளி முழுமையாகி விடுகிறது.

"நம்பிக்கையற்றிருப்பது உங்களைப் பற்றி நம்பிக்கையற்றிருப் பதையும் சேர்த்துக் கொள்ளப்பட்டதா?" ஆமாம் நீங்கள் நம்பிக்கை வைத்தால், என்னைச் சுற்றி நம்பிக்கையை நீங்கள் உருவாக்கினால், நீங்கள் உங்கள் கனவுகளை உருவாக்குகிறீர்கள். நான் அவற்றுக்குச் சம்பந்தப்பட்டவன் அல்லன். நான் சம்பந்தப்பட்டவன் அல்லன் என்பதை ஞாபகத்தில் கொள்ள வேண்டும் நீங்கள் உங்கள் கனவுகளை, ஆசைகளை உருவாக்குகிறீர்கள். அதை நீங்களே முடிவு செய்து கொள்ள வேண்டும். நீங்கள் உருவாக்கினீர்களானால், நீங்கள் ஏமாற்ற மடைகிறீர்கள். நீங்கள் உருவாக்க வில்லையென்றால், என்னுடன் மிதக்க ஆரம்பித்து விடுவீர்கள். சரணாகதி என்பதன் பொருள் அதுவே, அதுவே சீடன் என்பதன் பொருளாகும்,

மாஸ்டருடன் மிதப்பது நான், "நம்பிக்கைகளை விட்டு விடுங்கள்" என்று சொல்லும்போது, நீங்கள் விட்டு விடுங்கள், என்னுடன் மிதந்து வாருங்கள். உங்களுக்கு உங்களுடைய தனிப்பட்ட நம்பிக்கைகள் இருந்தால் நீங்கள் ஏமாற்றமடைந்தால், பின்பு நினைவில் கொள்ளுங்கள். என்னைக் குற்றம் சொல்ல வேண்டாம். நான் பொறுப்பாளி அல்லன்.

இது மிகவும் சுலபமாகக் காணப்படுகிறது. நீங்கள் ஏமாற்றமடைந்த உலகத்திலிருந்து நம்பிக்கையோடு வருகிறீர்கள், பின்பு என்னைச் சுற்றி நம்பிக்கை கொள்ள ஆரம்பிக்கிறீர்கள். என்னைச் சுற்றி ஆவல் கொள்ள, கனவு காண ஆரம்பிக்கிறீர்கள், நான் நீங்கள் மறுபடியும் நம்பிக்கை கொள்ள காரணமாகி விடுகின்றேன். பின்பு நீங்கள் அதே ஆசைகளை ஆவல் கொள்ள ஆரம்பித்து விடுகிறீர்கள் - இப்போது என்னுடைய உதவியுடன் இல்லை, நான் அந்த வழியில் உதவ மாட்டேன். நீங்கள் ஆசையற்றவராக ஆக விரும்பினால், எல்லா நம்பிக்கைகளையும் விட்டுவிட விரும்பினால், உங்களை உங்களது அகங்காரத்தை விட்டுவிட விரும்பினால் மட்டுமே நான் உங்களுக்கு உதவி புரிவேன். அந்த ஒரு வழியில் மட்டுமே நான் உதவமுடியும். நான் இங்கே இருப்பது யாருடைய ஆசைகளையும், நம்பிக்கை களையும் நிறைவேற்றுவதற்கல்ல. ஏமாற்றம் எடுத்துக் கொள்ளும் முன்பு அவற்றை விட்டுவிடுங்கள். இல்லையென்றால், தேவை யில்லாமல் நீங்கள் என்னிடம் கோபம் கொள்வீர்கள். அதைப்பற்றி தொடர்ந்து விழிப்புடன் இருங்கள். இல்லையென்றால் உங்களுடைய நேரத்தை நான் வீணாக்கி விட்டதாக, நான் உங்களுடைய சக்தியை அழித்து விட்டதாக நினைக்கலாம். நீங்கள் உங்கள் சொந்தக் குறிக்கோளை அடையவில்லை என்றால், நீங்கள் ஒருபோதும் என்னை மன்னிக்க முடியாது. நான் அதற்குச் சம்பந்தப்பபட்டவன் அல்லன்.

நீங்கள் என்னுடன் மிதக்கத் தயாரானால்... நான் முழுமையுடன் மிதந்து கொண்டிருக்கிறேன். நீங்கள் என்னுடன் மிதக்கத் தயாரானால், நீங்கள் எப்படி முழுமையுடன் மிதப்பது என்ற வழியை கற்றுக் கொள்கிறீர்கள். பின்பு நீங்கள் என்னை மறந்து விட முடியும். முடிவில் ஒரு மாஸ்டரையும் விட்டு விட வேண்டும். ஒரு மாஸ்டர் அதிகபக்ஷம் ஒரு கதவாக இருக்க முடியும். அவர் முடிவல்ல (குறிக்கோள்) அவர் மூலமாக கடந்து செல்லலாம், நீங்கள் மன்னித்து மறந்து விடலாம்.

நீங்கள் முழுமையுடன் செல்லுங்கள். ஒரு மாஸ்டரின் பக்கத்தில், மாஸ்டரின் முன்னிலையில் நீங்கள் முழுமையுடன் மிதப்பதன் லாகவத்தைக் கற்றுக் கொள்கிறீர்கள்.

ஆமாம் நானும் சேர்த்துக் கொள்ளப் படவேண்டியவன் தான். நான் உங்களுக்கு நம்பிக்கையற்ற நிலையை கற்றுக் கொடுக்கும் போது நானும் அதனுடன் சேர்த்துக் கொள்ளப்பட்டவனே. என்னை பற்றி நம்பிக்கை கொள்ளாதீர்கள், என்னைச் சுற்றாதீர்கள், நான் ஒருபோதும் உங்களுடைய தனிப்பட்ட கனவுகளுக்கு சம்பந்தப்பட்டவன் அல்லன். உங்களுடைய இடியோடிகிஸ் (idiotikis).

நம்பிக்கை இல்லாமல் எப்படி வளர்ச்சி ஏற்பட முடியும்? நம்பிக்கை இல்லாமலேயே வளர்ச்சி ஏற்பட முடியும். நீங்கள் வளர்ச்சியடையவில்லை, ஏனென்றால் நீங்கள் நம்பிக்கையோடு இருந்து கொண்டு இருக்கிறீர்கள். நீங்கள் குழந்தைகளாக பின்தங்கி விட்டீர்கள், குழந்தைத்தனமாக. ஒரு குழந்தை கனவு காண அனுமதிக்கப்படுகிறது - அவன் அறியாமையில் இருக்கிறான். நம்பிக்கை கொள்வதற்கு, எதிர்காலத்தை உருவாக்குவதற்கு. அவன் முட்டாள்தனத்துடன் இருக்கிறான். முதிர்ச்சியடைதல் நிகழும்போது கனவுகள் விட்டுவிடப்பட வேண்டும் அல்லது கனவுகளை நீங்கள் விட்டு விடுங்கள். முதிர்ச்சியடைதல் நிகழும். முதிர்ச்சியடைதல் என்றால் என்ன? முதிர்ச்சியடைதல் என்பது உண்மையைப் பார்ப்பது. இச்சைகளை நிறைவேற்றுவதற்காக வாழாதீர்கள்.

மதப்பற்றுள்ளவர்கள், மதப்பற்றுள்ளவர்கள் என்று சொல்லக் கூடிய மக்கள் கனவுகளில் வாழ்கின்றனர்; அவர்கள் தங்களுக்குச் சொர்க்கம், நரகம் மற்றவர்களுக்கென்றும் எண்ணுகின்றனர். கனவுகள்... நல்ல கனவுகள் அவர்களுக்கு, தீய கனவுகள் மற்றவருக்கு அவர்களும் கூட குழந்தைத்தனமாக உள்ளனர்.

நம்பிக்கைகள் இல்லாதபோது மட்டுமே. வளர்ச்சியடைய முடியும். ஏன்? ஏனென்றால் நம்பிக்கைகளில் செல்லும் அதே சக்தி மாற்றமடைய வேண்டும். அதே சக்தி வளர்சச்சிக்காக விடுவிக்க ப்படவேண்டும். அதனால்தான் எல்லா புத்தர்களும், "ஆசைப்படாதே" எனச் சொல்கின்றனர். அவர்கள் ஆசைக்குப் புறம்பாக வளர்ச்சிக்கே சக்தி விடுவிக்கப்பட வேண்டும், ஆசைகளிலிருந்து சுதந்திரமாக்கப் பட வேண்டும். அதன் பின்தான் உள்ளே வளர்ச்சி ஏற்பட முடியும் என்கின்றனர்.

வளர்ச்சி நிகழ்காலத்தில், ஆசைப்படுவது எதிர்காலத்தில் - அவை சந்திப்பதில்லை. நீங்கள் இங்கு - இப்பொழுதில் வளர வேண்டும், நாளை ஒரு போதும் இல்லை. மரங்கள் இப்பொழுதில் வளருகின்றன, நீங்கள் நாளை வளர வேண்டுமென நினைக்கிறீர்கள். வளர்ச்சி எப்போதும் இங்கு இப்பொழுதே. இந்த வினாடியிலேயே வளர்ச்சி நிகழ்கிறது. இந்த வினாடியில் நடைபெறவில்லையென்றால் எப்படி அடுத்த வினாடியில் நடைபெற முடியும்? எங்கிருந்து அது வரும்? ஆகாயத்திலிருந்தா? இந்த வினாடி அடுத்ததற்கு அஸ்திவாரமாகிறது. இன்று நாளைக்கு அஸ்திவாரமாகிறது. இந்தப் பிறவி அடுத்த பிறவிக்கு அஸ்திவாரமாகிறது. வளர்ச்சி இந்த வினாடியில் நிகழ்கிறதென்றால் அடுத்த வினாடி அதை எடுத்துக் கொள்கிறது. நீங்கள் அடுத்த வினாடியை, அந்த இடத்திலிருந்து, அந்தப் பகுதியிலிருந்து, அந்த மனோ நிலையிலிருந்து, அந்த வெளியில் (ஆன்மிக நிலையில்) இருந்து, இந்த வினாடி விட்டுச் சென்ற இடத்திலிருந்து தொடங்குகின்றீர்கள். அதுவே வளர்ச்சியடைவதற்கான ஒரே வழியாகும். இந்த வினாடியே வளர்ச்சியடைவதற்கான ஒரே வினாடியாகும்.

உலகம் முழுவதிலும் கவனித்திருக்கிறீர்களா - தாவரங்கள், பறவைகள், மிருகங்கள், மலைகள் - இந்த வினாடி, ஒரே ஒரு வினாடிதான் உள்ளது; அவை வளருகின்றனவா? மனிதன் மட்டுமே எதிர்காலத்தைப்பற்றி எண்ணுகின்றான், அந்த முறையில் வளர்ச்சி தடைப்படுகிறது. எவ்வளவு அதிகம் எதிர்காலத்தைப்பற்றி எண்ணுகிறீர்களோ அவ்வளவு குறைவாக வளர்ச்சி ஏற்படுகிறது. இந்த வினாடி நிகழும் உண்மையுடன், வளர்ச்சி இணைந்து செல்கிறது. அங்கே வேறோர் உண்மை இல்லை.

நம்பிக்கை இல்லாமல் வளர்ச்சி எப்படி ஏற்பட முடியும்? நம்பிக்கை இல்லாமல் மட்டும்தான் வளர்ச்சியடைய முடியும்.

உங்களுடைய பிரச்சினையைப் புரிந்து கொண்டுள்ளேன். நீங்கள், "நாங்கள் நம்பிக்கை கொள்ளவில்லையென்றால், பின் வளர்ச்சியடைதலைப் பற்றியும் கூட நாங்கள் நம்பிக்கை கொள்ள மாட்டோம். வளர்ச்சியடைதல், நாங்கள் நம்பிக்கை கொள்ளாமல், ஆசைப்படாமல் எப்படி நிகழும்?" என்று சொல்கிறீர்கள், வளர்ச்சி அடைவதற்கு உங்கள் நம்பிக்கை கொள்ளுதல், ஆசை கொள்ளுதல் தேவையில்லை. வளர்ச்சியடைவதற்கு புரிந்து கொள்ளுதல் தேவை.

வளர்ச்சியடைவதற்கு உங்கள் தெரிந்து கொள்ளுதல் தேவை. தெரிந்து கொள்ளும் நிலை போதுமானது. நீங்கள் இந்த வினாடியில் ஏதாவது நடைபெற்றாலும் தெரிந்து கொள்பவராக இருந்தால், அந்தத் தெரிந்து கொள்ளும் நிலை சூரியனாகி விடுகிறது. உங்கள் இருப்புத் தன்மை (being) என்ற மரம் வளர்ச்சியடைகிறது. அந்தத் தெரிந்து கொள்ளும் நிலை தண்ணீர் ஆகிறது, மழையாகிறது. உங்கள் இருப்புத்தன்மை (being) என்ற மரம் வளர்கிறது. அந்தத் தெரிந்த நிலை உணவாக, ஊட்டச்சத்தாக ஆகிவிடுகிறது. இந்தத் தெரிந்த நிலை வளர்ச்சிக்குத் தேவையான எல்லாமுமாய் ஆகிறது. ஒரு மனிதன் தெரிந்து கொள்ளும் நிலையினால் வளர்ச்சியடைகிறானே அன்றி நம்பிக்கைகளால் அல்ல.



**நீங்கள் மக்களிடம் செயல்புரியவில்லை (work) எனச் சொல்கிறீர்கள் அப்படியானால் சீடர்களை வைத்துக் கொள்வதன் அர்த்தம் என்ன?**

ஒரு மாஸ்டர் ஒரு கிரியா ஊக்கியாவார். அவர் செயல்படுவதில்லை, ஆனால் செயல்படுவது என்பது அவர் மூலம் நடைபெறுகிறது, அவர் செயல்புரிபவர் அல்லர். ஆனால் சூழ்நிலை எங்குள்ளதோ அங்கு விஷயங்கள் நடைபெறுகின்றன. சூரியன் உதயமாகி லட்சக்கணக்கான மரங்களில் செயல் புரிகின்றன என்று நினைக்கிறீர்களா? -- ஒவ்வொரு மலரிடம் வந்து அது மலரும்படி வற்புறுத்துகின்றதா? ஒவ்வொரு வேரிடமும் வந்து ஊட்டமளிக்கிறதா? இல்லை சூரியன் தெரிந்து கொள்வது கூட இல்லை, ஆனால் மரங்கள் வளர்க்கின்றன, அரும்புகள் மலருகின்றன, மலர்கள் தங்கள் சுகந்தத்தைக் வீசுகின்றன, பறவைகள் கீதமிசைக்கின்றன- முழு உலகமுமே விழித்துக் கொள்கிறது. சூரியன் எப்படி இயங்குகிறது? சூரியன் ஒரு செயல்புரிபவரா?

நான் ஒரு மிகப் பழைய கதை ஒன்று கேட்டிருக்கிறேன். ஒரு சமயம் இருள் (இருட்டு) கடவுளிடம் சென்று, "போதும், போதும் நான் எனக்குத் தெரிந்து எந்தக் குற்றமும் செய்யவில்லை - ஆனால் ஏன் உங்கள் சூரியன் என்னைத் துரத்திக் கொண்டு இருக்கிறான்? தொடர்ந்து ஒவ்வொரு நாளும், லட்சக்கணக்கான ஆண்டுகள் தொடர்ந்து நடந்து கொண்டிருக்கிறது. நான் முறையிடுவதற்கு புகார்

செய்து கொள்வதற்கு) வந்துள்ளேன். நான் சூரியனுக்கு எந்தத் தவறும் பண்ணவில்லை. அவன் ஏன் எனக்கு அவ்வளவு எதிராக உள்ளான்?

கடவுள்கூட ஒப்புக் கொள்ள வேண்டியதாயிற்று, "இது உண்மை. ஏன் அவன் உனக்குப் பின்னால் இருக்க வேண்டும்?" சூரியன் அழைக்கப்பட்டான், கடவுள், "ஏன் நீ இருளிடம் அவ்வளவு எதிராக உள்ளாய்? என்ன செய்வதற்காக அவளைத் துரத்திக் கொண்டிருக் கிறாய்?" என்று விசாரணை பண்ணினார்.

சூரியன், "நான் இருளைப்பற்றி ஒரு போதும் கேள்விப்பட்ட தில்லை. நீங்கள் என்ன பொருளில் சொல்கிறீர்கள்? நான் ஒரு போதும் அவளைச் சந்தித்ததில்லை. நான் அவளை அறிந்தது கூட இல்லை! துரத்துதல் என்பது கேள்விக்கு அப்பாற்பட்டது. நான் பழகியது கூட இல்லை. ஒருவருமே எனக்கு அறிமுகம் கூட செய்து வைக்கவில்லை. தயவு செய்து எனக்கு முன்னால் அவளைக் கூப்பிடுங்கள். இருள் என்ற இந்த நபர் யார் என்று பார்க்கிறேன். பின்பு ஞாபகத்தில் கொண்டு அவளைத் துரத்தவில்லை" என்று சொல்லியது.

சூரியனுக்கு முன்னால் இருளைக் கொண்டு வருவதற்கு சர்வ வல்லமையுள்ள கடவுளால் கூட அதற்கு ஒன்றும் பண்ண முடியவில்லை என்று சொல்லப்படுகிறது, அதனால் வழக்கு பூர்த்தியடையாமல் பைஃலில் (file) இருக்கிறது. சூரியனும் இருளும் எதிரெதிராக நீதிமன்றத்தில் சந்தித்துக் கொள்வதற்கு ஒரு வழி காண்பதற்கு கடவுள் ஆழ்ந்து யோசனை செய்து கொண்டிருக்கிறார். ஆனால் அவர் ஒரு வழியும் கண்டுபிடிப்பதாகத் தெரியவில்லை. ஏனென்றால் சூரியன் அங்கிருந்தால், இருள் அங்கே இருப்பதில்லை. அது சூரியன் விரட்டுகிறார் அல்லது ஏதாவது செய்கிறார் என்பதல்ல; சூரியனது முன்னிலையே,

ஒரு மாஸ்டர் ஒரு கிரியா ஊக்கிப் பொருளாவார். இந்த வார்த்தை கேட்லிடிக் (catalytic) ஆழமாக புரிந்து கொள்ளப்பட வேண்டியதாகும். விஞ்ஞானத்தில் கிரியா ஊக்கிப் பொருள் என்பது, சில மாற்றங்களுக்கு, இரசாயன மாற்றங்களுக்கு முழுதுமாகத் தேவைப்படுகின்ற பொருள், ஆனால் அதன் முன்னிலை (presence) தேவைப்படுகிறது. உதாரணமாக, ஆக்ஸிஜன், ஹைடிரஜன் சந்திக்கும் போது தண்ணீர் உருவாகிறது, ஆனால் மின்சாரம் கிரியா ஊக்கிப் பொருளாகத் தேவைப்படுகிறது. மின்சாரம் இல்லை என்றால் பின் ஹைடிரஜனும், ஆக்ஸிஜனும் சந்திப்பதில்லை; மின்சாரம் எந்தப் பாத்திரத்திலும்

நடிப்பதில்லை - அது எந்த வழியிலும், புதுக்கலப்பிலும் நுழைவ தில்லை. அது அப்படியே அங்கு தொடர்ந்து இருந்து வருகிறது. ஒரு கிரியா ஊக்கிப் பொருள் என்பது விஞ்ஞான சம்பந்தமான வார்த்தையாகும். ஆனால் அழகானது.

ஒரு மாஸ்டர் எதுவுமே செய்ய வேண்டியது இல்லை; அவர் செயல்புரிபவர் அல்லர்; அவருடைய முன்னிலை மட்டுமே - நீங்கள் அவருடைய முன்னிலையை அனுமதித்தால், அது சீடனைப் பொறுத்ததே. நீங்கள் அனுமதித்தது, நீங்கள் முழுதுமாக உங்களை விட்டு, நீங்கள் ஏற்றுக் கொள்பவராக, முன்னிலை செயல் படுவதற்கு எந்தத் தடையும் இனி உருவாக்காமல் இருப்பது, சீடனாக இருப்பதாகும். முன்னிலையே செயல்படும்... ஏதோ ஒன்று நிகழ ஆரம்பிக்கிறது. சீடர் அனுமதித்தால் ஏதோ ஒன்று நிகழ ஆரம்பிக்கிறது.

சீடர் மாஸ்டரிடத்தில் நன்றி உணர்வுடன் இருக்கிறார். ஏனென்றால் அவர் இல்லாமல் அது ஏறக்குறைய முடியாதது, ஆனால் மாஸ்டர் எப்போதும் தான் எதுவும் செய்யவில்லை என்பதை அறிவார். ஆகையால் மாஸ்டரிடம் சென்று, "நீங்கள் நிறையப் பண்ணியுள்ளீர்கள்" (செய்துள்ளீர்கள்) என்று நீங்கள் சொல்லும்போது, அவர், "அது கடவுளுடைய கிருபை, நான் எதுவும் செய்யவில்லை" என்பார். மாஸ்டர் ஒருவர், "நான் ஏதோ ஒன்று செய்தேன்" என்று சொல்லுவாரானால், அவர் மாஸ்டர் இல்லவே இல்லை, ஏனென்றால் "நான்" அவர் ஒரு மாஸ்டர் இல்லை என்பதைக் காண்பிக்கிறது. அவர் உங்களுக்கு ஒரு கிரியா ஊக்கியாக இருக்க முடியாது. அவர் நான் செய்பவன் என நினைக்கிறார்; ஒரு செய்பவர் ஒரு கிரியா ஊக்கிப் பொருளாக முடியாது.

ஒரு மாஸ்டர் ஒரு முன்னிலை. ஒரு சூழ்ந்து கொள்ளும் முன்னிலை... ஒரு மேகம் உங்களைச் சூழ்ந்திருப்பது போல. நீங்கள் அவரை அனுமதித்தீர்களானால், அவர் உங்களுடைய உள்ளாழ்ந்த மூலத்தில் (deepest core of your being) நுழைந்து விடுவார். நீங்கள் அனுமதித்தால் அது நடைபெறும். அந்த வினாடியில் சீடன் அனுமதித்து, மாஸ்டர் அங்கிருந்தால் ஓர் இரசாயன மாற்றம், அதை இரசவாதம், மாறுதல் என்று அழைக்கலாம். மாஸ்டர் மறைந்தது போலவே சீடரும் மறைந்து விடுகிறார். அங்கு அகங்காரம் இனிமேல் இல்லை. சீடரும் எதுவும் செய்யாதவராகி விடுகிறார். இப்போது அவர்

மற்றவர்களுக்கு ஒரு முன்னிலையாக செயல்பட முடியும். அவர் ஒரு மாஸ்டராக முடியும்.

புத்தரின் சீடர்களில் ஒருவரான சாரிபுட்டா (Sariputta) ஒரு நாள் புத்தரினுள் நுழைந்ததோடு, புத்தரையும் தன்னுள் நுழைய அனுமதித்தார். அவர் ஞானமடைந்தவர் ஆனார். உடனே புத்தர், "சாரிபுட்டா, இப்போது என்னைச் சுற்றிக் கொண்டிருக்க வேண்டாம். இப்போது போ. நாட்டின் தொலை தூர மூலைகளுக்குச் செல். அநேக மக்கள் தாகத்துடன் உள்ளனர். இப்போது அவர்களுடைய தாகத்தை தணிப்பதற்கு உன்னிடம் தண்ணீர் உள்ளது" என்று சொன்னார். சாரிபுட்டா சுற்றிலும் பார்த்தார். என்ன நடந்தது? அவர், "என்ன பேசுகின்றீர்கள்? எங்குமே என்னை அனுப்பாதீர்கள்" என்றார். புத்தர், "உனக்கு என்ன நடந்தது என்பது தெரியவில்லை. இப்போது உனக்கு என்னுடைய முன்னிலை தேவையில்லை. இப்போது நீ மற்றவர் களுக்கு ஒரு முன்னிலை ஆகலாம். அது நிகழ்ந்தது. நான் அதைச் செய்யவுமில்லை, நீ அதைச் செய்யவுமில்லை, அதுவே நடந்தது" என்றார்.

சீடர் அதிகமாகச் செய்பவராக (வினையாற்றுபவராக) இருந்தால், அது நிகழாது. ஒரு மாஸ்டர் அதிகமாகச் செயல் செய்பவராக இருந்தால் அவர் மாஸ்டரே அல்லர். சீடர் மலருவதற்கு தயாராக இருந்தால், மாஸ்டர் ஒரு மாஸ்டராக இருந்தால் – அது நிகழும். அது கிருபையாகும். அது யாருடைய செயலும் இல்லாமலேயே நிகழ்கிறது. அதனால் தான் இந்தியாவில் நாம் அதைப் பிரசாதம், கிருபை என்று அழைக்கிறோம். திடீரென கடவுள் இருப்பவராக ஆகிறார், திடீரென கடவுள் செயல்படுகிறார்.

அதனால் தான் நான் மக்கள் மேல் செயல்படுவதில்லை, ஆனால் சீடர்களை ஏற்றுக் கொள்கிறேன்.



**மனிதர்கள் நன்றாக இருப்பதற்கு எப்போதும் ஒரு கருப்பொருள் எதிர்பார்க்கிறார்கள். நாங்கள் எல்லாம் உங்களுடன் நன்றாக உள்ளோம். நாங்கள் ஒரு கருப்பையை கண்டு கொண்டுள்ளோமா?**

ஒரு மாஸ்டர் உறுதியாக ஒரு கருப்பையைத் தவிர வேறில்லை. அவர் மூலம் நீங்கள் திரும்பவும் பிறக்கிறீர்கள். நீங்கள் அவருள்,

அவருடன் மரணமடைகிறீர்கள். மாஸ்டர் சிலுவையும், உயிர்த்தெழுதலும் ஆகும். ஆகவே இயேசுவின் கதையின் பொருளாகும். அவருள் நீங்கள் மரித்து, அவர் மூலம் நீங்கள் திரும்பவும் பிறக்கிறீர்கள். மாஸ்டர் ஒரு கருப்பை ஆவார்.

ஒன்று தாயினுடைய கருப்பை, மற்றொன்று மாஸ்டருடைய கருப்பையாகும். தாய் உலகத்தினுள் அனுப்புகிறாள், மாஸ்டர் அதைக்கடந்து அனுப்புகிறார். மாஸ்டர் ஒரு தாயாவார்.

நீங்கள் எப்பொழுதும் ஒரு கை துடைக்கும் சிறுதுண்டை (napkin) அதற்கு அங்கு எந்த உபயோகமும் இல்லையென்றாலும் ஏன் உங்களுடன் எடுத்துச் செல்கிறீர்கள்?

நான் என்னுடைய கைதுடைக்கும் துண்டைப் போல உபயோகம் 'இல்லாதவன் என்பதற்கு அது ஓர் அடையாளமாகும். நான் உபயோகத்தைப் பற்றி நம்புவதில்லை. உபயோகம் உலகைச் சார்ந்தது; கடைத்தெருவிற்கு உபயோகமற்ற விஷயங்களையே நான் நம்புகின்றேன். ஒரு மலர், ஒரு மலரினுடைய உபயோகம் என்ன? என்ன உபயோகம்?அது முழுதுமாக உபயோகமற்றது; ஆனாலும் அழகானது, முழுதும் அழகுள்ளது.

எனக்கு வாழ்க்கை நோக்கமற்றது; அதற்கு எந்த நோக்கமும் இல்லை. அங்கு நோக்கம் இருந்திருக்குமானால், வாழ்க்கை அழகாக இருந்திருக்க முடியாது. நோக்கம் எப்பொழுதும் அழகற்ற தன்மையையே (அவலட்சணத்தையே) உருவாக்குகிறது. நோக்கம் உங்களுக்கு பொருள்களைக் கொடுக்கிறது, பரவசத்தை அல்ல. நோக்கம் தொழிற்சாலைகளைக் கொடுக்கிறது ஆலயங்களை அல்ல. வாழ்க்கை ஒரு தொழிற்சாலை அல்ல; அது ஓர் ஆலயம். ஓர் ஆலயத்தின் உபயோகம் என்ன?

கிழக்கில் ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒரு கோயில் இருந்தது, குறைந்த பட்சம் ஒரு கோயிலாவது மிகமிக ஏழ்மையான கிராமத்திலும்கூட இருந்தது. மேற்கத்தியர் முதன் முறையாக கிழக்கில் வந்தபோது அவர்களுக்கு இந்தக் காட்சியை நம்ப முடியவில்லை, ஏனென்றால் கிராமங்கள் மிகவும் ஏழ்மையாக இருந்தன. அவர்களுக்கு சரியான வீடுகள் இல்லை, குடிசைகள் மட்டுமே, பெயருக்கு வீடுகள் என்று நீங்கள் அழைக்கலாம்; ஆனால் அவர்களுக்கு அவர்களுடைய ஊரில் அழகான ஒரு கோயில் இருந்தது. அவர்களுடைய வீடுகள் கற்சுவர்கள் கொண்டிருக்கவில்லை, மூங்கில் மட்டுமே, ஆனால்

அவர்களுடைய கடவுளுக்கு அழகான பளிங்கினால் ஆன சுவர்கள், தரைகள் இருந்தன. சிறிய கோயில் ஆனால் அழகானது. அவர்களால் நம்ப முடியவில்லை – நீங்கள் அவ்வளவு ஏழ்மையில் இருக்கும் போது அவ்வளவு அழகுடைய ஒரு கோயிலை செய்வதில் என்ன உபயோகம் உள்ளது?

கிழக்கிலே நாம் எப்பொழுதும் உபயோகமற்ற தன்மையில் நம்பிக்கை கொண்டுள்ளோம். ஒருவர் இல்லத்தில் வாழ முடியும். அது உபயோகமானது. கடவுள் அங்கு வாழ்ந்து கொண்டிருக்கவில்லை. அவர் கோயில் இல்லாமலேயே வாழ முடியும். கோயில் இல்லாமல் இருந்த போதிலும், உலகத்தில் எதுவுமே இல்லாமல் போவதில்லை. உலகம் கோயில்களால் அழகு படுத்தப்படவில்லை. அது ஒரு தொழிற்சாலையால், ஒரு மருத்துவமனையால், ஒரு பள்ளிக்கூடத்தால் அழகு படுத்தப்பட்டுள்ளது, கோயிலால் அல்ல. ஒரு கோயில் சாதாரணமாக உபயோகமற்றது. கம்யூனிஸ்ட்டுகள் தங்களின் கீழ் ரஷ்யாவை எடுத்துக் கொண்ட போது, அவர்கள் எல்லாக் கோயில்களையும், எல்லா சர்சுகளையும் அழித்து விட்டனர். அவர்கள் அவற்றை தொழிற்சாலைகளாக, பள்ளிக் கூடங்களாக மருத்துவ மனைகளாக, அது, இது என்று மாற்றியமைத்தனர். ஏனெனில் ஒரு கம்யூனிஸ்ட் உபயோகத்தில் நம்பிக்கை வைத்துள்ளார். அவன் மலரை நம்புவதில்லை. அவன் நட்சத்திரங்களை நம்புவதில்லை. அவன் கவிதைகளை நம்புவதில்லை. அவன் உரைநடை, தர்க்கப்பூர்வமான ஒரு முறையை நம்புகிறான்.

நான் கவிதையை நம்புகின்றேன். நான் தர்க்கத்தைப்பற்றி ஒரு சிறிதும் தொந்தரவு கொள்வதில்லை; நான் முழுதுமே தர்க்கப்பூர்வமற்றவன். நான் வாழ்க்கையினுடைய அழகை தர்க்கப்பூர்வமற்றே, நியாயப் பூர்வமற்றே தெரிந்துள்ளேன். இதயத்தின் மூலம் வாழ்க்கை என்ற கோயிலைப் பார்த்துள்ளேன். நீங்கள் தொழிற்சாலைகள் மூலம் கடவுளைத் தேடினீர்களானால் ஒருபோதும் கண்டு கொள்ள மாட்டீர்கள் என நான் உங்களுக்குச் சொல்கிறேன். நீங்கள் மருத்துவமனைகளில், பள்ளிக் கூடங்களில் கடவுளைத் தேடிக்கொண்டிருந்தீர்களானால் நீங்கள் அவரை எப்போதுமே இழந்து விடுவீர்கள், ஏனென்றால் கடவுள் ஒரு நோக்கம் அல்ல. இந்தியாவில், இந்த உலகம் அவருடைய படைப்பு என்று நாம் சொல்லுவது கூட இல்லை = நாம் அவருடைய லீலை, விளையாட்டு என்று அழைக்கிறோம். விளையாட்டு நோக்கமற்றது; அது விளையாட்டுக்

கூட இல்லை. அவர் தன்னுடனேயே கண்ணாமூச்சி விளையாட்டு (hide and seek) விளையாடிக் கொண்டிருக்கிறார். எந்த நோக்கமும் அடைய வேண்டியது இல்லாமல், அது முற்றிலும் இன்பத்திற்காக, அதன் மதிப்பு உண்மையானதல்ல. மதிப்பு முடிவிலேயே இல்லை; மதிப்பு உங்களிடமே உள்ளது.

நீங்கள் கேட்டது சரியே. நான் ஏன் எப்போதும் ஒரு கைதுடைக்கும் சிறு துண்டை எடுத்து வருகிறேன்? முழுதும் நோக்கமற்றது. எனக்கே ஏன் என்று தெரியாது. ஆனால் அதை நான் எடுத்து வருகின்றேன், அது ஓர் அடையாளம்... தர்க்கப்பூர்வமற்றது.

O

**நான் முழுதும் உபயோகமற்றவன் ஆகிவிட்டேன். இப்போது நான் என்னுடைய பொருளாதார சூழ்நிலை பற்றி என்ன செய்வது? நான் மற்றவர்களுடைய செலவில் வாழ்வதா?**

உண்மையில் நீங்கள் முழுதும் உபயோகமற்றவராகி விட்டீர்களானால் நீங்கள் அடைந்து விட்டீர்கள்; இப்போது அங்கே அடைவதற்கு ஒன்றும் இல்லை. நீங்கள் உண்மையில் முழுதும் உபயோகமற்றவராகி விட்டால், உங்களுடைய பொருளாதார சூழ்நிலை குறித்து நீங்கள் தொந்தரவு கொள்ள மாட்டீர்கள். எப்பொழுதெல்லாம் யாராவது முழுதுமாக உபயோகமற்றவராகி விட்டால், முழுமை பொறுப்பேற்றுக் கொள்கிறது. ஆயினும் உங்கள் மனதில் உபயோகமான உலகத்தின் ஏதோ ஒன்று ஒட்டிக்கொண்டிருக்கிறது. ஆகையால் இந்தக் கேள்வி எழுகிறது. நீங்கள் உண்மையில் முழுதும் உபயோகமற்றவராகி விட்டீர்களானால், பின்பு அதைப் பற்றி கவலை கொள்ள மாட்டீர்கள்; அடுத்த வினாடியில் நீங்கள் இருப்பீர்களா அல்லது இல்லையா என்பது ஒரு கவலையாக உங்களுக்கு இராது; நீங்கள் உண்மையில் முழுதுமாக உபயோகமற்றவராகி விட்டால்

எதற்காகத் தொந்தரவு கொள்கிறீர்கள்? முழுமைக்கு நீங்கள் அவனுடைய கண்ணாமூச்சி ஆட்டத்திற்கு, விளையாட்டிற்குத் தேவைப்பட்டால், அவன் பொறுப்பெடுத்துக் கொள்வான். அதனால் தான் இயேசு அவருடைய சீடர்களுக்கு, "நிலத்தில் உள்ள லில்லிகளைப் பாருங்கள். அவை உழைப்பதில்லை, அவை நாளையைப் பற்றி கவலை கொள்வதில்லை - அவை மன்னன்

சாலமன் தன்னுடைய எல்லா மகிமைகளுடன் எப்போதும் இருப்பதை விட அழகானவை'' என்று சொல்லிக் கொண்டே இருக்கிறார். அவர் தொடர்ந்து, ''நாளையைப் பற்றி எண்ணாதீர்கள்'' என்று சொல்லிக் கொண்டே இருக்கிறார்.

ஒரு முறை நீங்கள் உண்மையில் உபயோகமற்றவராகி விட்டால், நீங்கள் தெய்விகத்திற்குச் சரணடைந்து விடுகிறீர்கள்; நீங்கள் சரணடைந்து விட்டால், நீங்கள், ''நான் மற்றவர்களுடைய செலவில் இருக்கட்டுமா'' எனக் கேட்க மாட்டீர்கள். மற்றவர் என்பவர் யார்? பின் அங்கு யாருமே இல்லை. யார் மற்றவர். உங்களுடைய பாக்கெட்டுகள் (pockets) மற்றவருடைய பாக்கெட்டுகள், மற்றவருடைய பாக்கெட்டுகள், உங்களுடைய பாக்கெட்டுகள் ஆகும். அகங்காரத்தின் காரணமாகவே மற்றது உள்ளது. ஏனென்றால் நான் இருப்பதனால் மற்றதும் இருக்கிறது. நான் அங்கு இல்லையென்றால் பின்பு மற்றவர் யார்?

நான் மற்றவர்களுடைய செலவில் வருடங்களாக வாழ்ந்து கொண்டிருக்கிறேன். நான் அவர்களுக்கு நன்றி கூடச் சொல்வதில்லை. ஏனென்றால் ஒருவருக்கு நன்றி சொல்வதில்லை. என்ன நோக்கம் உள்ளது? ஓர் முட்டாள்தனமாகத் தெரிகிறது. இந்த வழியிலே நான் அனுபவித்துக் கொண்டிருக்கிறேன்; முழுமை என்னை இங்கிருக்க வேண்டுமென்று விரும்பினால், நான் இங்கிருப்பேன். அவன் நான் இங்கிருப்பதை விரும்பவில்லையென்றால், நான் தேவையே இல்லாவிட்டால், அவன் என்னைத் தொலைவில் எடுத்து சென்று விடுவான். அது அவனுடைய கவலை. அவன், நான் இங்கிருக்க வேண்டுமென்று விரும்பினால், யாருடைய மனதிலாவது அவன் ஏதாவது எனக்கு நன்கொடையாக அளிக்க வேண்டுமென்ற எண்ணத்தைப் போடுவான். அதை அவனே முடிவு செய்ய வேண்டியது. நீங்கள் எனக்கு ஏதாவது கொடுத்தீர்களானால் அவன் உங்களுக்கு நன்றி சொல்ல வேண்டும்?'' நான் இடையில் வரமாட்டேன். நான் ஒரு போதும் யாருக்கும் நன்றி சொன்னதில்லை. ஏனென்றால் அது முட்டாள்தனமாக உள்ளது.

நான் எதை எல்லாம் அனுபவிக்ககிறேனோ அதைச் செய்கிறேன். அதனால் அவர்கள் பயனடைந்தால், அவர்கள் கடன்பட்டதாக நினைக்க வேண்டியதில்லை. இது என்னுடைய மகிழ்ச்சியாகும். நான் உங்களுக்கு உதவி செய்ய முயலுகின்றேன் என்பதல்ல. இந்த வழியில்

நான் என்னை அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். நீங்கள் எனக்கு உதவி செய்து கொண்டே இருந்தீர்களானால் அது உங்களது மகிழ்ச்சியாகும். எப்படியோ, நான் உங்களுடைய தேவைகளை நிறை வேற்றியுள்ளேன், நீங்கள் என்னுடைய தேவைகளை நிறைவேற்றி உள்ளீர்கள். முடிந்தது. யார் யாருக்கு நன்றி சொல்வது என்று இதைப்பற்றி பேசுவதற்கு அங்கே எந்த விஷயமும் இல்லை.

அது முழுமையான ஒன்று. மற்றது உள்ளது என்ற உணர்விற்கு காணரம் நான் இருப்பதனால், நீங்கள் மறைந்தால், மற்றவரும் மறைந்து விடுவார்.

அடுத்த வினாடி பின்பு கவலைப்படுவதற்கான விஷயம் அல்ல. இந்த வினாடியே தன்னளவில் போதுமானது.



**நான் இங்கு வருவதற்கு முன்னால் நான் போதைப் பொருள்கள் எடுத்துக் கொண்ட போது எப்போதும் முழுமையுடன் அதிகமாக ஒன்றியிருப்பதாக உணர்ந் தேன். உங்களுடன் ஆறு மாதம் இருந்த பின்னால் நான் புகைபிடித்தல் மட்டும் செய்தேன். அப்படியே எதிரிடைபட்டவனாக உணர்கின்றேன். இதற்கு நீங்கள் விளக்கமளிப்பீர்களா?**

அதற்குத் தேவையில்லை. அது சுயமான விளக்கமுடையது. நீங்கள் நியூராடிக்காக (neuratic) இருந்தால் போதைப் பொருள்கள் உங்களுக்கு ஆரோக்கியத்தின் நொடிநேரக் காட்சியை, (ஒளி) ஒன்றாக இருப்பதைக் கொடுக்கும். நீங்கள் பிளவு பட்டவராக இருந்தால் பின்பு போதைப் பொருள்கள் ஒன்றாக இருப்பது போன்று, பிரிந்து போகாதது போன்ற கனவை உண்டாக்கும். ஆனால் நீங்கள் தியானம் பண்ணினால் பின்பு உண்மையில் ஒன்றாகி விடுகிறீர்கள்; பின் போதைப் பொருள்கள் எடுத்துக் கொள்வது என்பது உதவி செய்யாது. நீங்கள் தியானம் பண்ணினால் பின் உண்மை நிலையில் ஒன்றாதல் என்பதை தெளிவாக அறிந்து கொள்கிறீர்கள். பின்பு கனவு எந்த உபயோகமும் அற்றதாகி விடுகிறது. உண்மையில் பின்பு போதைப் பொருள்கள் எடுத்துக் கொள்வது என்பது அழிவைத் தரக்கூடியது. அவற்றின் மூலம் நீங்கள் பிளவு பட்டவராக உணர்வீர்கள்.

அதனால்தான் நான் சொல்லிக் கொண்டே இருக்கின்றேன்; மக்களை எவரெல்லாம் போதைப் பொருள்கள் தேடிக் கொண்டிருக் கிறார்களோ, அவர்கள் எல்லாம் உண்மையில் தியானத்தைத் தேடிக் கொண்டிருப்பவர்களே, ஏதோ ஒன்றினுக்கு தவறான திசையில் தேடிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய திசை தப்பானது. நான் அவர்களுக்குப் புறம்பாக இல்லை. ஏனெனில் அவர்கள் தேடுபவர்கள். உந்துதல் அவர்களுடன் எழுந்துள்ளது, ஆனால் அவர்கள் ஒரு தவறான திசையில் சென்று கொண்டிருக்கின்றனர். அவர்களைச் சரியான திசைக்கு கொண்டு வர முடியும்.

அவர்களுக்கு தியானம் பண்ணுவதற்கு உதவ நிறைய மக்களின் உதவி தேவைப்படுகிறது. எந்த அரசாங்கத்தாலும், எந்த மாநிலத்தாலும் அவர்களை அடக்க முடியாது, அது முடியாதது. அவர்கள் அதிகமாக அடக்கப்பட்டால், போதைப்பொருள்களை நோக்கி அவர்கள் அதிகமாக கவரப்படுவதாக உணர்வார்கள். அதிக நியூரடிக்காக (neuratic) ஆகும்போது, அங்கே போதைப் பொருள்கள் அதிகமாகத் தேவைப்படுகிறது. உலகத்தைச் சுற்றிலும் அதிகக் கோயில்கள், அதிக தியானங்கள், அதிக மக்கள் தியானம் பண்ணுவது மட்டுமே உதவ முடியும். ஒரு முறை நீங்கள் தியானம் பண்ணினால் நீங்கள் சரியான திசையில் செல்ல ஆரம்பித்து விட்டீர்கள். விரைவிலோ அல்லது காலம் தாழ்ந்தோ போதைப் பொருள்கள் தானே விழுந்து விடும். அவற்றை விட்டு விட வேண்டுமென்ற தேவையில்லை; அவையே விட்டுச் சென்றுவிடும்.

இது நீங்கள் கற்களை, வர்ணமிட்ட கற்களை எடுத்துச் செல்வது போலாகும். பின்பு, திடீரென நான் உண்மையான வைரங்களைக் கொடுக்கிறேன். நீங்கள் அவற்றை, அந்த வர்ணமிட்ட கற்களை உங்களுடைய கைகளில் எடுத்துச் சென்று கொண்டிருப்பீர்களா? அவற்றை விட்டு விடுவதற்கு உங்கள் பக்கம் எந்த முயற்சியும் தேவையா? நீங்கள் அப்படியே விட்டு விடுவீர்கள். கைகள் திறந்து அவற்றை விட்டு விடும் - ஏனெனில் இப்போது வைரங்கள் கிடைக்கின்றன. இப்போது நீங்கள் அந்தக் கற்களை விட்டு விட வேண்டும். எந்த விளக்கமும் தேவையில்லை. அதுதானே விளக்கப் பட்டுள்ளது.

O

**"எல்லையற்ற மௌனத்தில், பிரபஞ்ச இருப்பில் (existence) வாழ்க்கை ஓர் அரட்டை அடித்தல்" என்று நீங்கள் கூறினீர்கள். அவ்வாறென்றால் ஒரு மனிதன் என்னவாகிறான்?"**

*ஓர் அரட்டையை - உருவாக்கும் மிருகம். அரிஸ்டாட்டில் (Aristottle) மனிதனை நியாயபூர்வமான இருப்பு என்று நிர்ணயித் துள்ளார் (வரையறுத்துள்ளார்). மனிதன் நியாயப் பூர்வமானவன் அல்லன். அவன் அப்படி இல்லாமல் இருப்பது நல்லது. மனிதன் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் நியாயபூர்வமற்றவன்; அவன் அப்படி இருப்பது நல்லது ஏனென்றால் நியாயபூர்வமற்ற நிலையில் அழகாக உள்ளவை, இன்பமூட்டுபவை உள்ளன. காரணத்தின் மூலமாக கணக்கு, காரணமாற்றதன் மூலமாக கவிதை. காரணத்தின் மூலமாக விஞ்ஞானம்; காரணமற்றதன் மூலமாக கணக்கு; விஞ்ஞானம், காரணமற்றதன் மூலமாக மதம். காரணத்தின் மூலமாக கடைத்தெரு; பணம், ரூபாய், டாலர்கள்; காரணமற்றதன் மூலமாக அன்பு, கீதமிசைத்தல், நடனமாடுதல். மனிதன் நியாயபூர்வமில்லாமல் இருப்பது நல்லது. மனிதன் நியாயபூர்வமற்றவன்.*

*நிர்மாணங்கள் நிறைய உண்டாக்குவதற்கு முயற்சி செய்யப் பட்டன. நான் மனிதனை ஓர் அரட்டையை - உருவாக்கும் மிருகம் என்று சொல்ல விரும்புகின்றேன். அவன் கட்டுக்கதைகளை (புராணக் கதைகளை) உருவாக்குகிறான் - எல்லா கட்டுக்கதைகளும் அரட்டை அடித்தல்கள், புராணங்கள், அவன் மதங்களை, கட்டுக்கதைகளை, பிரபஞ்ச இருப்பைப் பற்றிய (existence) கதைகளை உருவாக்கு கின்றான். மனித இனத்தின் ஆரம்பத்திலிருந்தே மனிதன் அழகிய புராணக் கதைகளை உருவாக்கி வருகின்றான். அவன் கடவுளை உருவாக்குகிறான். உலகத்தை உருவாக்கிய கடவுளை உருவாக்கு கிறான்; அவன் அழகிய கட்டுக்கதைகளை உருவாக்கு கிறான். அவன் சுற்றிலும் புதிய, புதிய கட்டுக்கதைகளை பின்னிக் கொண்டே செல்கிறான். மனிதன் கட்டுக்கதைகளை உருவாக்கும் மிருகம்; வாழ்க்கை, கட்டுக் கதைகளைச் சுற்றி இல்லையென்றால், முற்றிலும் சலிப்புண்டாக்குவதாக இருக்கும்.*

*நவீன காலத்திற்கு (தற்காலத்திற்கு) அது தொந்தரவாக உள்ளது. பழைய புராணக் கதைகள் எல்லாம் விட்டு விடப்பட்டன. முட்டாள் தனமாக நியாயபூர்வவாதிகள் அவற்றுக்கெதிராக மிக அதிகமாக விவாதிக்கின்றனர். அவை விட்டுவிடப்பட்டன. ஏனென்றால், நீங்கள்*

புராணக் கதைகளுக்கெதிராக விவாதித்தால் அவை நியாயமான தென்று வாதாட முடியாதவை, அது தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முடியாது. அது மிகவும் பலவீனமானது; அது மிகவும் நுண்மையானது. நீங்கள் அதனுடன் சண்டையிட ஆரம்பித்தீர்களானால், நீங்கள் அதை அழித்து விடுவீர்கள், ஆனால் அதை அழிப்பதன் மூலம் நீங்கள் மனித இதயத்தில் உள்ள ஏதோ அழகிய ஒன்றை அழித்து விட்டீர்கள். அது புராணக் கதைகள் அல்ல, புராணக்கதைகள் அடையாளங்களே. வேர்கள் ஆழத்தில் இருதயத்தினுள் உள்ளன. நீங்கள் புராணக் கதைகளை சொல்கிறீர்கள் என்றால் நீங்கள் இருதயத்தைக் கொன்று விடுகிறீர்கள்.

உலகம் முழுவதிலும், எல்லா புராணக் கதைகளையும் கொன்ற அந்த, அதே நியாயபூர்வவாதிகள் இப்போது வாழ்க்கைக்கு எந்த அர்த்தமும் இல்லை, கவிதைகள் இல்லை, வாழ்க்கை மகிழ்ச்சிகரமாக இருப்பதற்கு காரணம் இல்லை, கொண்டாடுவதற்கான காரணம் எதுவும் இல்லை என்று உணர்கின்றனர். எல்லா விழாக் கோலங்களும் மறைந்து விட்டன. புராணக் கதைகள் இல்லாமல் வாழ்க்கை ஒரு கடைத் தெருவாக, எல்லாக் கோயில்களும் மறைந்து விட்டதாக ஆகிவிட்டது. புராணக் கதைகள் இல்லாமல் எல்லா உறவுகளும் ஒரு பண்டமாற்றாக (கொடுக்கல் வாங்கலாக) உள்ளது. அங்கே அவற்றில் அன்பு இல்லை. புராணக் கதைகள் இல்லாமல் நீங்கள் தனிமையில் ஒரு பரந்த வெற்றிடத்தில் இருப்பீர்கள்.

நீங்கள் ஞானமடையாமல் அந்த வழியில் உங்களால் வாழ முடியாது; இல்லையென்றால் நீங்கள் பொருளற்றதாக உணர்வீர்கள், ஆழ்ந்த விகாரம் எழும், உங்களுடைய இருப்புத்தன்மையில் (being) மிகுந்த வேதனை ஏற்படும். நீங்கள் தற்கொலை செய்து கொள்ள ஆரம்பித்து விடுவீர்கள். நீங்கள் ஏதோ ஒரு வழி அல்லது மற்றது கண்டுபிடிக்க ஆரம்பித்துவிடுவீர்கள் - போதைப் பொருள்கள், மதுபானம், காமம், ஏதாவது - இவற்றால் உங்களை வெளியிலிழுத்து அதனால் நீங்கள் உங்களை மறந்து விடலாம், ஏனென்றால் வாழ்க்கை அர்த்தமற்றதாகக் காணப்படுகிறது.

புராணக் ககைதள் அர்த்தத்தைக் கொடுக்கின்றன. புராணக் கதைகள் அழகான அரட்டை அடித்தல் தவிர வேறில்லை, ஆனால் அவை நீங்கள் வாழ்வதற்கு உதவி புரிகின்றன. நீங்கள் எந்த அரட்டை அடித்தலும் இல்லாமல் வாழ்வதற்கான தகுதி உடையவர் ஆகும் வரை, அது நீங்கள் உலகில் பயணம் செய்வதற்கு உதவுகிறது. அது

உங்களைச் சுற்றிலும் மனித சூழ்நிலையைக் கொடுக்கிறது, இல்லையென்றால் இந்த உலகம் கல்போன்று கடினமானது. சிந்தியுங்கள்: இந்திய மக்கள் நதிகளுக்குச் செல்கின்றனர், கங்கைக்குச் செல்கின்றனர் - அவர்கள் வழிபடுகின்றனர். அது புராணக்கதையே, இல்லையென்றால் கங்கை ஒரு நதிமட்டுமே. ஒரு புராணக் கதையின் மூலம் கங்கை தாயாகி விடுகிறது, ஓர் இந்து கங்கைக்குப் போகும் போது, அது அவனுக்கு அளவில்லா இன்பத்தைக் கொடுக்கக் கூடியதாகும்.

மெக்காவில் இருக்கும் அந்தக்கல், காபாவின் கல், அது ஒரு கல்லைத் தவிர வேறில்லை. அது ஒரு கன சதுரமான கல், அதனாலே தான் அது காபா: (Kabah) காபா என்றால் கனசதுரம் (cube) ஆனால் ஒரு முஸ்லிம் காபாவிற்குச் சென்றபோது எப்படி உணர்கிறார் என்பது உங்களுக்குத் தெரியாது. அளவில்லா சக்தி எழுகிறது. காபா ஏதாவது செய்கிறது என்பதல்ல. ஒன்றுமில்லை, ஒரு புராணக் கதையே. அவன் அந்தக் கல்லை முத்தமிடும்போது அவன் பூமியில் நடக்கவில்லை; அடுத்த, கவிதையான உலகத்திற்கே சென்றுவிட்டான், அவன் காபாவைச் சுற்றி நடக்கும் போது அவன் கடவுளைச் சுற்றியே நடக்கிறான். உலகம் முழுவதிலும் முஸ்லிம்கள் காபா இருக்கும் திசை நோக்கியே பிரார்த்தனை பண்ணுகின்றனர். திசைகள் மாறலாம், யாரோ ஒருவர் இங்கிலாந்தில் பிரார்த்தனை பண்ணுகின்றார், காபாவைப் பார்த்துக்கொண்டு; யாரோ ஒருவர் இந்தியாவில் பிரார்த்தனை பண்ணுகிறார், காபாவைப் பார்த்துக்கொண்டு; யாரோ ஒருவர் எகிப்தில் பிரார்த்தனை பண்ணுகிறார், காபாவைப் பார்த்துக் கொண்டு. உலகம் முழுவதிலும் மொகமதியர்கள் ஒரு நாளைக்கு ஐந்து முறை பிரார்த்தனை பண்ணுகின்றனர், உலக முழுவதிலும் சூழ்ந்து கொண்டு, அவர்கள் காபாவைப் பார்த்துக் கொண்டு பிரார்த்தனை பண்ணுகிறார்கள் - காபா உலகத்தின் மையமாகி விடுகிறது. ஒரு புராணக் கதை, அழகான புராணக் கதை. அந்த வினாடியில் முழு உலகமும் ஒரு கவிதையால் சூழப்பட்டுள்ளது.

மனிதன் பிரபஞ்ச இருப்பிற்கு (existence) அர்த்தமளிக்கிறான். அதுவே புராணக் கதையைப் பற்றியதாகும். மனிதன் அரட்டையை உருவாக்கும் மிருகம். சிறிய அரட்டை அடித்தல்கள், அருகாமையில் இருப்பவர்களைப் பற்றிய, அடுத்த வீட்டுக்காரர் மனைவியைப் பற்றியதாகும். பெரிய அரட்டைகள் பிரபஞ்சத்தைப் பற்றி கடவுளைப் பற்றியதாகும். ஆனால் மனிதன் அதை அனுபவிக்கிறான்.

எனக்குப் பிடித்தமான, ஒரு கதை. பல தடவை நான் அதைச் சொல்லியிருக்கிறேன். அது ஒரு யூதக் கதை.

ஒரு குறிப்பிட்ட நகரத்தில், அநேக ஆண்டுகளுக்கு முன், அநேக நூற்றாண்டுகளுக்கு முன், ஒரு ராபி (rabbi) இருந்தார். எப்பொழுதெல்லாம் நகரத்தில் ஏதாவது கஷ்டம் இருந்தால், அவர் காட்டிற்குச் சென்று, சில பலிகளைக் கொடுத்து, பிரார்த்தனையோடு தொடர்ந்து ஒரு சடங்கையும் செய்து, கடவுளிடம், "அந்த பேராபத்தை விலக்கு. எங்களைக் காப்பாற்று" என்று சொல்வார். நகரம் எப்போதும் காப்பாற்றப்பட்டது.

அந்த ராபி (rabbi) மரணமடைந்தார், மற்றொரு மனிதர் ராபி ஆனார். அந்த நகரம் கஷ்டத்தில் இருந்தது; மக்கள் கூடினர். அந்த ராபி காட்டிற்குச் சென்றார், ஆனால் அவரால் அந்த இடத்தைக் கண்டு பிடிக்க முடியவில்லை. அவருககுத் தெரியாது. ஆகையால் அவர் கடவுளிடம், "எனக்கு பழைய ராபி உன்னிடம் பிரார்த்தனை பண்ணிய சரியான இடம் தெரியாது, ஆனால் அது பரவாயில்லை. உனக்கு இடம் தெரியும், ஆகையால் நான் இங்கிருந்து பிரார்த்தனை பண்ணுகிறேன்" என்று சொன்னார். நகரத்திற்கு ஒரு போதும் கஷ்டம் வரவில்லை. மக்கள் மகிழ்ச்சியுடன் இருந்தனர்.

இந்த ராபியும் பின்பு காலமானார்; அதை மற்ற ராபி தொடர்ந்தார். மறுபடியும் நகரம் ஏதோ கஷ்டத்தில் இருந்தது, ஏதோ பேராபத்து. மக்கள் குழுமினர். அவர் காட்டிற்குச் சென்றார், ஆனால் அவர் கடவுளிடம், "எனக்குச் சரியான இடம் எங்கே என்பது தெரியாது, எனக்குச் சடங்குகள் தெரியாது. எனக்கு பிரார்த்தனை மட்டும் தெரியும். ஆகையால் தயவு செய்து, நீங்கள் எல்லாம் அறிந்தவர். அதனால் விவரங்களுக்காக உறுதியாக இல்லாமல் என்னைக் கவனி..." என்று சொன்னார். எவையெல்லாம் அவர் சொல்ல விரும்பினாரோ அதையெல்லாம் அவர் சொன்னார். பேராபத்து தவிர்க்கப்பட்டது.

பின்பு அவரும் மரணமடைந்தார், மற்றொரு ராபி தொடர்ந்தார். நகரமே திரண்டது, அங்கே சில தொந்தரவுகள், சில வியாதிகள் பரவிக் கொண்டிருந்தன. அவர்கள், "காட்டிற்குச் செல்லுங்கள்; இது எப்போதும் செய்யப்பட்டது. பழைய காலத்து ராபிகள் எப்போதும் அங்கே போவார்கள்" என்று கூறினார்கள்.

அவர் தன்னுடைய சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு அவர், "அங்கே செல்வதற்கு தேவை என்ன உள்ளது? அவன் இங்கிருந்தே கேட்க முடியும். எனக்குத் தெரியாது" ஆகையால் அவர்

வானத்தைப் பார்த்து, "கவனி, எனக்கு அந்த இடம் தெரியாது, எனக்கு சடங்குகள் தெரியாது. எனக்குப் பிரார்த்தனை கூட தெரியாது. எனக்கு முழுக் கதையும் தெரியும்; எப்படி முதல் ராபி வழக்கமாகச் செல்வார் என்பது, எப்படி இரண்டாவது ராபி வழக்கமாகச் செல்வார் என்பது, எப்படி மூன்றாவது எப்படி நான்காவது... நான் கதையைச் சொல்லு கின்றேன்... நீ கதைகளை விரும்புவாய் என்பது எனக்குத் தெரியும். தயவு செய்து கதையை கவனித்துக் கஷ்டத்தைத் தவிர்த்து விடு" என்று சொன்னார்.

அவர் பழைய காலத்து ராபிகளைப் பற்றிய எல்லாக் கதைகளையும் சொன்னார். கடவுள் கதைகளை விரும்பியதால், நகரம் காப்பாற்றப்பட்டது என்று சொல்லப்படுகிறது.

அவர் கதைகளை அவ்வளவு விரும்புகிறார்; அவரே புராணக் கதைகளை உருவாக்கியவர் ஆவார். அவர் கதைகளை கட்டாயமாக விரும்புகிறார். அவரே முதலில், அரட்டை அடித்தலையும் உருவாக்கியவர்.

ஆமாம். வாழ்க்கை ஓர் அரட்டை அடித்தலே, வினாடி நேர அரட்டை அடித்தல் பிரபஞ்ச இருப்பின் சாசுவதமான அமைதியில் உள்ளது. மனிதன் அரட்டை அடித்தலை உருவாக்கும் மிருகம். நீங்கள் கடவுளாகும் வரையில் நீங்கள் அரட்டை அடித்தலை விரும்பியே ஆக வேண்டும். நீங்கள் ராமர், சீதையைப் பற்றிய கதைகளை மகாபாரதக் கதைகளை விரும்புவீர்சள். நீங்கள் கிரேக்க, ரோமன், சைனக் கதைகளை விரும்புவீர்கள். அவை ஆயிரக்கணக்கில் உள்ளன - எல்லாம் அழகானவை.

நீங்கள் அவற்றுக்கு தர்க்கத்தைக் கொண்டு வரவில் வையானால், அவை அகக்கதவுகளை வெளிப்படுத்தும்; அவை அகத்தின் இரகசியங்களை வெளிப்படுத்தும். நீங்கள் அவற்றுக்கு தர்க்கத்தைக் கொண்டு வந்தீர்களானால் கதவுகள் மூடப்படும; பின்பு அந்தக் கோயில்கள் உங்களுக்கல்ல.

கதைகளை விரும்புங்கள். நீங்கள் அவற்றை விரும்பும்போது, அவை தங்களுடைய இரகசியங்களை வெளிப்படுத்துகின்றன. அவற்றில் நிறைய மறைந்துள்ளன. மனித இனம் எவையெல்லாம் கண்டு கொண்டுள்ளதோ, அவை அந்த நீதிக் கதைகளில் மறைந் துள்ளன. அதனால் தான் இயேசு நீதிக் கதைகள் மூலம பேசிக் கொண் டிருந்தார். புத்தர் கதைகள் மூலம் பேசிக் கொண்டிருந்தார். அவர்கள் எல்லாம் அரட்டை அடித்தலை விரும்பினார்கள்.

**நீங்கள் ஒரு மாஸ்டர். சில சமயங்களில் சீடரிடம் கோபமாக இருக்க வேண்டும், இந்த விஷயத்தில் அவர் நடிக்கிறார் என்று சொன்னீர்கள். அவர் அவனைப் பார்த்து சிரிக்கும்போது அல்லது புன்னகை செய்யும் போது கூட அவர் நடிக்கிறாரா?**

ஒரு மாஸ்டர் எப்போதும் நடிக்கிறார்; ஒரு மாஸ்டர் சரியான நடிகர். அவர் வாழ்க்கையை சீரியஸாக (serious) (வினையாக) எடுத்துக் கொள்வதில்லை. அவர் வாழ்க்கையை கவலையாக, விகாரமாக எடுத்துக் கொள்வதில்லை. அது ஒரு விளையாட்டு. அவர் கோபப் படுகிறார்... அவர் நடிக்கிறார். அவர் சிரிக்கிறார்.. ஒரு மாஸ்டரால் தான் நடிக்க முடியும், ஏனென்றால் அவர் செய்பவர் அல்லர். எவை யெல்லாம் அவர் செய்கிறாரோ அவையெல்லாம் ஒரு நடிப்பாகவே எடுத்துக் கொள்ளப் படுகிறது. நீங்கள் அதிகமாக நடிப்போடு சார்ந்திருந்தால், நீங்கள் மாஸ்டரை இழந்து விடுகிறீர்கள்.

அவருடைய கோபத்தை, சிரிப்பை மறந்து விடுங்கள். கோபத்திற்கும் சிரிப்பிற்கும் பின்னால் உள்ளதைப் பாருங்கள். அங்கே நீங்கள் பழைய மனிதரைப் பார்ப்பீர்கள். சிரிக்கவோ, அல்லது கோபமாகவோ, அல்லது அழுது கொண்டோ, அல்லது பேசிக் கொண்டோ இல்லை - அங்கே நீங்கள் அவரை முழுமையான மௌனத்தில் கண்டு கொள்வீர்கள்: அங்கே நீங்கள் புத்தரைக் கண்டு கொள்வீர்கள். ஆழ்ந்த சாந்தத்தில், எல்லையில்லா அமைதியில், ஓர் எண்ணத்தின் அதிர்வு இல்லாமல் மாஸ்டர் எப்போதும் மேலே ஒரு நிலையிலே இருக்கிறார்.

தொடர்ந்து கவனித்துக் கொண்டிருப்பதால் மாஸ்டரால் ஏமாற்றப் பட்டு விடாதீர்கள். சொற்களை கவனியாதீர்கள்; இல்லையென்றால் ஒருபோதும் நீங்கள் அவரைப் பார்க்க முடியாது. அவருடைய அமைதியைக் கவனியுங்கள். எப்போது இரண்டு வார்த்தைகளுக் கிடையில் இடைவெளி உள்ளதோ அதைக் கவனியுங்கள். இரண்டு வரிகளுக்கிடையில் அவரைப் படியுங்கள். அவர் என்ன சொல்கிறார் என்பதற்கு அதிகக் கவனம் கொடுக்காதீர்கள், அவர் என்ன செய்கிறார் என்பதற்கு அவர் எப்படி உள்ளார் என்பதற்கு மட்டுமே கவனம் செலுத்துங்கள்.

○

43. தவ நெறிகளால் அசுத்தங்கள் அழிக்கப் படுகின்றன. அதன் பலனாக உடம்பும் ஐம்புலன்களும் மேன்மை யடைகின்றன. உடலின் மனோ சக்திகள் விழிப்படைகின்றன.

44. தன்னை அறிதலினால் தெய்விகத்தோடு ஐக்கியமாதல் (ஒன்றாதல்) நிகழ்கிறது.

45. முழுமையான பிரகாசம் (ஒளி) கடவுளிடம் சரணடைதல் மூலம் ஏற்படுகிறது.

மனிதன் மிதக்கும் பெரிய பனிக்கட்டிப் பாறை போன்றவன். ஒரு பகுதி ஒரு சிறிய பகுதி, பார்க்கக் கூடியதாக மேல் மட்டத்தில் உள்ளது; மொத்தத்தின் பெரும்பகுதி அடியிலே மறைந்துள்ளது. அல்லது மனிதன் ஒரு மரத்தைப் போன்றவன். உண்மையான வாழ்வு வேர்களில் உள்ளது. பூமியின் அடியில் மறைந்துள்ளது. கிளைகள் மட்டும் காணக் கூடியதாக உள்ளன. கிளைகளை நீங்கள் வெட்டுவீர்களானால், புதிய கிளைகள் மேலே வரும். ஏனென்றால் கிளைகள் அடிப்படைகள் அல்ல. ஆனால் வேர்களை வெட்டுவீர் களானால் மரம் அழிந்து விடும். மனிதனின் ஒரு பகுதியே காணக்கூடியதாக உள்ளது. பெரும்பகுதி பின்னால் மறைந்துள்ளது. நீங்கள், காணப்படும் இந்த மனிதன் எல்லாமே என்று எண்ணிணீர் களானால் பின்பு நீங்கள் மிகப் பெரிய தவறைச் செய்கிறீர்கள். நீங்கள் மனிதனுடைய முழு இரகசியத்தையும் இழந்து விடுகிறீர்கள். பின்பு நீங்கள் உங்களைத் தெய்விகத்திற்கு எடுத்துச் செல்லும் உங்களுள் உள்ள அகக் கதவை இழந்து விடுகிறீர்கள்.

நீங்கள் ஒரு மனிதருடைய பெயரைத் தெரிந்திருப்பதால், அவர் எந்தக் குடும்பத்திலிருந்து வந்திருப்பவர் என்பதைத் தெரிந்திருப்ப தால், அவருடைய உத்தியோகத்தைத் தெரிந்திருப்பதால், அவர் ஒரு டாக்டர் அல்லது இன்ஜினியர் அல்லது ஒரு பேராசிரியர், அல்லது அவருடைய முகத்தைத் தெரிந்திருப்பதால், அவருடைய படத்தைத் தெரிந்திருப்பதால், நீங்கள் தெரிந்து கொண்டிருப்பதாக எண்ணினால், நீங்கள் மிக அதிகமான மாயையில் இருக்கிறீர்கள். இவை எல்லாம் மேல் மட்டத்தில் உள்ள தோற்றங்கள் மட்டுமே. உண்மையான மனிதன இவற்றிலிருந்து தொலை தூரத்தில் இருக்கிறான். இந்த வழியிலே நீங்கள் பழக்கப்பட்டிருக்கலாம், ஆனால் நீங்கள் ஒருபோதும் ஒரு மனிதனைத் தெரிந்து கொள்வதில்லை.

ஒரு சமுதாயத்தைப் பொறுத்த வரையில் போதுமானது, அதிகமாகத் தேவையில்லை. கடைத் தெருவிற்கு இந்த

மேலெழுந்தவாரியான அறிவே போதுமானது, ஆனால் உண்மையில் நீங்கள் மனிதனைத் தெரிந்து கொள்ள விரும்பினால் பின்பு நீங்கள் ஆழமாகச் செல்ல வேண்டும். ஆழ்ந்து செல்வதற்கு ஒரே வழி முதலில் உங்களுள் செல்வதேயாகும்.

உங்களுள் உள்ள அந்த தெரியாததை நீங்கள் அறிந்து கொள்ளாவிடில் நீங்கள் ஒருபோதும் யாரோ ஒருவரைப்பற்றி தெரிந்து கொள்ள முடியாது. மனிதனுடைய இரகசியத்தை அறிந்து கொள்வதற்கு ஒரே வழி உங்கள் இரகசியத்தை அறிந்து கொள்ளுவதுதான். மறைந்துள்ள அடுக்குகளுக்குப் பின்னால் அங்கே மேலும் மறைந்துள்ள அடுக்குகள் உள்ளன. மனிதன் எல்லையற்றவன்.

மனிதனுள் ஆழ்ந்து மூழ்குவீர்களானால் நீங்கள் கடவுளை அடைவீர்கள். மனிதன் மேல் மட்டத்தில் உள்ளவன், அலைகள், நீங்கள் ஆழத்தில் மூழ்குவீர்களானால், பிரபஞ்ச இருப்பின் (existence) மையத்தையே அடைவீர்கள். கடவுளை அறிந்தவர்கள் - அவனை ஒரு பொருளாக (வஸ்துவாக) அவர்கள் அறிந்து கொள்ளவில்லை. அவர்கள் அவனை, அவர்களுடைய உள்ளாழ்ந்த அக உணர்வாக தெரிந்துள்ளார்கள். கடவுளைத் தெரிந்து கொண்டவர்கள் அவனை எதிரெதிராக சந்திக்கவில்லை. அவர்கள் அவனை ஒரு (வஸ்து) பொருளாகப் பார்க்கவில்லை; அவர்கள் அவனை ஆதாரமாக பார்க்காமல், தங்களுடைய சொந்த உணர்வாகப் பார்த்துள்ளனர். நீங்கள் கடவுளை உங்களுள் தவிர வேறு எந்த இடத்திலும் சந்திக்க முடியாது. அவன் உங்கள் ஆழம். நீங்கள் அவனுடைய மேல் மட்டம். நீங்கள் அவனுடைய புற எல்லை. அவன் உங்களுடைய மையம்.

நீங்கள் உங்களுள் ஆழ்ந்து சென்றால், நீங்கள் முழு பிரபஞ்ச இருப்பில் (whole existence) ஆழ்ந்து சென்று கொண்டு இருக்கிறீர்கள், மற்றவருள்ளும் கூட. ஏனென்றால் மையம் ஒன்றே. புற எல்லைகள் லட்சக்கணக்கில் உள்ளன. ஆனால் மையம் ஒன்றே. இந்த முழுப் பிரபஞ்ச இருப்பும் (whole existence) ஒரு புள்ளியில் மையம் கொண்டுள்ளது - அந்த ஒரு புள்ளி கடவுளாகும். கடவுள்: அது இருப்புத்தன்மையின் (being) அதிஆழமானதாகும்

மனிதனைத் தெரிந்து கொள்ள அது ஒரு மிக உயர்ந்த பயணம், ஒரு மிக உயர்ந்த புனிதயாத்திரை. பதஞ்சலியினுடைய சூத்திரங்கள் எப்படி நுழைவது என்பதற்கு சைகைகள் காண்பிக்கின்றன.

**முதல் சூத்திரம்**

**காயேந்த்ரிய சித்தி; அசுத்தி; க்ஷயாத் தபஸ:**

*தவநெறிகளால் அசுத்தங்கள் அழிக்கப்பட்டதன் பலனாக உடலும் ஐம்புலன்களும் மேன்மை அடைகின்றன. உடல், மனோ சக்திகள் விழிப்படைகின்றன.*

இந்த சூத்திரங்களை புரிந்து கொள்வதற்கு முன்னால் நிறைய விஷயங்கள் புரிந்து கொள்ளப்பட வேண்டும். இந்த உடல் மிகவும் தவறாகப் பயன்படுத்தப்படுகிறது. நீங்கள் உங்கள் உடலை தவறாக நடத்தி உள்ளீர்கள். உடலினுடைய இரகசியத்தை நீங்கள் தெரிந்து கொள்ளவில்லை. அது தோல் மட்டும் அல்ல; அது எலும்புகள் மட்டும் அல்ல; அது இரத்தம் மட்டும் அல்ல. அது மிகப்பெரிய உறுப்புகளோடு கூடிய அங்கம், ஐக்கியம், மிக அதிக சக்தி வாய்ந்தது.

நூற்றாண்டுகளாக மனிதனது உடம்பானது எப்படி தண்ணீர், பாத்திரத்தில் நிரப்பப்பட்டுள்ளதோ அதே போல் இரத்தம் நிரப்பப்பட்டது என நினைத்தனர். மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்பு தான் இரத்தம் உடம்பை நிரப்பவில்லை, அது தேங்கியுள்ள பொருள் அல்ல - இரத்தம் சுற்றி வருகிறது என்பதை நாம் அறிந்து கொண்டோம்.

மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்புதான் இரத்தம் சுற்றி வருகிறது. அது ஒரு சுறுசுறுப்பான விசை என்பதை நாம் தெரிந்து கொண்டோம். அது உடலை நிரப்புவதில்லை, ஆனால் சுற்றி வருகிறது - மிக அமைதியாக; தொடர்ந்து, அந்த இயக்கம் மிகவும் அழகானது. எந்தக் உடலும் இல்லாமல். நாம் உடல்களோடு லட்சக்கணக்கான பிறவிகளில் வாழ்ந்த போதிலும் ஒரு போதும் நாம் சுற்றி வருகின்ற அந்த இரத்தத்தைப் பற்றிய உண்மையை சந்திக்கவில்லை.

அநேக இரகசியங்கள் அங்கே உள்ளன. அவை மறைந்துள்ளன. இந்த உடல் ஏழு உடல்களில் முதல் அடுக்காகும். நீங்கள் இந்த உடலில் ஆழம் செல்வீர்களானால், புதிய காட்சியை, எதிர்பாராமல் நீங்கள் சந்திப்பீர்கள். இந்த ஸ்தூல உடலின் பின்புறம் நுண் உடல் மறைந்துள்ளது. ஒரு முறை அந்த நுண் உடல் விழித்துக் கொண்டால், நீங்கள் அதிக சக்தி உடையவராகி விடுவீர்கள், ஏனென்றால் நீங்கள் குறிப்பிட்ட புதிய - பரிமாணத்தின் சக்திகளை அடைவீர்கள். இந்த உடல் உங்கள் படுக்கையில் படுத்திருக்கலாம், உங்களுடைய நுண்உடல் நகர்ந்து செல்ல முடியும். அதற்கு எந்தத் தடையும் இல்லை.

பூமியினுடைய ஈர்ப்பு சக்தி அதை ஒன்றும் செய்யாது; அதற்கு காலம், வானவெளியின் தடைகள் இல்லை. அதனால் நகர்ந்து செல்ல முடியும்... அது எங்கு வேண்டுமானாலும் நகர்ந்து செல்லலாம். முழு உலகமுமே அதற்குத் திறக்கப்பட்டுள்ளது. இந்த ஸ்தூல உடலிற்கு அது முடியாதது.

உங்களுடைய சில கனவுகளில், இந்த நுண் உடல் வாஸ்தவத்தில் உங்களுடைய ஸ்தூல உடலை விட்டுச் செல்கிறது. உங்களுடைய ஆழ்ந்த தியானத்தில் உங்களுடைய நுண் உடல் ஸ்தூல உடலிலிருந்து செல்கிறது. உங்களுடைய ஆழ்ந்த தியானத்தின்போது, சில சமயங்களில், நீங்கள் பூமிக்கு மேலே சில அங்குலங்கள், சில அடிகள் எழும்பியது போல உணர்கிறீர்கள்.

நீங்கள் கண்களைத் திறந்த போது பூமியின் மேலே அமர்ந்திருக்கிறீர்கள். நீங்கள் அதை கற்பனை பண்ணியதாக நினைத்துக் கொள்கிறீர்கள். அது அப்படியல்ல. நுண் உடல், ஆழ்ந்த தியானத்தில் உங்கள் ஸ்தூல உடலைவிட சிறிது உயரத்திற்குப் போக முடியும். சிலசமயங்களில் அதுவும் கூட நடைபெறும். ஸ்தூல உடம்பும் கூட நுண் உடலைத் தொடரும்.

ஐரோப்பியாவில் ஒரு பெண் இருந்தாள், அவள் எல்லா விஞ்ஞான முறைகளினாலும் ஆராய்ச்சி செய்யப்பட்டாள். ஆழ்ந்த தியானத்தில் அவளுடைய நுண் உடல் மட்டும் அல்லாமல், ஸ்தூல உடம்பும் கூட பூமிக்கு மேலே நான்கு அடிகள் எழும்பி இருந்தன. இது உண்மையென்று கண்டு பிடிக்கப்பட்டது. இது மிகப் பழைய யோக ஆராய்ச்சி நூல்களில் (கிரந்தங்களில்) சொல்லப்பட்டுள்ளது. ஆழ்ந்த தியானத்தில், நுண் உடம்போடு, ஸ்தூல உடம்பும் பூமிக்கு மேலே செல்ல முடியும் என்று சொல்லப்பட்டுள்ளது. சரியாக நான்கு அடி மிகச் சுலபமாக செல்ல முடியும் என்று அது சொல்கிறது.

ஸ்தூல உடல் மேல் மட்டத்தில் உள்ள உடம்பாகும், மற்ற உடல்களின் வெளிப்பரப்பாகும் (தோலாகும்) ஏழு உடல்களில் இந்த நுண் உடலிற்குப் பின்னால் இன்றும் நுண்மையான நுண்உடல்கள் உள்ளன. அவை எல்லாம் இருப்புத்தன்மையின் (being) ஏழு வேறுவேறான தளங்களைச் சார்ந்தவை. நீங்கள் அதிகமாக உங்கள் சொந்த இருப்புத்தன்மையில் (being) நுழைவீர்களானால், இந்த உடல் எல்லாம் அல்ல, என்பதைப்பற்றி அதிகமாக அறிந்து கொள்வீர்கள்.

ஆனால் இந்த உடல் தூய்மையடைந்தால் மட்டுமே இரண்டாவது உடலைக் காண்பீர்கள். (சந்திப்பீர்கள்)

யோகம் உடலை வதைப்பதில் நம்பிக்கை கொள்ள வில்லை, இது சுயவதை விவகாரமல்ல... ஆனால் அது உடலைத் தூய்மைப் படுத்துவதில் நம்பிக்கைக் கொண்டுள்ளது. சில சமயங்களில் அதைத் தூய்மைப் படுத்துவதும், வதைப்பதும் ஒன்று போலக் காணப்படும். ஒரு வித்யாசம் செய்யப்பட வேண்டும். ஒரு மனிதன் உண்ணா நோன்பு இருக்கலாம், அவன் வதைப்பதை மட்டும் செய்யலாம். அவன் தன் சொந்த உடம்பிற்கு எதிராக இருக்கலாம், தற்கொலை செய்து கொள்பவனாக, சுயவதை செய்பவனாக இருக்கலாம். ஆனால் பின்பு மற்றொரு மனிதன் உண்ணாநோன்பு இருக்கலாம், அவன் வதைப்பவனாக இல்லாமல் இருக்கலாம், அவன் சுயவதை செய்பவனாக இல்லாமல் இருக்கலாம், அவன் எந்த வழியிலும் உடம்பை அழிப்பவனாக இல்லாமல் இருக்கலாம், இன்னும் சரியாகச் சொல்லப்போனால் அவன் தூய்மையடைய முயற்சி செய்யலாம். ஏனென்றால் ஆழ்ந்த உண்ணா நோன்பில் உடல் ஒரு குறிப்பிட்ட தூய்மையை அடைகின்றது.

நீங்கள் தொடர்ந்து சாப்பிட்டுக்கொண்டே இருக்கிறீர்கள். நீங்கள் ஒருபோதும் உடலுக்கு விடுமுறை கொடுப்பதில்லை. உடல் தொடர்ந்து அநேக உயிரற்ற செல்களை சேர்த்துக் கொண்டிருக்கிறது - அவை ஒரு பாரமாகி விடுகிறது. அவை ஒரு பாரமும், சுமையும் மட்டுமல்லாமல், அவை நச்சுப் பொருள்கள், அவை விஷத்தன்மை உள்ளவை. அவை உடலைத் தூய்மையற்றதாகச் செய்கின்றன. உடல் தூய்மையற்றதாக இருந்தால், உங்களால் அதற்குப் பின்னால் மறைந்துள்ள உடலைப் பார்க்க முடியாது. இந்த உடல் சுத்தமாக இருக்க வேண்டிய தேவை உள்ளது, மெல்லியதாக, தூய்மையாக; பின்பு திடீரென நீங்கள் இரண்டாவது அடுக்கைப்பற்றி, நுண் உடலைப்பற்றி தெரிந்து கொள்கிறீர்கள். நுண் உடல் தூய்மையடைந்தால் பின்பு நீங்கள் மூன்றாவது உடலைப்பற்றி தெரிந்து கொள்கிறீர்கள். நான்காவது மற்றவை.

உண்ணா நோன்பு மிக அதிக அளவில் உதவுகிறது, ஒருவர் உடலை அழிக்கவில்லை என்பதைப்பற்றி அதிகமாகத் தெரிந்து கொண்டு இருப்பதன் தேவை உள்ளது. மனதில் எந்த நிந்தனையும் இருந்தல் கூடாது; கூடாது; அதுவே பிரச்சினையாகும் ஏனென்றால்

எல்லா மதங்களும் உடலை நிந்தனை செய்கின்றன. அவர்களுடைய ஆரம்ப (மூல) ஸ்தாபகர்கள் எல்லாம் நிந்தனை செய்பவர்கள் அல்லர். அவர்கள் விஷமிடுபவர்கள் அல்லர். அவர்கள் அவர்களுடைய உடலை விரும்பினர். அவர்கள் எப்போதும் அதைத் தூய்மையாக வைத்திருக்க முயன்றனர். அவர்களுடைய உண்ணா நோன்பு தூய்மைப்படுத்துவதாக இருந்தது.

பின் வந்தவர்கள் கண்மூடித் தனமாக பின்பற்றுபவர்கள் (சீடர்கள்) உண்ணா நோன்பின் ஆழமான விஞ்ஞானத்தை தெரிந்து கொள்ள வில்லை. அவர்கள் கண்மூடித்தனமாக உண்ணா நோன்பை ஆரம்பித்தார்கள். அவர்கள் அனுபவித்தனர், ஏனென்றால் மனம் ஹிம்சையானது. அது அடுத்தவர்களுடன் ஹிம்சையாக இருப்பதை அனுபவிக்கிறது, அது ஒரு சக்தியாக இருப்பதை அனுபவிக்கிறது, அது ஒரு சக்தியை அனுபவிக்கிறது, ஏனென்றால் எப்பொழு தெல்லாம் நீங்கள் அடுத்தவர்களிடம் ஹிம்சை உள்ளவராக இருக்கிறீர்களோ, அப்போது நீங்கள் சக்தி உள்ளவராக உணர்கிறீர்கள்; ஆனால் அடுத்தவர்களிடம் ஹிம்சையாக இருப்பது அபாயகரமானது. ஏனென்றால் அடுத்தவர்கள் பதிலுக்குச் செய்வார்கள். பின்பு அங்கு ஓர் எளிமையான வழி உள்ளது; உங்களுடைய சொந்த உடலுடன் ஹிம்சையாக இருப்பது. பின் அங்கு எந்த அபாயமும் இல்லை. இந்த உடலால் பழிவாங்க முடியாது. இந்த உடலால் உங்களுக்குத் தீங்கு செய்யமுடியாது. நீங்கள் உங்களுடைய சொந்த உடலைத் தீங்கு செய்து கொண்டே இருந்தாலும் அங்கே திரும்பச் செய்வதற்கு யாரும் இல்லை. இது எளிமையானது. நீங்கள் வதைக்க முடியும். சக்தியை அனுபவிக்கிறீர்கள். நீங்கள் உங்கள் உடலைக் கட்டுப்படுத்துகிறீர்கள், உடல் உங்களைக் கட்டுப்படுத்து வதில்லை.

இந்த உண்ணா நோன்பு வலுத்தாக்குதலாக, ஹிம்சையாக இருந்தால், கோபமும் அழிக்கக்கூடிய தன்மையும் இருந்தால், பின்பு நீங்கள் நோக்கத்தை இழந்து விடுவீர்கள். நீங்கள் உடலைத் தூய்மைப்படுத்தவில்லை. உண்மையில் நீங்கள் அதை அழிக்கிறீர்கள். கண்ணாடியைச் சுத்தம் செய்வது என்பது ஒன்று. அதை அழிப்பது என்பது மற்றொன்று. கண்ணாடியைச் சுத்தம் செய்வது என்பது முற்றிலும் வேறுபட்டது, ஏனென்றால் கண்ணாடி எல்லா தூசுகளினின்றும் சுத்தப்படுத்தப்பட்டு தூய்மையாக இருந்தால், நீங்கள்

அதனை பார்க்கலாம் - அது உங்களைப் பிரதிபலிக்கும். ஆனால் நீங்கள் கண்ணாடியை அழித்தீர்களானால், இரண்டாவதான நுண் உடலுடன் தொடர்பு கொள்வதற்காக எல்லா சாத்தியக் கூறுகளையும் நழுவ விட்டு விடுகிறீர்கள். தூய்மைப் படுத்துங்கள். ஆனால் அழிக்காதீர்கள்.

உண்ணா நோன்பு எப்படித் தூய்மைப்படுத்துகிறது? ஏனென்றால் எப்பொழுதெல்லாம் நீங்கள் (ஒரு முறை) உண்ணா நோன்பு இருக்கும் போது உடலுக்கு எந்த ஜீரணிக்கும் வேலையும் இல்லை. அந்த வேளையில் உடல் உயிரற்ற செல்களை, நச்சுப் பொருள்களை வெளியே தள்ளும் வேலையில் ஈடுபட முடியும். இது ஒரு நாள் ஞாயிற்றுக்கிழமை அல்லது சனிக்கிழமை நீங்கள் விடுமுறையில் இரு;கும் போது, நீங்கள் வீட்டிற்கு வந்து முழு நாளும் சுத்தம் செய்வது போலாகும். முழு வாரமும் நீங்கள் சுறுசுறுப்பாக, எப்போதும் வேலை செய்து கொண்டிருப்பதால் வீட்டை உங்களால் சுத்தம் செய்ய முடியவில்லை. உடலிற்கு ஜீரணிப்பதற்கு ஒன்றும் இல்லாத போது, நீங்கள் எதுவுமே உண்ணாதபோது, உடல் தன்னைத் தானே - சுத்தம் பண்ணிக்கொள்ள ஆரம்பிக்கிறது. ஓர் இயக்கம் தானாகவே ஆரம்பித்து விடுகிறது. எவைகள் எல்லாம் தேவை இல்லாததோ, ஒரு பாரம் போல உள்ளவையோ அவற்றை உடல் வெளியே தள்ள ஆரம்பித்து விடுகிறத். உண்ணா நோன்பு ஒரு தூய்மைப்படுத்தும் முறையாகும். சில சமயங்களில் உண்ணா நோன்பிருப்பது அழகியது, எதுவும் செய்யாமல், சாப்பிடாமல், ஓய்வு எடுத்துக் கொண்டு, எவ்வளவு திரவமாக எடுத்துக் கொள்ள முடியுமோ அவ்வளவு எடுத்துக் கொண்டு ஓய்வு கொள்ளவும், உடல் சுத்தமடைந்து விடுகிறது.

சில சமயங்களில் நீங்கள் நீண்ட உண்ணா நோன்பு தேவை என நினைத்தால், நீண்ட உபவாசமும் நீங்கள் பண்ணலாம். ஆனால் உடலுடன் ஆழ்ந்த அன்புடன் இருங்கள். எந்த விதத்திலாவது உண்ணா நோன்பு உடலைப் பாதிக்கிறது என்று உணர்ந்தால் அதை நிறுத்திவிடுங்கள். உண்ணா நோன்பு உடலுக்கு உதவுவதாக இருந்தால், நீங்கள் அதிக சக்தி உள்ளவராக, உயிரோட்டம் உள்ளவராக; புதுப்பிக்கப்பட்டவராக, ஆற்றல் உள்ளவராக உணர்கிறீர்கள். இதுவே பிரமாணமாக இருக்க வேண்டும். நீங்கள் பலமற்றவராக உணர ஆரம்பித்தால், உடலில் ஒரு நுண்ணிய நடுக்கம் ஏற்படுவதுபோல நீங்கள் உணர ஆரம்பித்தால், பின்பு உணர்வுடன் இருங்கள். இப்போது

இது தூய்மைப்படுத்துவதாக இனி இல்லை. இது அழிப்பதாக ஆகியுள்ளது. அதை நிறுத்தி விடுங்கள்.

ஒருவர் இதனுடைய முழு விஞ்ஞானத்தையும் கற்றுக் கொள்ள வேண்டும். உண்மையில் நீண்ட உண்ணா நோன்பு இருந்த யாரோ ஒருவர் அருகில், முழு வழியையும் நன்றாக அறிந்த, எல்லா அறிகுறிகளையும் அது அழிக்கக்கூடியதாகுமென்றால் பின்பு என்ன நடைபெற ஆரம்பிக்கும்; அது அழிக்கக்கூடியதாக இல்லையென்றால் என்ன நடைபெற ஆரம்பிக்கும் என்பதை அறிந்தவர் முன்னால் ஒருவர் உண்ணா நோன்பு இருக்க வேண்டும். உண்மையில் சுத்தமாக்கும் ஒரு உண்ணா நோன்பிற்குப்பின்னால் நீங்கள் புதியவராக, இளமையாக, சுத்தமடைந்தவராக, கனமற்றவராக, சந்தோஷமுள்ளவராக உணர்வீர்கள். உடல் சிறப்பாகச் செயல்படுகிறது. ஏனென்றால் இப்போது அது பாரமற்றதாக இருக்கிறது. நீங்கள் தவறுதலாக உண்ணும்போது மட்டுமே உண்ணா நோன்பு வருகிறது. நீங்கள் தவறுதலாகச் சாப்பிடவில்லையென்றால் உண்ணா நோன்பிற்குத் தேவையில்லை. நீங்கள் உடலுடன் முன்பே தவறு பண்ணிய போதே உண்ணா நோன்பு தேவைப்படுகிறது. நாம் எல்லோருமே தவறுதலாகவே உண்டு கொண்டிருக்கிறோம்.

மனிதன் பாதையை இழந்துவிட்டான். எந்த மிருகமும் மனிதனைப் போல உண்பதில்லை; ஒவ்வொரு மிருகத்திற்கும் அதனுடைய தேர்ந்தெடுக்கப்பட்ட உணவு உள்ளது. நீங்கள் எருமைகளை தோட்டத்திற்கு கொண்டுவந்து விட்டு விட்டீர்களானால் அவை ஒரு குறிப்பிட்ட புல்லையே தின்றும். அவை எல்லா வற்றையும் தின்பதில்லை. அவை ரொம்பவும் தேர்ந்தெடுப்பவை. உணவைப் பற்றி அவற்றுக்கென ஒரு குறிப்பிட்ட உணர்வு உள்ளது. மனிதன் முழுதும் இழந்து விட்டான், உணவைப் பற்றிய எந்த உணர்வும் இல்லை. அவன் எல்லாவற்றையும், ஏதாவதையும் சாப்பிட்டுக் கொண்டு இருக்கிறான். உண்மையில் எங்காவது, அல்லது மற்ற மனிதனால் சாப்பிட முடியாதவை என உங்களால் கண்டு கொள்ள முடியாது. சில இடங்களில் எறும்புகள் சாப்பிடப்படுகின்றன. சில இடங்களில் நாய்கள் சாப்பிடப் படுகின்றன. மனிதன் எல்லாவற்றையும் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறான். மனிதன் பைத்தியமாக இருக்கிறான். எது உடம்போடு எதிரொலித்துச் செல்லும், எது அவ்வாறு இல்லை என்பது அவனுக்குத் தெரியாது.

மனிதன் இயற்கையாக மரக்கறி உணவு உண்பவனாக இருக்க வேண்டும் ஏனென்றால் முழு உடம்பும் மரக்கறி (சைவ உணவிற்கென) உணவிற்கெனவே ஏற்பட்டுள்ளது. மனிதனுடைய முழு உடம்பின் அமைப்பு, மனிதன் ஓர் அசைவ உணவினனாக இருக்க முடியாது என்பதைக் காட்டுகிறது, இந்த உண்மையை விஞ்ஞானிகள் கூட ஒப்புக் கொண்டுள்ளனர். மனிதன் குரங்கிலிருந்து வந்துள்ளான். குரங்குகள் முழுதும் வைச உணவு உண்பவையே. டார்வின் சொல்வது உண்மையானால், மனிதன் ஒரு சைவ உணவு உண்பவனே. இப்போது ஒரு குறிப்பிட்ட வகையான மிருகம் சைவ உணவு உண்பவையா அசைவ உணவு உண்பவையா என்பதைத் தீர்மானிக்க அங்கே வழிகள் உள்ளன. அது குடலின் நீளத்தைப் பொறுத்தது. அசைவ உணவு உண்ணும் மிருகத்தின் குடல் மிகவும் சிறியது, புலிகள், சிங்கங்கள் - அவற்றுக்கு மிகச்சிறிய குடல் உள்ளது, ஏனென்றால் மாமிசமானது முன்பே ஜீரனிக்கப்பட்ட உணவாகும். அதற்கு ஒரு நீளமான குடல் ஜீரணத்திற்குத் தேவையில்லை. மனிதனுக்கு மிக நீளமான குடல் உள்ளது. அது மனிதன் சைவ உணவு உண்பவன் என்பதைக் குறிக்கிறது. நீண்ட ஜீரணம் தேவைப்படுகிறது. நிறையக் கழிவுகள் அங்கு இருக்கும். அவை வெளியே தள்ளப்பட வேண்டும்.

மனிதன் ஓர் அசைவ உணவு உண்பவன் அல்லன். அவன் மாமிச உணவு உண்டு கொண்டே இருக்கிறான். உடல் சுமையாகிறது. கிழக்கில் எல்லாம் மிகச் சிறந்த தியானம் செய்பவர்களும் - புத்தர், மகாவீரர் - அவர்கள் இந்த உண்மையை வற்புறுத்தி உள்ளனர். அஹிம்சை என்ற கொள்கைக்காக அல்ல - அது இரண்டாவது விஷயம் - ஆனால் நீங்கள் தியானத்தில் ஆழமாகச் செல்ல விரும்பினால் உங்கள் உடல் கணமற்றதாக, இயற்கையாக தடங்கலற்றதாக இருக்க வேண்டிய தேவை உள்ளது. உங்கள் உடல் பாரமற்றதாக உள்ள தேவை உள்ளது. ஒரு அசைவ உணவு உண்பவரின் உடல் அதிகப் பளு உள்ளதாக உள்ளது.

நீங்கள் மாமிசம் சாப்பிட்டபோது என்ன நடைபெறுகிறது என்று கவனியுங்கள். ஒரு மிருகத்தை நீங்கள் கொல்லும்போது அந்த மிருகத்திற்கு என்ன நடைபெறுகிறது? ஒருவரும் மரணமடைவதற்குத் தயாராக இருக்க மாட்டார்கள். இதில் சந்தேகமே இல்லை... வாழ்வுதன்னை நீடிக்கவே விரும்பும்; மிருகம் மரணமடைய விரும்ப முன்வரவில்லை. யாராவது உங்களைக் கொல்வாரென்றால், நீங்கள் மரணமடைய முன்வர மாட்டீர்கள். ஒரு சிங்கம் உங்கள் மீது குதித்து

உங்களைக் கொல்லுகிறது என்றால் உங்கள் மனதில் என்ன நடைபெறுகிறது? நீங்கள் ஒரு சிங்கத்தைக் கொல்லும் போது அதுவே நடைபெறுகிறது. மரண வேதனை, பயம், மரண்ம, வருத்தம், மன விகாரம், கோபம், ஹிம்சை, சோகம் இவைகள் எல்லாம் அந்த மிருகத்திற்கு ஏற்படும். அதனுடைய உடல் முழுவதும் ஹிம்சை, வருத்தம், மரண வேதனை பரவுகிறது. முழு உடலும் நச்சுப் பொருள்களாலும், விஷத்தாலும் நிறைக்கப்பட்டதாக ஆகிவிடுகிறது. உடலிலுள்ள எல்லாச் சுரப்பிகளும் விஷத்தை வெளிவிடுகின்றன. ஏனென்றால் அந்த மிருகம் விருபபமே இல்லாமல் மரணமடைகிறது. பின்பு நீங்கள் அந்த மாமிசத்தைச் சாப்பிட்டால், அந்த மாமிசம், மிருகம் வெளிவிட்ட எல்லா விஷங்களையும் எடுத்து வருகிறது. முழு சக்தியுமே விஷத்தன்மை வாய்ந்தது. பின்பு அந்த விஷங்கள் எல்லாம் உங்களுடைய உடலில் சுமந்து வரப்படுகிறது.

நீங்கள் உண்கின்ற அந்த மாமிசம் ஒரு மிருக உடலைச் சார்ந்தது. அதற்கென ஒரு குறிப்பிட்ட நோக்கம் அங்குள்ளது. அந்த மிருகத்தின் உடலில் ஒரு குறிப்பிட்ட வகையான உணர்வு உள்ளது. மிருகத்தினுடைய மாமிசத்தை நீங்கள் உண்ணும்போது, உங்கள் உடல் மிகத் தாழ்ந்த தளத்திற்குச் செல்கிறது. பின்பு உங்கள் உடலிற்கும், உங்களுடைய உணர்விற்கும் இடையில் இடைவெளி ஏற்படுகிறது, அதனால் ஓர் இறுக்கம், மனவிகாரம் எழுகிறது.

ஒருவர் எது இயற்கையான உணவோ அதை உண்ண வேண்டும். உங்களுக்கு எது இயற்கையாக உள்ளதோ அதை உண்ண வேண்டும். பழங்கள், கொட்டைகள், காய்கறிகள் - உங்களால் எவ்வளவு உண்ண முடியுமோ அவ்வளவு உண்ணுங்கள். இதில் அழகு என்னவென்றால் தேவைக்கு அதிகமாக இவற்றை உங்களால் உண்ண முடியாது. எவையெல்லாம் இயற்கையானவையோ அவை எப்போதும் உங்களுக்குத் திருப்தியைக் கொடுக்கும், ஏனென்றால் அது உங்களுடைய உடலுக்கும் திருப்தியைக் கொடுக்கிறது. உங்களைப் பூர்த்தியாக்குகிறது. நீங்கள் நிறைவாக இருப்பதாக உணர்கிறீர்கள். ஏதாவது ஒன்று செயற்கையானதாக இருந்தால், அது ஒருபோதும் உங்களுக்கு நிறைவான உணர்வை அளிக்காது. நீங்கள் ஐஸ்கிரீம் சாப்பிட்டுக் கொண்டே இருக்கிறீர்கள். ஒருபோதும் நீங்கள் திருப்தியடைந்ததாக உணருவதில்லை. உண்மையில் நீங்கள் அதிகமாக உண்ணும்போது, இன்னும் அதிகமாக உண்ண வேண்டும் என்று எண்ணுகிறீர்கள். அது உணவல்ல. உங்கள் மனம் தந்திரத்திற்கு

உட்படுத்தப்பட்டது. இப்போது நீங்கள் உடலுடைய தேவைக்கு உண்ணவில்லை. நீங்கள் அதைச் சுவைக்காக மட்டும் உண்கிறீர்கள். நாக்கு அடக்கி நடத்துவதாக ஆகிவிட்டது.

நாக்கு அடக்கி கட்டுபடுத்துவதாக இருத்தல்கூடாது. அதற்கு வயிற்றைப்பற்றி எதுவும் தெரியாது. அதற்கு உடலைப்பற்றி எதுவும் தெரியாது. உணவைச் சுவைப்பது என்ற ஒரு குறிப்பிட்ட நோக்கத்தை நாக்கு நிறைவேற்ற வேண்டும். இயற்கையாக, எந்த உணவு உடலுக்கு - என்னுடைய உடலுக்கு எந்த உணவு உடலுக்கல்ல என்ற ஒரு விஷயத்தை மட்டும் நாக்கு தீர்மானம் செய்யவேண்டியுள்ளது. அதுவாயிலில் உள்ள வாயிற்காப்போன் மட்டுமே; அது அதிகாரி அல்ல. வாயிலில் உள்ள வாயிற்காப்போன் அதிகாரியானால், பின் எல்லா விஷயங்களிலும் குழப்பம் ஏற்படும்.

இப்போது விளம்பரம் செய்பவர்கள் நாக்கை ஏமாற்ற முடியும் என்பதை நன்கு தெரிந்துள்ளார்கள். மூக்கை ஏமாற்ற முடியும். அவை அதிகாரிகள் அல்ல. நீங்கள் தெரிந்து கொள்ளாமல் இருக்கலாம்; உலகத்தில் உணவைப் பற்றிய அதிகமான ஆராய்ச்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன. உங்களுடைய மூக்கு முழுதுமாக மூடப்பட்டு உங்களுடைய கண்கள் மூடப்பட்டு பின்பு உங்களுக்கு ஒரு வெங்காயம் சாப்பிட கொடுக்கப்பட்டால் உங்களால் என்ன சாப்பிடுகிறீர்கள் என்று சொல்ல முடியாது என்று அவர்கள் சொல்லுகிறார்கள். உங்களுடைய மூக்கு முழுதுமாக மூடப்பட்டால், உங்களால் வெங்காயத்திலிருந்து ஆப்பிள் வரை சொல்ல முடியாது. ஏனென்றால் சுவையின் பாதிப்பகுதி மணத்திலிருந்து வருகிறது. அது மூக்கினால் முடிவு செய்யப்படுகிறது, பாதிப்பகுதி நாக்கினால் முடிவு செய்யப்படுகிறது. இவையிரண்டும் கட்டுப்படுத்துபவையாக உள்ளன. இப்போது அவற்றுக்கு ஐஸ்கிரீம் ஊட்டச்சத்துள்ளதா இல்லையா என்பது விஷயமல்ல. அது ஒரு மணத்தை எடுத்து விடுகிறது, அது நாக்கை நிறைவு படுத்தும் சில இரசாயனப் பொருள்களை எடுத்து வருகிறது என்பது தெரியும். ஆனால் அது உடலுக்குத் தேவையில்லை.

மனிதன் குழப்பமடைகிறான். எருமைகளைவிட குழப்ப மடைகிறான். ஓர் எருமையை நம்பும்படி செய்ய முடியாது, ஐஸ்கிரீம் உண்ணும்படி, முயன்று பாருங்கள்!

இயற்கையான உணவு... நான் 'இயற்கையான' என்று சொல்லும்போது, உங்கள் உடலுக்குத் தேவையான என்ற அர்த்தத்தில்

சொல்லுகிறேன். ஒரு புலியின் தேவை வேறுவிதமானது; அது மிகவும் ஹிம்சையாக இருக்க வேண்டும். நீங்கள் ஒரு புலியினுடைய மாமிசத்தை உண்பீர்களானால், நீங்கள் ஹிம்சை உடையவர்களாக இருப்பீர்கள். ஆனால் உங்களுடைய ஹிம்சையை எங்கே வெளிப் படுத்துவது? நீங்கள் ஒரு மனித சமுதாயத்தில் வாழவேண்டியதுள்ளது, வனத்தில் அல்ல. பின்பு நீங்கள் ஹிம்சையை அடக்க வேண்டிய திருக்கிறது. ஒரு சுற்று வட்டம் பின்பு ஆரம்பமாகிறது.

நீங்கள் ஹிம்சையை அடக்கும்போது என்ன நடைபெறுகிறது? நீங்கள் கோபமாக, ஹிம்சையாக இருக்கும் போது ஒரு குறிப்பிட்ட விஷமான சக்தி வெளிவிடப்படுகிறது, ஏனென்றால் உண்மையில் அந்த விஷம் ஹிம்சையாக, நீங்கள் யாரையாவது கொல்லும் சூழ்நிலையை உருவாக்குகிறது. சக்தி உங்களுடைய கைகளை நோக்கிச் செல்லுகிறது; சக்தி உங்களுடைய பற்களை நோக்கிச் செல்லுகிறது - இந்த இரண்டு இடங்களில் தான் மிருகங்கள் ஹிம்சையாக ஆகின்றன. மனிதன் மிருகவர்க்கத்தின் பகுதியானவன்.

நீங்கள் கோபமாக உள்ள போது சக்தி வெளிவிடப்படுகிறது - அது கைகளுக்கு, பற்களுக்கு, தாடைக்கு வருகிறது - ஆனால் நீங்கள் மனித சமுதாயத்தில் வாழ்கிறீர்கள், கோபமாக இருப்பது என்பது எப்போதும் லாபமானதல்ல. நீங்கள் ஒரு நாகரிகமான உலகில் வாழ்கிறீர்கள், ஒரு மிருகத்தைப் போல உங்களால் நடந்து கொள்ள முடியாது. நீங்கள் ஒரு மிருகத்தைப் போல நடந்து கொள்வீர்களானால் அதற்காக மிக அதிகமான விலை கொடுக்க வேண்டியதிருக்கும். நீங்கள் அவ்வளவு அதிகவிலை கொடுப்பதற்குத் தயாராக இல்லை. பின்பு நீங்கள் என்ன செய்வீர்கள்? நீங்கள் கைகளில் உள்ள கோபத்தை அடக்குகிறீர்கள்; பற்களில் உள்ள கோபத்தை அடக்குகிறீர்கள் - நீங்கள் பொய்யான புன்னகை செய்து கொண்டிருக்கிறீர்கள், உங்கள் பற்கள் கோபத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக சேர்த்துக் கொண்டே இருக்கின்றன.

இயற்கையான தாடை கொண்ட மனிதர்களை நான் அபூர்வ மாகவே பார்க்கிறேன். அது இயற்கையாக இல்லாமல் தடைப்பட்டதாக, விறைப்பாக உள்ளது - ஏனென்றால் மிக அதிகமான கோபம் அங்கே உள்ளது. ஒரு மனிதருடைய தாடையை அழுத்துவீர்களானால், கோபம் வெளிவர முடியும். கைகள் அழகற்றவையாக ஆகிவிட்டன. அவை வசீகரத்தை இழந்து விட்டன. அவை வளையும் தன்மையை இழந்து

விட்டன. ஏனென்றால் அங்கே அளவிற்கு அதிகமாக கோபம் அடக்கப்பட்டுள்ளது. நீங்கள் கைகளை அழுத்தும்போது, மசாஜ் செய்யும் போது, அந்த மனிதன் எந்தக் காரணமும் இல்லாமல் கோபப்படுவதற்கு ஆரம்பித்து விடுகிறான் என்பதை ஆழ்ந்த மசாஜ் செய்வதில் ஈடுபட்டுள்ளவர்கள் அறிந்துள்ளனர். நீங்கள் அந்த மனிதனுக்கு மசாஜ் செய்கிறீர்கள், திடீரென அவன் கோபப்பட ஆரம்பிக்கிறான். நீங்கள் அவனுடைய தாடையை அழுத்தினால், அவன் மறுபடியும் கோபமடைகிறான். அவர்கள் சேகரிக்கப்பட்ட கோபத்தை சுமந்து சென்று கொண்டிருக்கிறார்.

இவை எல்லாம் உடலில் உள்ள அசுத்தங்கள் ஆகும். அவை விடுவிக்கப்பட வேண்டும். நீங்கள் விடுவிக்கவில்லையென்றால், உடல் தொடர்ந்து கனமாக இருந்து வரும். உடலில் உள்ள எல்லாவிதமான சேகரிக்கப்பட்ட நச்சுப் பொருள்களையும் வெளியேற்றுவதற்கு யோகப்பயிற்சிகள் உள்ளன. யோக அசைவுகள் ஒருவருடைய உடலுக்கு அதற்கென வளையும் தன்மை உள்ளது. யோகப்பயிற்சிகள் மற்ற உடல் பயிற்சிகளிலிருந்து முற்றிலும் வேறுபட்டது. அவை உங்கள் உடலை பலமாக்குவதில்லை. அவை உங்கள் உடலை அதிக இணக்கமாக்குகின்றன. உங்கள் உடல் அதிக வளையும் தன்மை உள்ளதாக ஆகும்போது, நீங்கள் பலமாக இருப்பது என்பது ஒரு அதிக வித்யாசமான வகையில், நீங்கள் இளமையோடு இருக்கிறீர்கள். அவை உங்கள் உடலை நிலையற்றதாக, தங்கு தடையில்லாததாகச் செய்கின்றன. உடலில் தடைகள் இல்லை. முழு உடலும் தன்னுடைய சொந்த ஓர் ஆழ்ந்த இளைப்பில், ஒழுங்காக அமைக்கப்பட்ட ஒன்றாகும் (organic unity) அது கடைத்தெருவிலுள்ள கூச்சல் போல அல்ல; அது ஓர் இசைக்குழு போன்றது. உள்ளே ஓர் ஆழ்ந்த இசைவு தடைகள் இல்லாமல் உடல் தூய்மையாக உள்ளது. யோகப் பயிற்சிகள் மிக அதிக உதவியாக இருக்கும்.

ஒவ்வொருவரும் வயிற்றில் அதிகக் குப்பைகளைச் சுமந்து கொண்டிருக்கின்றனர். ஏனென்றால் அதுதான் உடலில் உள்ள ஒரே வெளியிடம் அங்கே நீங்கள் விஷயங்களை அடக்கி வைக்க முடியும். உடலில் வேறு எந்த இடமும் இல்லை. நீங்கள் ஏதேனும் ஒன்றை அடக்கி வைக்க விரும்புவீர்களானால், அது வயிற்றிலேயே அடக்கி வைக்கப்படவேண்டும். நீங்கள் அழ விரும்புகிறீர்கள். உங்கள் மனைவி இறந்து விட்டாள், உங்கள் காதலன் இறந்துவிட்டான், உங்கள் நண்பன் இறந்து விட்டான். ஆனால் அது பார்ப்பதற்கு நன்றாக இராது,

நீங்கள் ஒரு பலவீனமானவர், ஒரு பெண்ணுக்காக அழுபவர் போலப் பார்க்கப்படும், நீங்கள் அதை அடக்குகிறீர்கள். அந்த அழுகையை எங்கே வைத்துள்ளீர்கள்? இயற்கையாக நீங்கள் அதை வயிற்றிலே அடக்குகிறீர்கள். அந்த ஒரு இடம்தான் உடலில் உள்ளது, ஒரே காலியிடம் அதில் நீங்கள் அழுத்தலாம்.

நீங்கள் வயிற்றில் அடக்குவீர்களானால் ஒவ்வொருவரும் பலவிதமான உணர்வுகளை அடக்கியுள்ளனர். அன்பு, காமம், கோபம்,சோகம், அழுகை - சிரிப்பும்கூட உங்களால் வயிறு குலுங்கச் சிரிக்க முடியாது. அது பார்ப்பதற்கு அநாகரிகமாக உள்ளது - பின் நீங்கள் நாகரிகமற்றவர் ஆவீர்கள். நீங்கள் எல்லாவற்றையும் அடக்கியுள்ளீர்கள். இவ்வாறு அடக்குவதனால் உங்களால் ஆழமாகச் சுவாசிக்க முடியவில்லை, மேலெழுந்த வாரியாக நீங்கள் சுவாசிக்க வேண்டியதிருக்கிறது. ஏனென்றால் நீங்கள் ஆழமாகச் சுவாசித்தால் பின்பு அடக்குவதனால் ஏற்பட்ட புண்கள், அவற்றுடைய சக்தியை வெளியேற்றும். நீங்கள் பயப்படுகிறீர்கள். ஒவ்வொருவரும வயிற்றினுள் செல்வதற்கு அச்சம் கொள்கின்றனர்.

ஒவ்வொரு குழந்தையும், பிறந்தபோது வயிற்றின்மூலம் சுவாசிக்கிறது. குழந்தை தூங்குவதைப் பாருங்கள்; வயிறு மேலும், கீழும் செல்கிறது - மார்பு ஒருபோதும் இல்லை. அவர்கள் வயிற்றின் மூலமாகச் சுவாசிக்கிறார்கள். இப்போது அவர்கள் முழுதும் தடையின்றி இருக்கின்றனர். எதுவுமே அடக்கப்படவில்லை. அவர்களுடைய வயிறுகள் காலியாக உள்ளன, உடலில் அந்த காலியிடத்திற்கென ஓர் அழகுள்ளது.

ஒரு முறை வயிற்றிற்கு மிக அதிகமாக அடக்குதல் ஏற்பட்டால், தாழ்ந்தபகுதி, உயர்ந்த பகுதி என உடல் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு விடுகிறது. பின்பு நீங்கள் ஒன்றல்ல; நீங்கள் இரண்டாகி விடுகிறீர்கள். தாழ்ந்த பகுதி ஒதுக்கப்பட்ட பகுதியாகும். ஒன்றான தன்மை இழக்கப்பட்டுவிட்டது. உங்கள் இருப்புத் தன்மையில் (being) இருமை நுழைந்து விட்டது. இப்போது நீங்கள் அழகாக இருக்க முடியாது. நீங்கள் நேர்த்தியாக இருக்க முடியாது. நீங்கள் ஒன்றிற்குப் பதிலாக இரண்டு உடல்களைச் சுமந்து கொண்டிருக்கிறீர்கள் - அங்கு எப்போதும் இரண்டிற்கிடையிலும் ஓர் இடைவெளி தொடர்ந்து இருந்து கொண்டே இருக்கிறது. நீங்கள் அழகாக நடப்பதற்கு இயலாது. எப்படியோ உங்களுடைய கால்களை நீங்கள் சுமக்க வேண்டும்.

உண்மையில் உங்களுடைய உடல் நன்றாக இருந்தால், உங்களை உங்கள் கால்கள் சுமந்து செல்லும். உடல் இரண்டாகப் பிரிக்கப் பட்டிருந்தால் பின்பு நீங்கள் உங்கள் கால்களைச் சுமந்து செல்ல வேண்டும்.

உங்களது உடலை நீங்கள் இழுத்துச் செல்ல வேண்டிய திருக்கிறது. அது ஒரு சுமை போல உள்ளது. நீங்கள் அதை அனுபவிப்பது இல்லை. ஒரு நல்ல நடையை உங்களால் அனுபவிக்க முடியாது. நன்றாக நீந்துவதை அனுபவிக்க முடியாது. வேகமான ஓட்டத்தை அனுபவிக்க முடியாது - ஏனென்றால் உடல் ஒன்றல்ல. இந்த எல்லா இயக்கத்திற்கும், அவற்றை அனுபவிப்பதற்கும் உடல் மறுபடியும் ஒன்று சேர்க்கப்பட வேண்டிய தேவை உள்ளது. மறுபடியும் ஒரு பொருத்தம் உருவாக்க வேண்டும்; வயிறு முழுதுமாக சுத்தப்படுத்தப்பட வேண்டும்.

வயிற்றைச் சுத்தம் செய்வதற்கு, மிக ஆழ்ந்த சுவாசம் தேவை உள்ளது. ஏனென்றால் நீங்கள் மூச்சை உள்ளிழுப்பது ஆழமாக, மூச்சை வெளிவிடுவது ஆழமாக இருக்கும்போது வயிறு, அது எவையெல்லாம் சுமந்து கொண்டிருக்கிறதோ அவற்றையெல்லாம் வெளியே தள்ளுகிறது. மூச்சை வெளிவிடும் போது வயிறு தானாகவே வெளியேற்றுகிறது. ஆகையால் பிராணாயாமத்தின் முக்கியத்துவன் ஆழமான, இசைவான சுவாசித்தல் ஆகும். மூச்சை வெளிவிடுவதில் முக்கியத்துவம் கொடுக்கப்படவேண்டும். அவ்வாறாக வயிறு தேவை யில்லாமல் சுமந்து கொண்டிருக்கும் எல்லாமே வெளிவிடப்படுகிறது.

வயிறு உள்ளே உணர்வுகளைச் சுமந்து கொண்டிருக்க வில்லையானால், உங்களுக்கு மலச்சிக்கல் இருந்தால், அது உடனடியாக மறைந்துவிடும். நீங்கள் வயிற்றில் உணர்வுகளை அடக்குவீர்களானால் மலச்சிக்கல் அங்கு இருக்கும். ஏனென்றால் வயிறு அதனுடைய இயக்கத்திற்கு தடையோடு இருக்கிறது. நீங்கள் ஆழமாக அதை கட்டுப்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள். அதனுடைய சுதந்திரத்தை நீங்கள் அனுமதிப்பதில்லை. ஆகையால் உணர்வுகள் அடக்கப்பட்டால், அங்கே மலச்சிக்கல் உள்ளது. மலச்சிக்கல் உடலைச் சார்ந்தது என்பதை' விட மனதைச் சார்ந்த வியாதியாகும். அது உடலைச் சார்ந்ததை விட மனதைச் சார்ந்தது.

நான் மனதையும், உடலையும் இரண்டாகப் பிரிக்கவில்லை என்பதை ஞாபகத்தில் கொள்ளுங்கள். அவை ஒரே நிகழ்வின்

(காட்சிகள்) இரண்டு பகுதிகளாகும். மனதும் உடம்பும் இரண்டு விஷயங்கள் அல்ல. உண்மையில் "மனதும் உடம்பும்" என்று சொல்வது சரியானதல்ல. "மனம் உடல்" என்பது சரியாகச் சொல்வதாகும். உங்களுடைய உடல் உளம்சார்ந்த கோட்பாடாகும். (psychosomatic) மனது உடலின் மிக நுண்ணிய பகுதியாகும், உடல் மனதினுடைய முரடான (கடினமாக) பகுதியாகும். அவை இரண்டும ஒன்றை மற்றொன்று பாதிக்கின்றன; அவை இணையாகச் செல்கின்றன. நீங்கள் மனதினுள் ஏதாவது அடக்குவீர்களானால், உடல் அடக்கப்பட்ட ஒரு பயணத்தை ஆரம்பிக்கும். மனது எல்லாவற்றையும் வெளிவிடுமானால், உடலும் கூட எல்லாவற்றையும் வெளிவிட்டு விடும். அதனால் தான் நான் ஆழ்ந்த உணர்ச்சிகளை வெளிப்படும் முறைக்கு (catharsis) மிக அதிக முக்யத்துவம் கொடுக்கிறேன். ஆழ்ந்த உணர்ச்சிகள் வெளிப்படுத்தும் முறை (catharsis) சுத்தப்படுத்தும் செயல்முறையாகும்.

உண்ணா நோன்பு, இயற்கையானவற்றை உண்ணுதல்; ஆழமான, இசைவான சுவாசம், யோகப் பயற்சிகள்; இயற்கையோடு அதிகமாக இணைந்து வாழுதல், இணக்கமுள்ள வளைந்து கொடுக்கிற வாழ்க்கை மிகக் குறைந்த அடங்கப்பட்ட மனோபாவம்; உடலை அதனுடைய சொந்தக் கருத்திற்கு அனுமதிப்பது உடலினுடைய அறிவைத் தொடர்ந்து சொல்லுதல் இவை எல்லாம் தவநெறிகள் ஆகும். "தவநெறிகள் அசுத்தங்களை அழிக்கின்றன" இவற்றை நான் தவநெறிகள் என்று அழைக்கிறேன். "தவநெறிகள்" என்பது உடலை வருத்தவது என்ற பொருளில் அல்ல. அது உடலினுள் ஒரு வாழ்வு என்ற அக்னியை உருவாக்குவது என்பதாகும். அதனால் உடல் சுத்தமடைகிறது. தங்கத்தை நெருப்பினுள் போடுவது போல - எதுவெல்லாம் தங்கம் இல்லையோ அவை எரிக்கப்பட்டு தூய்மையான தங்கத்தை மட்டும் வெளிவிடுகிறது.

"தவநெறிகளாய் அசுத்தங்கள் அழிக்கப்பட்டு அதன் பலனாக உடம்பும் ஐம்புலன்களும் மேன்மையடைகின்றன.உடல், மனோ சக்திகள் விழிப்படைகின்றன." உடல் தூய்மையடையும் போது, மிக அதிகமான புதிய பரிமாணங்கள் உங்கள் முன்னால் திறக்கப் படுகின்றன, புதிய கதவுகள் திடீரென திறக்கப்படுகின்றன. புதிய சாத்தியக் கூறுகள் ஏற்படுகின்றன. உடலில் அதிகமான மறைந்த சக்திகள் உள்ளன. ஒரு முறை அது வெளியேற்றப்பட்டால் மிக

அருகாமையில் உள்ள இந்த உடல் பல விஷயங்களைச் சுமந்து வந்திருக்கிறது என்பதை உங்களால் நம்பமுடியாது.

ஒவ்வொரு புலனுக்கும் அதற்குப் பின்னால் மறைந்துள்ள ஒரு புலன் உள்ளது. கண்களுக்கு மறைந்துள்ள பார்வை உள்ளது, அவற்றுக்குப் பின்னால் ஒரு நுண்ணறிவு உள்ளது. கண்கள் தூய்மையாக, சுத்தமாக இருக்கும் போது, நீங்கள் பொருள்கள் மேல்தளத்தில் உள்ளது போல பின்பு பார்க்கமாட்டீர்கள். நீங்கள் அவைகளின் ஆழத்தைக் காண ஆரம்பித்து விடுவீர்கள். ஒரு புதிய பரிமாணம் திறக்கப்படுகிறது. இந்தப்போதில் நீங்கள் ஒரு மனிதரைப் பார்க்கும் போது அவனுடைய ஸ்தூல உடலை மட்டும் பார்க்கிறீர்கள், அவனுடைய ஆராவைப் (aura) பார்ப்பதில்லை. ஸ்தூல உடல் நுண்ணிய ஆராவினால் (aura) சூழப்பட்டுள்ளது. ஒரு பாவியுள்ள ஒளி உடலைச் சூழ்ந்துள்ளது. ஒவ்வொருவருடைய உடலும் வித்யாசமான கலர் ஆராவினால் (aura) சூழப்பட்டுள்ளது. உங்கள் கண்கள் சுத்தமடையும் அந்த வினாடியில் நீங்கள் ஆராவைப் (aura) பார்க்கலாம். ஆராவைப் (aura) பார்ப்பதன் மூலம், அந்த மனிதனைப் பற்றி எந்த வழியிலும் தெரிந்து கொள்ள முடியாதவற்றை எல்லாம் நீங்கள் தெரிந்து கொள்ளலாம். அந்த மனிதன் உங்களை ஏமாற்ற முடியாது, அது முடியாதது, ஏனென்றால் அவனுடைய ஆரா (aura) அவனுடைய இருபபுத் தன்மையை (being) வெளிப்படுத்தும்.

யாரோ ஒருவர் நேர்மையில்லாத ஆராவோடு (aura) வந்து, அவன் தான் நேர்மையான மனிதன் என்று உங்களை நம்பச் செய்ய முயன்றால், ஆராவால் (aura) ஏமாற்ற முடியாது, ஏனென்றால் அந்த மனிதனால் ஆராவைக் (aura) கட்டுப்படுத்த முடியாது. அது முடியாதது. நேர்மையில்லாத ஆராவிற்கு வேறுவிதமான நிறம் உள்ளது. நேர்மையான மனிதருடைய ஆராவிற்கு வேறுவிதமான நிறம் உள்ளது. ஒரு தூய்மையான மனிதருடைய ஆராவின் நிறம் தூய்மையான வெள்ளை நிறமாகும். அதிகத் தூய்மையற்ற ஒரு மனிதனுக்கு, அதிக வெள்ளை நிறம், சாம்பல் நிறத்தை நோக்கி செல்கிறது. அன்றும் அதிகமாக தூய்மையற்றிருந்தால் அது இன்றும் அதிகமான கறுப்பு நிறத்தை நோக்கிச் செல்கிறது. ஒரு முழுதுமான தூய்மையற்ற மனிதனுடைய ஆரா முழுவதும் கறுப்பு நிறமானது. ஒரு குழப்பமடைந்த மனிதனுடைய ஆரா மாறிக் கொண்டிருக்கிறது. அது ஒரே மாதிரி கிடையாது. நீங்கள் ஒரு சில வினாடிகளுக்குப் பார்த்துக்

கொண்டே இருந்தீர்களானால், ஆராமாற்றமடைவதை நீங்கள் காணுவீர்கள். அந்த மனிதன் குழப்பமடைந்துள்ளான். அவன், அவன் எதுவுவோ அதில் நிலைக்கவில்லை. அவன் ஒரு மாறிக் கொண்டிருக்கும் ஆரா ஆவான்.

தியானம் பண்ணும் மனிதனுடைய ஆராவிற்கு, ஓர் அமைதியான தன்மை உள்ளது. ஓர் அமைதி, ஒரு குளிர்ச்சி அவனைச் சுற்றியுள்ளது. ஆழ்ந்த மனவிசாரத்தோடு, குழப்பத்தோடு, இறுக்கத்தோடு இருக்கும் மனிதனுடைய ஆராவிற்கும் கூட மேலே கூறிய தன்மைகள் இருக்கும். அதிகமன இறுக்கமுள்ள மனிதன் புன்னகை பண்ணுவதற்கு முயன்றால், ஒரு முகத்தை உருவாக்கினால், ஒரு முகமூடியை வைத்திருந்தால் அவன் உங்களிடம் வரும்போது அவனுடைய ஆரா உண்மையைக் காட்டி விடும்.

காதுகளுக்கு கூட அதே நடைபெறுகிறது. எப்படி கண்களுக்கு ஓர் ஆழ்ந்த நுண்ணறிவு இருக்கிறதோ, அதுபோல காதுகளுக்கும் ஓர் ஆழ்ந்த கேட்கும் தன்மை உள்ளது. பின்பு நீங்கள் அந்த மனிதன் என்ன சொல்லுகிறான் என்பதைக் கேட்பதில்லை, ஆனால் இன்னும் சொல்லப்போனால் நீங்கள் இன்னிசையை கேட்கிறீர்கள். நீங்கள் அவன் உபயோகிக்கும் வார்த்தைகளைப் பற்றி தொந்தரவு கொள்வதில்லை, அவனுடைய குரல், அவனுடைய குரலின் இயற்கையான இணைப்பு... குரலின் உள்ளாழ்ந்த தன்மையானது, வார்த்தைகளால் ஏமாற்ற முடியாததை சொல்லுகிறது. அந்த மனிதன் மிகவும் மரியாதையாக இருப்பதற்கு முயற்சி செய்யலாம், ஆனால் அவனுடைய மூர்க்கத்தனம், அவனுடைய சப்தத்தில் உள்ளது. அந்த மனிதன் மிகவும் நேர்த்தியாக இருப்பதற்கு முயற்சி செய்யலாம், ஆனால் அவனுடைய சப்தம், அவனுடைய விகாரத்தைக் காண்பிக்கும். அந்த மனிதன் தன்னுடைய நிச்சயத் தன்மையைக் காண்பிக்க முயன்றால் அவனுடைய சப்தம் தயங்குகின்ற தன்மையைக் காண்பித்து விடும்.

நீங்கள் அந்த ஆதாரமான ஒலியைக் (very sound) கேட்டால், நீங்கள் அந்த ஆராவைப் பார்த்தால், உங்களுக்கு அருகில் உள்ள இருப்புத் தன்மையின் (being) தன்மையை உணர்ந்தால், நீங்கள் நிறைய விஷயங்களில் திறமை உள்ளவராகி விடுகிறீர்கள். இவைகள் மிகவும் எளிமையான விஷயங்கள். தவ நெறிகள் ஆரம்பமாகும்போது அவை நடைபெற ஆரம்பிக்கின்றன.

ஆழமான சக்திகள் அங்கே உள்ளன. அவை யோக சித்திகள் என்று அழைக்கின்றன. மந்திர சக்தி, ஆச்சரியமான சக்திகள். அவை அதியமானவையாக பார்ப்பதற்கு உள்ளன. ஏனென்றால் அதனுடைய நுட்பத்தை (வேலை செய்யும் விதத்தை), அது எப்படி செய்லபடுகிறது என்பதை நாம் புரிந்து கொள்ளவில்லை. ஒரு முறை நீங்கள் அதன் நுட்பத்தை அறிந்து கொண்டால் அவை அதிசயமல்ல. உண்மையில் ஓர் அதிசயம் சாத்தியமல்ல. நடைபெறுபவை எல்லாம் ஒரு விதிமுறையின் படி நடைபெறுகிறது. விதிமுறைகள் தெரியாமல் இருக்கலாம், பின்பு நீங்கள் அதை ஓர் அதிசயம் என்று அழைக்கலாம். விதிமுறையைத் தெரிந்து கொண்டபோது அதிசயம் மறைந்து விடுகிறது.

இப்பொழுதுதான் இந்தியாவில் கிராமங்களில் தொலைக்காட்சிப் பெட்டியை (டிவி) அறிமுகப்படுத்தி உள்ளார்கள். கிராமத்தினர் முதன் முறையாக இந்திரா காந்தியை தொலைக்காட்சிப் பெட்டியில் பார்த்தனர். கிராமத்தினர் அவற்றைப் "படப்பெட்டிகள்" என்று அழைத்தனர். அவர்களால் நம்ப முடியவில்லை. முடியாதது. அவர்கள் பெட்டிகளைச் சுற்றிச் சென்றனர். எல்லா இடங்களிலிருந்தும் பார்த்தனர். எப்படி இந்திரா காந்தி பெட்டிக்குள் மறைந்திருக்கிறார்? ஓர் அற்புதம், நம்ப முடியாதது, ஆச்சரியமானது, ஆனால் ஒரு முறை நீங்கள் விதிமுறையைப் பற்றி அறிந்து கொண்டால் விஷயம் எளிமையானது.

எல்லா அற்புதங்களும் மறைந்துள்ள விதிமுறைகளுக்கு இணங்குவதாக (அனுசரித்து) உள்ளன. யோகம், உலகத்தின் அற்புதங்கள் இல்லையென்று சொல்லுகிறது. ஏனென்றால் "அற்புதம்" என்பது ஏதேனும் ஒன்று, விதிமுறைகளுக்குப் புறம்பானது, அது சாத்தியமில்லை. அங்கே பிரபஞ்ச விதிமுறைகளுக்குப் புறம்பாகச் செல்லும் சாத்தியம் எப்படி இருக்கமுடியும்? எந்த சாத்தியக்கூறும் இல்லை. மக்கள் அறிந்து கொள்ளவில்லையென்றால் அது இருக்கலாம்.

நீங்கள் தூய்மையின் ஆழத்திற்குச் செல்லும் போது, மேன்மையடையும் போதும் சித்திகள் ஏற்பட முடியும். உதாரணமாக நீங்கள் உங்கள் ஸ்தூல உடலில் இருந்து நுண் உடலை நகர்த்தலாம். நீங்கள் நிறைய விஷயங்களைச் செய்யலாம். அவை அற்புதங்கள் ஆகும். நீங்கள் மக்களைப்போய்ப் பார்க்கலாம், அவர்கள் உங்களைப்

பார்க்கலாம். ஆனால் அவர்களால் உங்களைத் தொட முடியாது. உங்களுடைய நுண் உடலின் உபாயத்தின் மூலமாக நீங்கள் அவர்களுடன் பேசலாம். நீங்கள் மக்களைக் குணப்படுத்தலாம். உண்மையில் நீங்கள் தூய்மையடைந்தால், நீங்கள் தொடும்போது, கைகளை மேல் வைக்கும்போது அங்கே ஓர் அற்புதம் நடைபெறும். உங்களைச் சுற்றிலும் குணப்படுத்தும் சக்தி இருக்கும். நீங்கள் எங்கெல்லாம் செல்கிறீர்களோ அங்கு குணப்படுத்துதல் நடைபெறும். நீங்கள் அதைச் செய்கிறீர்கள் என்பதல்ல. அந்த மிகத்தூய்மை... நீங்கள் அந்த எல்லையற்ற சக்திகளுக்கும் காதனமாகி விடுகிறீர்கள். ஆனால் ஒருவர் உள்ளே செல்ல வேண்டும். ஒருவர் தன்னுடைய உள்ளாழ்ந்த கருப்பொருளைத் (inner most core) தேட வேண்டும்.

"தவநெறிகளால் அசுத்தங்கள் அழிக்கப்படுகின்றன, அதன் பலனாக உடம்பும் ஐம்புலன்களும் மேன்மையடைகின்றன. உடல், மனோ சக்திகள் விழிப்படைகின்றன." மிகச்சிறந்த சக்திகள் உங்களுள் விழித்தெழுவது என்பது மரணமற்ற நிலையை உணருவதுதான். நீங்கள் அழிவற்றவர் என்ற ஒரு கோட்பாடு, ஒரு முறை ஒரு தத்துவம் உங்களுக்கு உள்ளது என்பதல்ல. இப்போது உங்களுக்கு ஓர் உணர்வுள்ளது. இப்போது நீங்கள் அதில் நிலைத்துள்ளீர்கள். அது ஒரு கோட்பாடு என்ற கேள்வியில்லை. அது அங்கே மரணமில்லை என்பதை நீங்கள் அறிந்துள்ளதாக ஆகியுள்ளது. இந்த உடல் அதனுடைய மூலப்பொருள்களுடன் மறைந்துவிடலாம், ஆனால் உங்கள் உணர்வு மறையாதது. மனம் அழிந்து போகலாம், எண்ணங்கள் விடுவிக்கப்படலாம், உடல் அதனுடைய மூலப்பொருள்களுடன் சென்று விடலாம் - ஆனால் நீங்கள் சாட்சியான இருப்பாக (witnessing self) தொடர்ந்து இருந்து கொண்டிருப்பீர்கள்.

நீங்கள் அதை அறிந்து கொண்டுள்ளீர்கள். ஏனென்றால் இப்போது நீங்கள் உங்கள் உடலை தொலைவிலிருந்து, தொலைதூர வெளியில் இருந்து பார்க்கிறீர்கள். நீங்கள் உங்கள் உடலை உங்களிலிருந்து தனியாகப் பார்க்கிறீர்கள். நீங்கள் உடலில் இருந்து வெளிவந்து அதைப் பார்க்கிறீர்கள். நீங்கள் உங்கள் சொந்த உடலைச் சுற்றிச் செல்ல முடியும். நீங்கள் மரணமடையும்போது உடல் பிரிந்து விடுகிறது. ஆனால் நீங்கள் அல்ல என்பதை இப்போது தெரிந்து கொள்கிறீர்கள், இப்போது மனம் ஒரு பயோ கம்ப்யூட்டர் (bio computer) வேலை செய்யும் முறைபோல செயல்படுவதைப் பார்க்கலாம். நீங்கள்

உணர்பவர் (பார்ப்பவர்) மனம் அல்ல. இப்போது உடலும், மனமும் செயல்பட்டுக் கொண்டே இருக்கின்றன. ஆனால் நீங்கள் அதோடு ஒன்றியிருக்கவில்லை.

தான் மரணமற்றவன் என்பதை அறிந்து கொள்ளும் இதுதான் ஒரு மனிதனுக்கு நிகழக்கூடிய மகாச் சிறந்த அதிசயமாகும். பின்பு மரணபயம் மறைந்து விடுகிறது, மரணபயம் மறைவதன் மூலம் எல்லா பயங்களும் மறைந்துவிடுகின்றன.

பயம் மறையும் போது அன்பு உதயமாகிறது. எப்படி பயத்தினால் செல்லும் மனத்தில் அன்பு உதயமாக முடியும்? நீங்கள் நட்பைத் தேடிச் செல்லலாம், நீங்கள் உறவைத் தேடிச் செல்லலாம், ஆனால் நீங்கள் அதை பயத்தினால் தேடிச் செல்கிறீர்கள் - உங்களை மறப்பதற்காக, உங்களை உறவுகளில் மூழ்கடித்துக் கொள்கிறீர்கள். அது அன்பு அல்ல; நீங்கள் மரணத்தைக் கடந்து செல்லும்போது மட்டுமே அன்பு உதயமாகிறது. அவை இரண்டும் ஒன்றாக இருக்க முடியாது. நீங்கள் மரணத்திற்குப் பயப்படுவீர்களானால், எப்படி உங்களால் அன்பு செலுத்த முடியும்? இந்த பயத்தினால் நீங்கள் ஒரு துணையைக் கண்டு கொள்ள முயற்சிக்கிறீர்கள், ஆனால் உறவு பயத்தோடு தொடர்ந் திருக்கும்.

அதனால் தான் தொண்ணூற்று ஒன்பது சதவிகித மதப்பற்றுள்ள மக்கள் பிரார்த்தனை பண்ணுகின்றனர். ஆனால் அவர்களுடைய பிரார்த்தனை உண்மையான பிரார்த்தனை அல்ல. அது அன்பினால் அல்ல; அது பயத்தினால், அவர்களுடைய கடவுள் பயத்தினாலேயே அபூர்வமாக, ஒரு சதவிகித மதப்பற்றுள்ள மனிதர்கள் மட்டுமே, மரணமற்ற நிலையை உணர்கின்றனர். பின்பு ஒரு பிரார்த்தனை உதயமாகிறது. அது பயத்தினால் அல்ல, அது அன்பினால் முற்றிலும் நன்றியுடன், மிக்க நன்றியுடன்.

**ஸ்வாத்யாயாத் இஷ்ட தேவதா சம்ப்ர யோக:**

தன்னை அறிதலினால் தெய்விகத்தோடு ஐக்யமாதல் (ஒன்றாதல்) நடைபெறுகிறது - ஸ்வாத்யாயாத்

இது மிக முக்யமான சூத்திரம்: "தன்னை அறிதலினால் தெய்விகத்தோடு ஐக்கியமாதல் நடைபெறுகிறது" ஒருவர் தன்னைப்பற்றி அறிந்து கொள்ள வேண்டும் - அது தெய்விகத்தை அடைவதற்கான ஒரே வழியாகும். பதஞ்சலி, "கோயிலுக்குச்

செல்லுங்கள்'' என்று சொல்லவில்லை. அவர் ''சர்ச்சிற்குச் செல்லுங்கள் என்று சொல்லவில்லை. அவர் ''சடங்குகள் செய்யுங்கள்'' என்று சொல்லவில்லை. இல்லை, தெய்விகத்தோடு ஒன்றாதல் என்பது அந்த வழியில் அல்ல. உங்களுள் செல்லுங்கள், அவன் உங்களுடைய உள்ளாழ்ந்த கருப்பொருளாகும். (within most core) நீங்கள் கோயிலாகும்; உள்ளே செல்லுங்கள். உங்களை அறியுங்கள். நீங்கள் எவை எல்லாமோ அதை அறியுங்கள். நீங்கள் உங்களை முழுதுமாக என்று அறிந்து கொண்டீர்களோ, அன்று அவன் வெளிப்படுத்தப் படுகிறான். அவன் உங்களுக்குப் பின்னால் மறைந்துள்ளான்.

உண்மையில் அந்த 'அறிதல்' என்பது குர்ஜீம்ஃபே குறிப்பிடுகின்ற ''தன்னை நினைவில் கொள்ளுதல்'' என்பதாகும். பதஞ்சலியினுடைய ஸ்வாத்யாயாத் என்பது குர்ஜீஃபே குறிப்பிடுகின்ற ''தன்னை நினைவில் கொள்ளுதல்'' என்பதேயாகும். உங்களை ஞாபகத்தில் கொண்டு கவனித்துக் கொண்டே இருப்பது. நீங்கள் எப்படி மக்களிடம் தொடர்ஸப கொள்கிறீர்கள் - கவனியுங்கள். உறவுகள் ஒரு கண்ணாடியாகும். எப்படி நீங்கள் அந்நியர்களிடம் தொடர்பு கொள்கிறீர்கள், எப்படி உங்களுக்குத் தெரிந்த மக்களிடம் தொடர்பு கொள்கிறீர்கள், எப்படி உங்கள் வேலையாளிடம் தொடர்பு கொள் கிறீர்கள், எப்படி உங்கள் அதிகாரியிடம் தொடர்பு கொள்கிறீர்கள் - கவனித்துக் கொண்டே இருங்கள். நீங்கள் உங்கள் முகமூடியை மாற்றுகிறீர்கள். உங்களுடைய பேராசையைப் பாருங்கள், உங்களு டைய பொறாமையைப் பாருங்கள், உங்களுடைய பயத்தைப் பாருங்கள், உங்களுடைய மனவிசாரத்தைப் பாருங்கள், பொருள்களைச் சேர்த்துக் கொண்டிருப்பதை பார்த்துக் கொண்டே, கவனித்துக் கொண்டே இருப்பது.

எதையும் செய்ய வேண்டிய தேவை அங்கே இல்லை! அதுதான் இந்தச் சித்திரத்தின் அழகாகும். பதஞ்சலி ''ஏதாவது செய்யுங்கள்'' என்று சொல்லவில்லை! அவர், ''உங்களை அறிந்து கொள்ளுங்கள்'' என்று சொல்லுகிறார். ஆழ்ந்த அறிதல், ஆழ்ந்த தெரிந்து கொள்ளுதல் செய்கிறது. நீங்கள் உங்கள் முழு இருப்புத் தன்மையின் (whole being) எதிரெதிராக வரும் போது ஒரு மாற்றம் நடைபெறும்.

மாறுபட்ட மனோபாவங்களில் நீங்கள்சோகமாக இருக்கும் போது - கவனியுங்கள்; நீங்கள் சந்தோஷமாக இருக்கும் போது - கவனியுங்கள்; நீங்கள் சிரத்தையற்றிருக்கும் போது - கவனியுங்கள்;

நீங்கள் நம்பிக்கையற்றிருக்கும் போது - கவனியுங்கள்; நீங்கள் நம்பிக்கையில் நிறைந்திருக்கும் போது - கவனியுங்கள்; ஆசையில், ஏமாற்றத்தில்... உங்களைச் சுற்றி லட்சக்கணக்கான மனோநிலைகள் உள்ளன - கவனித்துக் கொண்டே இருங்கள். ஒவ்வொரு மனோ நிலையும் உங்களுள் பார்ப்பதற்கு ஒரு ஜன்னலாக (சாளரமாக) இருக்கட்டும். வானவில்லின் எல்லா நிறங்களிலிருந்தும் உங்களைக் கவனியுங்கள். நீங்கள் தனிமையில் இருக்கும் போது - கவனியுங்கள்; நீங்கள் தனிமையில் இல்லாத போது கவனியுங்கள்; மலைகளுக்குச் சென்று தனிமைப்படுத்தப்பட்டபோது - கவனியுங்கள். தொழிற் சாலைக்குச் செல்லுங்கள், அலுவலகத்திற்குக் எப்படி மாறுகிறீர்கள் எங்கே மாறுகிறீர்கள் என்று கவனியுங்கள்.

நீங்கள் கவனித்துக் கொண்டே இருந்தால்... ஒரு வினாடிக்குக்கூட இந்த கவனித்துக் கொண்டிருப்பதை ஒரு போதும் தளர்வு செய்ய வேண்டாம். புத்தர், "பின்பு நீங்கள் படுக்கைக்குப் போகும் போதும் - கவனித்துக் கொண்டே இருங்கள். நீங்கள் உறக்கத்தினுள் நுழையும் போது, நீங்கள் எப்படி உறங்குகிறீர்கள் என்பதை கவனித்துக் கொண்டே இருப்பது" என்று கூறியுள்ளார். கவனித்துக் கொண்டே இருப்பது. எந்த ஒன்றும் கவனிப்பில்லாமல் செல்லுவதை அனுமதியாதீர்கள். இந்த தன்னை - ஞாபகத்தில் கொள்ளுதல், இந்த தன்னை - அறிதல், எல்லாமே செய்யும். நீங்கள் கேட்க வேண்டிய தேவையில்லை, "கவனித்த பின்பு நான் என்ன செய்ய வேண்டும்?" ஒன்றும் தேவை இல்லை. ஒரு முறை உங்களது வெறுப்பை முழுதுமாகக் கவனித்தால், அது மறைந்துவிடும்.

இதுவே பிரமாணமாகும்: எது கவனிப்பதனால் மறைந்து விடுகிறதோ அது பாபம், எது கவனிப்பதனால் வளர்ச்சியடைகிறதோ அது புண்ணியம். அது ஒன்றுதான் நான் உங்களுக்குக் கொடுத்துள்ள வரையறையாகும். நான் "இது பாபம், அது புண்ணியம்" என்று சொல்லவில்லை. இல்லை பாப புண்ணியம் புலன்களை உணரும்படி காண்பிக்க முடியாது. எது கவனிப்பதன் மூலம் வளர்ச்சியடைகிறதோ அது புண்ணியம். எது கவனிப்பதன்மூலம் மறைகிறதோ அது பாபம். கோபம் கவனிப்பதன் மூலம் மறைந்துவிடுகிறது; அன்பு வளர்கிறது. வெறுப்பு மறைந்து விடுகிறது; கருணை வளர்கிறது. ஆகையால் எவையெல்லாம் மறைந்து விடுகிறதோ அவை பாபம் எதுவும் அதற்காகச் செய்யத் தேவையில்லை. அப்படியே கவனியுங்கள், அது மறைந்துவிடும். அது நீங்கள் இருட்டுள்ள அறைக்கு விளக்கு

கொண்டு வந்த போது இருள் மறைந்தது போல அது மறைந்து விடுகிறது. அறை மறைந்து போவதில்லை. இருள் மறைந்து போகிறது.

கவனிப்பதன் மூலம் நீங்கள் மறைந்து போவதில்லை. உண்மையில் கவனிப்பதன் மூலம் நீங்கள் வெளிப்படுத்தப் படுகிறீர்கள். இருள்மட்டும் மறைந்து விடுகிறது; கோபம் என்ற இருள் தனக்கென வைத்துக் கொள்ளல் என்ற இருள், பொறாமை என்ற இருள் - இது எல்லாம் மறைந்து விடும். உங்களுடைய ஆதியான (மூலமான) தூய்மையில் நீங்கள் மட்டும் விடப்படுகிறீர்கள். உங்களுடைய உள்வெளி (ஆகாயம்) மட்டும் விடப்படுகிறது - காலியாக, சூன்யமாக.

"தன்னையறிதலினால் தெய்விகத்தோடு ஐக்யமாதல் நடை பெறுகிறது." வேறு ஒன்றும் தேவையில்லை - தெரிந்து கொள்ளுதல்.

**சமாதி ஸித்தி: ஈஸ்வர ப்ரணிதானாத்**

*முழுமையான பிரகாசம் கடவுளிடம் சரணடைவதன் மூலம் ஏற்படுகிறது.*

நீங்கள் உங்களை அறிந்து கொண்டபோது, நீங்கள் உங்களை தெரிந்து கொண்டபோது... சரணாகதி. அது மிகவும் எளிமையாகி விடுகிறது. பின் அது முயற்சியல்ல. இப்போது நீங்கள் சரணடைய வேண்டுமென்றால் அது மிக அதிகமான முயற்சியினால் மட்டுமே, பின்பும் கூட அது முழுமையாக இராது. இந்தப் போதில் நீங்கள் சரணடைய விரும்பினால் உள்ளே வெறுப்புடன் எப்படி சரணடைய முடியும்? உள்ளே பொறாமையுடன் சரணடையமுடியும்? உள்ளே ஹிம்சையை வைத்துக் கொண்டு எப்படி சரணடைய முடியும்? நீங்கள் முழுதுமாக தூய்மையடைந்த பொழுதே சரணாகதி நடைபெற முடியும்.

நீங்கள் கடவுளிடம் சென்று அவருடைய காலடியில் உங்களுடைய வெறுப்பு, ஹிம்சை, பொறாமை ஆகியவற்றை எப்படிப் போட முடியும்? முடியாது. நீங்கள் தூய்மையடைந்த போது, ஒரு பூப்போன்ற தூய்மை - பின்பு நீங்கள் கோயிலினுள் நுழைகிறீர்கள், அதைச் சமர்ப்பணம் பண்ணுகிறீர்கள்.

சரணடைவதற்கு, ஒருவர் அதற்குத் தகுதியாக வேண்டும், ஏனென்றால் சரணாகதி மிகச் சிறந்த செயலாகும். அதைக் கடந்து வேறு எதுவும் இல்லை. நீங்கள் உங்கள் மனோ சக்தியினாலும், முயற்சியினாலும் சரணாகதி பண்ண முடியாது, ஏனென்றால் மனோ சக்தியும் முயற்சியும் அகங்காரத்தைச் சார்ந்தது. அகங்காரத்தினால்

சரணாகதி பண்ண முடியாது. நீங்கள் உங்களைப் பற்றி அறிந்து கொண்டே இருந்தீர்களானால், உங்களைக் கவனித்துக் கொண்டே இருந்தீர்களானால், அகங்காரம் மறைந்து விடும். நீங்கள் தொடர்ந்து இருந்து கொண்டே இருப்பீர்கள், ஆனால் அங்கு "நான்" இனி இல்லை. நீங்கள் ஒரு பரந்த வெற்றிடம் - அதில் நான் இல்லாமல் நீங்கள் ஓர் இருப்புத்தன்மை (amness) ஆனால் அதில் "நான்" இல்லாமல். இருப்புத்தன்மை (being) இருக்கிறது, அகங்காரம் இனிமேல் இல்லை - பின்பு சரணடைவதற்கு முடியும்.

"முழுமையான பிரகாசம் கடவுளிடம் சரணடைவதன் மூலம் ஏற்படுகிறது" முழுமையான பிரகாசம், சமாதி: நீங்கள் ஒளியாகவே ஆகிவிடுகிறீர்கள். எல்லாமே மறைந்து விடுகிறது. நீங்கள் சக்தியாக தொடர்ந்து இருந்து வருகிறீர்கள். மிகத் தூய்மையான சக்தியே ஒளியாகும். ஏதேனும் ஒன்று ஒளியுடைய வேகத்தில் செல்லுமானால், அது ஒளியாகவே ஆகிவிடுகிறது என்று இப்போது விஞ்ஞானிகள், பௌதீக சாஸ்திர வல்லுநர்கள் சொல்லுகின்றனர். ஒரு கற்செங்கல் ஒளியினுடைய வேகத்தில் எறியப்பட்டால், செங்கல் மறைந்து விடும்; சக்தி மட்டுமே தொடாந்து இருந்து வரும். இப்போது தான் அவர்கள் இதைக் கண்டுபிடித்துள்ளனர், இந்த நூற்றாண்டிற்குள் எல்லாப் பொருள்களும் ஒளியாக சக்தியாக மாற்றக் கூடிய சாத்தியக் கூறுகள் உள்ளன. பொருள் குறைந்த - வேகம் உள்ள சக்தி; ஒளி அதிக - வேகம் உள்ள சக்தியாகும்.

அகங்காரம் ஒரு ஸ்தூலப் பொருளாகும்; அது குறைந்த - வேகச் சக்தியாகும். நீங்கள் அதைச் சமர்ப்பிக்கும் போது, நீங்கள் ஒளியினுடைய வேகத்தை அடைகிறீர்கள். பின்பு நீங்கள் ஒரு திடப்பொருளாக இனி இல்லை. பின்பு நீங்கள் கனமற்ற சக்தியாகி விடுகிறீர்கள். கனமற்ற சக்திக்கு எல்லையில்லை. அது எல்லையற்றது. கனமற்ற சக்தியை எந்த வழியிலும் வரையறுத்துச் சொல்ல முடியாது - அதை ஒளி என்ற ஒரே வழியில் தான் சொல்ல முடியும். பைபிள் "கடவுள் ஒளியாவார்" என்று சொல்லுகிறது. கொரான், "கடவுள் ஒளியாவார்" என்று சொல்லுகிறது. உபநிஷதங்கள், "கடவுள் ஒளியாவார்" என்று சொல்லுகின்றன. நீங்கள் ஒளியாகி விடுங்கள்.

"முழுமையான பிரகாசம் கடவுளிடம் சரணடைவதன் மூலம் ஏற்படுகிறது" முதலில் தன்னை அறிதலின் மூலம் செல்லுங்கள், அதனால் நீங்கள் கடவுளை உள்ளே எதிரெதிராகப் பார்க்கலாம். பின்

அதற்குச் சரணடையுங்கள். அந்தச் சரணடைவது ஒரு முயற்சியல்ல என்பதை ஞாபகத்தில் கொள்ளுங்கள். ஆகையால் எப்படிச் சரணடைவது என்று தொந்தரவு கொள்ளாதீர்கள். சரணடைதல் அதன் நிழலாகத் தொடரும். சரணடைவதற்கு எந்த வழி முறையும் இல்லை. உங்களை ஒரு முறை அறிந்து கொண்டீர்களானால், இப்போது நீங்கள் எப்படி வணங்கி உங்களைச் சரணடையச் செய்வது என்பதை அறிந்து கொள்கிறீர்கள். சரணடைந்து விட்டால் நீங்கள் கடவுளாகவே ஆகிவிடுகிறீர்கள். முழுமையுடன் சண்டையிடும்போது நீங்கள் ஓர் அவலக்ஷணமாக அகங்காரமாக இருந்து வருகிறீர்கள். முழுமையோடு சரணடையும் போது நீங்கள் முழுமையாகி விடுகிறீர்கள்.

உங்கள் மனதில் பேராசை எழலாம்: "பின் ஏன் காத்திருக்க வேண்டும்? இப்போது நான் ஏன் சரணடையக் கூடாது?" உங்களால் முடியாது. நீங்கள் தான் தடையாக இருக்கிறீர்கள். ஆகையால் எப்படி உங்களால் சரணடைய முடியும்? நீங்கள் இல்லாத போதே சரணாகதி நடைபெறும். நீங்கள் இருப்பீர்களானால் சரணாகதி சாத்தியமில்லை. நீங்கள் சரணடைய மாட்டீர்கள். நீங்கள் மறைந்து விடுவதே சரணாகதியாகும். நீங்கள் ஒரு வழியிலே செல்வீர்களானால் அடுத்த வழியிலே சரணாகதி நுழைந்து விடும். நீங்களும் சரணாகதியும் ஒன்றாக இருக்க முடியாது.

ஞாபகத்தில் கொள்ளுங்கள், நீங்கள் சரணடைய முடியாது. உங்களைக் கவனியுங்கள். அதனால் நீங்கள் தூய்மையாக, இன்னும் தூய்மையாக இன்னும் அதிகத் தூய்மையாக ஆகும் போது... அங்கே ஏறக்குறைய ஒன்றுமே இல்லாத, தூய்மை மட்டுமே, ஒரு நறுமணம் - பின்பு சரணாகதி நிகழும்.

இந்தச் சூத்திரத்தில் முழுமையான பிரகாசம் கடவுளிடம் சரணடைவதன் மூலம் ஏற்படும் என்று எளிமையாகப் பதஞ்சலி கூறுகிறார். அவர் எப்படி சரண்டைவது என்று சொல்லவில்லை. அவர் அந்த நிகழ்தலைச் சுட்டிக் காட்டுகிறார். தன்னை அறிதல் நடைபெற வேண்டும். நீங்கள் கடவுளிடம் எதிரெதிராக வர வேண்டும். நீங்கள் தன்னை அறிதல் என்பதைச் செய்தால், நீங்கள் கோயினுள் நுழைகின்றீர்கள், நீங்கள் கடவுளைச் சந்திக்கிறீர்கள், பின் அங்கு எந்தப் பிரச்சினையும் இல்லை. அவரைச் சந்திக்க, அந்த வினாடியில் சரணாகதி நிகழ்கிறது. அது செய்வதல்ல. அது நிகழ்வது.

○

**சில மக்கள் மற்றவர்களை விட அதிக முட்டாள் தனத்தில் இருக்கின்றார்களா?**

மனம் முட்டாள் தனமானது. நீங்கள் மனதிற்கு அப்பால் செல்லாவிடில் நீங்கள் முட்டாள் தனத்திற்கு அப்பால் செல்ல மாட்டீர்கள். மனது தன்னிலேயே முட்டாள் தனமானது. மனங்கள் இரண்டு வகைப்படுகின்றன. அறிவுள்ளது, அறிவற்றது. ஆனால் இரண்டும் முட்டாள் தனமானதே. அறிவுள்ள மனது புத்தியுள்ளது என்று கருதப்படுகிறது. அது கிடையாது. குறைந்த அறிவுள்ள மனமானது முட்டாள் தனமானது என்று கருதப்பட்டது, ஆனால் இரண்டும் முட்டாள் தனமானதே.

உங்கள் முட்டாள் தனத்தில் நீங்கள் அதிகமாக அறிந்து கொள்ளலாம் - நீங்கள் அதிகமாக விஷயங்களை (தகவல்களை) சேகரித்துக் கொள்ளலாம்; நீங்கள் உங்களுடன் மத்நூல்களின் சுமையை ஏற்றிச் செல்லலாம்; நீங்கள் மனதைப் பழக்கப்படுத்தலாம். மனதிற்கு நிபந்தனை விதிக்கலாம்; நீங்கள் மனப்பாடம் செய்யலாம்; நீங்கள் ஏறக்குறைய என்சைக்ளோ பீடியா பிரிட்டானிகா (Encyclopeida Britanica) ஆகலாம் - ஆனால் அது உங்கள் முட்டாள் தனத்தில் எந்த வித்யாசத்தையும் உண்டாக்காது. எந்த மனதுமே இனி இல்லாத ஒரு மனிதரை நீங்கள் சந்தித்தீர்களானால், உங்களுடைய முட்டாள்தனம் எந்தத் தகவல்களும் இல்லாத, அறிவில்லாத அந்த மனிதர்களின் முட்டாள் தணத்தை விட அதிகமானது; அதிகம் விஷயங்களை அறிந்திருப்பது என்பது அறிவாகாது, குறைவாக அறிந்திருப்பது என்பது முட்டாள் தனமல்ல.

முட்டாள் தனம் ஒருவிதமான தூக்கம், ஓர் ஆழ்ந்த அறியாத நிலை. நீங்கள் விஷயங்களில் ஈடுபட்டுக் கொண்டே இருக்கிறீர்கள், ஏனென்று தெரியாமலேயே. நீங்கள் ஆயிரத்தொரு சூழ்நிலைகளில் உங்களை உட்படுத்திக் கொள்கிறீர்கள். ஏனென்று தெரியாமலேயே நீங்கள் வாழ்க்கையை ஆழ்ந்த உறக்கத்தின் மூலம் கடந்து

செல்லுகிறீர்கள். இந்த உறக்க நிலைதான் முட்டாள் தனமாகும். மனதோடு ஒன்று படுத்திக் கொள்வது தான் முட்டாள் தனமாகும். நீங்கள் ஞாபகத்துடன் இருப்பீர்களானால், நீங்கள் தெரிந்துள்ளவராக ஆவீர்களானால், மனதோடு முழுவதும் ஒத்திருப்பது இழக்கப்பட்டு விடுகிறது. நீங்கள் இனி மனமாக இல்லாதபோது, நீங்கள் உங்கள் மனதைக் கடந்து சென்று விட்டதாக உணர்ந்தால், புத்திசாலித்தனம் உதயமாகிறது. புத்திசாலித்தனம் ஒருவிதமான விழிப்புணர்ச்சி நிலையாகும். உறக்கத்தில் நீங்கள் முட்டாள் தனமானவர். விழிக்கும் போது முட்டாள் தனம் மறைந்து விடுகிறது. முதன் முறையாக புத்திசாலித்தனம் உள்ளே நுழைகிறது.

அதிகம் அறிந்து கொள்வது என்பது உங்களை அறிந்து கொள்ளாமல் முடியாது; பின்பு அவை எல்லாம் முட்டாள் தனமானதே. அப்படியே எதிரியடையாகவும் நடக்க முடியும்: ஏதேனும் ஒன்றையும் அறிந்து கொள்ளாமல், தன்னை அறிதல் முடியும். ஆனால் புத்திசாலியாக இருப்பதற்கு தன்னையறிதலே போதுமானது. ஒரு மனிதன் தன்னை அறிந்திருந்தானால் எந்த சூழ்நிலையிலும், ஒவ்வொரு சூழ்நிலையிலும் புத்திசாலித்தனமாக நடந்து கொள்வான். அவன் சூழ்நிலைக்கு தக்கவாறு புத்திசாலித்தனமாக இயங்குவான். அவனுடைய சூழ்நிலைக்குத் தக்கவாறு இயங்குதல் எதிர்ச் (விளைவாக) செயலாக இராது; அவன் இறந்த காலத்தில் உள்ளதைக் கொண்டு செயல்பட மாட்டான். அவன் நிகழ் காலத்திலேயே செயல்படுவான், அவன் இங்கே - இப்பொழுதில் இருக்கிறான்.

முட்டாள் தனமாக மனம் எப்போதும் இறந்த காலத்தில் செயல்படுகிறது. புத்திசாலித்தனம் இறந்த காலத்தைப் பற்றி கவலைப் படுவதில்லை. புத்திசாலித்தனம் எப்போதும் நிகழ்காலத்திலேயே இருக்கிறது. நான் உங்களை ஒரு கேள்வி கேட்கிறேன். உங்கள் புத்திசாலித்தனம் அதற்குப் பதில் சொல்லட்டும், உங்கள் நினைவிலிருந்து அல்ல. பின் நீங்கள் முட்டாள் அல்ல. பின் அதற்கு நினைவிலிருந்து பதில் அளித்தல், புத்திசாலித்தனமல்ல - பின் நீங்கள் கேள்வியைப் பார்க்கவில்லை. உண்மையில் நீங்கள் கேள்வியைப் பற்றி தொந்தரவு கொள்ளவில்லை. முன்பே - தயாரிக்கப்பட்ட பதிலை நீங்கள் எடுத்து வந்திருக்கிறீர்கள்.

இது முல்லா நசுருதீன் சம்பந்தப் பட்டது. பேரரசர் அவருடைய நகரத்திற்கு வருவதைப் பற்றியது (விஜயம் செய்வதைப்) கிராமத்தினர்

எல்லோரும் பேரரசரைக் சந்திப்பது குறித்து மிகவும் பயங் கொண்டிருந்தனர், ஆகையால் அவர்கள் நசுருதீனை, "தயவு செய்து எங்களின் பிரதிநிதியாக இருங்கள். நாங்கள் முட்டாள்தனமான, அறிவற்ற மக்கள். இங்கே நீங்கள் ஒருவர்தான் புத்திசாலியானவர், ஆகையால் தயவு செய்து சூழ்நிலையைச் சமாளியுங்கள், ஏனென்றால் எங்களுக்கு அரசவையின் செயல்முறைகள் தெரியாது, பேரரசர் முதன்முறையாக வருகிறார்'' என்று கேட்டுக் கொண்டனர்.

நசுருதின், "உறுதியாக, நான் நிறையப் பேரரசர்களைப் பார்த்திருக்கிறேன், நிறைய அரசவைகளுக்கு நான் சென்றிருக் கிறேன். கவலை கொள்ளாதீர்கள்'' என்றார்.

ஆனால் அரசவையிலுள்ள மக்கள், அவர்களே அந்தக் கிராமத்தைப் பற்றி கவலை கொண்டனர். ஆகையால் அவர்கள் முழுச் சூழ்நிலையையும் தயார் பண்ணுவதற்காக வந்தனர். அவர்கள் யார் (கிராமத்தினரில்) அவர்களின் பிரதிநிதியாக இருக்கப் போகிறார் எனக் கேட்டனர். கிராமத்தினர், "முல்லா நசுருதீன் எங்களுக்குப் பிரதிநிதியாக இருக்க உள்ளார். அவர் எங்களுடைய தலைவர், வழிகாட்டுபவர், தத்துவாதி'' என்றனர்.

அவர்கள் முல்லா நசுருதீனுக்குப் பயிற்சி அளித்தனர், "நீங்கள் அதிகமாக கவலை கொள்ளத் தேவையில்லை. அரசர் மூன்று கேள்விகள் மட்டும் கேட்கப் போகிறார். முதல் கேள்வி உங்களுடைய வயதைப் பற்றியது. உங்கள் வயதென்ன?''

நசுருதீன் "எழுபது'' என்றார். ஆகையால் பேரரசரைப்பற்றியும், அரசவையைப் பற்றியும் மிக அதிகமாக திகைப்படைய வேண்டாம். அவர் உங்கள் வயதென்ன என்று கேட்ட போது - "எழுபது'' என்று சொல்லுங்கள் - ஒரு வார்த்தை அதிகமோ, குறைவோ வேண்டாம். இல்லையென்றால் நீங்கள் கஷ்டத்திற்கு உள்ளாவீர்கள். பின்பு நீங்கள் எவ்வளவு காலமாக கிராமப் மசூதியில் சேவை பண்ணிக் கொண்டிருக்கிறீர்கள், எவ்வளவு காலமாக மத குருவாக இங்கு இருந்து வருகிறீர்கள். ஆகவே சரியாக எவ்வளவு வருடங்கள் என்பதைச் சொல்லுங்கள். எவ்வளவு காலமாக சேவை செய்து வருகிறிர்கள்?''

அவர் "முப்பது வருடங்களாக'' என்றார். கேள்விகள் இதைப்போல. பின்பு பேரரசர் வந்தார். நசுருதீனைப் பயிற்றுவித்த

மக்கள் பேரரசரையும் கூட பயிற்று வித்தனர், "இந்தக் கிராமத்தின் மக்கள் மிகவும் எளிமையாக உள்ளனர். அவர்களுடைய தலைவன் பார்ப்பதற்கு கொஞ்சம் முட்டாளாகத் தெரிகிறான். ஆகவே, தயவு செய்து அன்பு கொள்ளுங்கள், எதுவும் கேட்காதீர்கள். இவைதான் அந்தக் கேள்விகள்" என்றனர்.

ஆனால் அரசர் மறுத்துவிட்டார். அதனால் "உங்களுக்கு எத்தனை வயது?" என்று கேட்பதற்கு முன்னால், "எவ்வளவு காலமாக இந்த நகரத்தில் நீங்கள் ஆன்மிக வழிகாட்டுபவராக உள்ளீர்கள்?" என்று கேட்டார்.

இப்போது நசுருதீனுக்கு விடைகள் முடிவு செய்யப்பட்டிருந்தன. அவர், "எழுபது வருடங்கள்" என்று சொன்னார். அரசர் கொஞ்சம் குழப்பத்தோடு பார்த்தார். ஏனென்றால் அந்த மனிதர் பார்ப்பதற்கு எழுபதிற்கு மேல் இல்லை, ஆனால் அவர் பிறந்ததில் இருந்து மதகுருவாக இருந்து வருகிறாரா? பின்பு அவர், "நான் ஆச்சரியமடைகிறேன்" என்றார். பின்பு "உங்கள் வயதென்ன?"

நசுருதீன், "முப்பது வருடங்கள்" என்றார். ஏனென்றால் இது முடிவு செய்யப்பட்டது: அவர் முதலில் "எழுபது வருடங்கள்" என்று சொல்ல வேண்டும். பின்பு "முப்பது வருடங்கள்" என்று சொல்ல வேண்டும்.

அரசர், "நீங்கள் பைத்தியமா?" என்றார்.

நசுருதீன், "சார், நாம் இருவருமே பைத்தியம். நம்முடைய சொந்த வழிகளில்! நீங்கள் தவறான கேள்விகளைக் கேட்கிறீர்கள் - நான் சரியான பதில்களைச் சொல்ல வேண்டும்! இதுவே பிரச்சினையாகும். என்னால் மாற்ற முடியாது, ஏனென்றால் என்னைப் பயிற்றுவித்த அந்த மக்கள் இங்கிருக்கிறார்கள். அவர்கள் என்னைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். என்னால் மாற்ற முடியாது, நீங்கள் தவறான கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். நாம் இருவரும் பைத்தியங்கள். நம்முடைய சொந்த வழிகளில் நான் சரியான பதில்களைச் சொல்ல வேண்டுமென்று கட்டாயப்படுத்தப்பட்டுள்ளேன் - அது என்னுடைய பயித்தியக்காரத்தனமாகும். முன்பே- தயாரிக்கப் பட்ட பதில்கள் இல்லையென்றால், நான் சரியான பதிலை உங்களுக்குச் சொல்லியிருப்பேன், ஆனால் இப்போது இங்கே உபத்திரவமாக உள்ளது. நீங்கள் தவறான கேள்வி, தவறான வரிசையில் கேட்கிறீர்கள்.

இது முட்டாள்த்தனமாக மனதிற்கு நிகழ்கிறது. உங்கள் உள்ளே தொடர்ந்து கவனியுங்கள்: அந்த முல்லா நசுருதீன் உங்களில் ஒரு பகுதி. எப்பொழுதெல்லாம் ஒரு கேள்விக்கு நீங்கள் பதில் கூறுகிறீர்கள் என்றால், உங்களிடம் முன்பே - தயாரிக்கப்பட்ட பதில் உள்ளது, நீங்கள் முட்டாள் தன்மாக நடந்து கொள்கிறீர்கள். அந்தச் சூழ்நிலை மாறியிருக்கலாம், ஆலோசனை மாறியிருக்கலாம், அந்த சந்தர்ப்பம் மாறியிருக்கலாம் - நீங்கள் இறந்த காலத்தில் செயல்படு கிறீர்கள்.

நிகழ்காலத்தில் செயல்படுங்கள். தயாரித்தல் இல்லாமல் செயல்படுங்கள். நிகழ் காலத்தினுடைய அறிவுடைய நிலையைக் கொண்டு செயல்படுங்கள். இறந்த காலத்தில் செயல்படாதீர்கள். பின் நீங்கள் முட்டாள்தனமானவரல்லர்.

இப்போது, நான் ஏன் மனம் முட்டாள் தனமானது என்று சொல்லுகின்றேன் என்பதை நீங்கள் புரிந்து கொண்டிருப்பீர்கள். ஏனென்றால் மனம் இறந்த காலம் மட்டுமே. மனம் சேகரிக்கப்பட்ட இறந்த காலமாகும், எவையெல்லாம் நீங்கள் இறந்தகாலத்தில் அறிந்துள்ளீர்களோ அவை. வாழ்க்கை தொடர்ந்து மாறிக் கொண்டே இருக்கிறது. மனம் அதே மாதிரியாக (மாறுபடாமல்) தொடர்ந்து இருந்து வருகிறது - அது உயிரற்ற நினைவுகள், உயிரற்ற சமாசாரங்களைச் சுமந்து கொண்டு இருக்கிறது, ஒவ்வொரு வினாடியும் சந்தர்ப்பம் மாறிக் கொண்டிருக்கிறது, ஒவ்வொரு வினாடியும் கேள்வி மாறிக் கொண்டிருக்கிறது. நீங்கள் நிலையான பதில்களை எடுத்துச் செல்கிறீர்கள். நீங்கள் எப்போதும் உபத்திரவத்தில் உள்ளீர்கள். ஒரு முட்டாள் தனமான மனம் எப்பொழுதும் உபத்திரவத்தில் இருக்கும், மிகவும் ஆயுத்தமாக, மிகவும் தயாராக இருப்பது என்ற ஒரே காரணத்தினால். ஒரு முட்டாள்தனமான மனம் ஒன்றுமில்லாததற்கு எப்போதும் உபத்திரவத்தில் இருக்கும், துன்பப்பட்டுக் கொண்டிருக்கும்.

ஒவ்வொரு வினாடியும் தயாரித்தல் இல்லாமல் தொடர்ந்திருக்க வேண்டும். பின்பு நீங்கள் தொடர்ந்து களங்கமில்லாதவராக இருக்கிறீர்கள். பின்பு நீங்கள் ஏதேனும் ஒன்றை எடுத்துச் செல்லவில்லை. எப்பொழுதெல்லாம் முன்பே - தயாரிக்கப்பட்ட பதில்கள் உங்களிடம் இருக்கிறதோ, நீங்கள் கேள்வி அது எதுவாக இருக்கிறதோ அதை கவனிப்பதில்லை. நீங்கள் கேள்வியைக்

கவனிக்கும் முன்பே, பதில் மனதில் திடீரென எழுந்து விடுகிறது; பதில் உங்களுக்கும் கேள்விக்கும் இடையில் முன்பே நின்று கொண்டிருக் கிறது. நீங்கள் சுற்றிலும் பார்க்கும் முன்பாக, சூழ்நிலையைக் கவனிக்கும் முன்பாக, நீங்கள் எதிர்ச் செயல்களை இவற்றுக்கு முன்பே செய்கிறீர்கள்.

மனம் இறந்த காலமாகும், மனம் நினைவுகள் ஆகும். அதனாலேயே மனம் முட்டாள் தனமானது, எல்லா மனங்களும். நீங்கள் ஒரு கிராமவாசியாக இருக்கலாம், உலகத்தைப் பற்றி அதிகம் அறிந்து கொள்ளாமல் இருக்கலாம். பூனா பல்கலைக்கழகத்தில் நீங்கள் ஒரு பேராசிரியராக இருக்கலாம், அதிகம் அறிந்து கொண்டிருக்கலாம். அது எந்த வித்யாசத்தையும் ஏற்படுத்துவதில்லை. உண்மையில், சில சமயங்களில் இது நடைபெறுகிறது - கிராமவாசிகள் அதிக புத்திசாலிகளாக இருப்பார்கள். ஏனென்றால் அவர்களுக்கு ஒன்றும் தெரியாது. அவர்கள் புத்திசாலித்தனத்தைச் சார்ந்திருக்க (நம்பியிருக்க) வேண்டியதிருக்கிறது. அவர்கள் அவர்களுடைய சமாசாரங்களை சார்ந்திருக்க முடியாது, அவர்களுக்கு ஒன்றுமில்லை. நீங்கள் விழிப்புடன் இருப்பீர்களானால், ஒரு கிராம வாசியிடம் உள்ள களங்கமற்ற தன்மையின் தரத்தை நீங்கள் பார்க்கலாம். அவன் ஒரு குழந்தையைப் போன்றவன்.

குழந்தைகள் வயது வந்தவர்களைவிட அதிக புத்தி உள்ளவர்கள். அதனால் தான் குழந்தைகள் மிக எளிதாக க்ற்றுக்கொள்கிறார்கள். மனது இதுவரையிலும் அங்கு இல்லை. அவர்கள் மனமற்றவர்கள். அவர்கள் எந்த இறந்த காலத்தையும் எடுத்துச் செல்வதில்லை; அவர்களிடம் ஒன்றுமில்லை. அவர்கள் எல்லாப் பொருள்களிடமும் அதிசயத்தோடும், ஆச்சரியத்தோடும் செல்கின்றனர். அவர்கள் எப்போதும் சூழ்நிலையைப் பார்க்கிறார்கள். உண்மையில் அவர்களுக்கு ஜாக்கிரதையாய் கவனித்துக் கொள்வதற்கு எதுவுமே இல்லாததால் - முன்பே - தயாரிக்கப்பட்ட பதில்கள் இல்லை. சில சமயங்களில் குழந்தைகள் அப்படிப்பட்ட அழகோடு, உயிருள்ள வழியில் பதிலளிப்பது போல வயதான மக்களால் முடியாது. வயதான மக்களுக்கு, அவர்களுக்காக பதிலளிப்பதற்கு, மனம் எப்போதும் உள்ளது. அவர்களுக்கு ஒரு வேலையாள், ஓர் இயந்திர அமைப்பு, ஒரு பயோ கம்ப்யூட்டர் (bio computer) உள்ளது. அவர்கள் அதைச் சார்ந்திருக்க வேண்டியதிருக்கிறது. நீங்கள் அதிக வயதாகும் போது அதிக முட்டாளாகிறீர்கள்.

வயதான மக்கள் தாங்கள் மிகவும் கற்றறிந்தவர்களாக ஆகியுள்ளோம் என்று உறுதியாக எண்ணுகின்றனர், ஏனென்றால் அவர்கள் நிறைய பதில்களைத் அறிந்துள்ளார்கள். இது பாண்டித்யம் என்றால் பின்பு கம்ப்யூட்டர்கள் (computer) மிகவும் கற்றறிந்த மனிதர்களாகும். பின்பு உங்களுக்கு புத்தரைப்பற்றி, யேசுவைப்பற்றி, ஜராதுஷ்ராவைப் பற்றி எண்ண வேண்டிய தேவையில்லை. கம்ப்யூட்டர்கள் கற்றறிந்த மக்களாகும், ஏனென்றால் அவை அதிகம் அறிந்திருக்கின்றன. அவை எல்லாம் அறிந்து கொள்ள முடியும். அவற்றுக்கு எல்லாத் தகவல்களையும் கொடுக்க முடியும். அவைகள் இயந்திர அமைப்பு என்பதனால் இன்னும் நன்றாகச் செயல்பட முடியும்.

ஞானம் எல்லா அறிவைப் பற்றியும் கவலை கொள்ளவில்லை. அது தெரிந்து கொள்ளுதல், புத்திசாலித்தனம், புரிந்து கொள்ளுதல் என்பவற்றைப் பற்றியே கவலை கொள்கிறது. அதிகமான விழிப்புடன் இருங்கள். பின் நீங்கள் மனதினுடைய பிடியில் இருக்க மாட்டீர்கள். பின் மனம் எப்பொழுதெல்லாம் தேவையோ அப்போது நீங்கள் உபயோகப்படுத்தப்பட மாட்டீர்கள். மனம் இனி எஜமானாக இல்லை - நீங்கள் எஜமானன், மனம் வேலையாள் ஆகும். எப்பொழுதெல்லாம் உங்களுக்கு வேலையாளின் தேவை உள்ளதோ, நீங்கள் கேட்பீர்கள், ஆனால் நீங்கள் மனதினால் ஆளப்பட மாட்டீர்கள், நீங்கள் கையாளப்பட மாட்டீர்கள்.

மனதினுடைய சாதாரண சூழ்நிலை என்பது, கார், டிரைவரை இயக்குவது போலாகும். கார், "இந்த வழியில்போ" என்று சொல்லுகிறது, டிரைவர் அதைப்பின்பற்ற வேண்டும். சில சமயங்களில் இது நிகழ்கிறது. பிரேக் வேலை செய்வதில்லை, சக்கரங்கள் சரியாகச் செயல்படுவதில்லை, நீங்கள் தெற்குப்புறம் செல்ல விரும்புகிறீர்கள், வடக்குப்புறம் செல்கிறது. இயந்திர அமைப்பு வேலை செய்யவில்லை. அது ஒரு விபத்து. ஆனால் அந்த விபத்து மனித மனத்திற்கு வழக்கமானதாகி விடுகிறது. தொடர்ந்து நீங்கள் எங்கேயோ செல்ல விரும்புகிறீர்கள், மனம் தியேட்டருக்கு (நாடக அரங்கிற்கு) செல்ல வேண்டுமென எண்ணிக் கொண்டிருக்கிறது. நீங்கள் உங்களைத் தியேட்டரினுள் காண்கிறீர்கள். நீங்கள் உங்கள் வீட்டிலிருந்து வெளிவரும்போது பிரார்த்தனை பண்ணுவதற்கு கோயிலுக்குச் செல்ல எண்ணுகிறீர்கள்... நீங்கள் தியேட்டரில் அமர்ந்திருக்கிறீர்கள் - ஏனென்றால் கார் அந்த வழியில செல்ல விரும்புகிறது. நீங்கள் திறமையற்றவர்.

புத்திசாலித்தனம் ஓர் ஆளும் திறமையாகும் - உங்களுள் உள்ள எல்லா இயக்கத் தன்மைகளையும், ஆளும் திறமையாகும். உடல் ஓர் இயக்கத் தன்மையாகும். மனம் ஓர் இயக்க்த தன்மையாகும். நீங்கள் அதன் எஜமானர் ஆகிறீர்கள். ஒருவரும் உங்களைக் கையாளுவ தில்லை; மனம் உங்களது கட்டளைகளை ஏற்றுக்கொள்கிறது. இது புத்திசாலித்தனமாகும்.

நீங்கள், "சில மக்கள் மற்றவர்களைவிட அதிக முட்டாள் தனத்தில் இருக்கிறார்களா? என்று கேட்டீர்களானால் - அது சார்புடையது. எனக்குத் தெரிந்தவரையில், அறிவுள்ள முட்டாள் மனிதர்கள், அறிவற்ற முட்டாள்கள் என்பதாகும். இவை சாதாரண இரண்டு பிரிவினைகள் ஆகும், மூன்றாவது பிரிவினை மிகவும் ஒப்பற்றதாகும். உங்களால் அதை ஒரு பிரிவினையாகச் செய்ய முடியாது. அபூர்வமாக, சில வேளைகளில் ஒரு புத்த நிலை நிகழ்கிறது: புத்தர் ஒருவர் புத்திசாலித்தனமானவர். ஆனால் அவர் ஒரு புரட்சிக்காரராக காணப்படுவார். ஏனென்றால் அவர்கள் உங்களால் நிர்ணயிக்கப்பட்ட பதில்களை, முடிவு செய்யப்பட்ட பதில்களை அளிப்பதில்லை; அவருக்கென அவருடைய சொந்த வழியுள்ளது. அவர் அவருடைய சொந்த வழியை உண்டாக்கிக் கொள்கிறார்.

புத்திசாலித்தனம் எப்போதும் தன்னையே பின்பற்றுகிறது. அதுயாரையும் பின்பற்றுவதில்லை. புத்திசாலித்தனம் அதனுடைய சொந்த வழியை செய்து கொள்கிறது. முட்டாள் ஜனங்களே பின்பற்றுகின்றனர்.

நீங்கள் இங்கே என்னுடன் இருப்பீர்களானால், நீங்கள் இங்கே இரண்டு வழிகளில் இருப்பீர்கள். நீங்கள் இங்கே புத்தியுடன் என்னுடன் இருப்பீர்கள்: பின் நீங்கள் என்னிடமிருந்து கற்றுக் கொள்வீர்கள், ஆனால் என்னைப் பின்தொடர மாட்டீர்கள். நீங்கள் உங்கள் புத்திசாலித் தனத்தைப் பின்தொடருவீர்கள். ஆனால் நீங்கள் முட்டாளாக இருந்தால், நீங்கள் கற்றுக் கொள்வதைப் பற்றி தொந்தரவு கொள்ள மாட்டீர்கள்: நீங்கள் அப்படியே என்னைப் பின் தொடருவீர்கள்.

அது எளிமையாகக் காணப்படுகிறது, அது குறைந்த அபாயகரமானது, குறைந்த ஆபத்தானது, அதிகப் பாதுகாப்பானது, பத்திரமானது, ஏனென்றால் நீங்கள் எப்போதும் பொறுப்பை என் மேல் சுமத்த முடியும்; ஆனால் நீங்கள் ஒரு பாதுகாப்பான, பத்திரமான -

வழியைத் தேர்தெடுப்பீர்களானால், நீங்கள் மரணத்தைத் தேர்ந்தெடுத்துள்ளீர்கள். நீங்கள் வாழவைத் தேர்ந்தெடுக்கவில்லை. வாழ்வு அபாயகரமானதும், ஆபத்தானதும் ஆகும். புத்திசாலித்தனம் எப்போதும், எந்த விலை கொடுத்தும் என்ன அபாயகரமானாலும் வாழ்வைத் தேர்ந்தெடுக்கும். ஏனென்றால் அதுதான் உயிருள்ளதாக இருப்பதற்கு ஒரே வழியாகும்.

புத்திசாலித்தனம் அறிவுடை நிலையில் ஓர் இயல்பாகும். புத்திசாலிகளாக உள்ள மக்கள் முட்டாள்கள் அல்லர்.



**தற்சோதனைக்கும், தன்னை - நினைவில் கொள்ளுதலுக்கும் உள்ள வித்தியாசம் என்ன?**

அதிக வித்தியாசங்கள். தற்சோதனை என்பது உங்களைப் பற்றி சிந்திப்பதாகும்.தன்னை - நினைவில் கொள்ளுதல் என்பது சிந்தித்தல் இல்லை. அது உங்களைப்பற்றி அறிந்து கொள்வதாகும். வித்தியாசம் நுண்ணியமானது, ஆனால் மிகப் பெரியது.

மேற்கத்திய மனோதத்துவ சாஸ்திரம் தற்சோதனையை வற்புறுத்துகிறது. கிழக்கத்திய மனோ தத்துவ சாஸ்திரம் தன்னை - ஞாபகத்தில் கொள்வதை வற்புறுத்துகிறது. நீங்கள் தற்சோதனை பண்ணும் போது என்ன செய்கிறீர்கள்? உதாரணமாக, நீங்கள் கோபமாக இருக்கிறீர்கள். நீங்கள் கோபத்தைப் பற்றி சிந்திக்க ஆரம்பிக்கிறீர்கள் - அது எப்படி உண்டு பண்ணப்பட்டது என்று. நீங்கள் அது எதனால் உண்டு பண்ணப்பட்டது என்று வெவ்வேறு பகுதிகளாக பிரிக்க ஆரம்பிக்கிறீர்கள். நீங்கள் அது நல்லதா, அல்லது கெட்டதா என தீர்மானிக்க ஆரம்பிக்கிறீர்கள். அந்த சூழ்நிலை அப்படி இருந்ததனால் நீங்கள் கோபமாக இருந்தீர்கள் என நியாயப் பூர்வமாக்க ஆரம்பிக்கிறீர்கள். நீங்கள் கோபத்தைப் பற்றி ஆழ்ந்து யோசனை செய்ய, வெவ்வேறு பகுதிகளாகப் பிரிக்க, ஆரம்பிக்கிறீர்கள். ஆனால் கவனத்தைக் குவிம்பது கோபத்தின் மேல் அல்லாமல் தன் மேல் செலுத்த வில்லை. உங்களுடைய முழு உணர்வும் கோபத்தின் மேல் செலுத்தப்படுகிறது - நீங்கள் கவனிக்கிறீர்கள், வெவ்வேறு பகுதிகளாகப் பிரிக்க ஆரம்பிக்கிறீர்கள், சம்பந்தப் படுத்துகிறீர்கள், அதைப்பற்றி சிந்திக்கிறீர்கள், எப்படி தவிர்ப்பது, எப்படி விடுபடுவது, எப்படி இனிமேல் செய்யாமல் இருக்கலாம் என்று கணக்கிட

முயலுகிறீர்கள். இது ஒரு சிந்தனைச் செயல் முறையாகும். நீங்கள் அது "கெட்டது" என்று தீர்மானிக்கிறீர்கள். ஏனென்றால் அது அழிவைத் தரக் கூடியது. "நான் இனிமேல் திரும்ப அதே தவறைப் பண்ண மாட்டேன்" என்று நீங்கள் பிரதிக்ஞை எடுத்துக் கொள்கிறீர்கள். நீங்கள் கோபத்தை மனோ சக்தியினால் அடக்க முயலுகிறீர்கள். அதனால் தான் மேற்கத்திய மனோதத்துவ சாஸ்திரம் பகுத்து ஆராய்வதாக... பல பகுதிகளாகப் பிரிப்பதாக, கூறு செய்வதாக ஆகியுள்ளது.

கீழை நாடுகளில் முக்கியத்துவம் கோபத்திற்கல்ல. கிழக்கில் முக்கியத்துவம் தன் மேலேயே. நீங்கள் கோபமாக இருக்கும் போது உணர்வுடன் இருங்கள். மிகவும் உணர்வுடன் சிந்திக்காமல், ஏனென்றால் சிந்திப்பது என்பது தூங்கும் விஷ யமாகும். நீங்கள் ஆழ்ந்து உறங்கும் போதும் உங்களால் சிந்திக்க முடியும்; அங்கே உணர்வு நிலை தேவையில்லை. உண்மையில் நீங்கள் உணர்வில்லாமலேயே சிந்தித்துக் கொண்டிருக்கலாம். சிந்தனை தொடர்ந்து சென்று கொண்டே இருக்கிறது. நீங்கள் இரவில் ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருக்கும் போது கூட சிந்தனை தொடர்ந்து கொண்டிருக்கிறது, மனம் தொடர்ந்து உள்ளே அர்த்தமில்லாமல் சளசளவென்று பேசிக் கொண்டே இருக்கிறது. அது ஓர் இயந்திர கதியான விஷயமாகும்.

கிழக்கு மனோதத்துவ சாஸ்திரம் "உணர்வுடன் இரு" கோபத்தை வெவ்வேறு பகுதிகளாக பிரிக்க முயலாதீர்கள், அதற்குத் தேவையில்லை. அப்படியே அதைப் பாருங்கள், ஆனால் உணர்வுடன் பாருங்கள். சிந்திக்க ஆரம்பிக்க வேண்டும்" என்று கூறுகின்றது. உண்மையில் சிந்திக்க ஆரம்பித்தீர்களானால், பின்பு சிந்தித்தல் கோபத்தைப் பார்ப்பதற்கு ஒரு தடையாக ஆகிவிடும். சிந்தித்தல் அதன்மேல் போர்த்தப்பட்டதாகி விடுகிறது. பின்பு சிந்தித்தல் ஒரு மேகம் போல அதைச் சூழ்ந்து கொள்கிறது; தெளிவு மறைந்து விடுகிறது. சிந்தனை செய்யவே வேண்டாம். சிந்தனையற்ற நிலையில் இருந்து பாருங்கள்.

உங்களுக்கும் கோபத்திற்கும் இடையில் ஒரு சிறிய சிந்தனை அலை கூட இல்லாத போது கோபம் பார்க்கப்படுகிறது, எதிரெதிராகப் பார்க்கப்படுகிறது. நீங்கள் அதைக் கூறு செய்யாதீர்கள், ஏனென்றால் அதனுடைய மூலம் (ஆரம்பம்) இறந்த காலத்தில் உள்ளது. நீங்கள் அதைப்பற்றி தீர்மானம் செய்யாதீர்கள். ஏனென்றால் நீங்கள் தீர்மானம்

செய்த அந்த வினாடியே சிந்திக்க ஆரம்பித்து விடுகிறீர்கள். நீங்கள், "நான் அதைச் செய்ய மாட்டேன்" என்ற பிரதிக்ஞை எதுவும் எடுக்காதீர்கள் ஏனென்றால் அந்தப் பிரதிக்ஞை எதிர்காலத்திற்கு எடுத்துச்செல்லும். உணர்வுடன் இருக்கின்ற போது நீங்கள் கோப உணர்வுடன் தொடர்ந்து இருக்கின்றீர்கள் - சரியாக இங்கே - இப்பொழுதில் இருக்கிறீர்கள், நீங்கள் அதைப்பற்றிச் சிந்திப்பதில் ஆர்வமில்லாதவராக இருக்கிறீர்கள்; நீங்கள் அதை நேரிடையாகப் பார்ப்பதில் ஆர்வமுள்ளவராக இருக்கிறீர்கள், எதிரெதிராக, உடனடியாக; பின்பு அது தன்னை - ஞாபகத்தில் கொள்வதாகும்.

இதுவே அதன் அழகாகும்: நீங்கள் கோபத்தைப் பார்ப்பீர் களானால் அது மறைந்து விடும். அது இந்த வினாடியில் மறைவது என்பது மட்டுமல்ல: உங்களுடைய ஆழ்ந்து பார்ப்பது என்பதனால் கோபம் முழுவதும் மறைவதோடு அங்கே மனோசக்தியை உபயோகிக்க வேண்டிய தேவையில்லை என்ற திறவு கோலையும் அளிக்கிறது, அங்கே எதிர்காலத்திற்காக எந்த முடிவும் எடுக்க வேண்டும் என்ற தேவையில்லை. எந்த மூலத்திலிருந்து அது வருகிறது என்று அங்கு போகத் தேவையில்லை. அது தேவையில் லாதது. உங்களிடம் இப்போது திறவு கோல் உள்ளது; கோபத்தைப் பாருங்கள், கோபம் மறைந்து விடும். இந்தப் பார்ப்பது என்பது எப்போதும் கிடைத்துக் கொண்டே இருக்கிறது. எப்பொழுதெல்லாம் கோபம் இருக்கிறதோ, நீங்கள் பார்க்கலாம்; பின்பு இந்தப் பார்ப்பது ஆழமாக வளர்ச்சியடையும்.

இந்தப் பார்ப்பதில் மூன்று நிலைகள் உள்ளன. முதலில் கோபம் நிகழ்ந்தது, போய் விட்டது என்பது. ஏறக்குறைய வால் மறைந்து கொண்டிருப்பதைப் பார்க்கிறீர்கள் - யானை சென்று விட்டது, வால் மட்டும் அங்கிருக்கிறது - ஏனென்றால் கோபம் அங்கே இருந்தால், உண்மையில் நீங்கள் ஆழமாக அதில் ஆழ்ந்திருப்பீர்கள், நீங்கள் உணர்வுடன் இருந்திருக்க முடியாது. கோபம் ஏறக்குறைய மறைந்து விட்டபோது, தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் - ஒரே ஒரு சதவிகிதம், அதனுடைய கடைசிப் பகுதி சென்று கொண்டிருக்கிறது, தொலை தூர தொடுவானத்திற்குள் மறைந்து கொண்டு இருக்கிறது - பின்பு நீங்கள் உணர்வுள்ளவராகுகிறீர்கள்: இது அறிவு உணர்வுள்ள நிலையின் முதல் படியாகும். நல்லது ஆனால் போதுமானதல்ல.

இரண்டாவது நிலை, வால் மட்டுமல்லாமல், யானை அங்கே இருக்கும்போது: சூழ்நிலை தயாராகும் போது, உண்மையில் நீங்கள்

கோபத்தின் உச்சத்தில் இருக்கிறீர்கள் - கொந்தளித்துக் கொண்டு, எரிச்சலுடன் - பின் நீங்கள் விழிப்புடையவராகி விடுகிறீர்கள்.

மூன்றாவது நிலையும் அங்கே உள்ளது: கோபம் வரவில்லை, ஆயினும் வந்து கொண்டிருக்கிறது - வால் இல்லை. ஆனால் தலை. அது உங்களுடைய உணர்வு நிலையின் பிரதேசத்திற்குள் அப்படியே நுழைகிறது. நீங்கள் விழிப்படைகிறீர்கள் - பின் யானை ஒரு போதும் உருவாவதில்லை. நீங்கள் அந்த மிருகம் பிறப்பதற்கு முன்பே கொன்று விடுகிறீர்கள். அது தான் கருத்தடையாகும். அந்த நிகழ்வு (காட்சி) நிகழவில்லை; பின் அது ஓர் அடிச்சுவடுகூட (அடையாளம் கூட) விட்டுச் செல்வதில்லை.

நீங்கள் அதை நடுவில் (மத்தியில்) நிறுத்துவீர்களானால், பாதித் தலை நிகழ்ந்துள்ளது, அது உங்களிடம் ஏதேனும் விட்டுச்செல்லும் - ஓர் அடையாளம், ஒரு சுமை, ஒரு சிறிய காயம். நீங்கள் சிராய்க்கப்பட்டதாக உணர்கிறீர்கள். நீங்கள் அதை இப்போது அதனுடைய முழு அதிகாரத்திற்கும் அனுமதிக்காமல் இருந்தாலும் , அது நுழைந்து விட்டது. நீங்கள் வாலைப் பார்த்தீர்களானால் முழு விஷயமுமே முன்பே நிகழ்ந்து விட்டது. நீங்கள் அதிக பக்ஷம் வருத்தப்படலாம் (வருத்துவது) சிந்திப்பதாகும். நீங்கள் மறுபடியும் சிந்திக்கின்ற மனதிற்குப் பலியாகி விடுகிறீர்கள்.

அறிவுடை நிலையிலுள்ள ஒரு மனிதன் ஒரு போதும் வருந்துவதில்லை. வருந்துவதற்கு அங்கே எந்த விஷயமும் இல்லை. அறிவுடை நிலை ஆழமாகக் செல்லுமானால், அவனால் ஒரு செய்முறையை இயக்கத்தை, அது தொடங்குவதற்கு முன்னால் தடுக்க முடியும். பின்பு (வருந்துவதற்கு) என்ன விஷயம் உள்ளது? அவன் அதைத் தடுக்க முயலுகிறான் என்பதல்ல - அதுதான் அதன் அழகாகும். அவன் அப்படியே அதைப் பார்க்கிறான். நீங்கள் ஒரு மனோ பாவத்தைப் பார்ப்பீர்களானால், ஒரு சூழ்நிலையை, ஒரு மன எழுச்சியை, மன உணர்வை, எண்ணத்தை - நீங்கள் உங்கள் பார்ப்பதன் தன்மையை கொண்டு வருவீர்களானால் - அந்தப் பார்த்தல் ஒளியைப்போல: இருள் மறைந்து விடும்.

தற்சோதனைக்கும் தன்னை - ஞாபகத்தில் கொள்ளுதலுக்கும் மிக அதிக அளவில் வித்தியாசம் உள்ளது. நான் தற்சோதனையை ஆதரிப்பதில்லை. உண்மையில் தற்சோதனை ஒரு சிறிய நோயைக் குறிக்கும் நூல் போன்றது. அது உங்களுடைய சொந்த ரணத்தோடு

விளையாடுகிறது. அது உதவுவது இல்லை. அது ரணம் குணமடைவதற்கு உதவுவது இல்லை. உண்மையில் அது அப்படியே எதிராகச் செயல்படுகிறது. நீங்கள் உங்களுடைய ரணத்தைச் சுட்டிக் காண்பித்துக் கொண்டே இருந்தீர்களானால், நீங்கள் அதைப் புதியதாக வைத்திருக்கிறீர்கள். தற்சோதனை சிறந்ததல்ல. தற்சோதனை பண்ணுகின்ற மனிதர்கள் ஆரோக்யமில்லாதவர்கள், நோயுற்றவர்கள். அவர்கள் மிக அதிகமாகச் சிந்திக்கின்றனர். தற்சோதனை செய்யும் மக்கள் குறுகியவர்கள் (தன்னுள்ளே இருப்பவர்கள்) அவர்கள் தங்களுடைய ரணங்களோடு, தங்களுடைய வருத்தத்தோடு, தங்களுடைய மன விகாரத்தோடு விளையாடிக்கொண்டிருக்கிறார்கள் - பின்பு இந்த முழுவாழ்க்கையுமே ஒரு மிக அதிகமான பிரச்சினையாகிறது. அது தீர்க்க முடியாதது. ஒவ்வொரு விஷயங்களும் பிரச்சினையாகப் பார்க்கப்படுகிறது. ஒரு தற்சோதனை பண்ணும் மனிதனுக்கு எவையெல்லாம் நடைபெறுகிறதோ அவை எல்லாம் பிரச்சினையாகிறது.

பின்பு, அவன் மிக அதிகமாக அவனுள் இருக்கிறான்; அவனால் வெளிவர முடியாது. நடுநிலை இழக்கப்பட்டு விடுகிறது. தற்சோதனை பண்ணும் மக்கள் வாழ்க்கையினின்று தப்பித்து இமயத்திற்குச் செல்கின்றனர். அவர்கள் ஆரோக்யமற்றவர்கள், நோயுற்றவர்கள், மருத்துவரீதியாக பார்க்கப்பட வேண்டிவர்கள். ஓர் ஆரோக்யமான மனிதனுக்கு ஓர் ஆரோக்யமான இயக்கம் உள்ளது. அவனால் உள்ளே செல்ல முடியும், அவனால் வெளியே வர முடியும். அவனுக்கு உள்ளேயும் வெளியேயும், அங்கே எந்தப் பிரச்சினையும் இல்லை. உண்மையில் அவன் உள்வாழ்க்கை, வெளி வாழ்க்கை என்று பிரிவினை செய்வதில்லை. அவனுக்கு ஒரு தடையில்லாத ஓட்டம், ஒரு தடையில்லாத இயக்கம் உள்ளது. எப்பொழுதெல்லாம் அது தேவையோ, அவன் உள்ளே செல்லுகிறான். எப்பொழுதெல்லாம் அது தேவையோ, அவன் வெளி வருகிறான். அவன் வெளி உலகத்திற்குப் புறம்பாக இல்லை. அவன் உள் உலகத்திற்கு ஒத்துப் போவதாக இல்லை. உள்ளும் புறமும் மூச்சை உள்ளே இழுப்பது - வெளியே விடுவது போல இருக்க வேண்டும்: இரண்டும் தேவையே.

தற்சோதனை பண்ணுபவர்கள் மிக ஆழ்ந்து யோசனை செய்பவர்களாக, மிக அதிகமாக தங்களுள் இருப்பவர்களாக ஆகியுள்ளனர். அவர்கள் வெளியே செல்வதற்கு அஞ்சுகின்றனர், ஏனென்றால் எப்பொழுதெல்லாம் அவர்கள் வெளியே

செல்லுகிறார்களோ அங்கே பிரச்சினைகள் உள்ளன. அதனால் அவர்கள் குறுகியவர்கள் ஆகிவிடுகின்றனர். அவர்கள் ஜன்னல்கள் இல்லாத கூட்டிற்குள் வாழ்பவராகி விடுகின்றனர். பின்பு பிரச்சினைகள்... மனது பிரச்சினைகளை உருவாக்கிக் கொண்டே இருக்கிறது. அவர்கள் தீர்ப்பதற்கு முயன்று கொண்டே இருக்கிறார்கள்.

தற்சோதனை பண்ணும் ஒரு மனிதன் அதிகமாகப் பைத்திய வசப்படுபவனாக உள்ளான். உள்நோக்கிச் செல்பவர், வெளி நோக்கிச் செல்பவரை விட பைத்தியமாகிறார்கள். நீங்கள் பைத்தியக்கார மருத்துவமனைகளுக்கு செல்லுவீர்களானால், அங்கிருக்கும் தொண்ணூற்று ஒன்பது சதவிகித மக்கள் உள்நோக்கிச் செல்பவர்களே, தற்சோதனை பண்ணுபவர்கள் அதிக பக்ஷம் ஒரு சதவிகிதம் வெளி நோக்கிச் செல்பவராகும். அவர்கள் உட்புறத்தில் உள்ள விஷயங்களைப் பற்றி தொந்தரவு கொள்வதில்லை. அவர்கள் மேற்பரப்பிலேயே வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். அவர்கள் அங்கு பிரச்சினைகள் உள்ளன என்று எண்ணுவதில்லை. அவர்கள் வாழ்க்கை அனுபவிக்கப்படவேண்டியது மட்டுமே என்று எண்ணுகின்றனர். சாப்பாடு, அருந்து, களிப்படை (அனுபவி) என்பது தான் அவர்களுடைய முழு மதமும், அதைத் தவிர வேறு இல்லை.

நீங்கள் வெளி நோக்கிச் செல்பவர்கள் உள்நோக்கிச் செல்பவர்களை விட அதிக ஆரோக்யமாக இருப்பதைக் காணலாம். ஏனென்றால் அவர்கள் முழுமையோடு தொடர்புடன் இருக்கின்றார்கள். உள்நோக்கிச் செல்பவர்கள முழுமையோடு உள்ள எல்லாத் தொடர்பையும் இழந்து விட்டவர்கள். அவர் தன்னுடைய கனவுகளில் வாழ்கிறார். அவருக்கு வெளியே செல்லும் மூச்சு இல்லை. சிந்தித்தல் மட்டுமே. நீங்கள் மூச்சை வெளியே செல்ல அனுமதிப்பது இல்லை. என்றால் நீங்கள் நோயுற்றவராகி விடுகிறீர்கள். ஏனென்றால் உள்ளே சென்ற மூச்சு எப்போதும் புதியதாக இராது. வினாடிக்குள் அது பழையதாகி விடுகிறது. வினாடிக்குள் அது முடிந்துவிடுகிறது. பின் நீங்கள் பழைய உயிரற்ற காற்றில் வாழ்கிறீர்கள். நீங்கள் வெளியே சென்று வாழ்க்கையின் புதிய மூலத்தைத் தேடிச் செல்ல வேண்டும், புதிய காற்றைத் தேடிச் செல்ல வேண்டும். நீங்கள் தொடர்ந்து சென்று கொண்டே இருக்க வேண்டும்.

வெளிநோக்கிச் செல்வதற்கும், உள்நோக்கிச் செல்வதற்கும் இடையில் தேர்ந்தெடுக்க நீங்கள் விரும்பினால், நான் உங்களிடம்,

"வெளிநோக்கிச் செல்வதைத் தேர்ந்தெடுங்கள்" என்று சொல்லுவேன். அவன் குறைந்த நோயுற்றவனாக, மேற்பரப்பில் வாழ்பவனாக உள்ளான், ஒருபோதும் உண்மையை அறிந்து கொள்ள மாட்டான், ஆனால் குறைந்தது ஒரு போதும் பைத்தியமாவதில்லை. உள்நோக்கிச் செல்பவர்கள் உண்மையை அறிந்து கொள்கின்றனர், ஆனால் அது நூற்றில் ஒன்றே சாத்தியமாகிறது. தொண்ணூற்று ஒன்பது - சதவிகிதம் அவன் பைத்தியமாகும் சாத்தியமே உள்ளது.

நான் (அபரிமிதமான பொழிவுள்ள) தடையற்ற ஓட்டமுள்ள ஒரு வாழ்க்கையையே ஆதரிக்கின்றேன். வாழ்க்கை ஓர் இயற்கையான இணைப்பாக இருக்க வேண்டும். நீங்கள் வெளியே செல்ல வேண்டும், நீங்கள் உள்ளே செல்ல வேண்டும், ஆனால் எதையும் பற்றிக் கொண்டிருக்க வேண்டாம், அப்படியே தொடர்ந்து விழிப்புடன் இருங்கள். ஞாபகத்தோடு இருங்கள். ஞாபகத்துடனேயே இருந்து கொண்டிருங்கள். நீங்கள் உலகத்திலிருக்கும் போது கூட ஞாபகத்தோடு இருங்கள்; உங்களுள் இருக்கும்போது கூட ஞாபகத்தோடு இருங்கள். எப்போதும் உணர்வு நிலையை விழிப்புடன் வைத்திருங்கள், ஆர்வத்துடன், உயிரோட்டத்துடன் உணர்வு நிலையின் சுடர் இழக்கப்படுதல் கூடாது, அவ்வளவுதான். பின்பு நீங்கள் கடைத் தெருவில் அல்லது ஆஸ்ரமத்தில் வாழலாம் - நீங்கள் ஒரு போதும் வாழ்க்கையை இழந்தவராக மாட்டீர்கள். நீங்கள் வாழ்க்கையால் அளிக்க முடிகின்ற பரந்த அறிவுள்ள ஆழத்தை அடைகிறீர்கள். அந்தப் பரந்த அறிவுள்ள (பூர்ணமான) ஆழம் கடவுள். கடவுள் ஓர் உள்ளும் வெளியும் செல்லும் அசைந்தாடுபவர். வெளியே உள்ளே உள்முகமாகச் செல்லுதல், வெளிமுகமாகச் செல்லுதல் இரண்டும - ஆனால் உணர்வுடன் இருங்கள்.



**சில சமயங்களில், இப்போது, நீங்கள் பிரசங்கத்தின் போது உள்ளூரச் சிரிக்கிறீர்கள்.**

நான் புனிதமானவனாக, தெய்விகத்தன்மை உள்ளவனாக ஆகிக் கொண்டிருக்க வேண்டும், ஏனென்றால் மிகவும் புனிதமானவராக இருந்தால், நீங்கள் வாழ்க்கையை விளையாட்டாக எடுத்துக் கொள்வீர்கள். நீங்கள் உள்ளூரச் சிரிப்பவராக சிரிப்பவராக; பின்பு அது

ஒரு சுமையல்ல. உங்களது முழு வாழ்க்கையும் ஒரு புன்னகையாக இருக்கும். பின்பு அது ஆழ்ந்த சிந்தனையுள்ள காரியமாக இராது.

உலக முழுவதிலும் மத நம்பிக்கை உள்ள மக்கள் அதிக ஆழ்ந்த சிந்தனையுள்ளவர்களாக இருக்க வேண்டுமென்று கற்பிக்கின்றனர் - ஆழ்ந்து சிந்திப்பவர்களாக இது நோயுற்ற நிலையாகும், ஆரோக்யமல்ல. சிரிப்பை உங்களது பிரார்த்தனையாகச் செய்யுங்கள். அதிகமாகச் சிரியுங்கள். உங்கள் தடைப்பட்ட சக்திகளை சிரிப்பு விடுவிப்பது போல வேறு எதுவும் செய்வதில்லை. உங்களைக் களங்கமற்றவராகச் சிரிப்பு செய்வது போல மற்ற எதுவும் செய்வதில்லை. உங்களைக் குழந்தைகள் போலச் சிரிப்பு செய்வது போல மற்ற எதுவும் செய்வதில்லை. குழந்தைகள் உள்ளூரச் சிரிக்கிறார்கள், சிரிக்கிறார்கள், புன்னகை செய்கிறார்கள். உறுதியாக, அவர்கள் அழவும் செய்கிறார்கள், ஆனால் அவர்களுடைய அழுகை அழகானது.

அழுங்கள், கண்ணீர் விடுங்கள், சிரியுங்கள், இவை எல்லாம் உங்களது பிரார்த்தனையாக இருக்கட்டும். கோயிலுக்குச் செல்லுங்கள் - வாய் மொழியாகக்காதீர்கள். சர்ச்சிற்குச் செல்லுங்கள் - அங்கீகரிக்கப்பட்ட பிரார்த்தனை முறைகளைப் பற்றி கவலை கொள்ளாதீர்கள். அங்கே எதுவும் இல்லை. எந்த அங்கீகரிக்கப்பட்ட பிரார்த்தனை முறையும் இல்லை. உங்களுடைய சொந்தப் பிரார்த்தனையை உருவாக்கிக் கொள்ளுங்கள். உங்களுக்கு கண்ணீர் விட வேண்டும் போல உணர்வு இருந்தால் கண்ணீர் விடுங்கள். வார்த்தைகளை விட கண்ணீர் மிகுந்த அர்த்தமுள்ளது; அவை உங்களுடைய இதயத்தைக் கொண்டிருக்கின்றன. அவை அதிகப் பிரார்த்தனையுடையன, அவை அதிக அழகுடையன, அதிக அர்த்தமுள்ளவை. வார்த்தைகள் உயிரற்றவை. கண்ணீர் உயிருள்ளதாக, புதியதாக உள்ளது - உங்களிடமிருந்து வருகிறது, உங்கள் ஆழத்திலிருந்து வருகிறது, அல்லது சிரியுங்கள். கோயிலின் கடவுளோடு ஒரு நல்லசிரிப்பு சிரியுங்கள்.

டால்மட் (யூதர்களின் சட்டத் தொகுதி)டில் இது சொல்லப் படுகிறது.... டால்மட் ஒரு அபூர்வமான புத்தகம். கீதை, பைபிள், கொரான் எல்லாம் ஆழ்ந்த சிந்தனை உள்ளதாக உள்ளன. டால்மட் நம்பமுடியாத அளவு அபூர்வமானது. டால்மடடில், "கடவுள் அடுத்தவர்களைச் சிரிக்கச் செய்பவர்களை விரும்புகிறார்" என்று

சொல்லப்பட்டுள்ளது. ஒரு மத நூல் இவ்வாறு சொல்லுகிறது என்பதை உங்களால் கற்பனை பண்ண முடியாது: ''கடவுள் அடுத்தவர்களைச் சிரிக்கச் செய்பவர்களை விரும்புகிறார்'' அவர்களே உண்மையான துறவிகள் ஆவார்கள்.

நீங்கள் மக்களை ஆழ்ந்து சிந்திப்பவர்களாகச் செய்வீர்களானால் நீங்கள் ஒரு பாபி. உலகம் முன்பே அதிகப் பளுவுடன் உள்ளது; தயவு செய்து இன்னும் அதை வேறு அதிகமான பளுவாக்காதீர்கள். கொஞ்சம் சிரிப்பைக் கொடுங்கள். நீங்கள் எங்கிருக்கிறீர்களோ அங்கு ஒரு சிரிப்பின் அலையை உருவாக்குங்கள். கொஞ்சம் அதிகமாகப் புன்னகை பண்ணுங்கள். அடுத்தவர்களும் புன்னகைப்பதற்கு உதவுங்கள். முழு உலகமும் வாய்விட்டுச் சிரிக்குமானால், போர்கள் மறைந்து விடும். ஏனென்றால் போர்கள் ஆழ்ந்த சிந்தனையுள்ள மக்களால் நடத்தப்படுகிறது. நீதிமன்றங்கள் மறைந்துவிடும், ஏனென்றால் நீதிமன்றங்கள் ஆழ்ந்த சிந்தனையுள்ள மக்களால் நிர்வகிக்கப்படுகின்றன.

அதனால் தான் எந்த நீதி மன்றத்திலாவது நீங்கள் சிரித்தீர்களானால், அது குற்றமாகும். எந்த நீதிமன்றமும் அதை அனுமதிப்பதில்லை - நீங்கள் நீதிமன்றத்தை அவமதிக்கிறீர்கள். ஒவ்வொருவரும் ஆழ்ந்த சிந்தனை உள்ளவராக இருக்க வேண்டும். நீதிமன்றங்களில் அமர்ந்திருக்கும் நீதிபதிகளைப் பாருங்கள்: எப்படி அவர்கள் பார்ப்பதற்கு முட்டாள் தனமாக ஆழ்ந்த சிந்தனை உள்ளவராக உள்ளனர். கொஞ்சம் சிரிப்பது அதிகம் நியாயமாக இருப்பதற்கு அவர்களுக்கு உதவும், மனிதர்களை அதிக ஆழமாகப் புரிந்து கொள்வதற்கு உதவும். அவர்களுடைய உணர்ச்சியற்ற தன்மை உணர்ச்சியற்ற தன்மை மனிதத்தன்மையற்றது. கொஞ்சம் வெதுவெதுப்பு (மனமார்ந்த அன்பு)....

ஆனால் நீதிபதி பயப்படுகிறார். திருடன் நீதிமன்றத்தில் நின்று கொண்டு சிரிப்பதற்கு ஆரம்பித்தால், நீதிபதி கூட அவனுடன் சேர்ந்து கொள்வார். முழு நீதிமன்றமும் சிரிக்கிறது - பின்பு நீதிபதி பயப்படுகிறார். பின்பு அது மிக அதிகமான மனிதத் தன்மையாகி விடுகிறது; பின் இந்த சிரிக்கின்ற திருடனை மூன்று அல்லது நான்கு அல்லது ஐந்து வருடங்களுக்கு சிறையில் அடைப்பது என்பது கஷ்டமாகி விடுகிறது. மிக (மிகைப்பட அல்ல) அதிகமில்லை - அவன் ஒரு சில ரூபாய்களை திருடி உள்ளான். அவன் கொஞ்சமாகத் திருடி

உள்ளான். அந்த நீதிபதி ஒரு வேதாந்தியாக இருக்கலாம். அவன் கொஞ்சமாகத் திருடி உள்ளான் - ரூபாய்கள், வைரங்கள் - அவன் அடைக்கப்பட வேண்டும்: உயிரற்ற வைரங்களுக்கா, உயிருள்ள இருப்பு ஐந்து வருடங்களுக்கு அழிந்து போவதற்கு அடைக்கப்பட வேண்டும். அல்லது ஆழ்ந்த கோபத்தில், ஓர் ஆத்திரத்தில், சில பைத்தியக்கார வினாடியில் அவன் கொன்றிருக்கலாம். நீதிபதி கூட சில சமயங்களில் கொல்வதாக சிந்திக்கிறார். வாழ்க்கையில் பல சமயங்களில் யாரையாவது கொல்ல வேண்டுமென்று எண்ணாத ஒரு மனிதனைக் காணுவது என்பது கஷ்டமாகும். அந்த எண்ணம் (பாவனை) மனிதத்தன்மை உள்ளதாக காணப்படுகிறது.

நான் போய் கொல்லுங்கள் என்று சொல்லவில்லை, நான் நீதிபதிகளை, கொலைகாரர்களாக இருப்பவர்களை மன்னித்து விட வேண்டும் என்று சொல்லவில்லை, இல்லை. ஆனால் கொஞ்சம் சிரிப்பு உதவும். ஒரு மனிதன் கொல்லப்பட உள்ளான்: நீதிபதி கொஞ்சம் சிரித்தால், நீதிமன்றத்தில் இருப்பவர்கள் கூட நீதிபதியுடன் கொஞ்சம் உள்ளூரச் சிரித்தால், அவருக்கு அந்த மனிதரை தூக்கு மேடைக்கு அனுப்புவது கஷ்டமாகிவிடும். ஏனென்றால் அது திரும்பவும் ஒரு கொலையாகிவிடும்; ஒரு கொலைக்கு நீதிமன்றம் இன்னொரு கொலையை முடிவு செய்யும்போது, எப்படி உங்களால் விஷயங்களைச் சரியாக்க முடியும்? இந்த மனிதனுக்கு மனோ நல மருத்துவ சிகிச்சை தேவையிருக்கலாம். இந்த மனிதனை இரண்டு ஆண்டுகளுக்கு ஆஸ்ரமத்திற்கு தியானிப்பதற்கு அனுப்பும் தேவையிருக்கலாம். ஆனால் மரணம் கிடையாது. ஏனென்றால் மரணம் - கொலை செய்வது கெட்டது என்றால், நீதி என்ற பெயரில் மரண தண்டனை கொடுப்பது கூட கெட்டதே; அது நல்லதாக முடியாது.

ஆனால் நீதிபதிகள் மிகவும் ஆழ்ந்த சிந்தனை உள்ள மக்கள், அரசியல்வாதிகள் மிகவும் ஆழ்ந்த சிந்தனை உள்ள மக்கள் - உலகத்தின் எல்லா சுமையும் அவர்களுடைய தோள்களில் உள்ளன. உலக முழுவதிலும் அவர்கள் எப்போதும், "மாஸே-துங்கிற்கு பின்பு என்ன?" என்று சிந்தித்துக் கொண்டிருக்கின்றனர். மாஸே-துங்கிற்கு முன் அங்கே உலகம் இல்லாதது போல உலகம் சந்தோஷமாக இருந்து கொண்டிருக்கும். உண்மையில் எல்லா மாஸே-துங்குகளும் மறைந்து விட்டால் அது இன்னும் சந்தோஷமாக இருக்கும்.

நான் ஒரு புத்தகத்தை வாசித்துக்கொண்டிருந்தேன், மிகவும் அபூர்வமான ஒரு புத்தகம். காந்தி அங்கு இல்லாமல்

இருந்திருந்தாரானால், இந்தியா விரைவிலேயே சுதந்திரமாக ஆகியிருக்கும் என்று அந்த மனிதர் சொல்லுகிறார். நான் கொஞ்சம் ஆச்சரியமடைந்தேன். ஆனால் பின்பு நான் அவருடைய வாதங்களை நோக்கிய போது அது சரி என்று உணர்ந்தேன். காந்தி நிறையக் கஷ்டங்களை உருவாக்கி உள்ளார் - பிடிவாதமாக, எல்லா அரசியல் வாதிகளும் அப்படியே. அவர் நிறையக் கஷ்டங்களை உருவாக்கி உள்ளார். அவர் ஏதேனும் ஒன்றிற்கும் விட்டுக் கொடுக்கவில்லை. அவருக்கு அவருடைய சொந்த சொந்த வழிகள் இருந்தன. அவர்கள் விட்டுக் கொடுக்கவில்லை. இருவரும் பிடிவாதமாக, கல் நெஞ்சமாக இருந்தனர். அந்த மனிதனுக்கு நுண்ணறிவு இருக்கிறது என்பது தெரிகிறது. காந்தியும், ஜின்னாவும் அங்கே இல்லாதிருந்தால் இந்தியா சீக்கிரமே சுதந்திரமடைந்திருக்கும் என்று சொல்லுகிறார்.

சர்ச்சுகள் இல்லாதிருந்தால் இந்தியா ஒரு போதும் சார்ந்து இருந்திருக்காது. அரசியல்வாதிகள் உலகிலிருந்து மறைந்து விட்டால், உலகம் சுதந்திரமாக இருக்கும். அதற்காகச் சண்டையிடத் தேவையில்லை: மத குருக்கள் மறைந்து, வாழ்வைவிட மரணமாகத் தோன்றுகின்ற ஆழ்ந்த சிந்தனையுள்ள சர்ச்சுகள் மறைந்தால் அது அப்படியே சுதந்திரமாக இருக்கும். நடனமாட, அனுபவிக்க, பேரானந்தமடைய, பரவசமடைய கோயில் எழ வேண்டும்; உலகம் இன்றும் மத நம்பிக்கை உள்ளதாக இருக்கும்.

நீங்கள், "சில சமயங்களில், இப்போது பிரசங்கத்தின் போது உள்ளூரச் சிரிக்கிறீர்கள்" என்று சொல்லும்போது, நான் புனிதமாகி உள்ளேன் என்று நம்புகின்றேன். இல்லையென்றால் வேறு எந்தக் காரணமும் அங்கே இருப்பதாகத் தெரியவில்லை.

○

**"விஜய் ஆனந்த் நூறு சதவிகிதம் அவனுடைய திரைப்படம் "ஜான் ஹாஜிர் ஹை" ஒரு குறிக்கோளை எய்துவதாக... ஏனென்றால் அவனுடைய 'குரு' அதனுடைய அமோக வெற்றியை முன் கூட்டியே சொல்லியுள்ளார்... அந்தத் திரைப்படம் தோல்வி யடைந்தது. தயவு செய்து "குருஜீ" விளக்கம் சொல்வீர்களா?**

***- ஸ்டார் டஸ்ட் பத்திரிகையிலிருந்து.***

முதல் விஷயம்: விஜய் ஆனந்த் இது போன்ற விஷயங்களை என்னைக் கேட்கும் அளவிற்கு முட்டாள் இல்லை. அவன் ஒரு போதும் அவனுடைய வியாபாரத்தைப் பற்றி எதுவும் குறிப்பிட்டதில்லை. அவன் ஒருபோதும் அவனுடைய திரைப்படம் "ஜான் ஹாஜிர் ஹை" பற்றி எதுவும் கேட்டதில்லை, நான் ஒரு போதும் பதில் சொல்லியதில்லை. அவன் "ஜான் ஹாஜிர்ஹை" என்ற பெயருள்ள ஒரு திரைப்படம் எடுத்ததைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது.

இந்த ஸ்டார் டஸ்டின் பதிப்பாசிரியர்கள், ஏதோ ஒன்றைக் கனவு கண்டிருக்க வேண்டும். அவர்கள் ஒரு கனவைப் பார்த்திருப்பார்கள், அவர்களுடைய கனவில், "விஜய் உன்னுடைய திரைப்படம் அமோக வெற்றியடையும்" என்று நான் சொல்லுவதாக அவர்கள் கேட்டிருக்கலாம். பின்பு அவர்கள் விஷயத்தைத் தவறுதலாகப் புரிந்திருக்கலாம். நான் அவர்களுடைய கனவுகளில், "அமோக வெற்றி" என்று லவோ-ஷியன் முறையில் அவர்களிடம் சொல்லியிருக்க வேண்டும். லவோத் ஷு, "சில மனிதர்கள்தான் என்னைப் புரிந்து கொள்கிறார்கள். ஏனென்றால் நான் உன்னதமானவன்" என்று சொல்லுகிறார்கள். அதனால், நீங்கள் அதை மொழி பெயர்ப்பீர்களானால், ஒருவருமே திரைப்படத்தைச் சென்று பார்க்கவில்லையென்றால் அது அமோக வெற்றி என்பதாகும். ஏனென்றால் பாமரமக்கள் முட்டாள் தனமானவர்கள், அதை அவர்களால் புரிந்து கொள்ள முடியாது, அது உன்னதமானது: அது ஓர் அமோக வெற்றியாகும். பாமர மக்கள் ஒரு திரைப்படத்தைச் சென்று பார்க்கிறார்கள் என்றால் அது வெற்றியடையவில்லை, தோல்வியடைந்தது. அது ஒரு முட்டாள்தனமாகதாக இருக்கும்; இல்லையென்றால் எப்படி அது நிறைய முடடாள் ஜனங்களை கவர்ந்திழுக்கும்?

நான் ஏதொன்றும் சொல்லவில்லை, ஆனால் அவர்கள் அவர்களுடைய கனவில் ஏதாவது ஒன்றைக் கேட்டிருப்பார்களானால், அவர்கள் என்னைத் தவறாக அர்த்தம் கொண்டுள்ளனர். அது தோல்வியடைந்திருந்தால், அது ஓர் அமோக வெற்றியாகும். அது ஏதோ ஒன்று, சாதாரண மனதிற்கப்பால் செல்லக்கூடியது. அமோக வெற்றி என்பது அதுவே. ஹிட்லர் ஓர் அமோக வெற்றி உள்ளவன் அல்ல. பாமர மக்கள் அவனை வழிபட்டனர். அது அவன் பாமர

மக்களைச் சார்ந்தவன் என்பதைக் காட்டுகிறது. அவன் சாதாரணமான முட்டாள் மனிதன்.லாவோத்ஷூ ஓர் அமோக வெற்றியுள்ள மனிதர்: ஒருவருமே அறிந்து கொள்ளவில்லை. அவரைப் பற்றி ஒருவருமே கேள்விப்பட்டதில்லை. ஒரு வதந்தி கூட கிடையாது. அவர் வந்து அமைதியாகச் செல்கிறார். அவர் ஓர் அமோக வெற்றியாளர், அது அவருக்குத் தெரியும், அவர் தன்னுடைய டவோடிசிங் என்றதில் சொல்லுகிறார், "நான் மேம்பட்டவன், ஏனென்றால் மிகச் சில மனிதர்களே என்னைப் புரிந்து கொள்ள முடியும். முழு உலகமுமே என்னைத் தவறாகப் புரிந்துள்ளது; அதனால் நான் மேம்பட்டவன்" இப்போது, எதிர்காலத்திலும் புரிந்து கொள்ள முடியாத நிலையால் அதிகபக்ஷமாக தவறாகப் புரிந்து கொள்ளும் சாத்தியமே அதிகம் உள்ளது.

மிக அபூர்வமான மனிதரை வழக்கமாகத் தெரிந்திருந்தேன். அவர் ஒரு சந்நியாசியாவார். நான் சிறுவனாக இருந்தபோது அவர் எங்கள் கிராமத்திற்கு வழக்கமாக வருவார். எங்கள் குடும்பத்தோடு வழக்கமாகத் தங்குவார். நான் அந்த மனிதரை ஒரு தனிப்பட்டக் காரணத்திற்காக விரும்பினேன். எப்பொழுதெல்லாம் அவர் பிரசங்கம் செய்கிறாரோ அப்போது மக்கள் கைதட்டுவார்கள், அவர் என்னைப் பார்த்து சொல்லுவார், "ரஜினீஷ், ஏதோ ஒன்று தப்பாக இருக்க வேண்டும். இல்லையென்றால் மக்கள் ஏன் கைதட்டுகிறார்கள்? அவர்கள் ஏதேனும் ஒன்று தவறுதலாக இருந்தால் தான் கைதட்டுவார்கள், ஏனென்றால் அவர்கள் தவறுதலாக இருக்கிறார்கள்" ஒருவருமே கைதட்டவில்லையென்றால் அவர் என்ன சொல்லுகிறார் என்பதை ஒருவரும் புரிந்து கொள்ளவில்லை, ஒவ்வொருவரும் தங்கள் நேரத்தை வீணாக்கிக் கொண்டிருப்பதாகப் பார்ப்பார்களானால், அவர் வீட்டிற்கு வந்து, "ரஜினீஷ் நான் ஏதாவது ஒன்றைச் சொல்லியிருப்பேன். நீ பார்த்தாயா. ஒருவரும் புரிந்து கொள்ள வில்லை" என்று சொல்லுவார்.

பாமர மக்களிடம் வெற்றி என்பது தோல்வியாகும்.



**தன்னை - ஞாபகத்தில் கொள்ளுதல் என்பதற்கும் சாட்சியாக இருப்பதற்கும் இடையில் என்ன வித்தியாசம்?**

நான் இப்பொழுதான் தற்சோதனைக்கும் தன்னை - ஞாபகத்தில் கொள்ளுதலுக்கும் இடையில் உள்ள வித்தியாசத்தை உங்களுக்குக் கூறினேன். இப்போது தன்னை - ஞாபகத்தில் கொள்ளுதலும், சாட்சியாக இருப்பதும்.

ஆமாம். மறுபடியும் அங்கே அதிகமான வித்யாசம்: ஏனென்றால் தன்னை - ஞாபகத்தில் கொள்ளுதலில் முக்கியத்துவம் தன் மேல். அதைப் போல தற்சோதனையில் முக்கியத்துவம் எண்ணங்கள் மேல், உணர்வின் மேல், கோபத்தின் மேல், காமத்தின் மேல் அல்லாது ஏதாவது ஒன்றின் மேல், தன்னிருப்பு (தான்) மறக்கப்பட்டுவிட்டது; தன்னை - ஞாபகத்தில் கொள்ளுதலில் தன்னிருப்பு (தன்னுடைய இருப்பு) ஞாபகத்தில் கொள்ளப்படுகிறது - முழு சக்தியும் தன் மேல் குவிக்கப்படுகிறது. நீங்கள் அப்படியே மனோ நிலையைப் பார்ப்பீர்கள், சூழ்நிலையைப் பார்ப்பீர்கள், உணர்வுகளைப் பாரப்பீர்கள் - நீங்கள் அதைப் பற்றி சிந்திக்க மாட்டீர்கள், ஏனென்றால் சிந்திப்பதில் பார்ப்பது என்பது இழக்கப்பட்டு விடுகிறது, பார்ப்பது என்ற தூய்மை இழக்கப்பட்டு விடுகிறது.

சாட்சியாய் இருப்பது என்பது இன்னும் ஒருபடி முன்னால் உள்ளது. சாட்சியாய் இருப்பதில் தன்னிருப்பும் கூட விட்டு விடப்படும்; ஞாபகத்தில் கொள்ளுதல் மட்டும் தொடர்ந்து இருந்து வரும். நான் ஞாபகத்தில் கொள்ளுகிறேன் என்பதல்ல. அந்த "நான்" இனி சாட்சியாய் இருப்பதன் பகுதியல்ல. அப்படியே ஞாபகத்தில் கொள்ளுதல்... சாட்சியாய் இருப்பது என்பது தனக்குச் சாட்சியாய் இருப்பது என்பதாகும். தன்னை - ஞாபகத்தில் கொள்ளுதல் ஆரம்பம். சாட்சியாய் இருத்தல் முடிவு. தன்னை - ஞாபகத்தில் கொள்ளுதல் மூலம் நீங்கள் கோபத்தைப் பார்க்க ஆரம்பிக்கிறீர்கள். உங்களை தன்னில் மையங்கொள்ளச் செய்கிறீர்கள். தன்னில் குவிக்கிறீர்கள், உங்களைச்சுற்றி மனதால் எழுப்பப்பட்ட எண்ண அலைகளை பார்க்கிறீர்கள். ஆனால் நீங்கள் உங்கள் மனதைப் பார்க்கின்ற பொழுது, காலப்போக்கில் மனம் மறைந்து விடுகிறது. மனம் மறைந்த போது அங்கே சூன்யமாக (காலியாக) உள்ளது, பின் ஒரு புதிய அடி எடுத்து வைக்க முடியும்: இப்போது அந்த சக்தி கோபத்தைப் பார்த்தது, காமத்தை, பொறாமையைப் பார்த்தது விடுவிக்கப்படுகிறது - ஏனென்றால் பொறாமை, கோபம், காமம் மறைந்து விட்டது. இப்போது அதே சக்தி உங்களைப் பார்ப்பதற்கு உள்நோக்கிச் செல்கிறது.

அதே சக்தி தன்னைப் பார்க்கும் போது, தான் என்பதும் கூட மறைந்த விடுகிறது; பின்பு ஞாபகத்தில் கொள்ளுதல் மட்டும் உள்ளது. அந்த ஞாபகத்தில் கொள்ளுதல் சாட்சியாய் இருப்பதாகும். சாட்சியால் இருப்பதில் தான் என்பது இல்லை. நீங்கள் கோபத்தைப் பார்க்கிறீர்கள், ஆனால் நீங்கள் உங்களைப் பார்க்கும் போது, இனி நீங்கள் இல்லை; ஒரு பரந்த, எல்லையற்ற, பந்தமற்ற சாட்சியாக இருக்கிறீர்கள். உணர்வு மட்டும் - எல்லையற்ற, பரந்த ஆனால் ஒரே இடத்தில் குவிக்கப் பட்டல்ல. இதை ஞாபகத்தில் கொள்ள வேண்டும்.

குர்ஜீஃப் அவருடைய வாழ்க்கை முழுதும் தன்னை ஞாபகத்தில் கொள்ளுதல் என்ற முறையிலே (வழியிலே) செயல்பட்டார். ஏனென்றால் மேற்கத்திய நாடுகளில் சாட்சியாக இருப்பதை அறிமுகப்படுத்துவது ஏறக்குறைய முடியாதது, ஏனென்றால் மேற்கு நாடுகள் தற்சோதனை பண்ணுவதில் வாழ்ந்து கொண்டிருக்கின்றன. எல்லாக் கிறிஸ்துவ ஆஸ்ரமங்களிலும், அவர்கள் தற்சோதனை பண்ணுவதைக் கற்பித்துக் கொண்டிருக்கின்றனர். குர்ஜீஃப் தற்சோதனைக்கு அப்பால் ஏதோ ஒன்றை அறிமுகப்படுத்தினார். அவர் அதை தன்னை - ஞாபகத்தில் கொள்ளுதல் என்று அழைத்தார். அவர் எப்போதும் சாட்சியாக இருப்பதை அறிமுகப்படுத்த வேண்டுமென எண்ணிக் கொண்டிருந்தார், ஆனால் அவரால் முடியவில்லை. ஏனென்றால் சாட்சியாய் இருத்தல், தன்னை - ஞாபகத்தில் கொள்ளுதலில் நிலையான போது தான் அறிமுகப்படுத்த முடியும். அதற்கு முன்னால் அதை அறிமுகப்படுத்த முடியாது. தன்னை - ஞாபகத்தில் கொள்ளுதல் முதிர்ச்சியடையும் முன்பாக அதைப்பற்றி பேசுவது என்பது எங்குமே சென்று அடைவதில்லை. அது உபயோகமற்றது. அவர் நீண்ட காலம் காத்திருந்தார், ஆனால் அவரால் அதை அறிமுகப்படுத்த முடியவில்லை.

கிழக்கிலே நாம் இரண்டுமே உபயோகப்படுத்துகிறோம். உண்மையிலே நான் மூன்றையுமா உபயோகப்படுத்தி வருகிறோம். சாதாரணமான மதநம்பிக்கை உள்ள ஆழமாகச் செல்ல விரும்பாத மக்களுக்காக தற்சோதனை உள்ளது; ஆழமாகச் செல்ல விரும்புபவர்களுக்கு தன்னை - ஞாபகத்தில் கொள்ளுதல்; அதிக ஆழத்திற்குச் செல்லவும் அந்த ஆழத்தில் தாங்கள் மறைந்து விடவும் விரும்புபவர்களுக்கு சாட்சியாய் இருத்தல், சாட்சியாய் இருத்தல் முடிவாகும். அதற்கப்பால் ஒன்றும் இல்லை. நீங்கள் ஒரு சாட்சிக்கு -

சாட்சியாய் இருப்பதே. அதனால் சாட்சியாய் இருப்பதற்கு அப்பால் செல்வது என்பது முடியாதது. நீங்கள் முடிவிற்கே வந்து விட்டீர்கள். உலகத்தின் முடிவு சாட்சியாய் இருப்பதாகும்.

தற்சோதனையிலிருந்து தன்னை - ஞாபகத்தில் கொள்ளுதலுக்குச் செல்லுங்கள், தன்னை - ஞாபகத்தில் கொள்ளுதலிலிருந்து எப்போதாவது சாட்சியாய் இருப்பதற்கு செல்வீர்கள் என்ற நம்பிக்கை கொள்ளுங்கள். ஆனால் தன்னை - ஞாபகத்தில் கொள்ளுதல் குறிக்கோள் அல்ல என்பதை மனதில் கொள்ளுங்கள். அது இணைப்புப் பாலமாக இருப்பது மட்டும் நல்லது. ஆனால் ஒருவர் அதைக் கடந்து செல்லவேண்டும், ஒருவர் அதற்கப்பால் செல்ல வேண்டும்.



**தூய உணர்வு நிலையில் சிறிது நேரம் இருந்துவிட்டு மீண்டும் அதைவிட்டு வெளிவருவது ஒருவருக்கு நேரிட முடியுமா?**

இல்லை அது முடியாது. ஆனால் அதைப்போல ஏதோ ஒன்று முடியும். உங்களுக்கு தூய உணர்வு நிலையின் ஒரு நொடி நேரக் காட்சி கிடைக்கும். நீங்கள் உள்ளே செல்லவில்லை. அது இமாலய சிகரங்களை நூற்றுக்கணக்கான மைல்களுக்கு அப்பாலிருந்து பார்ப்பது போல உள்ளது. நீங்கள் அவற்றை அடையவில்லை; ஆனால் நீங்கள் அதிக தூரத்திலிருந்து பார்க்கமுடியும். நீங்கள் சிகரத்தைப் பார்க்க முடியும், உங்களுக்கு பார்த்த உணர்விருக்கும். நீங்கள் ஜன்னலைத் திறந்து தொலைதூரத்தில் உள்ள சந்திரனைப் பார்க்கலாம். அதன் கிரணங்கள உங்களைத் தொடலாம், நீங்கள் பிரகாசமடையலாம். ஒரு குறிப்பிட்ட அனுபவம் உங்களுக்கு ஏற்படலாம், ஆனால் ஜன்னல் - அனுபவத்திலிருந்து ஏற்படலாம், ஆனால் ஜன்னல் - அனுபவத்திலிருந்து நீங்கள் மீண்டும் மீண்டும் வெளிவந்து விடுவீர்கள்.

தூய உணர்வு நிலை அடையப் பெற்று விட்டால் ஒரு நொடி நேரக்காட்சி, தூரத்திலிருந்து அல்ல. ஆனால் நீங்கள் அதனுள் நுழைந்து விட்டீர்கள் - பின் அதை உங்களால் மீண்டும் இழக்க முடியாது. ஒரு முறை அடைந்து விட்டால் அதை எப்பொழுதுமே

இழக்க முடியாது. நீங்கள் அதனுள் நுழைந்த அந்த வினாடியில், நீங்கள் மறைந்து விடுகிறீர்கள். யார் வெளி வர நேரிடும்? வெளிவர நேரிடுவதற்கு குறைந்தது நீங்கள் தொடர்ந்து இருந்து கொண்டிருக்க வேண்டும். ஆனால் தூய உணர்வு நிலையில் நுழைந்தபோது அகங்காரம் முழுதும் மறைந்து விடுகிறது, தன்னிருப்பு (self) முழுதும் மறைந்து விடுகிறது. பின் வெளி வருவதற்கு யார் உள்ளார்கள்?

ஒரு நொடி நேரக் காட்சியில் நீங்கள் மறைந்து போகவில்லை. நீங்கள் அங்கே இருக்கிறீர்கள். நீங்கள் ஒரு நொடி நேரக் காட்சியைப் பார்த்துவிட்டு கண்களை மூடிக் கொள்ளலாம். அது ஒரு ஞாபகசக்தியாக ஆகிவிடுகிறது; அது உங்களை வட்டமிட்டுக் கொண்டிருக்கும்; அது திரும்பவும் வேண்டுமென்ற பேரவாவாக ஆகிவிடுகிறது. அது உங்கள் கனவுகளில் வருகிறது. உடனடியாக நீங்கள் மீண்டும் அந்த நொடி நேரக் காட்சி வேண்டுமென்ற ஆழ்ந்த உந்துதலை (ஆவலை) உணர்கிறீர்கள். ஆனால் அது எப்போதும் ஒரு நிகழ்வாக முடியாது. நொடி நேரக் காட்சிகள், நொடி நேரக் காட்சிகளே. நல்லது, அழகானது, ஆனால் அதனுடன் ஒன்றுபட வேண்டாம், ஏனெனில் அவை நிலையானவை அல்ல. நீங்கள் அவற்றை விட்டு மீண்டும் மீண்டும் வெளிவருவது நேரிடும். ஏனென்றால் நீங்கள் இன்றும் அங்கே இருக்கிறீர்கள்.

ஒரு நொடி நேரக் காட்சி இருக்கும்போது சிகரங்களை நோக்கி நகருங்கள், சந்திரனை நோக்கி நகருங்கள்... சந்திரனோடு ஒன்றாகி விடுங்கள். நீங்கள் முழுதுமாக மறையவில்லை என்றால் நீங்கள் வெளியே வந்து விடுவீர்கள். நீங்கள் உலகத்திற்கு திரும்பவும் வந்தே தீர வேண்டும். ஏனென்றால் அகங்காரம் அந்த நொடி நேரக் காட்சியினால் திக்கு முக்காடச் செய்யப்பட்டுள்ளது. அகங்காரம், மரணம் போன்ற திகிலை அடைந்துள்ளது. அது "ஜன்னலை மூடு! போதும், நீ சந்திரனைப் பார்த்துள்ளாய். இப்போது முட்டாளாக இராதே. பைத்தியமாக இராதே" என்று சொல்லுகிறது. "லுனாடிக்" (Lunar) என்பதிலிருந்து வருகிறது. சந்திரனிடமிருந்து. எல்லா பைத்தியக்கார மனிதர்களும் லுனாடிக்ஸ், (lunatics) சந்திரனால் பாதிக்கப்பட்டவர்கள் என்று சொல்லப்படுகின்றனர் - தொலைதூர கனவுகளின் சிந்தனையில் இருப்பவர்கள்.

மனம், அகங்காரம், "ஒரு பைத்தியமாக இராதே. சில சமயங்களில் ஜன்னலைத் திறந்து சந்திரனைப் பார்ப்பது பரவாயில்லை, ஆனால்

அதே சிந்தனையாக இராதே. இந்த உலகம் உனக்காகக் காத்திருக்கிறது. உனக்கு நிறைவேற்றப்பட வேண்டிய பொறுப்புகள் உலகத்தில் உள்ளது'' என்று சொல்லுகிறது. அகங்காரம் உங்களை இசையச் செய்யும், தவறான வழியில் செலுத்தும், உலகத்தை நோக்கி செலுத்தும் ஏனெனில் அகங்காரம் உலகத்தில் தான் இருக்க முடியும். எப்பொழுதெல்லாம், மற்ற உலகங்களைப்பற்றி ஏதாவது உங்கள் மனதினுள் ஆழ்ந்து செல்லுமானால், அகங்காரம் பயமடைகிறது, குழப்பமடைகிறது, அது மரணம் போல் உள்ளது.

அந்த ஒரு நொடி காட்சி நிலைத்த வாழ்க்கை முறையாகி விட்டால், உங்கள் ஆதாரமான இருப்புத்தன்மை, ஆகியவற்றின் தூரத்தை பின் நீங்கள் இணைக்க வேண்டும். இடை வெளியை இணைக்க வேண்டும். எப்போது நீங்கள் தூய உணர்வாக ஆகி விட்டீர்களோ அப்போது மீண்டும் வெளிவருவது என்பது நேரிடாது. அது திரும்பி வராத நிலையாகும். ஒருவர் உள்ளே மட்டும் செல்கிறார்; வெளி வருவது இல்லை. அதற்கு வெளியே செல்லும் வழி இல்லை. ஒரே ஒரு கதவு... நுழைவாயில்.



**நீங்கள் புத்தர் அடிப்படையில் சுயநலமானவர் என்று சொன்னீர்கள். இயேசு அதே மாதிரியா? அப்படியானால் "எனக்குப் பின்னால் எந்த மனிதனாவது வந்தால், தன்னை நிராகரித்துவிட்டு (மறுதலித்து விட்டு) தன்னுடைய சிலுவையை எடுத்துக் கொண்டு என்னைத் தொடரட்டும்" என்று அவர் என்ன கருத்தில் சொல்லுகிறார்?**

ஆமாம். இயேசு கூட சுயநலமானவர் தான். இல்லையென்றால் அது முடியாது. இயேசு கிருஷ்ணர், ஜராதுஷ்ட்ரா, புத்தர் எல்லோருமே சுயநலமான மக்கள்: ஏனென்றால் அவர்களிடமிருந்து அளவில்லாத கருணை எழுகின்றது. அவர்கள் தன்னில் மையங்கொள்ளவில்லை யென்றால் அது முடியாது. அவர்கள் தங்களுள் பேரானந்தம் அடைய வில்லை யென்றால் அது முடியாது. முதலில் ஒருவர் அடைய வேண்டும்; அதன்பின் பகிர்ந்து கொள்ள முடியும்... அவர்கள் அதிக அளவில் பகிர்ந்து கொண்டது நூற்றாண்டுகள் கடந்து விட்ட போதும் கூட அவர்கள் இன்றும் பகிர்ந்து கொண்டே இருக்கிறார்கள். நீங்கள்

இயேசுவிடம் அன்பு கொள்வீர்களானால், திடீரென அவருடைய அன்பு இன்றும் தடையற்ற ஓட்டமாக இருந்து கொண்டிருக்கிறது. உடல் மறைந்து விட்டது, ஆனால் அவருடைய அன்பு மறையவில்லை. அது உலகத்தில் ஒரு நிலையான நிகழ்வாக ஆகிவிட்டது. அது எப்போதும் இருந்து கொண்டிருக்கும். எப்பொழுதெல்லாம் யாரோ ஒருவர் தயாராக, ஏற்றுக்கொள்பவராக இருந்தால், அவருடைய அன்பு பொழிவதாக இருக்கும். அவர் தன்னுடைய ஆதியான மூலத்தை அடைந்ததனால், அவர் சுயநலமாக இருந்ததனால், இது சாத்தியமாகிறது.

அப்படி என்றால் அதன் பொருள் என்ன? ஏனெனில் இந்த வார்த்தைகள் முரண்பட்டதாகத் தோன்றுகின்றன? "எனக்குப் பின்னால் எந்த மனிதனாவது வந்தால் தன்னை நிராகரித்துவிடட்டும்.." ஆமாம், அவை பார்ப்பதற்கு முரண்பட்டன போல் இருக்கின்றன. நான் உண்மையாக இருந்தால் பின்பு அவர்கள் என்னுடன் முரண்பட்டவர்கள். அடிப்படையில் நான் உண்மை, அதனால் அவர்கள் என்னுடன் முரண்பட மாட்டார்கள். அது ஒரு தோற்றம் மட்டுமே, ஏனென்றால் இயேசு, "நீங்கள் உங்களை அடைய வேண்டுமானால் உங்களை இழக்க வேண்டும், அது தான் வழியாகும்". என்று சொல்லுகிறார். அதனால் இயேசு சொல்லும்போது, "எனக்குப் பின்னால் எந்த மனிதனாவது வந்தால், தன்னை நிராகரிக்கட்டும்..." அது எதற்கென்றால், தானாக இருப்பதற்கு அது ஒன்றுதான் வழியாகும். உங்களுடைய அகங்காரத்தை நிராகரிக்கும்போது தான் உங்கள் இருப்பை நீங்கள் அடைகிறீர்கள். நீங்கள் முழுதுமாக மறைந்து விட்ட போது தான் நீங்கள் உங்கள் தன்னிருப்பை அடைகிறீர்கள். இயேசு, "வாழ்க்கையை நீங்கள் பற்றிக் கொண்டிருக்கும் போது, அதை நீங்கள் இழந்து விடுவீர்கள். நீங்கள் அதை இழக்கத் தயாராகும் போது; அது எப்போதும் உங்களுடனேயே இருக்கும். நீங்கள் எல்லையில்லாத வாழ்க்கையை அடைகிறீர்கள்" என்று சொல்லுகிறார். ஒரு நீர்த்துளி கடலில் விழுந்து, அது தன்னை இழக்கிறது - தன்னை நிராகரிக்கிறது - கடலாகிவிடுகிறது. கடலை அடைவதற்கு அது விலை ஒன்றும் கொடுக்கவில்லை. அது தன்னுடைய எல்லைகளை இழந்து விட்டது.

இயேசு சொல்லும்போது, "எனக்குப் பின்னால் எந்த மனிதனாவது வந்தால் தன்னை நிராகரிக்கட்டும..." கடல் துளியிடம் சொல்லுகிறது, "வா, உன்னை நிராகரித்து விடு! - அதனால் நீயும் கூட

கடலாகி விடுவாய் என்று" கடலாக ஆவதென்பது மிகவும் சுயநலமான விஷயமாகும்.

ஒரு துளி மிகவும் பிறர் நலம் கருதுவதாக இருக்கிறது, ஆனால் அது ஒரு துளியாகவே இருந்து வருகின்றது - எல்லை உள்ளதாக, வரம்பிற்கு உட்பட்டதாக, துக்ககரமானதாக அது சுயநலமாக இருப்பது போலக் காணப்படுகிறது; அது சுயநலமாக இருப்பது போலக் காணப்படுகிறது; அது அப்படி இல்லை. உலகத்தில் நீங்கள் சுயநலமாக மக்களைச் சென்று காணுவீர்களானால், உண்மையில் நீங்கள் அவர்கள் சுயநலமானவர்கள் என்பதை கண்டுபிடிக்க மாட்டீர்கள், அவர்கள் முட்டாள்தனமானவர்கள், சுயநலமானவர்கள் அல்லர்.

உண்மையில் சுயநலமான மக்கள் ஞானமடைந்தவர்களாகும். சுயநலமான மக்கள் என்பவர்கள், நிர்வாணமடைய முயலுபவர்கள், கடவுளை அடைய முயலுபவர்கள், மோட்சத்தை அடைய முயலுபவர்கள் - தடையில்லாமல் இருக்க, சுதந்திரமடைய முயலுபவர்கள். அவர்களே உண்மையில் சுயநலமான மக்கள், உலகத்தில் சுயநலமான மக்கள் என்று சொல்லப்படும் அந்த மக்கள் அல்லர், ஏனெனில் செல்வத்தைச் சேகரிக்க முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் முட்டாள் தனமானவர்கள், சுயநலமானவர்கள் அல்லர். அவர்களுக்கு அந்த அழகிய சொல்லை உபயோகிக்காதீர்கள். அவர்கள் முட்டாள் தனமானவர்கள்.

ஏன் அவர்களை சுயநலமான மக்கள் என்று அழைக்கிறீர்கள்? அவர்கள் செல்வத்தைச் சேகரித்துக் கொண்டு, தங்களுக்காக, தங்களுடைய இருப்பை விற்றுக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் ஒரு பெரிய வீட்டைக் கட்டிக்கொண்டு, அவர்கள் தாங்கள் காலியாக, ஒன்றுமில்லாமல் ஆகிவிடுகின்றனர். அவர்களுக்கு உள்ளே ஆன்மா இல்லாமல் ஒரு பெரிய கார் உள்ளது. நீங்கள் அவர்களை சுய நலமானவர்கள் என்று அழைக்கிறீர்கள்! அவர்கள் அதிகச் சுயநலமில்லாத மக்கள் உண்மையில் அவர்கள் ஒன்றுமில்லாத வற்றுக்கு தங்களைக் கொடுத்து விட்டவர்கள்.

இது நடந்தது: ஒரு மனிதன் நிறைய பொற்காசுகளுடன் இராம கிருஷ்ணரிடம் வந்து அவற்றை அவருககு அளிக்க விரும்பினான். இராமகிருஷ்ணர், "நான் பொன்னைத் தொட மாட்டேன். அவற்றை தொலைவிற்கு எடுத்துச் சென்றுவிடு" என்று கூறினார்.

அந்த மனிதன் மிகவும் கவரப்பட்டான். அவன், "எவ்வளவு சுயநலமற்றவர் நீங்கள்" என்றான்.

இராமகிருஷ்ணர் சிரித்து விட்டு அவரிடம், "நான் சுய நலமற்றவனா? நான் ஒரு சுயநலமான மனிதன். அதனால் தான் நான் பொன்னைத் தொடுவது இல்லை. நான் அவ்வளவு முட்டாள் தனமானவன் அல்லன், நீ சுயநலமில்லாதவன். நீ பொற்காசுகளுக்காக உன்னை விற்று விட்டாய்" என்றார்.

யார் சுயநலமற்றவர்? பொற்காசுகளுக்காக தன்னைக் கொடுக் கிறவர் சுயநலமில்லாதவரா?... அல்லது தன்னுடைய ஆன்மாவிற்காக உலகத்திலுள்ள எல்லாவற்றையும் விட்டுவிடுபவர்கள் சுயநலக்காரரா? உலகத்தில் மக்கள் தங்களை இழந்து விட்டு எதையும் அடைவதில்லை, நீங்கள் அவர்களை சுயநலமானவர்கள் என்று அழைக்கிறீர்கள். அவர்கள் சுயநலமில்லாதவர்கள், முட்டாள் தனமானவர்கள். புத்தர், இயேசு, கிருஷ்ணர் – அவர்கள் பரிபூரணமான மகிமை, முழு பேரானந்த நிலையடைந்தவர்கள். புத்தர், "மிஞ்சவே முடியாத சமாதியை நான் அடைந்தேன்" என்று கூறுகிறார். நீங்கள் அவர்களை சுயநலமற்றவர்கள் என்று கூறுகின்றீர்கள். பூரணமான பேரானந்தத்தில் வாழ்ந்த அவர்களை நீங்கள் சுயநலமற்றவர்கள் என்று அழைக்கிறீர்கள்? ஓர் அழகான சொல்லை நீங்கள் அழித்து விட்டீர்கள்.

இயேசு சரியானவரே. "எனக்குப் பின்னால் எந்த மனிதனாவது வந்தால் தன்னை நிராகரிக்கட்டும்..." ஏனென்றால் அதுதான் தன்னை அடைவதற்கான ஒரே வழியாகும். அவர் சுயநலமின்மையைக் கற்பிக்கிறார்.

"... தன்னுடைய சிலுவையை எடுத்துக் கொண்டு என்னைத் தொடரட்டும்," ஏனென்றால் அதுதான் உயிர்த்தெழுவதற்கு ஒரே வழியாகும். நீங்கள் ஒரு புதிய வாழ்க்கையை விரும்பினால், நீங்கள் மரணமடைய வேண்டும். நீங்கள் உயிர்த்தெழ விரும்பினால், உங்கள் சொந்த சிலுவையை தூக்கிச் செல்ல வேண்டும். லௌகிக உலகத்திற்கு சிலுவையில் அறையப்படுங்கள். நீங்கள் ஆன்மிகத்தில் உயிர்த் தெழுவீர்கள். இறந்த காலத்திற்கு வினாடிக்கு வினாடி மரண மடையுங்கள், அதனால் நிகழ்காலத்தில் ஒவ்வொரு வினாடிக்கும் உயிர்த்தெழுவீர்கள். மரணமடைதல் ஒரு மிக அடிப்படையான கலையாகும். எப்படி மரணமடைவது என்பதை அறிந்து கொண்டவர்களே, எப்படி வாழ்வது என்பதையும் அறிந்து

கொண்டவர்கள். மரணமடைய அஞ்சுபவர்கள், வாழ்வதற்கும் அஞ்சுகின்றனர். மரணத்திற்கும், மரணமடைவதற்கும் மிக அதிகமாக அஞ்சுபவர்கள், வாழமுடியாதவர்களாய் விடுகிறார்கள். ஏனெனில் வாழ்க்கை மரணத்தை அதன் பகுதியாகக் கொண்டுள்ளது.

"உங்களுடைய சிலுவையை எடுததுக்கொண்டு என்னைத் தொடர்ந்து வாருங்கள்" என்று இயேசு சொல்லும் போது, "நீங்கள் சாசுவதமான வாழ்க்கையை அடைய விருமபினால் சாவதற்குத் தயாராகுங்கள்" என்கிறார். இது சுயநலமற்றது.

யேசு போன்றவர்கள், "என்னைத் தொடருங்கள்" என்று சொல்லும்போது, "நீங்கள் அவர்களைத் தவறாகப் புரிந்து கொள்ளலாம். கிருஷ்ணர் கீதையில் அர்ச்சுனனுக்கு, "எல்லாவற்றையும் துறந்து விடு; உன்னுடைய மதங்கள். என்னைச் சரணடை, என்னைத் தொடர்ந்து வா" என்று சொல்லும்போது, அவர் என்ன சொல்லுகிறார்? இந்த மக்கள் எல்லோரும் அகங்காரம் அதிகம் உள்ளவர்களா? அவர்கள், "எங்களைத் தொடர்ந்து வாருங்கள்" என்று சொல்லுகிறார்கள். உண்மையில் இயேசு, "என்னைத் தொடர்ந்து வாருங்கள்" என்று சொல்லும்போது: அவர், "நான் உங்களின் உள்ளாழ்ந்த ஆன்மா" என்று சொல்லுகிறார். கிருஷ்ணர், "என்னிடம் சரணடையுங்கள்" என்று சொல்லும்போது அவர் வெளியே உள்ள கிருஷ்ணனுக்குச் சரணடையச் சொல்லவில்லை. அவர், "அடி ஆழத்தில், நான் உங்களுள் மறைந்துள்ளேன். நீங்கள் என்னிடம் சரணடையும் போது, நான் சரணடைவதற்கு ஒரு காரணமாக இருக்கிறேன். நீங்கள் உங்கள் இருப்புத் தன்மையின் கருப்பொருளைத் தொடர்கிறீர்கள். நான் அந்த உள்ளாழ்ந்த கருப்பொருளை அடைந்து விட்டேன்" எனறு கூறுகிறார்.

அவர்கள் இயேசுவையோ, கிருஷ்ணரையோ தொடருங்கள் என்று சொல்லவில்லை. அவர்கள் "சரணடையுங்கள்" ஏனென்றால் சரணடைவதால் நீங்கள் ஒரு கிருஷ்ணனாக, ஓர் இயேசுவாக ஆகிறீர்கள். இது முழுச் சுயநலமாகும்.

ஆனால் ஆதாரமான இந்த வார்த்தை நிந்தனைக்கான தன்மையைக் கொண்டுள்ளது. யாரோ ஒருவர், "சுயநலமாக இரா்தே" என்று சொல்லும்போது, உடனே, அவன் நிந்திக்கப்படுகிறான். நான் மீண்டும் அந்த அழகிய சொல்லைத் தூய்மைப்படுத்த முயன்று கொண்டிருக்கிறேன். நான் அதை அதனுடைய உண்மையான

மேன்மைக்கு கொண்டுவர முயன்று கொண்டிருக்கிறேன். அந்தச் சொல்லை சேற்றில் விழுந்து விட்டது, ஆனால் அந்தச் சொல் வைரம் போன்றது. அது சேற்றில் இருக்கலாம், அதை கழுவிச் சுத்தப்படுத்த முடியும். நீங்கள் என்னைப் புரிந்து கொண்டீர்களானால், நீங்கள் உண்மையில் சுயநலமாக இருந்தால் தான் அதன்பின், சுயநலமற்றவராவீர்கள் என்பதைக் காணுவீர்கள். நான் உங்களுக்குச் சுயநலத்தைக் கற்றுக்கொடுக்கிறேன். ஏனென்றால் நீங்கள் சுயநலமற்ற வராக வேண்டும் என்று விரும்புவதால்.



**எந்த அளவிற்கு வெளியில் என்னென்ன நிகழ் கின்றனவோ அவை மரணம், நம்பிக்கைத் துரோகம் முதலியவை இதுவும் என் மனத் தோற்றமா? இந்த விஷயங்களுக்கு நான் எந்த அளவில் பொறுப் பாவேன்?**

இந்த விஷயங்களுக்கு நீங்கள் பொறுப்புள்ளவராக மாட்டீர்கள். யாரோ ஒருவர் மரணமடைந்தால் அவருடைய மரணத்திற்கு நீங்கள் பொறுப்புள்ளவராக மாட்டீர்கள். ஆனால் நீங்கள் அந்த மரணத்தை விளக்கம் செய்யும் முறையைப் பொறுத்து, நீங்கள் பொறுப்புள்ளவரா கிறீர்கள். யாரோ ஒருவர் உங்களுக்கு நம்பிக்கைத் துரோகம் செய்துள்ளார், அவருடைய நம்பிக்கைத் துரோகத்திற்கு நீங்கள் பொறுப்புள்ளவராக மாட்டீர்கள். எப்படி நீங்கள் இருக்க முடியும்? ஆனால் நீங்கள் அதை நம்பிக்கைத் துரோகம் என்று கூறுகிறீர்கள். அது அப்படி இல்லாமல் இருக்கலாம். அது உங்களுடைய விளக்கம் செய்யும் முறையாக இருக்கலாம். அந்த விளக்கம் செய்யும் முறைக்கு நீங்கள் பொறுப்பாளியாகிறீர்கள்.

நீங்கள் அதை மரணம் என்று அழைக்கிறீர்கள். உங்கள் தாய் மரணமடைந்தால் நீங்கள் அதை மரணமென்று அழைக்கிறீர்கள், நீங்கள் வேதனைப்படுகிறீர்கள். நீங்கள் வேதனைப்படவில்லை. ஏனென்றால் தாய் மரணமடைந்து விட்டார். நீங்கள் அது மரணமென்று (சிந்திக்கிறீர்கள்) எண்ணுகிறீர்கள். நீங்கள் வாழ்க்கையைப் புரிந்து கொண்டீர்களானால், மரணம் இல்லை என்பதை அறிந்து கொள்கிறீர்கள். அதன் பின் தாய் மரணமடைகிறாள் - எப்போதும் தாயார்கள் மரணமடைந்து கொண்டிருப்பார்கள் - ஆனால் நீங்கள்

வேதனைப்படுவதில்லை. அவள் பழைய உடலை மாற்றிக் கொண்டுள்ளாள். உண்மையில் அது ஒரு மகிழ்ச்சியடையும் வினாடியாகும். ஹூம்...? அவளுக்கு புற்று நோய் அல்லது காசநோய், வயதான நிலை, ஆயிரத்தொரு நோய்கள் இருந்திருக்கும், அவள் கஷ்டப்பட்டு இழுத்துக் கொண்டிருந்திருக்கலாம். நீங்கள் அதை மரணம் என்று சொல்கிறீர்கள்? நான் அதை பழைய உடலை விட்டுவிட்டு புதியதில் நுழைவது என்று கூறுகிறேன். ஏன் நான் அதற்காக வேதனைப்படவேண்டும். நான் அதற்காக சந்தோஷமாக களிப்பாக இருப்பேன்.

அது விளக்கம் செய்யும் முறையைப் பொறுத்தது விளக்கம் செய்யும் முறை உங்களைப் பொறுப்பாளியாக்குகிறது. யாரோ ஒருவர் உங்களுக்கு நம்பிக்கைத் துரோகம் பண்ணுகிறார்: ஆனால் யார் அதை நம்பிக்கைத் துரோகம் என்று சொல்லுகிறார்கள்? உதாரணமாக, உங்களுடைய காதலர், உங்களுடைய கணவர், உங்கள் மனைவி, உங்களை விட்டுச் செல்லுகிறார்கள். நீங்கள் அதை நம்பிக்கைத் துரோகம் என்று சொல்லுகிறீர்கள்? இது உங்கள் விளக்கம் செய்யும் முறையாகும். நீங்கள் அதிகம் உரிமை கொண்டாடுபவராக இருக்கலாம். அவர் உங்களுக்கு நம்பிக்கைத் துரோகம் செய்யவில்லை. அவர் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள விரும்புகிறார். நீங்கள் அவருடைய இருப்பை (being) அதிகம் பற்றிக் கொண்டிருப்பவராக, திணறடிப்பவராக இருக்கிறீர்கள். நீங்கள் அவருடைய சுதந்திரத்தைக் கொல்பவராக உள்ளீர்கள். அவர் தன்னுடைய வாழ்க்கையைக் காப்பாற்றிக் கொள்ள முயலுகிறார் - உங்களுக்கு நம்பிக்கைத் துரோகம் செய்யவில்லை. அவர் வேறு ஒரு பெண்ணைத் தேடிச் சென்றிருக்கலாம். அன்பு என்ற மலர், மலர்கின்ற ஏதோ ஓரிடத்திற்குச் சென்றிருக்கலாம். ஆனால் நீங்கள் அவரைக் கட்டாயப் படுத்துகிறீர்கள், இப்போது நீங்கள் அது ஒரு நம்பிக்கைத் துரோகம் என்று சொல்லுகிறீர்கள். நீங்கள் முழு விஷயத்தையும் நிர்வகித் துள்ளீர்கள், அதனால்தான் இது நிகழ்ந்துள்ளது. இப்போது நீங்கள் அதை நம்பிக்கை துரோகம் என்கிறீர்கள்?

கவனியுங்கள் விழிப்படையுங்கள், என்ன நிகழ்ந்தது என்று பாருங்கள். நீங்கள் அதிகம் வசைபாடுபவராக இல்லாதிருந்தால் அவர் சென்றிருக்கமாட்டார். உங்களுடைய வசைபாடுதல் அவரைப் பைத்தியமாக்கியிருக்கலாம், அல்லது உங்கள் வசைபாடுதல் அவரை உணர்ச்சியற்றவராக ஆக்கியிருக்கலாம்.

ஒரு வசைபாடும் மனைவியோடோ அல்லது ஒரு வசைபாடும் கணவனோடோ வாழ்வதற்கு இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று ஏறக்குறைய எல்லாக் கணவன்மார்களும் செய்வது, அது உணர்ச்சியற்றவராக ஆகிவிடுவது. நீங்கள் வீட்டினுள் நுழைகிறீர்கள்; நீங்கள் உணர்ச்சியற்றவராக இருக்கிறீர்கள். அவன் வசை பாடிக் கொண்டே இருக்கிறான், நீங்கள் தொந்தரவு கொள்வதில்லை. நீங்கள் உங்கள் செய்தித்தாளை வாசித்துக் கொண்டே இருக்கிறீர்கள். நீங்கள் அவள் என்ன சொல்லுகிறாள் என்பதைக் கவனிப்பதில்லை. ஆனால், பின்பு நீங்கள் உங்கள் சொந்த தன்னிருப்பிற்கு நம்பிக்கைத் துரோகம் செய்கிறீர்கள். ஏனெனில் அதிக உணர்ச்சியற்றவராக நீங்கள் ஆகும்போது நீங்கள் குறைந்த அன்பு செலுத்துபவராகிறீர்கள். ஏனெனில் அதிக உணர்ச்சியற்றவராக நீங்கள் ஆகும்போது நீங்கள் குறைந்த அன்பு செலுத்துபவராகிறீர்கள். நீங்கள் அதிக உணர்ச்சியற்றவராகும்போது, பிரார்த்தனைக் காண சாத்தியம் குறைவாக உள்ளது. முன்பே நீங்கள், ஓர் உயிரற்ற பொருளாகி விட்டீர்கள். உங்கள் சொந்த வாழ்க்கைக்கு நீங்கள் நம்பிக்கைத் துரோகம் பண்ணுகிறீர்கள். உங்கள் வாழ்க்கையைக் காப்பாற்றிக் கொள்வதற்கு அந்தப் பெண்ணிடமிருந்து தப்பித்துக் கொள்வது சிறந்தது. புரிந்து கொள்ளுவதற்கு அவளுக்கு ஒரு சந்தர்ப்பம் அளியுங்கள் - மற்றொரு வழி தப்பித்துக் கொள்வது.

கணவன் தன்னுடைய வாழ்க்கைக்கு நம்பிக்கைத் துரோகம் செய்து கொண்டே இருந்தால், மனைவி அவன் மிகவும் உண்மையாக உள்ளான் என்று சொல்லுகிறாள். அவன் தன்னுடைய சொந்த வாழ்க்கைக்கு நம்பிக்கைத் துரோகம் பண்ணுகிறான். ஒருவருமே மற்றவருடைய வாழ்க்கைக்குப் பொறுப்பல்ல. நீங்கள் இங்கே உங்கள் சொந்த வாழ்க்கைக்காக இருக்கிறீர்கள். யாருமே மற்றவர்களுடைய எதிர்பார்ப்புகளை நிறைவேற்றுவதற்காக இங்கே இல்லை. நான் என்னுடைய வாழ்க்கையை வாழ்கிறேன். நீங்கள் உங்கள் வாழ்க்கையை வாழவேண்டும். அது நல்லதென்றால், நான் உங்களுடன் வளர்கிறேன். அது நல்லதென்றால் நீங்கள் என்னுடன் வளருங்கள், அழகியது, நாம் சேர்ந்திருக்கலாம். ஆனால், நீங்கள் என்னைக் கொல்ல ஆரம்பித்தீர்களானால், நான் உங்களுக்கு விஷமிட ஆரம்பிக்கிறேன். நாம் பிரிந்து செல்வது நல்லது, ஏனென்றால் பிரிந்து செல்வது இரண்டு வாழ்க்கையைக் காப்பாற்றுகிறது. இரண்டு கைதிகளை விடுதலையாக்குகிறது. அது நம்பிக்கைத் துரோகம் அல்ல.

ஒரே ஒரு நம்பிக்கைத் துரோகமே உள்ளது, அது ஒருவருடைய சொந்த வாழ்க்கைக்கு நம்பிக்கைத் துரோகம் செய்வதே. வேறு நம்பிக்கைத் துரோகம் இல்லை. நீங்கள் ஒரு வசைபாடும், உரிமை கொண்டாடும் மனைவியுடன் தொடர்ந்து வாழ்ந்து வந்தீர்களானால், ஒரு கணவனை அன்பில்லாமல், உங்கள் சொந்த நல்ல வாய்ப்பை நீங்கள் அழித்து விடுகிறீர்கள். டால்மட்டில் (யூத சட்டத் தொகுதி) மீண்டும் ஒரு கூற்று உள்ளது, "நான் நீங்கள் சந்தோஷமாக இருப்பதற்கு நிறைய வாய்ப்புகளைக் கொடுத்தேன். ஏன் நீங்கள் அதை இழந்து விட்டீர்கள்? என்று கடவுள் உங்களைக் கேட்பார்" அவர், "நீங்கள் என்ன பாபம் செய்தீர்கள்?" என்று கேட்பதில்லை. அவர், "சந்தோஷமாக இருப்பதற்கான எவ்வளவு சந்தர்ப்பங்களை இழந்து விட்டீர்கள்? நீங்களே அவற்றுக்குப் பொறுப்புள்ளவராகுகிறீர்கள்" என்று கேட்பார். இது உண்மையில் மிக அழகுடையதாகும். "உங்களுக்கு உபயோகப்படுத்திக் கொள்வதற்கு கிடைத்த அந்த சந்தர்ப்பங்களை இழந்து விட்டதற்கு நீங்கள் பொறுப்பாளி ஆகிகிறீர்கள்." உங்களிடம் உண்மையாக தொடர்ந்து இருங்கள் - அந்த ஒரே உண்மையாக இருத்தலே தேவைப்படுகிறது - அனைத்தும் நல்லவையே.

நீங்கள் உங்களுக்கு உண்மையுள்ளவராக இருந்தால், எப்போதும் ஒரு துணைவரை நீங்கள் கண்டு கொள்வீர்கள், ஒரு வாழ்க்கைத் - துணைவரை, அவருடன் நீங்கள் வளர்ச்சியடைவீர்கள். அப்படி இல்லையென்றால் மாற்றிக் கொள்ளுங்கள். அதில் தவறு ஒன்றும் இல்லை. துணைவருக்கும் கூட நல்லதே, ஏனெனில் நீங்கள் வளர்ச்சியடையவில்லையென்றால் நீங்கள் பழியெடுப்பீர்கள். அதையே எல்லாக் கணவன்மார்களும், மனைவியரும் செய்து வருகின்றனர்.

நீங்கள் வளர்ச்சியடையவில்லையென்றால், நீங்கள் எல்லைக்குட் பட்டிருப்பதாக, சிறையில் அடைபட்டதாக உணர்ந்தீர்கள்ளனால், பின்பு நீங்கள் மற்றவரை பழி வாங்குவதற்கு ஆரம்பிக்கிறீர்கள் - ஏனெனில் மற்றவரின் காரணமாகவே சிறைச்சாலை இருக்கிறது. அடுத்தவர் காரணமாகவே நீங்கள் பிடிபட்டுள்ளீர்கள். பின்பு நீங்கள் கோபமடைகிறீர்கள், தொடர்ந்து கோபமடைகிறீர்கள். உங்கள் முழு வாழ்க்கையுமே கோபமாகி விடுகிறது. அந்த மாதிரி சூழ்நிலையில் உங்களால் அன்பு செலுத்த முடிவதில்லை. எப்படி ஒருவர் தன்னுடைய சொந்த சிறைவாசத்தை விரும்புவார்? அந்தச்

சிறைவாசம் உங்கள் மனைவியாக, உங்கள் கணவராக, உங்கள் தந்தையாக, தாயாக, உங்கள் குருவாக இருக்கலாம் - அது எந்த வித்தியாசத்தையும் உண்டாக்குவதில்லை.

நீங்கள் இங்கிருக்கும்போது சிறையிலடைப்பட்டதாக உணர்ந்தால், தப்பிச் சென்றுவிடுங்கள், உங்களால் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் - என்னுடைய எல்லா ஆசீர்வாதத் துடனும். ஏனெனில் அந்த மாதிரி (வழியில்) இங்கிருப்பது ஆபத்தானது. நீங்கள் என்னிடம் உண்மையாக (விசுவாசமாக) இருக்க வேண்டியதில்லை. முதலில் உண்மையாக இருப்பது உங்களிடம் தான். அனைத்தும் அடுத்துவரும். நீங்கள் எல்லைக்குட்பட்டிருப்பதாக, முடமாக்கப்பட்டவராக உணர்ந்தால் - தப்பித்து விடுங்கள்! ஒரு வினாடி கூட காத்திருக்க வேண்டாம், ஒரு போதும் திரும்பிப் பார்க்க வேண்டாம். ஏதோ வேறு ஒரிடத்தைத் தேடுங்கள். வாழ்க்கை எல்லையற்றது. நீங்கள் யாரோ வேறு ஒருவரை, உங்களுக்குப் பொருத்தமானவராக உங்களுக்கு சிறைவாசமாக இல்லாதவரை, சுதந்திரமாக ஆகக்கூடியவரைத் தேடுங்கள். அங்கே செல்லுங்கள், தேடுங்கள், எப்போதும் தேடுவதில் இருங்கள்.

இல்லையென்றால், நீங்கள் இங்கு உங்களைச் சுற்றிக் கொண்டு, நீங்கள் சிறைப்பட்டவராக இருப்பதாக சிந்தித்துக் கொண்டு, நீங்கள் என் மேல் பழிவாங்குவதற்கு ஆரம்பிக்கிறீர்கள். நீங்கள் என் மேல் கோபமடைகிறீர்கள். நீங்கள் ஒரு சீடர் போல நடிக்கிறீர்கள், ஆனால் நீங்கள் ஓர் எதிரியாகி விடுகிறீர்கள். ஏதோ ஒரு நாளில் அல்லது மற்றதில் நீங்கள் வெடிக்கப் போகிறீர்கள்.

எல்லா உறவுகளிலும் இதை ஞாபகத்தில் கொள்ள வேண்டும். இந்தப் பிறவியில் நீங்கள் கற்றுக் கொள்வதற்கும், வளர்ச்சிய டைவதற்கும், அதிக புத்திசாலியாக ஆவதற்கும், தெரிந்து கொள்வதற்கும் வந்துள்ளீர்கள். ஏதேனும் ஒன்று கொள்வதற்கும் வந்துள்ளீர்கள். ஏதேனும் ஒன்று உங்களை முடமாக்கினால், அந்தச் சூழ்நிலையில் தொடர்ந்து இருப்பது என்பது பாபமாகும். தொலைவிற்குச் செல்லுங்கள். அந்த வழியில் ஓர் அதிக அன்பான உலகத்தை உருவாக்குங்கள்.ஆனால் அதற்கெதிராகக் கற்றுக் கொடுக்கப்படுகிறது: ஆயினும் உங்கள் மனைவியை நீங்கள் விரும்பாதபோதும் அன்பு செலுத்து. என்று ஒருவர் அன்பாக இல்லாதபோது எப்படி யாரோ ஒருவர் மேல் அன்பு செலுத்தமுடியும்?

இதை ஒருவருமே கேட்பதில்லை. அன்பு எப்பொழுதும் மறைவதில்லை என்று கற்றுக்கொடுக்கப்பட்டுள்ளீர்கள். அதுவும் முற்றிலும் முட்டாள் தனமானது. வந்துள்ள அனைத்தும் மறைந்துவிடும். பிறந்துள்ள அனைத்தும் மரணமடையும். ஆரம்பிக்கப்பட்ட அனைத்தும் நிறுத்தப்படும். உண்மையாக, விழிப்பாக தொடர்ந்து இருங்கள்.

அன்பு மறைந்து விட்டபின்பு அந்தப் பெண்ணோடு வாழ்வது என்பது பாபமாகும். பின் அந்தப்பெண்ணோடு உறங்குவீர்களானால் நீங்கள் ஒரு பாபி ஆகிறிகள். அது ஒருவிதமான விபசாரமாகும். உங்களுடன் அந்தப் பெண் வாழ்ந்து கொண்டே இருக்கிறார். ஏனென்றால் அவளுக்கு செல்வதற்கு இடமில்லை. பொருளாதார ரீதியாக அவள் உங்களைச் சார்ந்திருப்பதால் உங்களுடன் அவள் வாழ்ந்து கொண்டே இருக்கிறாள். பின் விபசாரம் என்பது என்ன? அது ஒரு பொருளாதார ஒப்பந்தமாகும். இப்போது அன்பில்லை. நீங்கள் ஒரு விலை மாதுவிடம் செல்வீர்களானால், உங்கள் மேல் காதல் கொள்கிறாரென்றால், பணம் எடுத்துக் கொள்ள மறுக்கிறாள் என்றால், அவள் இனி விலைமாது அல்ல. விபசாரம் பணத்துடன் மட்டும் தான் வருகிறது. எப்பொழுது அன்பிற்குப் பதிலாக பணம் இரண்டு மனிதர்களுக்கிடையில் பாலமாக இருக்கிறதோ அது விபசாரமாகும்.

நீங்கள் ஒரு பெண்ணுடன் அன்பில்லாமல் வாழுவீர்களானால், அந்தப் பெண் உங்களுடன் அன்பில்லாமல் வாழ்கின்றாயானால், ஒரு பொருளாதார ஒப்பந்தம் மட்டுமேயாகும். இப்போது அது கடினமானது, எங்கே செல்வது, என்ண செய்வது, அதுவும் பார்ப்பதற்கு பாதுகாப்பதாக உள்ளது. அதனால் நீங்கள் பற்றியிருக்கிறீர்கள், கோபமடைகிறீர்கள், வசைபாடுகிறீர்கள். ஆனால் சேர்ந்திருந்து வருகிறீர்கள். சேர்ந்திருப்பது உங்கள் கடமையாகும் - நீங்கள் மிகவும் அபாயமானவர்... இந்த விபசாரத்தினால் எந்த விதமான குழந்தைகள் பிறப்பார்கள்?

நீங்கள் உங்களை மட்டும் அழித்துக் கொள்ளவில்லை. வருங்காலத் தலைமுறையினரையும் அழிக்கிறீர்கள். அந்தக் குழந்தைகள் உங்களால் வளர்க்கப்படுகின்றனர் - இரண்டு மனிதர்கள் தொடர்ந்து சண்டையிட்டுக் கொண்டு தொடர்ந்து போராட்டத்துடன் உங்களுக்குப் பிறந்த அந்தக் குழந்தைகள் எப்போதும் போராட்டத்துடனேயே இருக்கிறார்கள். அவர்களுடைய ஒரு பகுதி

தாயைச் சேர்ந்ததாகும். ஒரு பகுதி தந்தையைச் சேர்ந்ததாகும். உள்ளே ஆழத்தில் தொடர்ந்து உள்நாட்டுப் போர் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. அவர்கள் எப்பொழுதும் குழப்பமடைந்துள்ளனர்.

என்னிடம் நீங்கள் வருகின்றபோது, "நான் குழப்பமடைந்திருக் கிறேன்" என்று சொல்கிறீர்கள்.... சில நாட்களுக்கு முன்பாக ஒரு சந்நியாசி வந்தார். அவர், "நான் சரணடைய விரும்புகிறேன். ஆனால் நான் சரணடைய விரும்பவும் இல்லை" என்று கூறினார். இப்போது அந்த மனிதனுடன் என்ன செய்வது? அவர் "உதவி செய்யுங்கள்" என்கிறார். அவர் சரணடைய விரும்புகிறார். அவர் சரணடைவதற்கும் கூட விரும்பவில்லை. ஒரு பகுதி "சரணடை" என்று சொல்கிறது. ஒரு பகுதி இல்லை என்கிறது. இது குழப்பமான மனநிலையாகும், பிளவுபட்ட குணமாகும், ஆனால் ஒவ்வொருவரும் இப்படித்தான் இருக்கிறார்கள். எங்கிருந்து இந்தப் பிளவு வந்தது? இந்தப்பிளவு எப்போதும் போராட்டத்துடன், இருக்கும் தந்தை, தாயிடமிருந்து வந்துள்ளது.

குழந்தை இருவருக்குமாக பரிவு கொள்வதால் சில சமயங்களில் தாயாருக்காகவும் பரிவு கொள்கிறான். அவன் உலகத்தினுள் இருவராலும் கொண்டுவரப்பட்டுள்ளான். அவனுடைய உடலின் பாதி செல்கள் தந்தையைச் சார்ந்தது. உடலின் பாதி செல்கள் தாயைச் சார்ந்தது. இப்போது அவர்கள் போராட்டத்துடன் இருக்கிறார்கள். அவன் எப்போதும் உள்நாட்டுப் போரிலேயே இருக்கிறான். அவன் ஒரு போதும் ஓய்வாக இல்லை, தளர்வாக இல்லை. எவையெல்லாம் அவன் செய்கிறானோ அதில் ஒரு பகுதி, "முட்டாளே, அதைச் செய்யாதே" என்று சொல்லுமானால் தந்தையின் பகுதி, "செய்யாதே" என்கிறது. அதிகச் சப்தமாகச் சொல்வதில்லை, தந்தையர்கள் ஒருபோதும் அதிகச் சப்தமாகச் சொல்வதில்லை, ஆனால் தந்தையின் பகுதி இல்லையென்று தலையசைக்கிறது. தந்தையின் பகுதி "ஆமாம்" என்று சொல்லுமானால் பின் தாயின் பகுதி சொல்லிக் கொண்டிருக்கிறது, மிகச் சப்தமாக "இல்லை"!

முல்லா நசுருதீனின் மகன் ஒரு பெண்ணிடம் காதல் கொண்டான். அவன் வீட்டிற்கு வந்து நசுருதீனிடம், அவர் மேல் நம்பிக்கை கொண்டு இரகசியமாக என்ன செய்வது என்று கேட்டான். தந்தை, "உண்மையில் நீ அந்தப் பெண்ணை விரும்பினால் போய் உன்னுடைய தாயிடம், "தந்தை தடை செய்துவிட்டார்" என்று சொல்லு, உன்னுடைய தாயின்

முன்னிலையில் நான், "உன்னை ஒருபோதும் அனுமதிக்க மாட்டேன்" என்று சொல்லுவேன். பின் அது உறுதி, உன்னுடைய திருமணம் நிகழும்" என்று அவனுடைய காதருகில் தாழ்ந்த குரலில் சொன்னார்.

ஒரு மிகப் பெரிய அரசியல் சென்று கொண்டிருக்கிறது. ஒவ்வோர் உணர்ச்சி மிக்க குழந்தையும் வியாபாரத்தின் நுணுக்கங்களைக் கற்றுக் கொள்கிறது. பின் அவனுடைய வாழ்க்கை முழுவதும் அவர்களை நம்பியிருக்கிறான். அவன் பிரிவுள்ளவனாக தொடர்ந்து இருந்து வருகிறான். எப்பொழுதெல்லாம் ஒரு பெண்ணை வீட்டிற்கு அழைத்து வருகிறானோ அப்போது அவன் தந்தையினுடைய பாத்திரத்தில் நடிக்க ஆரம்பித்து விடுகிறான், அந்தப் பெண் அவளுடைய தாயின் பாத்திரத்தில் நடிக்க ஆரம்பித்து விடுகிறாள். முழுக் கதையும் தொடர்ந்து கொண்டிருக்கிறது... உலகம் ஆழ்ந்த பைத்தியக்காரத்தனத்தில் சென்று கொண்டிருக்கிறது.

இந்த முழு முட்டாள்தனம் நிகழ்ந்து கொண்டிருக்கிறதென்றால் நீங்கள் தவறாகக் கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளீர்கள். நான் உங்களுக்கு ஒரே ஒரு நேர்மையைக் கற்றுக் கொடுக்கிறேன். அந்த நேர்மை உங்களது சொந்த வாழ்விற்காக. அது மிகவும் ஆபத்தாகத் தோன்றும். அது நான் கலவரத்தை, குழப்பத்தை உண்டாக்க முயற்சி செய்வது போலத் தோன்றும். நான் அப்படிச் செய்யவில்லை. நீங்கள் முன்பே குழப்பத்தை உண்டாக்கி உள்ளீர்கள். அதை இதற்குமேல் சீர்திருத்தம் செய்ய முடியாது. நான் ஒழுங்கு முறையை உருவாக்க முயலுகிறேன், ஆனால் சுதந்திரத்திலிருந்து வெளிவந்த ஒழுங்கு முறை; உள் ஒழுக்கத்தின் ஒழுங்குமுறை, வெளியிலிருந்து திணிக்கப்பட்ட விஷயமாக அல்ல.

குழந்தைகளும் ஆராவைப் (aura) கார்க்கிறார்களா?

ஆமாம். ஆனால் அவர்கள் பேசுவதற்கு ஆரம்பிக்கும் காலம் வரை. ஒரு குழந்தை பேசுவதற்கு ஆரம்பித்து விட்டால் எல்லா விஷயமும் மறைந்து விடும். ஒரு குழந்தை பேசுகின்ற போது சமுதாயத்தினுடைய பகுதியாகிவிடுகிறது. குழந்தை அமைதியாக இருக்கும் போது, பேசாமல் இருக்கும் போது, அந்தக் குழந்தை ஒரு (மகாத்மா) முனிவர் பார்க்கும் அதே விஷயத்தை பார்க்கிறது, ஒரு ஞானமடைந்தவர் பார்ப்பது போல - அப்படியே அதே விஷயம். குழந்தை ஏறக்குறைய ஒரு முனிவர் போலாகும். ஆனால் அது ஒரு குறிப்பிட்ட நிலைவரையிலும் தொடர்ந்திருக்கிறது. குழந்தை ஆறு

மாதங்களுக்கு, ஒன்பது மாதங்களுக்கு, ஒரு வருடத்திற்கு அமைதியாக இருக்குமானால், பின் அந்தக் காலம் வரையிலும் அந்தக் குழந்தை ஆராவைப் (aura) பார்க்கிறது - ஆழமாக உணர்கிறது. ஒரு முறை குழந்தை பேச ஆரம்பித்து விட்டால் அங்கே இனி குழந்தைத்தனம் இல்லை. குழந்தை உலகத்தினுள் நுழைந்துவிட்டது. மொழியினுடைய உலகத்தில் காரணங்களில், மனதில் காலப் போக்கில் அந்தத் தன்மை மறைந்துவிடுகிறது.

இந்தியாவில் நம்மிடம் ஒரு புராணக் கதை உள்ளது. அதில் மிக உண்மையான விஷயம் மறைந்துள்ளது. குழந்தைகள் ஆறுமாதங்கள் வரையிலும் அவர்களுடைய முற்பிறவியை ஞாபகத்தில் வைத்துள்ளார்கள் என்று இந்தியாவில் சொல்லுகிறோம். அது உண்மையே, ஏனெனில் ஆறுமாதங்கள் வரையிலும் குழந்தை மிகவும் அமைதியாக இருப்பதால் தெளிவு மிகவும் கூரியதாக உள்ளது. பின் ஒவ்வொரு நாளும் உலகம் அவனுள் அதிக பட்சமாக இருக்கிறது. நாம் அவனுக்கு அதிகபட்சமாக கற்பித்தால், நிபந்தனைகள் விதித்தால் குழந்தை சமுதாயத்தின் அதிகப் பகுதியாகி விடுகிறது, பிரபஞ்ச இருப்பின் (existence) குறைந்த பகுதியாகி விடுகிறது - குழந்தைத்தனம் மறைந்து விடுகிறது. இதுவே ஆடத்தின் (Adam) வீழ்ச்சியாகும். ஞானவிருட்சம் சுவைக்கப்பட்டது. குழந்தை பேசுவதற்கு ஆரம்பித்த பொழுது ஞானவிருட்சத்தின் பழங்கள் சுவைக்கப்பட்டன.

நீங்கள் மீண்டும் அதை திரும்ப அடைய விரும்பினால், அதைத் திரும்பப் பெறலாம். நீங்கள் அமைதியை அறிந்து கொள்ள வேண்டும். அதனால் தான் அமைதியும் தியானமும் அதிகம். வற்புறுத்தபடுகிறது. மீண்டும் நீங்கள் மொழியை விட்டுவிட வேண்டும். உள்ளே நடைபெறும் அர்த்தமற்ற வீண்பேச்சுக்கள் எல்லாவற்றையும் நிறுத்த வேண்டும். உள்பேச்சுக்கள் நிறுத்தப்படவேண்டும். நீங்கள் மீண்டும் மொழியில்லாத களங்கமற்றவராக உள்ளே சொற்களால் தெரிவிப்பது இல்லாமல், ஒரு தூய்மையான இருப்புத்தன்மையாக: ஒரு குழந்தையாக மீண்டும் ஆக வேண்டும். ஞாபகத்தில் கொள்ளுங்கள், இயேசு மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டே இருக்கிறார், "குழந்தைகள் போல் இருப்பவர்கள் மட்டுமே என்னுடைய கடவுளுடைய இராஜ்ஜியத்தில் நுழைவார்கள்"

○

## ஆண்களை விட குறைந்த அளவு ஞானமடைந்த பெண்களைப் பற்றி கேள்விப்படுகிறோம் அது ஏன்?

அடிப்படைக் காரணம், ஆண் தற்பெருமை பேசுவதில் நிபுணனாக உள்ளான்; பெண்கள் அப்படியல்ல. நிறையப் பெண்கள் ஞானமடைந்துள்ளனர். ஆண்கள் அளவு சரியாக அதே எண்ணிக்கையில் - வேறுவிதமாக இருக்க முடியாது, ஏனெனில் பிரபஞ்ச இருப்பு (existence) தன்னைச் சமநிலைப்படுத்திக் கொண்டே இருக்கிறது - ஆனால் பெண்கள் ஜம்பம் அடிப்பவர்கள் அல்ல. அவர்கள் அதிகம் ஜம்பமடிப்பதில்லை. அவர்கள் அடைந்தார்கள். ஆனால் அதை அனுபவிக்கிறார்கள். அவர்கள் அதைப்பற்றி அதிக பரபரப்பு உண்டாக்குவதில்லை.

ஆண்கள் முழுதும் வித்யாசமானவர்கள். அவர்கள் ஏதாவது அடைந்தார்களானால், அவர்கள் அதைப்பற்றி அதிகக்குரல் எழுப்புவார்கள். அதைப்பற்றி பரபரப்பு உண்டாக்குவார்கள். சமுதாயம் ஆண்களால் கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது. ஒரு மனிதன் ஞானமடைந்த போது, மற்ற எல்லா மனிதர்களும் முழு விஷயத் தையும் விளம்பரபடுத்துகின்றனர். ஒரு பெண் ஞானமடைந்தபோது ஒருவருமே தொந்தரவு கொள்வதில்லை, ஏனென்றால் சமுதாயம் பெண்களைச் சார்ந்ததல்ல. அவர்கள் ஆட்சி புரிபவர்கள் அல்லர்.

ஒரு மனிதன் ஒரு பெண்ணைவிட அதிகம் சமூகவாதியாக உள்ளான். ஒரு பெண் தனக்கு உட்பட்டிருக்கிறாள் அல்லது அதிகபட்சமாக அவளுடைய குடும்பத்திற்கு. அவள் வியட்நாம் (Vietnam) பற்றியோ ரிச்சர்டு நிக்ஸனைப் (Richard Nixon) தொந்தரவு கொள்வதில்லை - தொலைதூரத்தில் - பரவாயில்லை. அவள் வரப்போகிற தலைமுறையைப்பற்றி, அது, இது என்பனவற்றைப் பற்றி தொந்தரவு கொள்வதில்லை. அவள் தன்னுடைய இல்லத்தில், தன்னுடைய சொந்த சிறிய உலகத்தில் சந்தோஷமாக இருக்கிறாள். உண்மையில் அவள் (யார் ஒருவரும் யாரும்) தலையிடுவதை விரும்புவதில்லை. அவள் தனக்குள்ளே வைத்துக்கொள்ள விருமபுகிறாள்.

ஒரு பெண் ஞானியானபோது அதே விஷயம் தொடர்ந்து இருந்துவரும். அவள் சென்று உலகம் முழுவதும் பிரசங்கம் செய்வதில்லை. அவள் வெளியே சென்று சீடர்களை உண்டு

பண்ணுவதில்லை. அது அவளுடைய ஆதாரப் பொருள்களில் இல்லை. அவள் அதை அனுபவிக்கிறாள்; அவள் அதனுடன் சந்தோஷமாக இருக்கிறாள். அவள் நடனமாடுகிறாள், அவள் பாடுகிறாள், அவளுடைய இல்லத்தில் அமைதியாக அமர்ந்து தொந்தரவு கொள்ளாமல், ஒரு பெண் ஒரு மாஸ்டராக ஆவதில்லை. ஆண்களைப் போலவே பெண்களை அந்த அளவில் ஞான மடைந்துள்ளனர். ஆனால் மாஸ்டர் ஆவதற்கு பெண்ணிற்குத் தகுதிகள் இல்லை. இது புரிந்து கொள்ளப்பட வேண்டும்.

ஒரு பெண்ணிற்கு சீடனாகக் கூடிய சிறப்புத் தகுதிகள் உள்ளன. சரணடைவது அவளுக்கு சுலபமானது. அது இயற்கையாக, பெண் தன்மையின் பகுதியாக உள்ளது. சரணடைதல் சுலபமானது. அது சுலபமாக நடைபெறுகிறது. ஒரு பெண் நல்ல சீடனாகிறாள். நீங்கள் எப்போதும் இதைக் காணலாம்: எப்பொழுதெல்லாம் நான்கு சீடர்களைக் காண்கிறீர்களோ, மூவர் பெண்களாக இருப்பார்கள். இதுதான் உலக முழுதிலும் உள்ள விகிதாசாரமாகும். மகாவீரருக்கும் நாற்பதாயிரம் சந்நியாசிகள் இருந்தனர் - முப்பதாயிரம் பெண்களே அதே விகிதாசாரம் புத்தருக்கும் இருந்தது. நீங்கள் எந்த சர்ச்சிற்காவது சென்றால் எந்த கோயிலிற்காவது சென்றால் எண்ணுங்கள் - நீங்கள் எப்போதும் மூன்று: ஒன்று என்ற விகிதாசாரத்தில் இருப்பதைக் காணுவீர்கள். உண்மையில் எல்லா மதங்களும் ஆதரவளிக்கப்பட்டு, உணவளிக்கப்பட்டது பெண்களால்; ஆனால் அவர்கள் சீடர்களே.

சரணடைதல் அவர்களுக்கு எளிமையானது. ஏனெனில் சரணடைதல் சாத்வீகமாகும். நீங்கள் போய் ஒரு பெண்ணிடம் சரணடைந்தீர்களானால், அவள் தர்மசங்கடமாக, அசௌகரியமாக நினைப்பாள். ஒரு மனிதன் வந்து அவளுடைய பாதங்களில் விழுந்து வணங்கினால் அவளால் ஒரு போதும் இந்த மனிதனிடம் அன்பு செலுத்த முடியாது. அவன் ஆண் தன்மையுடன் இல்லை. போய் ஒரு பெண்ணைத் துரத்தினால் நீங்கள் எவ்வளவு அதிகம் துரத்துகிறீர்களோ, அதிகம் பிரார்த்தனை பண்ணுகிறீர்களோ, அதிகம் அவளுடைய பாதங்களில் வீழ்ந்து நமஸ்கரிக்கிறீர்களோ, அவ்வளவு அதிகம் முடியாதது. அவள் உங்களிடம் சரணடைவது - என்பது. ஒரு பெண்ணிற்கு யாரோ ஒருவர் தேவையாக உள்ளது, அவரிடம் அவள் சரணடைய முடியும். ஆண் தன்மையுள்ள யாரோ ஒருவர் போதுமானது. ஒரு பெண் சாத்வீகத்தின் இருப்பிடமாக இருக்கிறாள்.

ஓர் ஆண் செயல்திறனின் இருப்பிடமாக இருக்கிறான். இன், யாங் (Yin & Yang) அவர்கள் நிறைவை உண்டாக்குபவர்கள்.

பெண்ணிற்கு சரணடைவது மிகவும் சுலபமானது. அது முற்றிலும் அவளது வழிமுறையாகும். ஆனால் சரணாகதியை ஏற்றுக் கொள்வது என்பது மிகவும் கடினமானது - ஒரு மாஸ்டர் சரணாகதியை ஏற்றுக் கொள்ள வேண்டும். ஒரு சில பெண்கள் மாஸ்டராக ஆகியுள்ளனர். மிக அபூர்வமாக, ஆனால், நான் எப்போதும், அந்தப் பெண்கள் ஆண் தன்மை கொண்ட ஹார்மோன்கள் (hormones) அதிகம் உள்ளவராக இருக்க வேண்டும். அவர்கள் உண்மையில் பெண்கள் அல்ல, என்று சந்தேகம் கொள்வதுண்டு.

இந்திய சரித்திரத்தில் ஒரு நிகழ்ச்சி உள்ளது. ஜைனர்களுடைய இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களில் ஒரு பெண் இருந்தாள், அவளுடைய பெயர் மல்லி பாய். ஆனால், ஜைனர்களின் மிகப் பழைமையான பிரிவினர் திகம்பரர்கள், அவர்கள் அவளை ஒரு பெண் என்று அழைப்பதில்லை. அவர்கள் அவள் பெயரான "மல்லிபாய்" என்பதை எழுதுவது இல்லை. அவர்கள் அவள் பெயரை "மல்லி நாதா" என்று எழுதினர். அது ஆண் பெயராகி விட்டது; அது இனி பெண்தன்மை உள்ளதாக இல்லை. நான் இதை அதிகம் சிந்தித்துப் பார்த்தேன், எதனால் என்று. பின் நான் திகம்பரர்கள் சரியானவர்கள் என்று உணர்ந்தேன். அந்தப் பெண் பெயரளவில் மட்டும் ஒரு பெண்ணாக இருந்திருக்கலாம். இல்லையென்றால் அவள் ஒரு மனிதன். ஒரு தீர்த்தங்கரராவதென்பது பெண் தன்மையற்றதைக் குறிக்கிறது. லட்சக் கணக்கான மக்களையும், அவர்களுடைய சரணாகதியையும் ஏற்றுக் கொள்வது என்பது பெண் தன்மையற்ற நிலையாகும். அந்தப் பெண் உடலளவில் ஒரு பெண்ணாக இருக்கலாம். அவளுடைய உள்ளிருப்பு ஆணாக இருக்கலாம்.

அதனால் திகம்பரர்கள் சரியானவர்களே. ஸ்வேதம்பரர்கள் அவள் ஒரு பெண் என்று சொல்லிக் கொண்டிருந்தனர். அவர்கள் அதிக யதார்த்த வாதிகள் ஆனால் சரியல்ல, அதிக உண்மையாளர்கள். ஆனால் அதிகச் சரியல்லாதவர்கள். அவர்கள் ஒரு சரியான உண்மையை நம்பினார்கள். சில சமயங்களில் உண்மைகள், உண்மைகளாக இருப்பதில்லை. சில சமயங்களில் உண்மைகள் மிகுந்த (மாயையாக) கற்பனையாக உள்ளன. சில சமயங்களில் கற்பனைகள் வெட்கப்படும் அளவிற்கு உண்மைகள்

பொய்யாவது உண்டு. இதுதான் உண்மை - மல்லிபாய் ஒரு பெண்ணாவாள். ஆனால் அது உண்மை நிலையல்ல. திகம்பரர்களுக்கு சரியான மூலம் இருந்தது. அவர்கள் அவள் ஒரு பெண் என்ற உண்மையை மறந்து விட்டார்கள்; அவர்கள் அவளை ஓர் ஆணாக எடுத்துக் கொண்டனர். அவளுடைய முழுஇருப்பும் ஆண் தன்மையுடையது.

அபூர்வமாக இது நிகழ்கிறது. அரசியலில் மதத்தில், எப்பொழுதெல்லாம் ஒரு பெண் ஆட்சியுரிமை பெறுகிறாளோ, அவள் பெண் தன்மையை விட அதிக ஆண் தன்மை உடையவளாக இருக்கிறாள். ஒரு லட்சுமிபாய் அல்லது ஒரு ஜோன் ஆஃப் ஆர்க் (Joun of Arc) அவர்கள் பெண்தன்மை உள்ளவர்களாகக் காணப்படுவதில்லை. உடல் மட்டும் வெளியே போர்த்தப் பட்ட பெண்மையாக இருக்கலாம். உள்ளே ஓர் ஆண் உள்ளான்.

அதனால் தான் (பெண்கள்) அதிகம் அறிந்து கொள்ளப் படுவதில்லை. ஏனென்றால் அவர்கள் நீங்கள் ஒரு மர்ஸடராக இல்லாவிடில், நீங்கள் எப்படி அறிந்து கொள்ளப்படுவீர்கள்? உங்கள் ஞானமடைதல் உங்களுடைய உள் ஒளியாக தொடர்ந்து இருந்துவரும். நீங்கள் மற்றவர்களுக்கு வழிகாட்ட மாட்டீர்கள்; மற்றவர்கள் அதைப்பற்றி ஒருபோதும் அறிந்து கொள்ள மாட்டார்கள். இயற்கை எப்போதும் ஓர் ஆழ்ந்த சமநிலையில் உள்ளது என்பது என்னுடைய எண்ணம் ஆகும்.

உலகத்தில் ஆண்கள் உள்ள அதே எண்ணிக்கையில் பெண்களும் உள்ளனர். உடல்கூறு வல்லுனர்கள்கூட எப்படி இது நிகழ்கிறது. எப்படி இயற்கை இதை நிர்வகிக்கிறது, எப்படி இயற்கை அதே விகிதாசாரம் தேவை என்று அறிந்து கொள்கிறது - ஏறக்குறைய அதே அளவு என்று ஆச்சரியப்படுகின்றனர். ஆணும் பெண்ணும் எப்போதும் சமமான எண்ணிக்கையில் உள்ளனர். யாரோ ஒருவருக்கு பெண் குழந்தைகளே பிறந்துள்ளன. யாரோ மற்றொருவருக்கு ஆண் குழந்தைகள் மட்டும் பிறந்துள்ளன. ஆனால் நீங்கள் முழு உலகத்தையும் நோக்குவீர்களானால், பெண்களின் மொத்த எண்ணிக்கை ஏறக்குறைய அதே ஆணின் எண்ணிக்கை போன்றதாகும்.

குழந்தைகள் பிறக்கும்போது, ஒரு நூறு பெண் குழந்தைளுக்கு, ஒரு நூற்றுப் பதினைந்து ஆண் குழந்தைகள் உள்ளனர். ஏனென்றால்

சிறுவர்கள் பலவீனமானவர்கள் என்பதை இயற்கை அறிந்திருந்தது; அதிகம் பேர் இறந்து விடுவார்கள். அதனால் அவர்கள் (விவாக) திருமண வயது வரும் போது, எண்ணிக்கை சமமாக இருக்கும். சிறுமிகள் அதிகக் கடினமானவர்கள்; சிறுமிகள் திடமானவர்கள்; அவர்கள் குறைந்த அளவில் நோய்வாய்ப்படுகிறார்கள். அவர்கள் பலவிஷயங்களில் அதிக சகிப்புத் தன்மை உள்ளவராக உள்ளனர். அவர்களால் பெரும் துன்பங்களையும் சகித்துக் கொள்ள முடியும். ஆணின் அகங்காரம், "நாங்கள் பலமுள்ளவர்கள்" என்று சொல்லிக்கொண்டே இருக்கிறது. தசைகளின் சக்தி மிக அதிக அளவில் இருக்கலாம், ஆனால் பலம் அதிகம் இல்லை - ஏனென்றால் நூற்றுப்பதினைந்திற்கு, பதினைந்து சிறுவர்கள் மரணமடைகின்றனர், பதினான்கு வயதாகும் போது எண்ணிக்கை சமமாக இருக்கிறது; ஒரு நூறு சிறுமிகளுக்கு நூறு சிறுவர்கள்.

இயற்கை எப்படியோ நிர்வகிக்கிறது. ஒரு போர் நடைபெறும் போது: போருக்குப் பின்னால் அதிக ஆண்குழந்தைகள் பிறந்தன, குறைந்த பெண் குழந்தைகள், ஏனென்றால் போரில் நிறைய ஆண்கள் மடிந்துவிட்டனர். இது பார்ப்பதற்கு ஒரு மிகப்பெரிய நம்பமுடியாத நிகழ்வாகும். இது எப்படி நிகழ்கிறது? போரில் - இரண்டாம் உலக மகாயுத்தத்தில், முதல் மகா யுத்தத்தில் - இரண்டு போர்களுமே கவனிக்கப்பட்டது, பகுத்து ஆராயப்பட்டது. போர் நடந்த பின்பு அதிக ஆண் குழந்தைகள் பிறந்துள்ளன, எண்ணிக்கை அதிகமாயுள்ளது, குறைந்த பெண் குழந்தைகளே பிறந்துள்ளன. ஏனென்றால் போரில் அதிக ஆண்கள் மடிந்துள்ளனர், ஆகவே எண்ணிக்கை திரும்பவும் சரிபார்க்கப்பட வேண்டும்.

ஆன்மிக ஞானமடைதலுக்கும் கூட அதுவே தான். ஆண்கள் ஞானமடைந்த அதே எண்ணிக்கையில் பெண்களும் ஞானமடைந்தனர். சமநிலை இருந்தது, ஆனால் பெண்கள் மாஸ்டராக ஒரு போதும் ஆகவில்லையாதலால் வெளியே அதிகம் அறியப்படவில்லை; அல்லது சில சமயங்களில் அவர்கள் ஆகியிருப்பார்கள் என்றால் பின் அது அபூர்வமாக நிகழ்கிறது.

○

அன்றொரு நாள், நான் பழைய இந்திய கட்டுக்கதையைப் படித்துக் கொண்டிருந்தேன், ஒரு மரம் வெட்டுபவனுடைய கட்டுக்கதை. கதை இந்த மாதிரிச் செல்லுகிறது. ஒரு வயதான மரம் வெட்டுகிறவன் ஒரு பெரிய கனமான மரச்சுமையைத் தலைமேல் சுமந்து கொண்டு காட்டிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தான். அவன் மிகவும் வயதானவன், களைப்படைந்திருந்தான் - தினப்படி செய்யும் வேலைகளில் மட்டுமல்லாமல், வாழ்க்கையிலேயே களைப்படைந் திருந்தான். வாழ்க்கை அவனுக்கு அதிகமாக ஒன்றுமில்லை, ஒரு களைப்பின் வட்டமாக இருந்தது. தினமும் அதுவே: அதிகாலையில் காட்டிற்குச் செல்வது, நாள் முழுவதும் மரத்தை வெட்டுவது, மாலையில் சுமையைச் சுமந்து கொண்டு ஊருக்குள் திரும்புவது. எதுவுமே அவன் ஞாபகம் வைத்திருப்பதில்லை. இது ஒன்று மட்டுமே வாழ்க்கை முழுவதும இது ஒன்று மட்டுமே. அவன் சலிப்படைந் திருந்தான். வாழ்க்கை அவனுக்கு ஓர் அர்த்தமுள்ள விஷயமாக இல்லாமல் இருந்தது. அது முக்கியத்துவம் எதையும் கொண்டு வரவில்லை. குறிப்பாக அன்று, அவன் மிகவும் களைப்பாக இருந்தான், வியர்த்துக் கொட்டியது. சுமையையும், அவனையும் சுமந்து வந்தது. சுவாசிப்பதற்கு கடினமாக இருந்தது.

திடீரென ஓர் அடையாளமான செயலாக, அவன் சுமையை கீழே எறிந்தான். ஒருவர் சுமையை எறிய விரும்பும்போது, ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் அந்த வினாடி வருகிறது. அவன் தலை மேலிருந்த அந்த மரச்சுமையை ஓர் அடையாளமாக மட்டுமல்லாமல்: அவன் முழு வாழ்க்கையையும் அதனுடன் எறிந்து விட்டான். அவன் தரையின் மேல் முழங்காலிட்டான், வானத்தைப்பார்த்து, ஏ மரணமே, நீ எல்லோருக்கும் வருகிறாய். ஆனால் எனக்கு ஏன் வரவில்லை? இன்றும் என்ன கஷ்டங்களை நான் பார்க்க வேண்டும்? இதற்கு மேலும் எவ்வளவு சுமைகள் சுமைக்க வேண்டும்? நான் போதுமான அளவு தண்டிக்கப்பட வில்லையா? என்ன தவறு நான் செய்துளளேன்?

அவனுடைய கண்களை அவனால் நம்ப முடியவில்லை - திடீரென மரணம் தோன்றியது. அவனால் நம்ப முடியவில்லை. அவன் சுற்றிலும் பார்த்தான், மிகவும் அதிர்ச்சியடைந்தான். எவையெல்லாம் அவன் சொல்லிக் கொண்டிருந்தானோ அதை அவன் ஒருபோதும் அதன் பொருள்படச் சொல்லவில்லை. நீங்கள் மரணத்தை கூப்பிட்டால் மரணம் வரும் என்று அவன் இது மாதியாக எதுவுமே கேள்விப் பட்டதில்லை.

மரணம், "என்னைக் கூப்பிட்டாயா?" என்றது. எல்லா களைப்பையும், சோர்வையும், வாழ்க்கையின் தினப்படி வேலை முறையையும் மறந்து விட்டான். குதித்து மேலெழுந்த அவன், "ஆமாம்... ஆமாம், நான் உன்னை அழைத்தேன். தயவு செய்து இந்தச் சுமையை, இந்த பாரத்தை மறுபடி என் தலை மேல் வைப்பதற்கு உதவுவாயா? இங்கே யாரையும் பார்க்காததால், நான் உன்னைக் கூப்பிட்டேன்" என்று சொன்னான்.

வாழ்க்கையில் நீங்கள் களைப்படையும் போது இந்த மாதிரியான நொடிகள் உள்ளன. நீங்கள் சாவதற்கு விரும்பும் போது இது மாதிரியான நொடிகள் உள்ளன. ஆனால் மரணமடைவது என்பது ஒரு கலையாகும். அது கற்றுக்கொள்ளப் பட வேண்டும். வாழ்க்கையில் களைப்படைந்திருப்பது என்பது அடி ஆழத்தில் வாழ வேண்டுமென்ற பேராவல் உள்ளபடியே மறைந்து விட்டது என்பதல்ல. நீங்கள் குறிப்பிட்ட வாழ்க்கை முறையில் களைப்படைந்திருக்கலாம். ஆனால் வாழ்க்கையில் களைப்படையவில்லை. ஒவ்வொருவரும் ஒரு குறிப்பிட்ட வாழ்க்கை முறையில் சோர்வடைந்திருக்கலாம் - ஓர் உயிறற்ற வழக்கமான வேலைமுறைகளில், களைப்பின் வட்டத்தில், அதே விஷயங்கள் மீண்டும், மீண்டும், மறுபடி, மறுபடி செய்வதாக - ஆனால் நீங்கள் வாழ்க்கைக்கே களைப்படையவில்லை. மரணம் வந்தால் நீங்கள் அந்த மரம் வெட்டுபவர் செய்த அதையே செய்வீர்கள். அவர் சரியாக மனிதத்தனமாக நடந்து கொண்டார். அவரைப் பார்த்துச் சிரிக்காதீர்கள். பல நேரங்களில் நீங்களும் கூட தொடர்ந்து கொண்டிருக்கும் இந்த முட்டாள் தனமானவையெல்லாம் முடிந்து விடலாம் என்று சிந்திப்பதுண்டு. எதற்காக அதைத் தொடர வேண்டும்? ஆனால் திடீரென மரணம் தோன்றினால்? நீங்கள் தயாராக இருக்க மாட்டீர்கள்?

ஒரு யோகி மட்டுமே மரணமடையத் தயாராக இருக்கிறான், ஏனென்றால் ஒரு யோகி மட்டும் ஒரு மனமுவந்த, சம்மதமான, மரணத்தின் மூலம் எல்லையற்ற வாழ்க்கையை அடையலாம் என்பதை அறிந்துள்ளான். ஒரு யோகி மட்டுமே மரணம் ஒரு கதவு, அது முடிவல்ல என்பதை அறிந்துள்ளான். உண்மையில் அது ஓர் ஆரம்பம். உண்மையில் அதைக் கடந்துதான் கடவுளின் எல்லையற்றவை திறக்கப்படுகின்றன, அதைக் கடந்துதான் நீங்கள் முதல் முறையாக உண்மையாக, அசலாக, உயிருள்ளவராக இருக்கிறீர்கள், உங்களுடைய ஸ்தூலப் பகுதியான இருதயம் மட்டும்ல்லாமல் கிளர்ச்சியடைவது மட்டுமல்லாமல், உள்ளிருப்பினால் பரவசமாக்கப் படுகிறீர்கள். மரணம் என்ற கதவின் மூலமாக நிரம்பிய வாழ்க்கையில் சாசுவதமான வாழ்க்கையில் நுழையப்படுகிறது.

ஒவ்வொருவரும் மரணமடைகிறார்கள், ஆனால் மரணம் மனமுவந்து ஏற்றுக் கொள்ளப்பட்டதல்ல. பின் மரணம் உங்கள்மேல் கட்டாயப்படுத்தப்படுகிறது. நீங்கள் சம்மதமற்றவராக இருக்கிறீர்கள்: நீங்கள் தடுக்கிறீர்கள், நீங்கள் அழுகிறீர்கள், நீங்கள் தேம்புகிறீர்கள், நீங்கள் இந்த உடலில், இந்த பூமியில் தாமதப்படுத்த, ஒரு சிறிது நீடித்திருக்க விரும்புகிறீர்கள். நீங்கள் (அச்சம் கொள்கிறீர்கள்) பயமடைகிறீர்கள். நீங்கள் இருளைத்தவிர முடிவைத் தவிர வேறு எதையும் பார்ப்பதில்லை. ஒவ்வொருவரும் இஷ்டமில்லாமலேயே மரணமடைகின்றனர். அதன்பின் மரணம் ஒரு கதவு அல்ல. பின் நீங்கள் உங்கள் கண்களை பயத்தினால் மூடிக்கொள்கிறீர்கள்.

யோகத்தின் பாதையில் உள்ள மக்களுக்கு, மரணம் இஷ்டமான (சம்மதமான) நிகழ்வாகும். அவர்கள் அதை சம்மதிக்கின்றனர். அவர்கள் தற்கொலை எண்ணம் கொண்டவர்கள் அல்லர். அவர்கள் வாழ்க்கைக்குப் புறம்பாக இல்லை. அவர்கள் மிகச்சிறந்த வாழ்க்கைக்காக உள்ளனர். அவர்கள் தங்களுடைய வாழ்க்கையை மிகச்சிறந்த வாழ்க்கைக்காகத் தியாகம் செய்கின்றனர். அவர்கள் தங்கள் அகங்காரத்தை ஒரு மிகச்சிறந்த இருப்பிற்காக (self) தியாகம் செய்கின்றனர். அவர்கள் தங்களுடைய இருப்பைக்கூட, (self) மிகச்சிறந்த பரம இருப்பிற்காக (supreme self) தியாகம் செய்கிறார்கள். அவர்கள் எல்லையற்றதிற்காக, எல்லையுள்ளவற்றைத் தியாகம் பண்ணிக்கொண்டே இருக்கிறார்கள். இதுதான் வளர்ச்சி என்று சொல்லப்படுவதாகும். உங்களிடம் எதுவும் இல்லாத போது, காலியாக இருக்கும்போது மட்டுமே இது முடியும்.

பதஞ்சலியினுடைய முழுக் கலையுமே, நீங்கள் சம்மதத்துடன் மரணமடைவது, முன்வந்து சரணடைவது, என்ற நிலைகளை எப்படி அடையலாம் என்பதாகும். இந்த சூத்திரங்கள், மரணமடைய தயாராவதற்கும், ஒரு மிகச்சிறந்த வாழ்க்கைக்குத் தயாராவதற்கான தயாரிப்பு ஆகும்.

ஸ்திர சுகம் ஆசனம்.

ஆசனம் நிலையாக சுகமாக இருக்க வேண்டும்.

பதஞ்சலியினுடைய யோகம் மிகவும் தவறுதலாகப் புரிந்து கொள்ளப்பட்டுள்ளது, தவறுதலாக விளக்கம் செய்யப்பட்டுள்ளது. பதஞ்சலி ஓர் உடல். பயிற்சி வல்லுநர் இல்லை. ஆனால் யோகம் பார்ப்பதற்கு உடற்பயிற்சி போல் தோன்றுகிறது, பதஞ்சலி உடலுக்கு எத்ராக இல்லை. அவர் உடலைத் திருகி வளைக்கும் உடற்பயிற்சி முறையை உங்களுக்கு கற்றுக்கொடுக்கும் ஓர் ஆசிரியர் அல்லர். அவர் உங்களுக்கு உடலினுடைய (வசீகரத்தை) நேர்த்தியைக் கற்பிக்கிறார், ஏனென்றால் ஒரு நேர்த்தியான உடலில்தான், ஒரு நேர்த்தியான மனமிருக்கும், ஒரு நேர்த்தியான மனதில் தான் ஒரு நேர்த்தியான இருப்பு (self) இருப்பதற்கு சாத்தியம். நேர்த்தியான இருப்பில் (self) மட்டுமே கடவுள் இருக்கிறார் என்பதை அவர் அறிந்துள்ளார்.

படிப்படியாக, ஆழமான மேன்மையான அருள் (கிருபை) அடையப்பட வேண்டும். உடலினுடைய நேர்த்தியான தன்மையை அவர் ஆசனம் என்று கூறுகிறார். அவர் சுயவதை செய்பவர் அல்லர். அவர் உங்கள் உடலை சித்ரவதை செய்யுங்கள் என்று உங்களுக்குக் கற்பிக்கவில்லை. அவர் ஒரு சிறிதும் உடலுக்குப் புறம்பாக இல்லை. அவர் எப்படி இருக்க முடியும்? உடல் அடிப்படையான அஸ்திவாரக் - கல்லாக இருக்கப் போகிறது என்பதை அவர் அறிவார். நீங்கள் உடலை நழுவவிடுவீர்களானால் நீங்கள் உடலை பயிற்றுவிக்க வில்லையென்றால், மேலான பயிற்சி சாத்தியமில்லை என்பதை அவர் அறிவார்.

உடல் ஒரு சங்கீதக் கருவி போன்றது. அது சரியான முறையில் சுருதி சேர்க்கப்பட வேண்டும். அதன்பின் அதனிடமிருந்து சிறந்த சங்கீதம் எழும்ப முடியும். அந்த மூலமான கருவி எப்படியோ சரியான உருவில்லாமல், ஒழுங்கில்லாமல் இருக்குமானால், அந்த மிகச் சிறந்த ஒருங்கிணைப்பு அதன் மூலம் எழமுடியும் என்று எப்படி உங்களால்

கற்பனை பண்ணி, நம்பிக்கை கொள்ள முடியும்? பேதம் மட்டுமே எழுகின்றது. உடல் ஒரு வினையாகிறது. ஒரு சங்கீதக் கருவி.

ஸ்திர சுகம் ஆசனம் - ஆசனம் நிலையாக, மிக அதிகப் பேரானந்தமாக, சுகமாக இருக்க வேண்டும். ஆகையால் ஒரு போதும் உங்கள் உடலை குரூபமாக்காதீர்கள், எவையெல்லாம் சுகமற்றதாக உள்ளனவோ அந்த ஆசனங்களை ஒரு போதும் பண்ண (செய்ய) முயலாதீர்கள்.

மேற்கத்தியவர்களுக்கு தரையில் உட்காருவது, பத்மாசனத்தில் உட்காருவது, தாமரை ஸ்திதி, கடினமானது; அதற்காக அவர்கள் உடல் பழக்கப்படுத்தப்படவில்லை. அதற்காகத் தொந்தரவு கொள்ளத் தேவையில்லை. பதஞ்சலி அந்த ஆசனத்தை உங்கள் மீது வற்புறுத்தமாட்டார். கிழக்கிலே மக்கள் தங்கள் பிறப்பிலிருந்தே உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள், சிறிய குழந்தைகள் தரையின் மேல் உட்கார்ந்து இருக்கிறார்கள். மேற்கிலே, எல்லா குளிர் நாடுகளிலும் நாற்காலிகள் தேவைப்படுகின்றன. தரை அதிகக் குளிர்ச்சியாக உள்ளது. ஆனால் அதைப்பற்றி கஷ்டப்பட வேண்டிய தேவையில்லை. நீங்கள் பதஞ்சலியினுடைய ஆசனம் என்றால் என்ன என்பதைப் பற்றிய வரையறையை நோக்குவீர்களானால், நீங்கள் புரிந்து கொள்வீர்கள். அது நிலையாக, சுகமாக இருக்க வேண்டும்.

நீங்கள் நிலையாக, சுகமாக ஒரு நாற்காலியில் இருக்க முடியுமானால், அது மிகவும் சிறந்தது. பத்மாசனத்தில் அமர முயலுவதும், தேவையில்லாமல் உங்கள் உடலை வற்புறுத்த வேண்டிய தேவையில்லை. உண்மையில் ஒரு மேற்கத்திய மனிதர் பத்மாசனத்தில் இருக்க முயலுவாரானால், அது உடலை ஆறுமாதங்களுக்கு வற்புறுத்த வேண்டியதிருக்கும். அது சித்ரவதையாகும். அதற்குத் தேவையில்லை, பதஞ்சலி உடலை வதைப்பதற்கு, உங்களுக்கு எந்த விதத்திலும் உதவவில்லை, அறிவுறுத்தவில்லை. நீங்கள் வதைக்கும் ஆசனத்தில் உட்காரலாம் பின் அது பதஞ்சலியினால் சொல்லப்பட்ட ஆசனத்தை ஒத்ததாக இல்லை.

ஓர் ஆசனம் என்பது நீங்கள் உங்கள் உடலை மறப்பதாக இருக்க வேண்டும. சுகம் என்றால் என்ன? நீங்கள் உங்கள் உடலை மறந்து விட்டபோது, நீங்கள் சுகமாக இருக்கிறீர்கள். நீங்கள் தொடர்ந்து உடலைப்பற்றிய ஞாபகத்தில் இருந்தீர்களானால், நீங்கள் சுகமற்று

இருக்கிறீர்கள். அதனால் நீங்கள் ஒரு நாற்காலியிலோ அல்லது தரையிலோ உட்காருகிறீர்கள் என்ற விஷயமல்ல. சுகமாக இருக்க வேண்டும், ஏனெனில் நீங்கள் உடலில் சுகமாக இல்லாவிடில், ஆழமான அடுக்குகளைச் சார்ந்த மற்ற ஆசீர்வாதங்களை நீங்கள் ஆசைப்பட முடியாது. முதல் அடுக்கு இழக்கப்பட்டால், மற்ற எல்லா அடுக்குகளுமே மூடப்பட்டு விடுகின்றன. நீங்கள் உண்மையில் சந்தோஷமாக, பேரானந்தமாக இருக்க விரும்பினால், பின் பேரானந்தமாக இருப்பதற்கு ஆரம்பத்திலிருந்து தொடங்குங்கள். உள்ளே பாரவசத்தை அடைய முயலும் யார் ஒருவருக்கும் உடலினுடைய சுகம் அடிப்படைத் தேவையாகும்.

"ஆசனம் நிலையாக, சுகமாக இருக்க வேண்டும்!" எப்பொழுதெல்லாம் ஆசனம் சுகமாக இருக்கிறதோ அப்போது அது கட்டாயமாக நிலையாக இருக்கும். ஆசனம் சுகமற்றதாக இருக்குமானால் நீங்கள் அமைதியில்லாமல் இருப்பீர்கள். ஆசனம் சுகமற்றதாக இருந்தால் நீங்கள் பக்கங்களை மாற்றிக் கொண்டிருப்பீர்கள். ஆசனம் (உண்மையில்) உள்ளபடி சுகமானதாக இருந்தால், நீங்கள் அமைதியில்லாமல், ஓய்வில்லாமல், மீண்டும், மீண்டும் மாற்றிக்கொண்டே இருக்கத் தேவை என்ன உள்ளது?

உங்களுக்குச் சுகமாக உள்ள ஆசனம் உங்களுடைய பக்கத்திலுள்ளவருக்கு சுகமற்றதாக இருக்கலாம். ஞாபகத்தில் கொள்ளுங்கள், அதனால் தயவு செய்து, ஒருபோதும் உங்கள் ஆசனங்களை யாரோ ஒருவருக்குக் கற்றுக் கொடுக்காதீர்கள். ஒவ்வொருவரும் தனிப்பட்டவர்கள். ஏதேனும் ஒன்று சுகமானதாக உங்களுக்கு இருப்பது யாரோ ஒருவருக்கு சுகமற்றதாக இருக்கலாம்.

ஒவ்வொருவரும் தனிப்பட்டவராக இருக்க வேண்டும், ஏனெனில் ஒவ்வொருவரும் ஒரு தனிப்பட்ட ஆன்மாவை எடுத்து வந்திருக்கின்றனர். உங்களுடைய கட்டை விரல் சுவடுகள் தனிப்பட்டவை. நீங்கள் உலகம் முழுவதிலும் யாரோ ஒருவருடைய கட்டைவிரல் அடையாளங்கள் உங்களுடையது போல கண்டு பிடிக்க மாட்டீர்கள். முழு இறந்த காலச் சரித்திரத்திலும் நீங்கள் யாரோ ஒருவருடைய கட்டைவிரல் அடையாளம் உங்களுடையது போல இருப்பதைக் கண்டு பிடிக்க மாட்டீர்கள். இதை அறிந்தவர்கள், எதிர் காலத்திலும் உங்களுடையது போல கட்டைவிரல் அடையாளம் கொண்ட ஒரு மனிதன் இருக்க மாட்டான் என்று சொல்லுகின்றனர். ஒரு

கட்டை விரல் அடையாளம் ஒன்றுமில்லாதது, அர்த்தமற்றது, ஆனால் அதுவும் கூட தனிப்பட்டது. அது ஒவ்வொருவரும் ஒரு தனிப்பட்ட இருப்பை சுமந்து கொண்டிருக்கின்றனர் என்பதைக் காட்டுகிறது. உங்களுடைய கட்டைவிரல் அடையாளம் மற்றவர்களிடமிருந்து மாறுபட்டு உள்ளது, உங்கள் உடல், முழு உடலும் மாறு பட்டிருக்கும்.

அதனால் யாரோ ஒருவருடைய புத்திமதியைக் கவனிக்காதீர்கள். நீங்கள் உங்கள் சொந்த ஆசனத்தைக் கண்டு பிடிக்க வேண்டும். ஓர் ஆசிரியரிடம் சென்று அதைக் கற்றுக்கொள்ள வேண்டுமென்ற தேவையில்லை. உங்களுடைய சொந்த, சுகமான உணர்வே ஆசிரியராக இருக்க வேண்டும். நீங்கள் முயலுவீர்களானால் - ஒரு சில நாட்களுக்குள்ளாகவே நீங்கள் அறிந்துள்ள எல்லா ஆசனங்களையும் முயன்று பாருங்கள், நீங்கள் உட்கார முடிகின்ற எல்லா முறைகளிலும் - ஒரு நாள், நீங்கள், அனுபவிக்கிறீர்கள், எதிர்பாராது சந்திக்கிறீர்கள் சரியான ஆசனத்தை. நீங்கள் உணர்ந்து கொண்ட அந்த நொடியில் (நேரத்தில்) உங்களுள் எல்லாம் அமைதியாக, சாந்தமாக ஆகியிருக்கும் உங்களுக்கு ஒருவருமே கற்றுத்தரமுடியாது ஏனென்றால் உங்களுடைய உடலினுடைய இணக்கம், எந்த ஆசனத்தில் சரியாக, நிலையான, சுகமாக இருக்கிறதென்பதை யாரோ ஒருவர் அறிந்திருக்கமாட்டார்.

உங்களுடைய சொந்த ஆசனத்தைக் கண்டு கொள்ள முயலுங்கள். உங்களுடைய சொந்த யோகத்தைக் கண்டுகொள்ள முயலுங்கள், ஒரு போதும் ஒரு விதி முறையைப் பின்பற்றாதீர்கள். விதிமுறைகள் சராசரியானவை. அவை இதைப்போன்றவை, பூனாவில் பத்து லட்சம் மக்கள் உள்ளனர்: யாரோ ஒருவர் ஐந்தடி உயரம், யாரோ ஒருவர் ஐந்தடி ஐந்தங்குலம், யாரோ ஒருவர் ஐந்தரை அடி, யாரோ ஒருவர் ஆறடி, யாரோ ஒருவர் ஆறரை அடி உயரம் இருக்கிறார், பத்து லட்சமக்கள்: நீங்கள் அவர்களுடைய உயரத்தைக் கணக்கிட்டு பின் பத்து லட்ச மக்களுடைய மொத்த உயரத்தை பத்து லட்சத்தால் வகுத்தீர்களானால், பின் நீங்கள் ஒரு சராசரி உயரத்திற்கு வருகிறீர்கள். அது நாலடி - எட்டு அங்குலமாக அல்லது ஏதோ ஒன்று பின் நீங்கள் அந்த சராசரி மனிதனைத் தேடுவீர்களானால் - நீங்கள் ஒரு போதும் கண்டு பிடிக்க மாட்டீர்கள். சராசரி மனிதன் ஒரு போதும் இருப்பதில்லை. உலகத்திலே, சராசரி மிகப் பொய்யான விஷயமாகும். ஒவ்வொருவனும் அவனாகவே இருக்கிறான், சராசரியாக ஒருவருமே

இல்லை. சராசரி ஒரு கணித சம்பந்தமான விஷயமாகும். அது உண்மையல்ல – அது நிஜமானதல்ல.

எல்லா விதிமுறைகளும் சராசரியானவற்றுக்கு உள்ளன. அவை ஒரு குறிப்பிட்ட விஷயத்தைப் புரிந்து கொள்வதற்கு நல்லது. ஆனால் அவற்றைப் பின்பற்றாதீர்கள். இல்லையென்றால் நீங்கள் சுகமற்றவராக உணர்வீர்கள். நாலடி எட்டு அங்குல சராசரி உயரம்! இப்போது நீங்கள் ஐந்தடி, நாலங்குல உயரம் அதிகமாக உள்ளது - அதை வெட்டி விடுங்கள். சுகமற்றது... அந்த மாதிரி நடப்பதனால் நீங்கள் சராசரி உயரம் போல் காணப்படுகிறீர்கள். நீங்கள் ஒரு அவலட்சணமான காட்சியாக இருப்பீர்கள், ஓர் அஷ்தா - வாக்கர் (Astha-walker). நீங்கள் ஓர் ஒட்டகம் போல எல்லா இடங்களிலும் வளைந்து கொண்டு. ஒருவர் சராசரியைப் பின்தொடர முயற்சித்தால் நழுவவிட்டு விடுவார்.

சராசரி ஒரு கணித நிகழ்ச்சியாகும். பிரபஞ்ச இருப்பில் (existence) கணிதம் இருக்கவில்லை. அது மனிதனின் மனதில் தான் இருக்கிறது. நீங்கள் சென்று பிரபஞ்ச இருப்பில் கணிதத்தைக் தேட முயலுவீர்களானால், கண்டுபிடிக்க மாட்டீர்கள். அதனால் தான் கணிதம் ஒரு முழுமையான விஞ்ஞானம்: ஏனென்றால் அது முற்றிலும் உண்மையல்ல. உண்மையல்லா ஒன்றுடன் நீங்கள் முழுமையாக இருக்க முடியுமா? உண்மை உங்களுடைய விதி முறைகளைப் பற்றி ஒழுங்குப்படுத்துவதைப்பற்றி தொந்தரவு கொள்வதில்லை. உண்மை அதன் சொந்த வழியில் செல்கிறது. கணிதம் ஒரு முழுமையான விஞ்ஞானம் ஏனென்றால் அது மனதிற்கு உரியது. அது மனிதத் தன்மையானது. மனிதன் பூமியிலிருந்து மறைந்து விட்டானால், கணிதம் மறைந்து விடுவதில் முதல் விஷயமாக இருக்கும். மற்ற விஷயங்கள் தொடரலாம். ஆனால் கணிதம் இங்கே இருக்க முடியாது.

எல்லா விதிமுறைகளும், ஒழுங்கு முறைகளும் சராசரியாகும் என்பதை எப்பொழுதும் ஞாபகத்தில் கொள்ளுங்கள்; சராசரி தொடர்ந்து இல்லாதது. சராசரியாவதற்கு முயல வேண்டாம். ஒருவரும் ஆக முடியாது. ஒருவர் தன்னுடைய சொந்த வழியைக் கண்டு கொள்ள வேண்டும். சராசரியைக் கற்றுக் கொள்ளுங்கள் அது உதவியாக இருக்கும், ஆனால் அதை விதிமுறையாகச் செய்யாதீர்கள். அது ஒரு மறைமுகமான புரிந்து கொள்ளுதலாக இருக்கட்டும். புரிந்து கொள்ளுங்கள். அதைப்பற்றி மறந்து விடுங்கள். அது தெளிவாக இல்லாத வழிகாட்டிபோல உதவி செய்கிறது. ஒரு முழுதுமான,

நிச்சயமான ஆசிரியர் போல இல்லை. அது ஒரு தெளிவாக இல்லாத தேசப்படம் போன்றது. முழுமையானது அல்ல. அந்தத் தெளிவாக இல்லாத தேசப்படம் உங்களுக்கு குறிப்பிட்ட குறிப்புகளைக் கொடுக்கிறது, ஆனால் நீங்கள் உங்களுடைய உள்சுகத்தை, நிலைத்தன்மையைக் கண்டுகொள்ள வேண்டும். நீங்கள் எப்படி உணர்கிறீர்கள் என்பதுதான் தீர்மானிக்கும் காரணமாக இருக்க வேண்டும். அதனால் தான் பதஞ்சலி இந்த வரையறைக் கொடுக்கிறார், அதன்படி நீங்கள் உங்களுடைய சொந்த உணர்வுகளைக் கண்டு கொள்ளலாம்.

“ஸ்திரசுகம் ஆசனம்” இதைவிட சிறந்த எந்த வரையறையும் ஆசனத்திற்கு இராது. ஆசனம் நிலையாக, சுகமாக இருக்க வேண்டும்.

உண்மையில் நான் அதை மற்றொரு முறையில் சொல்ல விரும்புகிறேன் சமஸ்க்ருத வரையறை மற்றொரு முறையில் மொழிபெயர்க்கப்படவேண்டும். ஆசனம் என்பது நிலையாக இருப்பது சுகமானது. ஸ்திரசுகம் ஆசனம், நிலையாக இருப்பது சுகமானது. ஆசனம் அது ஒரு மிகச் சரியான மொழி பெயர்ப்பாக இருக்கும். நீங்கள் ஷுட் (should) என்ற நிபந்தனையைக் குறிக்கும் சொல்லை கொண்டு வந்தபொழுது விஷயங்கள் கஷ்டமாகிவிடுகின்றன. சமஸ்கிருத வரையறையில் அங்கே ஷுட் (should) (நிபந்தனையைக் குறிக்கும் சொல்) இல்லை. ஆனால் ஆங்கிலத்தில் அது நுழைகிறது. பதஞ்சலியைப் பற்றிய அநேக மொழிப் பெயர்ப்புகளில் நான் பார்த்திருக்கிறேன். அவர்கள் எப்பொழுதும் “ஆசனம் நிலையாக, சுகமாக இருக்க வேண்டும்” என்று சொல்லுகின்றனர். சமஸ்கிருத வரையறையில் - “நிலையாக, சுகமாக இருப்பது ஆசனம்” என்று சொல்லப்பட்டுள்ளது - அங்கே ஷுட் (should) (நிபந்தனையைக் குறிக்கும் சொல்) இல்லை. ஸ்திர என்பது நிலையாக, சுகம் என்பது சுகம், ஆசனம் என்பது ஆசனம் - அவ்வளவே, நிலையாக, சுகமாக அதுதான் ஆசனம்.

ஏன் இந்த ஷுட் (should) (நிபந்தனையைக் குறிக்கும் சொல்) உள்ளே வந்துள்ளது? ஏனென்றால் நாம் அதிலிருந்து ஒரு விதி முறையை உண்டாக்க விரும்புகிறோம். அது ஓர் எளிய வரையறை, குறிப்பது சுட்டிக்காட்டுவது அது ஒரு விதி முறையல்ல. இதை எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்திருங்கள்: பதஞ்சலி போன்ற மக்கள் ஒருபோதும் விதிமுறைகளைக் கொடுப்பதில்லை. அவர்கள்

அவ்வளவு முட்டாள் தனமானவர்கள் அல்லர். அவர்கள் சுட்டிக் காட்டுபவற்றையும், குறிப்புகளையும் கொடுக்கிறார்கள். நீங்கள் அந்தக்குறிப்புகளை உங்கள் சொந்த இருப்பினுள் கண்டு பிடிக்க வேண்டும். நீங்கள் அதை உணர வேண்டும், அதைத் திட்டமிடுங்கள். பின்பு நீங்கள் விதிமுறைக்கு வருகிறீர்கள். அந்த விதி முறைகள் உங்களுக்கு மட்டுமே, வேறு யாருக்கும் இல்லை.

மக்கள் அதில் உறுதியாக இருந்தால், உலகம் ஒரு மிக அழகிய உலகமாக இருக்கும். யாருமே எவரையும் ஒழுங்கு படுத்த முயற்சி செய்ய வேண்டியதில்லை. ஏனென்றால் உங்களுடைய ஒழுங்கு முறை உங்களுக்கு நல்லது என்று நிரூபிக்கப்பட்டிருக்கலாம், அது யாரோ ஒருவருக்கு விஷமுடையதாக இருக்கலாம். உங்களுடைய மருந்து எல்லோருக்கும் மருந்தாக இருக்க வேண்டிய தேவையில்லை. மற்றவர்களுக்கு கொடுத்துக் கொண்டு இருக்க வேண்டாம்.

முல்லா நசுருதீன் ஒரு சிறந்த மருத்துவரிடமிருந்து மருத்துவம் கற்றுக் கொள்வதாகக் கேள்விப்பட்டேன். அவர் தன்னுடைய மாஸ்டரை குறிப்புகளை தெரிந்துகொள்வதற்காக கவனித்துக் கொண்டிருந்தார். மாஸ்டர் நோயாளிகளைப் பார்ப்பதற்காக சுற்றி வரும்போது முல்லா தொடர்ந்து செல்வார். ஒரு நாள் முல்லா ஆச்சரியமடைந்தார். மாஸ்டர் நோயாளியினுடைய நாடியைப் பார்த்துக் கொண்டு, கண்களை மூடித் தியானம் பண்ணினார், “நீங்கள் நிறைய மாம்பழங்களை சாப்பிட்டுக் கொண்டிருக்கிறீர்கள்” என்று சொன்னார்.

முல்லா ஆச்சரியமடைந்தார். அவர் நாடியின் மூலமாக எப்படிக் கண்டுபிடித்தார்? அவர் ஒரு போதும், யாரோ ஒருவர் நாடித் துடிப்பின் மூலமாக நீங்கள் மாம்பழங்களைச் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறீர்கள் என்று கண்டுபிடிப்பதைக் கேள்விப்பட்டதில்லை. அவர் குழப்பமடைந்தார். வீட்டிற்குத் திரும்பும் வழியில் அவர், “மாஸ்டர் தயவு செய்து ஒரு குறிப்புக் கொடுங்கள். எப்படி நீங்கள்...?” என்று கேட்டார்.

மாஸ்டர் சிரித்துவிட்டு; அவர், “நாடி காண்பிக்க முடியாது, ஆனால் நான் நோயாளியினுடைய படுக்கைக்கு அடியிலே பார்த்தேன். அங்கே நிறைய மாம்பழங்கள் - சாப்பிடாதவை, ஒரு சில சாப்பிடப்பட்டவை இருந்தன. ஆகையால் நான் அனுமானித்தேன்; அது ஓர் அனுமானம்” என்று சொன்னார்.

ஒரு நாள் மாஸ்டர் நோயுற்றார். ஆனால் முல்லா தினப்படி சுற்ற வருவதற்குச் செல்ல வேண்டும்.· அவர் ஒரு புதிய நாடியை தன்னுடைய கையில் எடுத்துக் கொண்டு கொஞ்சம் ஆழ்ந்து யோசனை செய்தார் - மாஸ்டரைப் போல அப்படியே - பின் அவர் "நீங்கள் மிக அதிகமான குதிரைகளைச் சாப்பிட்டுக் கொண்டிருக் கிறீர்கள்" என்றார்.

அந்த நோயாளி, "என்ன! நீங்கள் பைத்தியமா!" என்று சொன்னார்.

முல்லா மிகவும் குழப்பமடைந்தார். அவர் மிகவும் கலவரத்துடன், வருத்தமாக வீட்டிற்கு வந்தார். மாஸ்டர், "என்ன நடந்தது?" என்று கேட்டார்.

அவர், "நானும்கூட படுக்கைக்கு அடியில் பார்த்தேன், சேணம் (சவாரி செய்பவர் உட்காரும் ஆசனம்) மற்ற பொருட்களும் அங்கே இருந்தன. குதிரை அங்கே இல்லை - அதனால் நான்" அவர் மிக அதிகமாகக் குதிரைகளைச் சாப்பிடுகிறார்" என்று எண்ணினேன் என்றார்.

இப்படித்தான் முட்டாள் தனமான மனம் பின் தொடர்ந்து கொண்டே இருக்கிறது. முட்டாளாக இராதீர்கள். இந்த வரையறைகளை பழமொழிகளை, சூத்திரங்களை அதிகத் தெளிவாக இல்லாத வழியில் எடுத்துக் கொள்ளுங்கள். அது உங்களது புரிந்து கொள்ளுதலின் பகுதியாக ஆகட்டும். ஆனால் அவற்றை அப்படியே பின் பற்றுவதற்கு முயற்சி பண்ண வேண்டாம். அவைகள் உங்க்ளுள் ஆழமாகச் செல்லட்டும், அவைகள் உங்களது புத்திசாலித்தனமாகட்டும்; பின் உங்கள் பாதையைத் தேடுங்கள். எல்லா மிகச்சிறந்த போதனைகளும் மறைமுகமானவையே.

இந்த ஆசனத்தை எப்படி அடைவது? நிலையாக இருப்பதை எப்படி அடைவது? முதலில் சுகமாக இருப்பதைப் பாருங்கள். உங்கள் உடல் சரியான ஆழ்ந்த சுகமாக இருக்குமானால், ஆழ்ந்த ஓய்வில் இருக்குமானால், நன்றாக இருப்பதாக உணர்ந்தால், ஒரு நிச்சயமான சுகம் உங்களைச் சூழ்ந்து கொள்ளும். அதுவே பிரமாணமாக இருக்க வேண்டும். அதைக் கொண்டு தீர்மானிக்க வேண்டும். அது உரைகல்லாக ஆக வேண்டும். இது, நீங்கள் நின்று கொண்டிருக்கும் போது முடியும்; இது நீங்கள் படுத்துக்கொண்டிருக்கும்போது முடியும்; நீங்கள் தரையின் மேல் உட்கார்ந்திருக்கும்போதோ அல்லது

நாற்காலியில் அமர்ந்திருக்கும்போதோ முடியும். அது எங்கிருந்தாலும் முடியும். ஏனென்றால் இது சுகத்தின் உள்ளுணர்வாகும். எப்பொழுதெல்லாம் இது அடையப் படுகிறதோ அப்போது மீண்டும் மீண்டும் நகர்வதை நீங்கள் தேடர விரும்ப மாட்டீர்கள். அதிகம் நகர்ந்தீர்களானால், அதிகம் அதை நழுவ விடுகிறீர்கள். இது ஒரு நிச்சயமான (குறிப்பிட்ட) நிலையில் நிகழ்கிறது. நீங்கள் நகருவீர்களானால், நீங்கள் தொலைவிற்கு நகர்ந்து விடுகிறீர்கள்; நீங்கள் அதைத் தொந்தரவு செய்து விட்டீர்கள்.

இந்த இயற்கையான ஆவல் ஒவ்வொருவரிடமும் இருக்கிறது. யோகம் அதிக இயற்கையான விஷயம். சுகமாக இருக்க வேண்டுமென்பது இயற்கையான ஆவலாகும். எப்பொழுதெல்லாம் நீங்கள் சுகமற்வராக இருக்கிறீர்களோ, நீங்கள் அதை மாற்ற விரும்புகிறீர்கள். அது இயற்கையே. எப்பொழுதும் இயற்கை யானவற்றை, உங்களுள் உள்ள உள்ளுணர்வு இயக்கத்தை கவனியுங்கள். அது எப்போதும், ஏறக்குறைய சரியானதே.

முயற்சியில் தளர்வுடன் இருப்பதால் எல்லையற்றதை தியானிப்பதால் ஆசனத்தில் தேர்ச்சியடையப்படுகிறது.

அழகிய வார்த்தைகள், மிகச்சிறந்த காட்டுபவை, சுட்டிக் காட்டுபவை. ப்ரயத்ன சொத்தல்ய - முயற்சியில் தளர்வுடன் இருத்தல் - முதல் விஷயம். நீங்கள் ஆசனத்தை அடைய விருமபினால், பதஞ்சலி சொல்லுகீன்ற ஆசனம் என்னவென்றால் சுகமான, நிலையான, உடல் ஆழ்ந்த அசைவற்ற தன்மையில் இருப்பதால் எதுவும் நகராமல், உடல் சுகமாக இருப்பதால் அதை நகர்த்த வேண்டுமென்ற ஆவர் மறைந்துவிடுகிறது, நீங்கள் சுகமான உணர்வை அனுபவிக்க ஆரம்பித்து விடுகிறீர்கள், அது நிலையாக ஆகிவிடுகிறது.

மனோநிலையின் மாற்றத்தினால், உடல் மாற்றமடைகிறது; உடலின் மாற்றத்தினால் உங்கள் மனோநிலை மாற்றமடைகிறது. நீங்கள் எப்பொழுதாவது கவனித்திருக்கிறீர்களா? நீங்கள் ஒரு திரைப்பட அரங்கிற்கு, ஒரு திரைப்படத்திற்குச் செல்கிறீர்கள்: நீங்கள் உடலினுடைய நிலையை எத்தனை முறை மாற்றினீர்கள் என்பதைக் கவனித்தீர்களா? நீங்கள் அதை சம்பந்தப்படுத்த முயற்சி செய்தீர்களா? திரையில் ஏதோ ஒன்று மிக உணர்ச்சி வயப்படுத்துவது சென்று கொண்டிருந்தால், உங்களால் நாற்காலில் சாய்வாக உட்கார முடியாது.

நீங்கள் நேராக உட்காருகிறீர்கள். உங்களுடைய முதுகுத் தண்டு நேராக ஆகிவிடுகிறது. ஏதோ ஒன்று சலிப்பூட்டிக் கொண்டிருக்கிறது. நீங்கள் தூண்டப்படவிலை, நீங்கள் தளர்வாக இருக்கிறீர்கள். இப்போது உங்கள் முதுகுத் தண்டு இனிநேராக இல்லை. ஏதோ ஒன்று மிக சுகமற்றதாக சென்றுகொண்டிருந்ததால், நீங்கள் உங்கள் உடலினுடைய நிலையை மாற்றிக் கொண்டே இருக்கிறீர்கள். ஏதோ ஒன்று உண்மையில் அழகாக அங்கே இருந்தால் உங்கள் கண்கள் கூட இமைப்பதை நிறுத்திவிடுகிறது; அந்த அளவுகூட ஒரு தொந்தரவாக உள்ளது.. அசையவில்லை. நீங்கள் முழுவதும் நிலையாக, ஓய்வாக, உடல் மறைந்து விட்டது போல இருக்கிறீர்கள்.

ஆசனத்தை அடைவதற்கு முதல் விஷயம் முயற்சியில் தளர்வாக இருப்பதாகும், அது உலகத்திலேயே அதிகக் கஷ்டமான விஷயமாகும் - மிக எளிமையானது, இருந்தாலும் அதிகக் கஷ்டமானது. நீங்கள் புரிந்து கொண்டீர்களானால் அடைவதற்கு எளிமையானது; நீங்கள் புரிந்து கொள்ளவில்லையென்றால் அடைவது அதிகக் கஷ்டமானது. அது பயிற்சி செய்வது என்பது கேள்வியில்லை, அது புரிந்து கொள்வது என்பதாகும்.

மேற்கில் எமிலிகோ (Emile coue) ஒரு குறிப்பிட்ட நியதியைக் கண்டுபிடித்தார், அவர் லா ஆஃப் ரிவர்ஸ் எஃபக்ட் (law of reverse effect) என்று அழைத்தார். அது மனித மனதில் உள்ள மிக அடிப்படையான விஷயங்களில் ஒன்றாகும். நிறைய விஷயங்கள் உள்ளன, நீங்கள் அவற்றைச் செய்ய விரும்பினால், தயவு செய்து அவற்றைச் செய்ய முயற்சி செய்ய வேண்டாம். இல்லையெனில் விளைவு எதிரிடையாக இருக்கும்.

உதாரணமாக, உங்களுக்கு உறக்கம் வரவில்லை: முயற்சி செய்யாதீர்கள். முயற்சி செய்துர்களானால் உறக்கம் தொலைவில் தூரத்தில் சென்றுவிடும். நீங்கள் மிக அதிகமாக முயற்சி செய்தால், உறங்குவது என்பது முடியாதது - ஏனென்றால் ஒவ்வொரு முயற்சியும் தூக்கத்திற்கு எதிராகச் செல்கிறது. உறக்கம் முயற்சி இல்லாத போதே வருகிறது. நீங்கள் உறக்கத்தைப் பற்றி தொந்தரவு கொள்ளவில்லையென்றால், நீங்கள் அப்படியே உங்கள் தலையணைமேல் படுத்துக் கொண்டு, தலையணையின் குளிர்ச்சியை, அல்லது கம்பளியின் வெதுவெதுப்பை அனுபவித்துக்கொண்டு, இருண்ட மிருதுவான சுற்றுப்புறம் உங்களைச் சூழ்ந்துள்ளது, நீங்கள் அப்படியே

அனுபவித்துக் கொண்டிருககிறீர்கள். ஒன்றுமில்லை, நீங்கள் தூக்கத்தைப்பற்றி சிந்திக்கக்கூட இல்லை. சில கனவுகள் மனதில் கடந்து சென்று கொண்டிருக்கின்றன. நீங்கள் அவற்றை மிக மிக உறக்க நிலையில் பார்க்கிறீர்கள். அவற்றில் விருப்பம் எழுமானால் உறக்கம் மறைந்து விடுகிறது. நீங்கள் எப்படியோ தொடர்ந்து தனிமையில் இருந்து வருகிறீர்கள், அப்படியே அனுபவித்துக் கொண்டு, ஓய்வுடன் எந்த முடிவையும் தேடாமல் - உறக்கம் வருகிறது.

நீங்கள் முயற்சி செய்ய ஆரம்பித்து அதனால் தூக்கம் வர வேண்டும். ஒரு முறை ஷுட் (should-நிபந்தனையைக் குறிக்கும் சொல்) நுழைந்தால் அது ஏறக்குறைய முடியாதது. பின் நீங்கள் இரவு முழுதும் விழித்துக் கொண்டிருப்பீர்கள்; நீங்கள் உறங்குவீர்களானால், அது எதனால் என்றால் நீங்கள் எல்லாவற்றையும் செய்துவிட்டு நீங்கள் விட்டுவிட்டீர்கள் - உறக்கம் வந்துள்ளது:

எமிலிகோ (Emile coue) இந்த நூற்றாண்டில் கண்டு பிடித்துள்ளாளர், லா ஆஃப் ரிவர்ஸ் எஃபக்ட். பதஞ்சலி ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இதை அறிந்திருக்க் வேண்டும். அவர் ப்ரயத்ன சௌத்தல்ய, முயற்சியில் தளர்வாக இருத்தல் என்று சொல்லுகிறார். மிக அதிக முயற்சி ஆசனத்தை அசைவதற்கு அடுத்துக் கொள்ளப்பட வேண்டுமென்று நீங்கள் அப்படியே எதிரிடையாக நினைத்துக்கொள்வீர்கள்: பதஞ்சலி, “நீங்கள் மிக அதிக முயற்சி செய்தீர்களானால் அது முடியாது. எந்த முயற்சியுமே நிகழ அனுமதிப்பதில்லை” என்று சொல்லுகிறார்.

முயற்சி முழுவதும் தளர்வடைய வேண்டும், ஏனென்றால் முயற்சி மனோசக்தியினுடைய பகுதியாகும், மனோசக்தி சரணாகதிக்கு புறம்பானது. நீங்கள் ஏதாவது ஒன்றைச் செய்ய முயலுவீர்களானால், நீங்கள் கடவுளை அதைச் செய்ய அனுமதிப்பதில்லை. நீங்கள் கொடுத்து விடுவீர்களானால், நீங்கள் “ஓகே உங்களுடைய மனோசக்தி நடக்கட்டும். நீங்கள் உறக்கத்தை அனுப்புவீர்களானால் முழுவதும் நல்லது. நீங்கள் உறக்கத்தை அனுப்பவில்லையென்றால் அதுவும் கூட முழுதும் அல்லது. எனக்கு குறைகூறுவதற்கு ஒன்றும் இல்லை; அதைப் பற்றி நான் முணுமணுக்க மாட்டேன். நீ சிறந்ததை அறிவாய். எனக்கு உறக்கம் அனுப்பப்படுவதற்கு தேவை உள்ளதென்றால் அனுப்பு. அது தேவையில்லையென்றால், முழுதும் நல்லதே - அதை அனுப்ப வேண்டாம். தயவு செய்து என்னைக் கவனிக்க வேண்டாம்!

உன்னுடைய மனோசக்தி நடக்கட்டும்". இப்படித்தான் ஒருவர் முயற்சியைத் தளர்வடையச் செய்ய வேண்டும்.

முயற்சியற்ற நிலை ஒரு மிகச்சிறந்த நிகழ்வாகும். ஒரு முறை நீங்கள் அதை அறிந்து கொண்டால், பல லட்சக்கணக்கான விஷயங்கள் உங்களுக்குக் கிடைப்பதாகும். முயற்சியின் மூலம் கடைத்தெரு; முயற்சியற்ற நிலையில் கடவுள். முயற்சியின் மூலம் நீங்கள் ஒரு போதும் நிர்வாண நிலையை அடைவதில்லை - நீங்கள் நியூ டெல்லியை அடையலாம், ஆனால் நிர்வாண நிலையல்ல.

முயற்சியின் மூலம் உலகம் பொருட்களை அடையலாம், அவை முயற்சி இல்லாமல் ஒரு போதும் அடைய முடியாது. அதனால் நீங்கள் அதிகச் செல்வத்தை அடைய விரும்பினால் உங்களுடைய முழுவாழ்க்கையையும் இந்த மனிதன் தொந்தரவு படுத்தி விட்டான் என்று நீங்கள் பின்பு என் மேல் மிகமிகக் கோபமடைவீர்கள். "அவர், முயற்சி செய்வதை நிறுத்துங்கள், நிறைய விஷயங்கள் முடிவதாக ஆகும் என்று சொல்லுகிறார்" நான் உட்கார்ந்து கொண்டு காத்திருக்கிறேன். பணம் வரவில்லை, ஒருவருமே அழைப்பிதழோடு, "தயவு செய்து வாருங்கள், நாட்டினுடைய ஜனாதிபதி ஆகுங்கள் என்று வரவில்லை." ஒருவரும் வர மாட்டார்கள். இந்த முட்டாள் தனமான விஷயங்கள் முயற்சியின் மூலம் அடைய வேண்டும்.

நீங்கள் ஜனாதிபதியாக ஆக விரும்பினால், அதற்காக ஒரு பைத்தியக்காரத்தனமான முயற்சி செய்ய வேண்டும். நீங்கள் முழுதும் பைத்தியமாகவில்லையென்றால் நாட்டினுடைய ஜனாதிப்தியாக ஒருபோதும் ஆகமாட்டீர்கள். மற்றப் போட்டியாளர்களைவிட அதிகப்பைத்தியமாக நீங்கள் இருக்க வேண்டும், ஏனென்றால் நீங்கள் மட்டும் அங்கே தணியாக இல்லை. மிக அதிகமான போட்டி உள்ளது; மற்றவர்களும் கூட முயற்சி செய்கின்றனர். உண்மையில் ஒவ்வொருவரும் அதே இடத்தை அடைய முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள். அதிக முயற்சி தேவைப்படுகிறது. ஒரு சீரிய பண்புகள் உள்ள வழியில் முயற்சி செய்யாதீர்கள். இல்லையென்றால் நீங்கள் தோற்கடிக்கப்படுவீர்கள். சீரிய பண்புகள் உள்ள நிலை அங்கே தேவையில்லை. மூர்க்கத்தனமாக, ஹிம்சையாக, சண்டையிடுபவராக. மற்றவர்களுக்கு என்ன செய்கிறீர்கள் என்பதைப்பற்றி தொந்தரவு கொள்ளாதீர்கள். உங்களுடைய கிரமப்படி திட்டத்தை உறுதியாகப் பின்பற்றுங்கள். உங்களுடைய ஏதேச்சதிகார அரசியலுக்காக

மற்றவர்கள் கொல்லப் படவேண்டுமானாலும்கூட, அவர்கள் சொல்லப் படட்டும். ஒவ்வொருவரையும் ஓர் ஏணியாக, ஒரு படியாகச் செய்யுங்கள். மக்களுடைய தலைகள் மேல் நடந்து கொண்டே இருங்கள்; அதன் பின்தான் நீங்கள் ஜனாதிபதியாகவோ, பிரதம மந்திரியாகவோ ஆவீர்கள். அதற்கு வேறு வழியில்லை.

உலகினுடைய வழிகள் ஹிம்சையும், மனோ சக்தியையும் உபயோகிப்பதாகும். நீங்கள் மனோ சக்தியை தளர்வடையச் செய்வீர்களானால், நீங்கள் வெளியே எறியப்பட்டு விடுவீர்கள், யாரோ ஒருவர் உங்கள் மேல் அதிகாரம் செலுத்த ஆரம்பித்து விடுவார். நீங்கள் ஒரு உபாயத்தை செய்து கொண்டுள்ளீர்கள். உலகின் வழியில் நீங்கள் வெற்றி கொள்ள விரும்பினால், பதஞ்சலி போன்றவர்களைக் கவனிக்காதீர்கள். பின் மாக்கியாவெல்லி (Machiavelli) சாணக்கியர் இவர்களைப்பற்றி படிப்பது நல்ல. தந்திரம், உலகத்திலேயே மிகத் தந்திரமான மக்கள். அவர்கள் எப்படி எல்லோரையும் சுரண்டுவது, யார் ஒருவரும் உங்களைச் சுரண்டாமல் இருப்பது, கருணையே இல்லாமல் எப்படி இரக்கமற்றவராக இருப்பது, ஹிம்சையாக இருப்பது என்று உங்களுக்குப் புத்திமதி சொல்லுவார்கள். பின்புதான் நீங்கள் அதிகாரம், கௌரவம், பணம் உலகியல் பொருட்கள் எல்லாம் அடைய முடியும். அனால் நீங்கள் கடவுளுடைய விஷயங்களை அடைய வேண்டுமென்றால் அப்படியே எதிரானவையே தேவையானவைகள்: முயற்சி இல்லை. முயற்சியற்ற தன்மை, தளர்வாக இருக்கும் தன்மை தேவைப்படுகிறது.

இது பல தடவைகளில் நடந்துள்ளது... எனக்கு நிறைய நண்பர்கள், அரசியல் உலகத்தில் பண உலகத்தில், கடைத் தெருவில் இருந்தனர். என்னிடம் வந்து அவர்கள், "எப்படியாவது உங்களுக்கு தளர்வடைய கற்றுக் கொடுங்கள். எங்களால் தளர்வாக இருக்க முடியவில்லை" என்று சொல்லுவாக்ர்ள். ஒரு மந்திரி வழக்கமாக என்னிடம் வருவார், அவர் எப்போதும் ஒரே மாதிரியான பிரச்சினையுடனேயே வருவார்: "என்னால் தளர்வாக இருக்க முடியவில்லை, உதவி செய்யுங்கள்" என்று

நான், "நீங்கள் உண்மையில் தளர்வாக இருக்க விரும்பினால், நீங்கள் அரசியலை விட்டு வெளிவந்து விட வேண்டும். இந்த மந்திரிப்பதவி தளர்வாக இருப்பதனுடன் செல்லாது. நீங்கள் தளர்வாக இருந்தால், நீங்கள் இழந்து விடுவீர்கள். ஆகையால் நீங்கள் முடிவு

செய்யுங்கள். நான் உங்களுக்குத் தளர்வாக இருக்கும் நிலையைக் கற்றுக் கொடுப்பேன், ஆனால் பின்பு கோபப்படாதீர்கள், ஏனென்றால் அந்த இரண்டு விஷயங்களும் சேர்ந்திருக்க முடியாது. அதனால் முதலில் உங்கள் அரசியலை முடித்து விடுங்கள்; பின்பு என்னிடம் வாருங்கள்'' என்று சொன்னேன்.

அவர், ''அது முடியாது. நான் தளர்வாக இருக்கும் நிலையைக் கற்றுக் கொள்ள வந்தேன். அதனால் நான் கடினமாக உழைத்து முதன் மந்தியாக ஆக முடியும். இந்த மனதிலுள்ள இறுக்கத்தினாலும், தொடர்ந்த கஷ்டங்களினாலும் என்னால் கடினமாக உழைக்க முடியவில்லை. மற்றவர்கள் - அவர்கள் உழைத்துக் கொண்டே இருக்கிறார்கள், அவர்கள் அதிகமாக போட்டியிடுபவர்கள், நான் தோல்வியடைந்து கொண்டிருக்கிறேன். நான் அரசியலிலிருந்து விலகிச் செல்வதற்கு வரவில்லை'' என்று சொன்னார்.

பின் நான், ''அப்படி என்றால் என்னிடம் வரவேண்டாம். என்னை மறந்து விடுங்கள். அரசியலில் இருங்கள். உண்மையிலேயே களைப்படையுங்கள், சலிப்படையுங்கள், அதை முடித்து விடுங்கள், பின் என்னிடம் வாருங்கள்'' என்று சொன்னேன்.

நீங்கள் உலகத்தினுள் மனோ சக்தியுடன் செல்லுகிறீர்கள். நீத்ஸே (Niet zche) ஒருபுத்தகம் எழுதியுள்ளார், தி வில் ட்டு பவர் (The Will To Power). அதுதான் படிப்பதற்கு சரியான நூலாகும். தி வில் ட்டு பவர் (The Will To Power) பதஞ்சலி ''வில் ட்டு பவர்'' இல்லை; அது முழுமைக்குச் சரணடைவது. முதல் விஷயம்: ப்ரயத்னசௌத்ல்ய முயற்சியற்ற தன்மை. நீங்கள் சுகமாக உணர வேண்டும். அதற்காக அகித முயற்சி செய்ய வேண்டாம்; உணர்வு வேலை செய்யட்டும். மனோ சக்தியை உள்ளே கொண்டு வராதீர்கள். எப்படி சுகத்தை உங்கள் மேல் கட்டாயப்படுத்த முடியும்? அதுமுடியாதது. நீங்கள் சுகம் நிகழ்வதற்கு அனுமதித்தீர்களானால் தான், நீங்கள் சுகமாக இருக்க முடியும். உங்களால் அதைக் கட்டாயப்படுத்த முடியாது.

எப்படி நீங்கள் அன்பைக் கட்டாயப்படுத்துவீர்கள்? நீங்கள் ஒரு மனிதரை விரும்பவில்லையென்றால், நீங்கள் ஒரு மனிதரிடம் அன்பு செலுத்த மாட்டீர்கள். நீங்கள் என்ன செய்வீர்கள்? நீங்கள் முயற்சி செய்வீர்கள், நடிப்பீர்கள், உங்களைக் கட்டாயப் படுத்துவீர்கள், ஆனால் அப்படியே எதிரான விளைவுதான் ஏற்படும். நீங்கள் ஒருவரிடம் அன்பு செலுத்த முயறுவீர்களானால், அவரை மிகவும்

வெறுப்பீர்கள், உங்களுடைய முயற்சிக்குப் பின்னால், நீங்கள் அந்த மனிதனை வெறுக்கிறீர்கள். அதனால் நீங்கள் பழிவாங்குகிறீர்கள் என்ற ஒரே விளைவுதான் ஏற்படும். நீங்கள் "அவன் எந்த (என்ன) மாதிரியான வெறுப்புண்டாக்குபவன்; ஏனென்றால் நான் எவ்வளவு அதிகமாக அன்பு செலுத்த முயலுகிறேன், ஒன்றுமே நிகழவில்லை" என்று சொல்வீர்கள், நீங்கள் அவனைப் பொறுப்பாக்குகிறீர்கள். நீங்கள் அவனைக் குற்றவுணர்வுடன் இருக்கச் செய்கிறீர்கள். அவன் ஏதொன்றும் செய்யவில்லை.

அன்பு மனோசக்தியால் அடைய முடியாது, பிராத்தனை மனோ சக்தியால் அடைய முடியாது, ஆசனம் மனோசக்தியால் அடைய முடியாது. நீங்கள் உணர வேண்டும். உணருதல் மனோசக்தியைவிட முழுதும் மாறுபட்ட விஷயமாகும்.

ஒருபுத்தர் மனோசக்தியினால் புத்தராகவில்லை. அவர் ஆறு ஆண்டுகள் தொடர்ந்து மனோசக்தியால் முயற்சி செய்தார். அவர் உலகியல் மனிதனாவார்; ஒரு இளவரசனாகப் பயிற்றுவிக்கப்பட்டவர், ஒரு இராஜ்ஜியத்தின் அரசனாகப் பயிற்றுவிக்கப்பட்டவர். சாணக்கியர் கூறுபவை அனைத்தும் அவருக்குக் கற்றுக்கொடுக்கப்பட்டிருந்தன.

சாணக்கியர் இந்திய மாக்கியாவல்லியாகும் (Machiavelli) மாக்கியா வல்லியை விட தந்திரம் அதிகம் உள்ளவர், ஏனென்றால் இந்தியர்கள் மூலத்திற்கே செல்லக் கூடிய தன்மையுள்ள மனம் படைத்திருந்தனர். அவர்கள் புத்தரானால், அவர்கள் உண்மையில் ஒரு புத்தராகவே ஆவார்கள். அவர்கள் சாணக்கியரானால் அவர்களுடன் வெற்றி பெறவே முடியாது. எங்கெல்லாம் அவர்கள் செல்லுகின்றனரோ, மூலத்திற்கே செல்லுகின்றனர். மாக்கியா வல்லி (Machiavelli) சாணக்கியருக்கு முன்னால் கொஞ்சம் முதிர்ச்சியடையந்தவராவார். சாணக்கியர் முழுமையானவர்.

புத்தர் கற்றுக்கொடுக்கப் பட்டிருப்பார்; ஒவ்வோர் இளவரசனுரும் கற்றுக் கொடுப்படவேண்டும - மாக்கியவல்லியின் (Machiavelli) மிகச்சிறந்த புத்தகத்தின் பெயர் - தி பிரின்ஸ் (The Prince) உலக வழிகள் அனைத்தும் கற்றுக் கொடுக்கப்பட்டிருக்கும்; அவர் உலகத்திலுள்ள மக்களைச் சமாளிக்க வேண்டும். அவர் தன்னுடைய அதிகாரத்தைப் பற்றியிருக்க வேண்டும். பின் அவர் சென்றுவிட்டார். ஆனால் அரண்மனையை விட்டுச் செல்வது சுலபமானது;

இராஜ்ஜியத்தை விட்டு நீங்குவது சுலபமானது. மனதினுடைய பயிற்சியை விட்டு நீங்குவது கடினமானதாகும்.

கடவுளை அடைவதற்கு ஆறு ஆண்டுகள். அவர் மனோ சக்தியின் மூலம் முயற்சி செய்தார். எவையெல்லாம் மனிதத் தன்மையினால் முடியுமோ அவற்றை செய்தார் - மனித தன்மை யற்றவற்றினால் முடிவதைக் கூட செய்தார். அவர் எல்லாவற்றையும் செய்தார்; அவர் எதையுமே செய்யாமல் விடவில்லை. ஒன்றுமே நிகழவில்லை. அவர் எவ்வளவு அதிக முயற்சி செய்தாரோ அவ்வளவு அதிகம் தன்னிலிருந்து தொலைதூரத்தில் இருந்தார். உண்மையில் அவர் அதிகமான மனோசக்தி, முயற்சி செய்ததன் மூலம் அவர் கைவிடப்பட்டதாக அதிகம் உண்ர்ந்தார் - "கடவுள் எங்குமே இல்லை" எதுவுமே நிகழவில்லை.

பின் ஒரு மாலை நேரத்தில் அவர் விட்டுவிட்டார். அதே இரவிலேயே அவர் ஞானமடைந்தவரானார். அதே இரவிலேயே ப்ரயத்ன செயத் த்ல்ய, முயற்சியில் தளர்வுடன் இருத்தல், நிகழ்ந்தது. அவர் ஒரு புத்தராக மனோ சக்தியினால் ஆகவில்லை. அவர் சரணடைந்த போது, விட்டுவிட்டபோது ஒரு புத்தரானார். நான் உங்களுக்குத் தியானம் கற்றுக் கொடுக்கிறேன், நான், "எவ்வளவு முயற்சி உங்களால் செய்ய முடியுமோ அவ்வளவு செய்யுங்கள்" என்று உங்களிடம் சொல்லிக்கொண்டே இருக்கிறேன். ஆனால் எப்பொழுதும் ஞாபகத்தில் கொள்ளுங்கள், எல்லா முயற்சிகளும் செய்ய வேண்டும் என்பதற்குஇந்த முக்கியத்து;ம கொடுப்பது எதற்கென்றால், உங்களுடைய மனோசக்தி அப்படியே இழுத்தெறியப்படுவதனால் உங்களுடைய மனோ சக்தி முடிவுக்கு வந்துவிடுகறிது; அந்த ஒரு நாளில் நீங்கள் உங்கள் மனோசக்தியுடன் சலிப்புக் கொள்கிறீர்கள், நீங்கள் அப்படியே விட்டு விடுகிறீர்கள். அதே நாளில் நீங்கள் ஞானமடைந்தவராகிவிடுகிறீர்கள்.

ஆனால் அவசரப்படாதீர்கள், ஏனென்றால் நீங்கள் முயற்சி செய்யாமல் இப்பொழுதே விட்டு விடலாம் - அது உதவி செய்யாது. அது ஒரு தந்திரமான விஷயமாகும், நீங்கள் கடவுளுடன் வெற்றி கொள்வது என்பது தந்திரமாக இருந்து அல்ல. நீங்கள் மிகவும் களங்க மில்லாதவராக இருக்க வேண்டும். அந்த விஷயம் நிகழ வேண்டும்.

இவை வரையறைகள் மட்டுமே. பதஞ்சலி, "அதைச் செய்யுங்கள்" என்று சொல்லவில்லை. அவர் பாதையை

வரையறுக்கிறார், நீங்கள் அதைப் புரிந்து கொண்டீர்களானால், அது உங்களை உங்களுடைய வழியை, உங்களுடைய இருப்பை, பாதிக்க (தாக்க) ஆரம்பிக்கும். அதைக் கிரகித்துக் கொள்ளுங்கள். அது உங்களுள் ஆழத்தில் முழுமையாக உறிஞ்சப்பட்டதாகட்டும். அது உங்கள் இரத்தத்துடன் தடையற்ற ஓட்டமாக இருக்கட்டும். அது உங்கள் சாரமாகட்டும். அவ்வளவே. பதஞ்சலியை மறந்து விடுங்கள். இந்த சூத்திரங்கள் திணிக்கப்படுபவை அல்ல. அவை உங்களுடைய ஞாபகத்தின் பகுதியாகச் செய்யப்படவேண்டியவை அல்ல; அவை உங்களுடைய பகுதியாக ஆக வேண்டும். உங்களுடைய முழுமையான இருப்பு புரிந்து கொள்ள வேண்டும். அவ்வளவே. பின் அவற்றை மறந்து விடுங்கள். அவை செயல்பட ஆரமபித்துவிடும்.

முயற்சியில் தளர்வுடன் இருப்பதால் எல்லையற்றதைத் தியானிப்பதால் ஆசனத்தில் தேர்ச்சி அடையப்படுகிறது.

இரண்டு குறிப்புகள். முயற்சியில் தளர்வடையுங்கள்: அதைக் கட்டாயப் படுத்தாதீர்கள். நிகழ்வதற்கு அனுமதியுங்கள். அது ஓர் ஆழ்ந்த (let-go) லெட்-கோ போக-விடு; அதை நிகழ்வதற்கு அனுமதியுங்கள். அதைக்கட்டாயப்படுத்த முயலாதீர்கள். இல்லையென்றால் அதைக் கொன்று விடுவீர்கள். இரண்டாவது விஷயம்: உடல் சுகமாக இருப்பதற்கு, அதை அனுமதிக்கும் போது, ஓர் ஆழ்ந்த ஓய்வில் நிலைக்கும் போது, உங்கள் மனம் எல்லை யற்றதின் மேல் குவிக்கப்படுகிறது.

மனம் எல்லையுள்ளவற்றுடன் மிகவும் சாமர்த்தியமானது. பணத்தைப் பற்றி நீங்கள் சிந்திப்பீர்களானால், மனம் சாமர்த்தியமானது; அதிகாரத்தைப்பற்றி, அரசியலைப்பற்றி நீங்கள் சிந்திப்பீர்களானால் மனம் சாமர்த்தியமானது. வார்த்தைகளைப் பற்றி, தத்துவங்களைப் பற்றி, ஒழுங்கு முறைகளைப்பற்றி, நம்பிக்கைகளைப்பற்றி சிந்திப்பீர்களானால் மனம் திறமையுள்ளது - இவை எல்லாம் எல்லைக்குட்பட்டவை. கடவுளைப்பற்றி சிந்திப்பீர்களானால் ஒரு வெற்றிடம்....நீங்கள் கடவுளைப்பற்றி என்ன சிந்திப்பீர்கள்? நீங்கள் சிந்திப்பீர்களானால், பின் கடவுள் இனி கடவுளாக இல்லை; அது எல்லையுள்ளதாக ஆகிவிட்டது. நீங்கள் கடவுளைக் கிருஷ்ணனாகச் சிந்திப்பீர்களானால் இனி அது கடவுளாக இல்லை; பின் கிருஷ்ணர் அங்கே நின்று கொண்டு தன்னுடைய புல்லாங்குழலில் பாடிக் கொண்டிருக்கிறார், ஆனால் அங்கே எல்லை ஏற்பட்டு விடுகிறது. நீங்கள் கடவுளை இயேசுவாகச் சிந்திப்பீர்களானால் முடிந்தது. கடவுள்

இனி அங்கு இல்லை; அதன் மூலம் ஓர் எல்லையுள்ள தன்மையைச் செய்து விட்டீர்கள். அழகானது, ஆனால் எல்லையற்றதன் அழகோடு எதையுமே ஒப்பிட முடியாதது.

இரண்டு வகையான கடவுள் உள்ளார். ஒன்று நம்பிக்கையின் கடவுள்: கிறிஸ்துவ கடவுள், இந்துக கடவுள், முஸ்லிம் கடவுள். உண்மையின் கடவுள் நம்பிக்கையில் இல்லை: அது எல்லையற்றது. நீங்கள் முகமதியக் கடவுளைச் சிந்திப்பீர்களானால், நீங்கள் ஒரு முகமதியர். ஆனால் ஒரு மத நம்பிக்கையுள்ள மனிதராக மாட்டீர்கள். கிருஸ்துவக் கடவுளை நீங்கள் சிந்திப்பீகளானால், நீங்கள் ஒரு கிருஸ்துவர், ஆனால் நீங்கள் ஒரு மதநம்பிக்கை உள்ள மனிதராவீர்கள் - நீங்கள் மத நம்பிக்கை உள்ள மனிதராவீகள் - நீங்கள் இனி இந்துவாக, முகமதியராக, கிறிஸ்துவராக இல்லை.

அந்தக் கடவுள் ஒரு கொள்கையல்ல! ஒரு கொள்கை ஒரு பொம்மை, உங்களுடைய மனம் அதனுடன் விளையாடும். உண்மையான கடவுள் மிகப்பரந்தவர்... கடவுள் உங்கள் மனதுடன் விளையாடுகிறார், உங்கள் மனம் கடவுளுடன் விளையாட வில்லை.பின் கடவுள் இனி உங்கள் கையில் பொம்மையாக இல்லை; தெய்வீகத்தின் கைகளில் நீங்கள் ஒரு பொம்மையாக இருக்கிறீர்கள். முழுவிஷயமுமே முற்றிலும் மாற்றமடைந்து விட்டது. இப்போது நீங்கள் இனி கட்டுப்படுத்துபவராக இல்லை, நீங்கள் இனி கட்டுக்குள் இல்லை: சரியான வார்த்தை, "உடமையாகிவிடு" என்பதாகும். எல்லையற்றதனால் உடமையாக்கிக் கொள்ளப்படுவது.

அது இனி உங்கள் மனக்கண்ணிற்கு முன்னால் ஒரு காட்சியாக இல்லை. அங்கே எந்தக் காட்சியும் இல்லை. பரந்த சூன்யம் அந்தப் பரந்த சூன்யத்தில் நீங்கள் கரைந்து போகிறீர்கள். கடவுளின் வரையறைகள் மட்டுமல்லாமல், எல்லைகளும் இழக்கப்படுகின்றன; நீங்கள் எல்லையுற்றதுடன் தொடர்பு கொள்ளும் போது உங்கள் எல்லைகளை இழக்க ஆரம்பித்து விடுகிறீர்கள். உங்களுடைய எல்லைகள் மிகமிக நிச்சயமற்றதாக, அதிக வளையும் தன்மையுடையதாக ஆகிவிடுகிறது. ஆகாயத்தில் உள்ள புகைபோல நீங்கள் மறைந்து விடுகிறீர்கள். ஒரு நேரம் வரும், நீங்கள் உங்களைப் பார்த்தீர்களானால் ... நீங்கள் அங்கிருக்க மாட்டீர்கள்.

ஆகையால் பதஞ்சலி இரண்டு விஷயங்களைச் சொல்லுகிறார் முயற்சி இல்லை, உணர்வு எல்லையற்றதன் மேல் குவிக்கப்படுதல்,

இப்படியாக நீங்கள் ஆசனத்தை அடைகிறீர்கள். இது ஒரு ஆரம்பம் மட்டுமே, இது ஓர் உடம்பு மட்டுமே. ஒருவர் ஆழமாகச் செல்ல வேண்டும்.

ததோத்வந்வ அனபிகாத: ஆசனத்தில தேர்ச்சியடைந்த போது, இருமைகளின் காரணமாக ஏற்பட்ட தொந்தரவுகள் நிறுத்தப் படுகின்றன.

உண்மையில் உடல் சுகமாக, ஒய்வாக இருக்கிறாதென்றால், உடலின் சுடர் அசைவதில்லை - அது நிலையாக ஆகியுள்ளது, அங்கே அசைவுகள் இல்லை - திடிரென காலமே நின்று விட்டது போல, காற்று எதுவும் வீசவில்லை, எல்லாம் நிலையாக, சாந்தமாக, உடலுக்கு அசைய வேண்டுமென்ற உந்துதல் இல்லாமல் - நிலைத்திருக்கிறது, ஆழமான சமநிலையில் அதைதியாக, சமாதானமாக, உறுதியாக: இந்த நிலையில் இருமைகள், இருமையின் காரணமாக ஏற்பட்ட தொந்தரவுகள் மறைகின்றன.

நீங்கள் கவனித்திருக்கிறீர்களா எப்பொழுதெல்லாம் உங்கள் மனம் தொந்தரவாக உள்ளதோ, உங்கள் உடல் மிக அமைதியில்லாத நிலையில் இருக்கிறது, உங்களால் அமைதியாக உட்கார முடியாது... அல்லது எப்பொழுதெல்லாம் உங்கள் உடல் அமைதியில்லாத நிலையில் இருக்கிறதோ, உங்களுடைய மனம் அமைதியாக இருக்க முடியாது? அவைகள் ஒன்றாக இருக்கின்றன. உடலும் மனமும் இரண்டு விஷயங்கள் அல்ல என்பதை பதஞ்சலி நன்றாக அறிந்திருந்தார்; நீங்கள் இரண்டாகப் பிரிக்கப்படவில்லை, உடலும், மனமும் என்று. உடலும் மனமும் ஒரே விஷயமாகும். நீங்கள் உங்களுடைய மனதின் தொடக்கம். மனம் உடலின் முடிவாகும். அவை ஒரே நிகழ்வின் இரண்டு தோற்றங்கள் ஆகும். அவை இரண்டு அல்ல. அதனால் எவையெல்லாம் உடலில் நிகழ்கின்றனவோ மனைத் பாதிக்கிறது, எவையெல்லாம் மனதில் நிகழ்கின்றனவோ உடலைப் பாதிக்கிறது. அவை இணையாகச் செய்கின்றன. அதனால்தான் உடலின் மேல் அதிக முக்கியத்துவம் உள்ளது, ஏனென்றால் உங்கள் உடல் சூழ்ந்த அமைதியில் இல்லையென்றால் உங்கள் மனதால் முடியாது.

உடலிலிருந்து தொடங்குவது சுலபமானது. ஏனென்றால் அதுதான் வெளியிலுள்ள அடுக்குஆரும். மனதிலிருந்து தொடங்குவது கடினமானது. அதிகமான மக்கள் மனதிலிருந்து ஆர:மபிக்க

முயலுகின்றனர், தோல்வியடைகின்றனர், ஏனென்றால் அவர்களுடைய உடல் ஒத்துழைப்பதில்லை. எப்பொழுதுமே ஏபிசி (ABC) யிலிருந்து தொடங்குவதுதான் சிறந்தது, மெதுவாகச் செல்ல வேண்டும், சரியான கிரமத்தில் முதலில் உடல் ஆரம்பம்: ஒருவர் உடலிலிருந்து தொடங்க வேண்டும். நீங்கள் உடலின் அமைதியான நிலையை அடைந்துவிட்டால் திடீரென் மனம் ஒழுங்குமுறைக்கு வந்து விடுவதைப் பார்ப்பீர்கள்.

மனம் ஒரு பெண்டுலத்தைப் போல இடது பக்கதிற்கும் வலது பக்கத்திற்கும் நகர்ந்து கொண்டே இருக்கிறது. ஒரு வயதான தாத்தாவினுடைய கடிகாரத்தைப் போல: தொடர்ந்து, வலதிலிருந்து இடதிற்கு, இடதிலிருந்து வலதிற்கு நீங்கள் ஒரு பெண்டுலத்தைக் கவனித்தீர்களனால், உங்கள் மனத்தைப்பற்றி ஓரளவு அறிந்து கொள்வீர்கள். பெண்டுலம் இடது பக்கத்தை நோக்கி நகரும் போது, இடது பக்கம் செல்வது கண்ணுக்குப் புலப்படுகிறது, ஆனால் கண்ணுக்குப் புலப்படாமல் அது வலது பக்கம் செல்வதற்கான இயங்கு விசையைப் பெறுகிறது. கண்கள் பெண்டுலம் இடதுபக்கத்திற்குச் செல்லப் போகிறது என்று சொல்லும் போது, அதே வினாடியில் இடது பக்த்தில் இயங்கு விசையை உருவாக்குகிறது, அந்த சக்தி மீண்டும் பெண்டுலத்திற்கு வலது பக்கத்திற்கு செல்வதற்காரும். அது வலது பக்கத்திற்குச் செல்லும் போது, மீண்டும் இடது பக்கத்திற்குச் ெ சல்வதற்குச் சக்தியைப் பெறுகிறது.

ஆகையால் எப்பொழுதெல்லாம் நீங்கள் அன்பில் இருக்கிறீர்களோ, நீங்கள் வெறுப்பதற்குச் சக்தியைப் பெறுகிறீர்கள். எப்பொழுதெல்லாம் நீங்கள் வெறுப்பில் இருக்கிறீர்களோ, நீங்கள் அன்பு செலுத்துவதற்குச் சக்தியைப் பெறுகிறீர்கள். எப்பொழுதெல்லாம் நீங்கள் சந்தோஷமாக இருப்பதாக உணர்கிறீர்களோ, நீங்கள் சந்தோஷமில்லாமல் இருப்பதற்கான சக்தியைப் பெறுகிறீர்கள். எப்பொழுதெல்லாம் நீங்கள் சந்தோஷமற்றவராக உணர்வீர்களானால் நீங்கள் சந்தோஷமாக இருப்பதற்கான சக்தியை உணர்கிறீர்கள். இப்படித்தான் இயங்கு விசை தொடர்ந்து கொண்டிருக்கிறது.

இந்தியா 1947ல் சுதந்திரம் அடைந்த போது ஓர் அழகான யானை டெல்லியில் இருந்தது என நான் கேள்விப்பட்டிருக்கிறேன். சுதந்திரத்திற்கு முன்பு அந்த யானை கல்யாண ஊர்வலங்களுக்காக, மற்ற விஷயங்கள் போன்றவைகளுக்காக உபயோகிக்கப்பட்டு வந்தது,

ஆனால் சுதந்திரத்திற்குப்பின் அரசியல் கட்சிகளும்கூட அந்த யானையைத் தங்களுடைய ஆதரவு தேடுவதற்கு, ஊர்வலங்களுக்கு, தங்களுடைய மறுப்பைத் தெரிவிப்பதற்கு உபயோகிக்க ஆரம்பித்தன்ா. அந்த யானைக்கு ஒரு வெடிப்பு போன்ற ஏதோ ஒன்று இருந்தது. இடது பக்கம் இருந்த கால்கள் சிறிது குட்டையாக இருந்தன. அதனால் யானை நடக்கும் போது இடது பக்கம் சாய்ந்திருந்தது.

கம்யூனிஸ்டுகள் அதிகச் சந்தோஷமடைந்தனர், சோஷலிஸ்ட்டுகள் மிகச் சந்தோஷமடைந்தனர். அந்த யானை இடது சாரி என்று. அதனால் அவர்கள் அந்த யானையின் சொந்தக்காரிடம் பணம் கொடுத்து விட்டு யானையைக் கடன் வாங்கிச் சென்றனர். அவர்கள் கைதட்டினர், அவர்களைப் பின்பற்றுபவர்களை யானையின் மேல் மலர்களைத் தூவினர். உண்மையில் இப்படித்தான் ஒரு யானை இருக்க வேண்டும் - இடதுசாரியாக. உறுதியாக, அந்த யானையால் நடப்பது மிகவும் கஷ்டமாக இருந்தது, ஆனால் யார் யானையைப் பற்றி தொந்தரவு கொள்ளகிறீர்கள்? அது கஷ்டமானது. ஏனென்றால் இரண்டு கால்களும் சிறியதாக இருந்தன, முழுச் சுமையும் இடது கால்களைத் தாக்கின. ஒரு யானை அதிக எடை உள்ளது. அது கஷ்டமானதாக இருந்தது. டன் கணக்கான கனத்தை தூக்கிச் செல்ல வேண்டும். ஆனால் மலர்கள் மாலைகள். அது வரவேற்கப்பட்டது, புகைப்படங்கள் செய்தித்தாள்கிளல் வெளியிடப்பட்டன. அது ஒரு கம்யூனிஸ்ட் யானை.

கம்யூனிஸ்ட், சோஸியலிஸ்ட் மற்ற இடதுசாரிகளுக்கு ஓர் அழகான யானை உள்ளது என்பதைப் பார்த்துவிட்டு, வலது சாரிகளும் கூட அவர்களுடைய ஊர்வலத்தின் போது அதே யானையைக் கடன் வாங்கினார்கள். யானைஇடது சாரி என்பதை அறிந்து கொள்ளாமல், அந்த யானை வலது சாரிகளுடன் சென்றபோது அவர்கள் மிகக் கோபடைந்தார்கள், இந்த யானை அவா்களுக்கு எதிராக உள்ளது: அது வலது பக்கம் சாய வேண்டும். அவர்கள் பழைய செருப்புகளை, தக்காளிப் பழங்களை, வாழைப்பழத்தோலை, அழுகிய பொருள்கள் எல்லாவற்றையும் எறிய ஆரம்பித்தார்கள். அவர்கள் மிகக் கோபமடைந்தார்கள். அவர்கள் அந்த சொந்தக்காரரிடமும்கூட கோபடைந்தனர், அவர்கள் சொந்தக்காரரிடம், "அடுத்த தடவை அதைக் கூப்பிடும் போது நீங்கள் ஏற்பாடுகள் செய்ய வேண்டும்" என்று கூறினர்.

அதனால் சொந்தக்காரர் ஏற்பாடுகள் செய்யவேண்டும் ஏனென்றால் அவர் யானையின் மூலம் வாழ்ந்து கொண்டிருந்தார்; அதுதான் அவருடைய ஒரே வருமானமாக இருந்தது. ஆகையால் அவர் பெரிய செருப்புகளைச் செய்தார். பின்பு எப்பொழுதெல்லாம் வலது சாரிகளுடைய ஊர்வலமோ அவர் அந்தப் பெரிய செருப்புகளை போடுவார், அந்த மிருகம் வலது பக்கம் சாயும்; எப்பொதுதெல்லாம் இடது சாரிகளுடைய ஊர்வலமோ, அவர் செருப்புகளை அகற்றி விடுவார். யாருமே யானையைப் பற்றிக் கவலைப்படவில்லை. ஒரு நாள் அந்த யானை ஒரு கனாட் பிளேஸ் (connaught place) விழுந்தது. ஏனென்றால் அந்தச் செருப்புகளுடன் அதிகப் பாரமும் சுமக்க வேண்டியிருந்தது. அது மிகவும் அசௌகரிய மாக இருந்தது - அது ஓர் ஆசனம் அல்ல. அது உண்மையில் அசௌகரியமாக இருந்தது. அது விழுந்து இறந்துவிட்டது.

இதுதான் உங்களுடைய மனதின் சூழ்நிலையும் கூட. தொடர்ந்து ஒரு நுனியிலிருந்து மற்றொரு நுனிக்கு மாறிக்கொண்டே இருக்கிறது - இடது சாரி, வலது சாரி - இடது சாரி, வலது வாரி - ஒரு போதும் நடுவில் இல்லை. நடுவில் இருப்பது என்பது உண்மையில் இருப்பது (இருப்பு) இரண்டு நுனிகளுமே துனபகரமானதாகும். ஏனென்றால் நீங்கள் சுகமாக இருக்க முடியாது. நடுவில் சுகம் உள்ளது. ஏனென்றால் நடுவில் பளு மறைந்து விடுகிறது. சரியாக நடுவில் இருங்கள் - நீங்கள் பளுவற்றவராகி விடுவீர்கள். இடது பக்கம் நகர்வீர்களானால் பளு வந்துவிடும். வலது பக்கம் நகர்வீர்களானால் பளு வந்துவிடும். நகர்ந்து கொண்டே இருந்தால் ... நடுவிலிருந்து தொலைதூரத்திற்கு நகர்ந்து விடுவீர்கள், அதிகப் பளு சுமக்க வேண்டும். நீங்கள் ஒரு நாள் ஏதோ ஒரு கனாட் பிளேலில் (connaught place) மரணமடைய வேண்டும.

நடுவில் இருங்கள். ஒரு மதநம்பிக்கை உள்ள மனிதர் இடது சாரியோ அல்லது வலது சாரியரோ இல்லை. ஒரு மத நம்பிக்கை உள்ள மனிதர் எல்லைகளைப் பின் தொடரமாட்டார். அவர் ஓர் எல்லை இல்லாத மனிதர். நீங்கள் சரியாக நடுவில் இருக்கும்போது - உங்கள் உடலும் மனமும், இரண்டும் எல்லா இருமைகளும் மறைந்து விடும், ஏனென்றால் எல்லா இருமைகளும் நீங்கள் இருமையாக இருப்பத னால், நீங்கள் இந்தப் பக்கம் அந்தப்பக்கம் சாய்ந்து கொண்டிருப்பதானல்,

“ததோ தவந்து அனபிகாத:” - “ஆசனத்தில் தேர்ச்சியடைந்த போது இருமையின் காரணமாக ஏற்பட்ட தொந்தரவுகள் மறைந்து

விடுகின்றன.'' இருமைகள் இல்லாவிடில், எப்படி நீங்கள் இறுக்கமாக இருக்க முடியும்? எப்படி உங்களால் மரண வேதனையுடன் இருக்கமுடியும் உங்களுள் இரண்டு இருக்கும் போது அங்கே போராட்டமாக இருக்கும். அவை சண்டையிட்டுக் கொண்டே இருக்கின்றன. அவை உங்களை ஒருபோதும் ஓய்வாக இருக்க விடுவதில்லை. உங்கள் இல்லம் துண்டாக்கப்பட்டுள்ளது. நீங்கள் எப்போதும் உள்நாட்டுப் போரில் இருக்கிறீர்கள். நீங்கள் காய்ச்சலில் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். இந்த இருமைகள் மறைந்தபோது, நீங்கள் அமைதியாக, மையங்கொள்பவராக, நடுவில் இருப்பவராக ஆகிவிடுவீர்கள். புத்தர் இந்த வழியை ''மஜ்ஜிம நிக்ாயா'' (Majjhim nikaya) என்று அழைக்கிறார் - நடு நிலையான வழி. அவர் தன்னுடைய சீடர்களுக்கு,'' பின்பற்றுவதற்கு ஒரே விஷயம் எதுவென்றால்: எப்போதும் நடுநிலையில் இருப்பது; எல்லைகளுக்குச் செல்லாதீர்கள்'' என்று வழக்கமாகச் சொல்லுவார்.

உலகம் முழுவதிலும் எல்லைகளுக்குச் செல்பவர் உள்ளனர். யாரோ ஒருவர் தொடர்ந்து கெண்களைத் துரத்திக் கொண்டிருக்கிறார், யாரோ ஒருவர் எல்லா துரத்துதலிலும் வெறுப்புக் கொண்டிருக்கிறார். பின் அவா உலகை விட்டுவிட்டு சந்நியாசியாக ஆகி உள்ளார். அவர் எல்லோரும் பெண்களுக்கு எதிராக இருக்க வேண்டுமென்று கற்றுகொடுக்கிறார், அவர் ''பெண் நரகமாவாள், விழிப்பாய் இருங்கள்! பெண் வலை (பொறி)யாவாள்'' என்கிறார். எப்பொழுதெல்லாம் நீங்கள் ஒரு சந்நியாசி பெண்களுக்குப் புறம்பாக பேசிக் கொண்டிருப்பதைப் பார்ப்பீர்களானால், இதற்கு முன்பு அவர் ஒரு ரோமியோவாக (Romeo) இருந்திருக்க வேண்டும் என்பதை நீங்கள் அறிந்து கொள்ளலாம். அவர் பெண்களைப் பற்றிய ஏதோ ஒன்றைச் சொல்லிக் கொண்டிருக்கிறார். இப்போது ஓர் எல்லை முடிந்ததது, மற்றோர் எல்லைக்கு அவர் நகர்ந்து கொண்டுள்ளார்.

யாரோ ஒருவர் பணத்தின் பின் பைத்தியமாக இருப்பதோடும், நிறைய போர்கள் பைத்தியமாக இருக்கின்றனர். அதே நினைவாக, முழு வாழ்க்கையுமே, பெரிய பெரிய குவியல்களான ரூபாய்களை உண்டு பண்ணுவதற்கு என்பது போல். அவர்கள் இங்கே இருப்பதன் ஒரே பொருள் போல காணப்படுகிறது, அவர்கள் மரணமடையும் போது, அவர்கள் இந்த பெரிய குவியல்களை விட்டுச் செல்வார்கள் - அடுத்தவர்களை விடப் பெரியது. அது ஒன்றே அவர்களுடைய முழு

முக்கியத்துவம் என்பது போலக் காணப்படுகிறது. அப்படிப்பட்ட ஒரு மனிதன் ஏமாற்றமடையும் போது அப்படிப்பட்ட ஒரு மனிதன் ஏமாற்றமடையும்போது அவன், "பணம் விரோதியாகும்" என்று சொல்லிக் கொண்டே இருக்கிறான். எப்பொழுதெல்லாம் நீங்கள் யாரோ ஒருவர் பணம் விரோதியாகும் என்று சொல்லிக் கொண்டிருப்பதைப் பார்க்கிறீர்களோ நீங்கள் அந்த மனிதன் ஒரு பணப் பைத்தியமானவன் என்பதை அறிந்து கொள்ளலாம். இன்றும் அவன் பைத்தியமே - எதிர் எல்லையில்.

உண்மையிலேயே சமநிலையிலுள்ள ஒரு மனிதன் எதற்கும் எதிராக இருப்பது இல்லை. ஏனென்றால் அவன் எதற்கும் சார்பாகவும் இருப்பதில்லை. நீங்கள் வந்து என்னிடம், "நீங்கள் பணத்திற்கு எதிராக உள்ளீர்களா?" என்று கேட்டீர்களானால், நான் என்னுடைய தோள்களைக் குலுக்குவேன். நான் அதற்கு எதிராக இல்லை ஏனெனில் நான் அதற்கு ஒதுபோதும் சார்பாக இல்லை. பணம் ஏதோ ஒரு உபயோகமானது, ஒரு பண்டமாற்று சாதனமாகும் - இரண்டு வழிகளிலும அதைப்பற்றிப் பைத்தியமாக இருக்கத் தேவையில்லை. உங்களிடம் இருக்குமானால் அதை உபயோகியுங்கள் உங்களிடம் அது இல்லையென்றால், அது இல்லததை அனுபவியுங்கள். புரிந்து கொள்ளும் மனிதன் செய்வது அவ்வளவே. அவன் ஒரு அரண்மனையில் வாழ்ந்தால் அதை அனுபவிப்பான். அரண்மனை அங்கே இல்லையென்றால் பின் குடிசையை அனுபவிப்பான். எந்த ஒரு நிலையாயினும் அவன் சந்தோஷத்துடனும், சமநிலையுடனும் இருக்கிறான். அவன் அரண்மனைக்குச் சார்பாகவோ, அல்லது அதற்குப் புறம்பாகவோ இல்லை. ஒரு மனிதன் சார்பாகவும், புறம்பாகவும் இருப்பவன் ஏற்றத் தாழ்வானவன்; அவன் சமநிலையில் இல்லை.

புத்தர் வழக்கமாக அவருடைய சீடர்களிடம், "சம நிலையில் இருங்கள், எல்லாமே அதாகவே நடக்கக்கூடியது. நடுவில் இருங்கள்" -என்று சொல்லுவார். ஆசனத்தைப் பற்றிப்பேசும் போது பதஞ்சலி அதைத்தான் சொல்லுகிறார். வெளியே உள்ள ஆசனம் உடலினுடையது. உள் ஆசனம் மனதினுடையது; இரண்டும் தொடர்புடையவைகள். உடல் நடுநிலையில் இருக்குமானால் - ஓய்வாக, நிலையாக - மனம் கூட நடுநிலையில் இருந்தால் உடலுணர்வு மறைந்து விடும். மனம் ஓய்வில் இருக்குமானால், மன-உணர்வு மறைந்துவிடும். பின் நீங்கள் ஆன்மா மட்டுமே, எல்லாவற்றிற்கும்

மேலான உணர்வாக, அது உடலாகவோ அல்லது மனமாகவோ இல்லை.

ஆசனத்தில் தேர்ச்சியடைந்த பின்பு அடுத்தபடியாக சுவாசக் கட்டுபாடு வருகிறது. சுவாசத்தை உள்ளே இழுத்து உள்ளே நிறுத்துதல், வெளியே விட்ட வெளியே நிறுத்துதல் அல்லது திடீரென நிறுத்துதல் ஆகியவற்றின் மூலமாக அது (சுவாசக்கட்டுப்பாடு) தேர்ச்சியடையப் படுகிறது.

உடலிற்கும், மனதிற்கும் இடையில் பாலமாக இருப்பது சுவாசமாகும். இந்த மூன்று விஷயங்களையும் புரிந்து கொள்ள வேண்டும். ஆசனம், மனம் எல்லையற்றதுடன் ஒன்று சேர்தல், அவைகளை ஒன்று சேர்த்து இணைக்கும் பாலம் இவைகள் ஒரு சரியான இசைவாக இருக்க வேண்டும். நீங்கள் கவனித்திருக் கிறீர்களா? இல்லையென்றால் உங்கள் மனம் எப்பொழுதெல்லாம் மாற்றமடைகிறதோ அப்போது கவனியுங்கள், சுவாசம் மாற்ற மடைகிறது. மாறுபட்டதும் உண்மையே: உங்களுடைய சுவாசத்தை மாற்றுங்கள். மனமும் மாறிவிடும்.

நீங்கள் ஆழமாக காம உணர்ச்சி வசப்பட்டிருந்தீர்களானால் உங்களுடைய சுவாசம் எப்படி உளளது என்று கவனித்திருக்கிறீர்களா? மிகவும் இசைவாக இல்லாமல் நிதானமற்றதாக, தூண்டுவதாக இருக்கும். நீங்கள் அந்த முறையில் சுவாசிப்பீர்களானால், சீக்கிரத்தில் களைப்படைந்து, காலி செய்யப்பட்டவராக ஆகிவிடுவீர்கள். அது உங்களுக்கு வாழ்வைக் கொடுக்காது; அந்த வழியில் நீங்கள் வாழ்க்கையை கொஞ்சம் இழந்து கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் சாந்தமாக, அமைதியாக, சந்தோஷமாக இருப்பதாக உணர்ந்தால், திடீரென ஒரு நாள் காலையில் அல்லது மாலையில் நட்சத்திரங்களைப் பார்த்துக் கொண்டு ஒன்றும் செய்வதற்கில்லாமல், விடுமுறை நாள், அப்படியே ஓய்வாக - பாருங்கள், சுவாசத்தைக் கவனியுங்கள். அந்த சுவாசமானது மிக அமைதியாக உள்ளது. நீங்கள் அது செய்கிறதா இல்லையா என்று அதை உணரக்கூட முடியாது. நீங்கள் கோபமாக உள்ளபோது கவனியுங்கள். சுவாசம் உடனடியாக மாற்றமடைகிறது. நீங்கள் அன்பை உணரும்போதும், கவனியுங்கள். நீங்கள் சோகமாக இருக்கும்போது, கவனியுங்கள். நீங்கள் சோகமாக இருக்கும் போது, கவனியுங்கள். ஒவ்வொரு மனோ பாவத்திலும் சுவாசத்திற்கு வித்தியாசமான இசைவு உள்ளது; அது ஒரு பாலம்.

உங்கள் உடல் ஆரோக்யமாக உள்ளபோது, சுவாசத்திற்கு வித்யாசமான தரம் உள்ளது. உங்களுடைய உடல் நோயுற்றிருக்கும் போது சுவாசமும் நோயுற்றதாக உள்ளது. நீங்கள் முழுதுமாக ஆரோக்யமாக இருக்கும்போது நீங்கள் சுவாத்தை முழுவதும் மறந்து விடுகிறீர்கள். நீங்கள் முழுவதுமாக ஆரோக்யமற்றவராக இருக்கும்போது சுவாசம் மீண்டும் மீண்டும் உங்கள் கவனத்திற்கு கொண்டு வரப்படுகிறது. ஏதோ ஒன்று தவறுதலாக உள்ளது.

"ஆசனத்தில் தேர்ச்சியடைந்தபின் அடுத்தபடியாக சுவாசத்தைக் கட்டுப் படுத்துதல்..." இந்த வார்த்தை "சுவாசத்தைக் கட்டுப்படுத்துதல்" என்றாக இல்லை. அது "பிராணாயாமம்" என்பதற்குச் ஒரு சரியான மொழிபெயர்பு இல்லை. பிராணாயாமம் என்பது ஒருபோதும் சுவாசக்கட்டுப்பாட்டைக்குறிப்பது அல்ல. அது ஜீவாதாரமான சக்தியின் விரிவு என்பதைக் குறிப்பதாகும். பிராண-யாமம் பிராண என்றால் சுவாசத்தில் மறைந்துள்ள ஜீவாதாரமான சக்தியாகும், யாமம் என்றால் எல்லையில்லாத விரிவு அது பிராணக்கட்டுப்பாடு அல்ல. அந்தக் "கட்டுபாடு" என்ற வார்த்தை அழகற்றது, ஏனென்றால் "கடடுப்பாடு" என்ற வார்த்தை ஒரு கட்டுப்படுத்துபவர் என்ற உணர்வைக் கொடுக்கிறது - மனோசக்தி நுழைகிறது. பிராணாயாமம் முற்றிலும் மாறுபட்டது: ஜீவாதாரணமான சக்தியின் விரிவாகும். நீங்கள் சுவாசம் பண்ணுவது என்பது முழுமையினுடைய சுவாசத்துடன் சுவாசிப்பது போல் இருக்க வேண்டும். நீங்கள் சுவாசிப்பது, உங்களுடைய சொந்த தனிப்பட்ட வழியில் சுவாசிப்பது போல அல்லாமல் முழுமையுடன் சுவாசிப்பது போல் இருக்க வேண்டும்.

இதை முயன்று பாருங்கள், சில சமயங்களில் இது நிகழும்: காதலர்கள் இருவர் ஒருவர் மற்றொருவர் பக்கத்தில் கைகளைப் பற்றிக் கொண்டு அமர்ந்திருக்கும்போது அவர்கள் உண்மையில் அன்பில் இருந்தால் அவர்கள் திடீரென இருவரும் ஏககாலத்தில் சுவாசிப்பதான உணர்வுள்ளவராக இருப்பார்கள். அவர்கள் சேர்ந்தார்போல் சுவாசிக்கின்றனர். அவர்கள் தனித்தனியாகச் சுவாசிப்பதில்லை. அந்தப் பெண் சுவாசத்தை உள்ளே இழுக்கும் போது, அந்த ஆணும் சுவாசத்தை உள்ளே இழுக்கின்றான். அந்த ஆண் சுவாசத்தை வெளிவிடும்போது பெண்ணும் சுவாசத்தை வெளியே விடுகிறாள். இதை முயன்று பாருங்கள். சில சமயங்களில் திடீரென உணர்வுள்ள வராகுங்கள். நீங்கள் ஒரு நண்பருடன் அமர்ந்திருக்கும் போது நீங்கள்

சேர்ந்தார்ப்போல் சுவாசிக்கிறீர்கள். பகைவன் அங்கு அமர்ந்திருந்தால் அவனிடமிருந்து உங்களை விடுவித்துக்கொள்ள விரும்புகிறீர்கள். நீங்கள் தனித்தனியாக சுவாசிக்கிறீர்கள்; நீங்கள் ஒருபோதும் இணைவாக சுவாசிப்பதில்லை.

ஒரு காலம் வருமபோது ஒருவர் முழுமையுடன் சேர்ந்தார்போல சுவாசிப்பதாக உணர்வார், ஒருவர் முழுமையின் சுவாசமாகிவிடுவார். ஒருவர் இனி சண்டையிடவோ, போராடவோ செய்வதில்லை, சரணடைகிறார். ஒருவர் முழுமையுடன் இருக்கும் போது - தனித் தனியாக சுவாசிக்க வேண்டிய தேவையில்லை.

ஆழ்ந்த அன்பில் இருக்கும் போது மக்கள் சேர்ந்தார் போல் சுவாசிக்கிறார்கள். வெறுப்பில் ஒருபோதும் இல்லை. எனக்கு ஒரு மனஉணர்வு உள்ளது. நீங்கள் யாரோ ஒருவருடன் விரோதமாக இருக்கிறீர்கள் என்றால், அவர் ஓர் ஆயிரம் மைல் தொலைவில் இருந்தாலும் - அது ஒரு மனஉணர்வு ஏனென்றால் அதற்கு எந்த விஞ்ஞானப்பூர்வமான ஆராய்ச்சியும் இல்லை. ஆனால் எப்பொழுதாவது விஞ்ஞானபூர்வமான ஆராய்ச்சி சாத்தியமாகலாம். ஆனால் எனக்கு ஒரு ஆழமான மனஉணர்வு உள்ளது, நீங்கள் யாரோ ஒருவருடன் விரோதமாக இருக்கும் போது, அவர் அமெரிக்காவில் இருக்கலாம், நீங்கள் இந்தியாவில் இருக்கலாம், நீங்கள் தனித்தனியாக சுவாசிப்பீர்கள், உங்களால் சேர்ந்தார்ப் போல் சுவாசிக்க முடியாது. உங்களுடைய காதலர் சைனாவில் இருக்கலாம், நீங்கள் இங்கே பூனாவில் இருக்கலாம். உங்களிடம் உங்கள் காதலர் எங்கிருக்கிறார், அவருடைய விலாசம் கூட இல்லாமல் இருக்கலாம் - ஆனால் நீங்கள் சேர்ந்தார்ப்போல் சுவாசிப்பீர்கள். இப்படித்தான் இருக்க வேண்டும், நான் அது அப்படித்தான் என்ற வழியில் அறிகிறேன். ஆனால் எந்த விஞ்ஞானப் பூர்வமான பிரமாணமும் இல்லை. அதனால் தான் நான் இது என்னுடைய மன உணர்வு என்று சொல்லுகின்றேன். எப்பொழுதாவது யாரோ ஒருவர் இதை விஞ்ஞானப்பூர்வமாக விஷயமாகக்கூட நிரூபிப்பார்.

ஒரு சில பிரமாணங்கள் உள்ளன. அவை சுட்டிக்காட்டுகின்றன... உதாரணமாக ரஷ்யாவில் ஒருசில பரிசோதனைகள் டெலிபதியைப் பற்றி (telepathy) நடந்து கொண்டிருக்கிறது. இரண்டு மனிதர்கள் தனித்தனியாக தொலை தூரத்தில் நூற்றுக்கணக்கான மைல் தூரத்தில்: ஒரு மனிதன் ஒலிபரப்புவார், மற்றவர் டெலிபதியில் (telepathy)

கிரகிப்பவர். ஒரு குறிப்பிட்ட நேரத்தில், மதியம் பன்னிரெண்டு மணிக்கு, ஒருவர் செய்திகளை அனுப்ப ஆரம்பிப்பார்: அவர் ஒரு முக்கோணத்தின் பிரதியைச் உண்டு பண்ணுவார், அதன் மேல் மனதை ஒருமுகப்படுத்துவதோடு "நான் ஒரு முக்கோணத்தின் பிரதியை உண்டு பண்ணுவார், அதன் மேல் மனதை ஒருமுகப் படுத்துவதோடு "நான் ஒரு முககோணத்தை உண்டு பண்ணியுள்ளேன்" என்று செய்தியை அனுப்புவார். மற்ற மனிதர் கிரகித்து முயற்சி செய்வார். அப்படியே திறந்தவராக, உணர்வுள்ள வராக, என்ன செய்தி வருகிறதென்று தேடிக் கொண்டு தொடர்ந்து இருந்து வருவார். விஞ்ஞானிகள், அவர் முக்கோணத்தைக் கிரகித்தால்பின் அவர்கள் இருவரும் அதே முறையில் சுவாசிக் கிறார்கள், அவர் முக்கோணத்தைத் தவற விட்டு விட்டால் பின் அவர்கள் அதே முறையில் சுவாசிப்பதில்லை என்பதைக் கவனித்துள்ளனர்.

ஆழ்ந்த சேர்ந்தார்ப்போல் சுவாசிப்பதில் ஏதோ ஓர் ஆழ்ந்த பிறருடைய உணர்வுகளைப் புரிந்து கொள்ளும் தன்மை எழுகிறது. நீங்கள் ஒன்றாகி விடுகிறீர்கள் - ஏனென்றால் சுவாசம் வாழ்வதாகும். பின்பு உணர்வுகளை, எண்ணங்களை இடம் மாற்ற முடியும்.

ஒரு துறவியை நீங்கள் போய் சந்திப்பீர்களானால், எப்போதும் அவருடைய சுவாசத்தைக் கவனியுங்கள். நீங்கள் ஒத்த உணர்வுள்ளவராக, அவருடன் ஆழ்ந்த அன்புள்ளவராக உணர்ந்தால், உங்களுடைய சுவாசத்தைக் கவனியுங்கள், நீங்கள் எவ்வளவு அவருடைய அருகாமையில் இருக்கிறீர்களோ திடீரென உங்கள் உணர்வு, உங்கள் சுவாசம் அவருடைய சுவாசிக்கும் முறையுடன் ஒன்றாகச் செல்கிறது என்பதை உணர்கிறீர்கள். உணர்வுடனோ, அல்லது உணர்வில்லாமலோ, அது முக்கியமான விஷயமல்ல; ஆனால் அது நிகழ்கிறது.

இது என்னுடைய கணிப்பாக இருந்து கொண்டிருக்கிறது: யாரோ ஒருவர் வந்து, சுவாசத்தைப்பற்றி ஒன்றுமே தெரியாமல், அவர் என்றுடன் சுவாசிக்க ஆரம்பிக்கிறார், அவர் ஒரு சந்நியாசியாக ஆக உள்ளார் என்பதை நான் அறிவேன், நான் அவரைக் கேட்பேன், அவர் என்னுடன் சுவாசிக்கவில்லையென்பதை நான் உணர்ந்தால் கேட்பதை மறந்து விடுவேன். நான் காத்திருக்க வேண்டும். சில சமயங்களில் நான் முயற்சி செய்ததும் உண்டு, ஒரு பரிசோதனைக்காக நான்

கேட்டதுண்டு. அவர் "இல்லை நான் தயாராக இல்லை" என்று சொன்னார். அவர் தயாராக இல்லையென்பது எனக்குத் தெரியும் - எனது உணர்வு சரியாக இருக்குமா எனச் சோதிப்பதற்காக, அவர் என்னுடன் ஒத்த உணர்வுள்ளவராக இருக்கிறாரா என்பதற்காக. நீங்கள் சேர்ந்தார்ப்போல் சுவாசிப்பீர்கள். அது தானாகவே நடைபெறும், ஏதோ அறியாத விதி செயல்படுகிறது.

பிராணாயாமம் முழுமையுடன் சுவாசிப்பதைக் குறிக்கிறது. அது என்னுடைய மொழி பெயர்பு ஆகும். "சுவாசத்தைக் கட்டுப் படுத்துதல்" இல்லை: முழுமையுடன் சுவாசிப்பது. அது முழுதுமே கட்டுப்படுத்துவதாவது! நீங்கள் கட்டுப்படுத்தினீர்களானால் எப்படி முழுமையுடன் சுவாசிப்பீர்கள்? அதனால்பிராணாயாமத்தை சுவாசிப்பீர்கள்? அதனால் பிராணாயாமத்தை "சுவாசத்தைக் கட்டுப்படுத்துதல்" என்று மொழி பெயர்த்தால் அது ஒரு தகாத (ஒவ்வாத) பெயராகும். அது சரியல்லாததோடு, போதுமானதல்ல அது நிச்சயமாக தவறானதாகும். அப்படியே எதிரானவிஷயமாகும்.

முழுமையுடன் சுவாசிப்பதும், சாசுவதமானதின் சுவாசமாக ஆவதும், முழுமையும் பிராணாயாமமாகும். பின்பு நீங்கள் விரிவடைகிறீர்கள். உங்களுடைய வாழ்வின் சக்தி. மரங்களுடன், மலைகளுடன் வானத்துடன், நட்சத்திரங்களுடன் விரிவடைந்து கொண்டே செல்கிறது. பின் ஒரு நேரம் வரும் நீங்கள் புத்தரான அந்த நாள் .... நீங்கள் முழுவதும் மறைந்து விட்டீர்கள். நீங்கள் இனி சுவாசிப்பது இல்லை. முழுமை உங்களுள் சுவாசிக்கிறது. இப்போது உங்கள் சுவாசமும், முழுமையின் சுவாசமும் ஒருபோதும் வேறாக இல்லை. அவை எப்போதும் சேர்ந்தார்ப்போல் உள்ளன. அது இப்போது "இது என்னுடைய சுவாசம்" என்று சொல்வது பிரயோஜனமில்லாதது (உபயோகமற்றது)

"ஆசனத்தில் தேர்ச்சியடைந்த பின்பு அடுத்தபடியாக சுவாசக்கட்டுப்பாடு - பிராணாயாமம் ஆகும் - சுவாசத்தை உள்ளே இழுத்து உள்ளே நிறுத்துதல், வெளியே விட்டு வெளியே நிறுத்துதல் அல்லது திடீரென நிறுத்துதல் ஆகியவற்றின் மூலமாக அது தேர்ச்சியடையப்படுகிறது.

நீங்கள் சுவாசத்தை உள்ளிழுக்கும்போது, சுவாசம் முழுவதும் உள்ளே சென்று விட்டது என்ற ஒரு வினாடி வரும். ஒரு குறிப்பிட்ட வினாடியில் சுவாசம் நின்றுவிடும். அதே நீங்கள் சுவாசத்தை

வெளிவிடும் போதும் நிகழும். நீங்கள் சுவாசத்தை வெளியே விடுகிறீர்கள். சுவாசம் முழுவதும் வெளியே சென்று விட்ட போது, ஒரு குறிப்பிட்ட வினாடியில் மீண்டும் சுவாசம் நின்று விடுகிறது. அந்த வினாடியில் மீண்டும் சுவாசம் நின்றுவிடுகிறது. அந்த வினாடிகளில் நீங்கள் மரணத்தை எதிர் கொள்கிறீர்கள், மரணத்தை எதிர்கொள்வது கடவுளை எதிர்கொள்வதாகும். மரணத்தை எதிர்கொள்வது கடவுளை எதிர்கொள்வதற்காக - நான் அதைத் திரும்பச் சொல்வது - ஏனென்றால் நீங்கள் மரணமடையும்போது, கடவுள் உங்களுள் வாழ்கிறார். சிலுவையில் அறையப்பட்ட பின்பே அங்கே உயிர்த்தெழுதல். அதனால்தான் பதஞ்சலி சாவது என்ற கலையைக் கற்றுக் கொடுக்கிறார் என்று நான் சொல்லுகிறேன்.

சுவாசிப்பது நின்று விடும் போது, சுவாசிப்பது இல்லாத போது, மரணமடையும்போது எந்த நிலையில் நீங்கள் இருக்கிறீர்களோ அதே நிலையில் இருக்கிறீர்கள். ஒரு வினாடி நீங்கள் மரணத்துடன் இணைக்கமாக இருக்கிறீர்கள் - சுவாசம் நின்றுவிட்டது. தி புக் ஆஃப் தி சீக்ரட்ஸ் (The book of the secrets) விஞ்ஞான வைரவ தந்திரம், முழுவதும் இதனுடன் சம்பந்தப்பட்டது - உறுதியாக, இதனுடன் சம்பந்தப்பட்டது - ஏனென்றால் நீங்கள் அந்த நிற்பதில் நுழைவீர் களானால், அங்கே கதவு உள்ளது.

அது மிகவும் நுண்மையானதும் குறுகலானதும் ஆகும். இயேசு மீண்டும் மீண்டும் "என்னுடைய வழி குறுகலானது - நேரானது, ஆனால் குறுகலானது, மிகவும் குறுகலானது" என்று சொல்கிறார். கபீர், "இருவர் சேர்ந்தாற்போல் கடந்து செல்ல முடியாது, ஒரே ஒருவர்" என்று சொல்கிறார். அது மிகக் குறுகியது. நீங்கள் உள்ளே கூட்டமாக இருந்தால், உங்களால் கடக்க முடியாது. நீங்கள் இரண்டாகப் பிரிந்திருந்தீர்களானால் - இடதும் வலதுமாக - உங்களால் கடந்து செல்லமுடியாது. நீங்கள் ஒன்றாக, இசைவாக, இணக்கமாக ஆகி விட்டால் பின்பு நீங்கள் கடந்து செல்லலாம்.

உறுதியாக, குறுகலான நேரான பாதை; அது ஒரு வளைவான விஷயமல்ல. அது தெய்விகத்தின் கோயிலுக்கு நேராகச் செல்லுகிறது. ஆனால் மிகவும் குறுகலானது. நீங்கள் உங்களுடன் யாரையும் கூட்டிச் செல்ல முடியாது. நீங்கள் உங்கள் அறிவை எடுத்துச் செல்ல முடியாது. உங்களுடைய தியாகங்களை எடுத்துச்செல்ல முடியாது. நீங்கள் உங்களுடைய மனைவியை, குழந்தைகளை எடுத்துச்செல்ல

முடியாது. நீங்கள் யாரையுமே கூட்டிச் செல்லமுடியாது. உண்மையில் நீங்கள் உங்கள் அகங்காரத்தைக்கூட, உங்களைக்கூட எடுத்துச் செல்லமுடியாது. நீங்கள் அதனுள் கடந்து செல்லலாம், ஆனால் உங்களுடைய தூய்மையான இருப்பைத் தவிர எல்லாவற்றையுமே கதவருகில் விட்டுச் செல்ல வேண்டும். ஆமாம் வழி குறுகலானது, நேரானது. ஆனால் குறுகலானது.

சுவாசம் உள்ளே சென்று ஒரு வினாடிக்கு நிற்பதும், சுவாசம் வெளியேசென்று ஒருவினாடி நிற்பதுமான இவைகள் வழியைக் கண்டு கொள்வதற்கான வினாடிகளாகும். இந்த நிற்கும் நேரத்திற்கும், இடைவெளிக்கும் அதிக உண்ர்வுள்ளவராக ஆவதற்கு உங்களைப் பொருத்தமாகச் சரி செய்யுங்கள். இந்த இடைவெளிகளின் மூலம் கடவுள் உங்களுள் மரணம் போல உள்ளே நுழைகிறார்.

யாரோ ஒருவர் என்னிடம், "மேற்கிலே எமன், மரணத்தின் கடவுளுக்கு இணையாக எதுவும் எங்களிடம் இல்லை" என்று கூறினார். அவர் என்னிடம், "ஏன் நீங்கள் மரணத்தை ஒரு கடவுள் என்று அழைக்கிறீர்கள்? மரணம் பகைவனாகும். ஏன் மரணம் ஒரு கடவுள் என்று அழைக்கப்படுகிறது? நீங்கள் மரணத்தை சைத்தான் என்று அழைத்தால் அது சரியானதாகும், ஆனால் ஏன் அதைக் கடவுள் என்று அழைக்கிறீர்கள்? என்று கேட்டார். நான், அதிகம் ஆழ்ந்து யோசனை செய்தபின் தான் அதைக் கடவுள் என்று நாங்கள் அழைக்கிறோம்: ஏனென்றால் மரணம் தான் கடவுளிடம் செல்வதற்கான கதவாகும் என்று சொன்னேன். உண்மையில் மரணம் நீங்கள் அறிந்த வாழ்வை விட ஆழமான்தாகும் - நான் அறிந்த வாழ்வல்ல. உங்களுயை மரணம் உங்களுடைய வாழ்வைவிட ஆழமானதாகும். அந்த மரணத்தின் மூலம் செல்வீர்களானால், நீங்கள் ஒரு வாழ்க்கைக்கு வருவீர்கள் அது உங்களுக்கோ, எனக்கோ, அல்லது யாரோ ஒருவருக்கோ சொந்தமானதல்ல. அது முழுமையினுடைய வாழ்வாகும். மரணம் கடவுளாகும்.

ஒரு முழு உபநிஷதம் உள்ளது, கதோபநிஷத்: முழுக்கதையும், முழு நீதிக்கதையும் ஒரு சிறுவன் மரணத்திடம் வாழ்க்கையின் இரகசியத்தைக் கற்றுக் கொள்வதற்காக சென்றதை பற்றியது. அர்த்தமில்லாததாக தெளிவாக அர்த்தமில்லாததாக உள்ளது. வாழ்க்கையினுடைய இரகசியங்களை கற்றுக் கொள்வதற்கு ஏன் மரணத்திடம் செல்ல வேண்டும்? பார்ப்பதற்கு ஒரு முரண்பாடுபோல்

தோன்றுகிறது, ஆனால் அது உண்மையாகும். நீங்கள் வாழ்வை அறிந்து கொள்ள விரும்பினால் - உண்மையான வாழ்வை - நீங்கள் மரணத்திடம் கேட்க வேண்டும், ஏனென்றால் உங்களுடைய வாழ்வு என்று சொல்லப்படுவது நின்று விடும், அதன்பின் தான் உண்மையான வாழ்வு செயல்பட ஆரம்பாக்கும்.

"ஆசனத்தில் தேர்ச்சியடைந்த பின்பு அடுத்த படியாக பிராணாயாமம், அது மூச்சை நிறுத்துவதன் மூலம் தேர்ச்சியடையப் படுகிறது. ஆகையால் நீங்கள் சுவாசத்தை உள்ளே இழுக்கும்போது அதைக்கொஞ்ச நேரத்திற்கு நிறுத்துங்கள், அதனால் வாயில் உணரப்படுகிறது. நீங்கள் அதை வெளிவிடும்போது, அதை வெளியே கொஞ்ச நேரம் நிறுத்துங்கள். அதனால் நீங்கள் இடைவெளியை மிகச் சுலபமாக உணரலாம்; உங்களுக்கு இன்றும் கொஞ்சம் அதிக நேரம் கிடைக்கிறது..." அல்லது சுவாசத்தை திடீரென நிறுத்துங்கள். சாலையில் நடந்துகொண்டிருக்கும்போது: அதை நிறுத்துங்கள். அப்படியே திடீரென நிறுத்தித் தூக்கிப்போடுங்கள். மரணம் நுழைகிறது. எந்த நேரத்திலும் திடீரென எவ்விடத்திலும், நீங்கள் சுவாசத்தை நிறுத்தலாம். அந்த நிறுத்திய இடத்தில் மரணம் நுழைகிறது.

சுவாசக்கட்டுப்பாட்டின் இடைவெளி மற்றும் தூரம் என்பது நேரம் மற்றும் இடம், நுட்பம், நீடிப்பு ஆகியவற்றின் அடிப்படையில் அமைகின்றன.

நீங்கள் இந்த நிறுத்தல்களை அதிகம் செய்வீர்களானால், இடைவெளிகள் அதிகமாகும் போது வாசல் இன்னும் கொஞ்சம் அகலமாகிறது; நீங்கள் அதை அதிகம் உணர்கிறீர்கள். இதை முயன்று பாருங்கள். உங்கள் வாழ்க்கையின் பகுதியாக்குங்கள். நீங்கள் எப்பொழுதெல்லாம் ஏதோன்றும் செய்யவில்லையோ, சுவாசம் உள்ளே செல்லட்டும்... அதை நிறுத்துங்கள். அங்கே உணர்வுடன் இருங்கள். ஏதோ ஓரிடத்தில் அங்கே கதவு உள்ளது. அது இருளாக உள்ளது; நீங்கள் இருளில் தடவி தேடிப் பார்க்க வேண்டும்... ஆனால் நீங்கள் கண்டு கொள்வீர்கள்.

எப்பொழுதெல்லாம் நீங்கள் சுவாசத்தை நிறுத்துகிறீர்களோ, எண்ணங்கள் உடனடியாக நின்றுவிடும். இதை முயன்று பாருங்கள். திடீரென சுவாசத்தை நிறுத்துங்கள். உடனடியாக அங்கே ஒரு தடங்கல், எண்ணங்கள் நின்று விடும், ஏனெனில் எண்ணங்கள், சுவாசம் இரண்டும் வாழ்க்கைக்குச் சொந்தமானது - இந்த சொல்லப்படுகினற

வாழ்க்கை. மற்றொரு வாழ்க்கையில் தெய்விக வாழ்க்கையில் சுவாசிக்கத் தேவையில்லை. நீங்கள் வாழ்வீர்கள்; அங்கே சுவாசிக்க வேண்டிய தேவையில்லை. எண்ணங்கள் தேவையில்லை. நீங்கள் வாழ்வீர்கள்; எண்ணங்கள் தேவையில்லை. நிங்கள் வாழ்வீர்கள; எண்ணங்கள் தேவையில்லை. எண்ணங்களும் சுவாசமும் ஸ்தூல உலகத்தின் பகுதியாகும். எண்ணங்கள் இல்லை, சுவாசம் இல்லை என்பது சாசுவாதமான உலகத்தின் பகுதியாகும்.

சுவாசக்கட்டுப்பாட்டின் நான்காம் நிலை என்பது உள்முகமானது. மற்ற மூன்று நிலைகளையும் கடந்தது.

பதஞ்சலி இந்த மூன்றை - உள்ளே நிறுத்துதல், வெளியே நிறுத்துதல், திடீரென நிறுத்துல் என்கிறார். நான்காம் நிலை ஒன்றுள்ளது. அது உள்முகமானது. அந்த நான்காவது புத்தரால் அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. அவர் அதை "அணாபான சத யோகா" (anapanasata yoga) என்று அழைக்கிறார். அவர், "எவ்விடத்திலும் நிறுத்துவதற்கு முயல வேண்டாம். அப்படியே சுவாசத்தினுடைய முழு வேலைச் சிரமத்தையும் கவனியுங்கள்" என்று சொல்கிறார். சுவாசம் உள்ளே வருகிறது - நீங்கள் கவனியுங்கள். ஒரு விஷயத்தைக் கூட வற விடாதீர்கள். சுவாசம் உள்ளே வருகிறது - நீங்கள் கவனித்துக் கொண்டே இருக்கிறீர்கள். பின் அங்கே ஒரு நிறுத்துதல், தானாகவே நிற்கிறது, சுவாசம் உங்களுள் நுழைகின்றபோது நிற்பதைக் கவனியுங்கள். எதுவும் செய்யாதீர்கள்; ஒரு கவனிப்பவராக மட்டும். பின் சுவாசம் வெளிப்பயணத்திற்குச் செல்ல ஆரம்பிக்கும் போது - கவனித்துக் கொண்டே இருங்கள். சுவாசம் முழுதும் வெளிவந்து போது, நிறுத்தப்படுகிறது. அதைக்கூட கவனியுங்கள். பின் சுவாசம் உள்ளே வந்து கொண்டே இருக்கிறது, வெளியே செல்கிறது, உள்ளே வருகிறது, வெளியே செல்கிறது - நீங்கள் அப்படியே கவனித்துக் கொண்டிருங்கள். இது தான் நான்காவதாகும். கவனிப்பதனால் நீங்கள் சுவாசத்திலிருந்து தனியாகி விடுகிறீர்கள்.

சுவாசத்திலிருந்து நீங்கள் தனித்திருக்கும் போது எண்ணங்களி லிருந்து நீங்கள் தனித்திருக்கிறீர்கள். உண்மையில் சுவாசம் உடலின் உள்ளம், எண்ணங்கள் மனதினுள்ளும் உள்ள இணையான வேலைக் கிரமமாகும். எண்ணங்கள் மனதினுள் செல்கின்றன. சுவாசம் உடலினுள் செல்கிறது. அவைகள் இணையான சக்திகள், ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள் ஆகும். பதஞ்சலி கூட அதைக் குறிப்பிடுகிறார்,

இருந்தாலும் அவர் நான்காவதற்கு முக்கியத்துவம் கொடுக்கவில்லை. அவர் அதைக் குறிப்பிடுகிறார், ஆனால் புத்தர் தன்னுடைய முழுக்கவனத்தையும் நான் காவதன் மேல் முழுதுமாகக் குவிக்கிறார், அவர் ஒரு போதும் அந்த மூன்றைப் பற்றி பேசுவதில்லை. நான்காவது நான் பௌத்தர்களின் முழு தியானமாகும்.

"பிராணாயாமத்தின் நான்காம் நிலை - அது சாட்சியாய் இருப்பது - அது உள்முகமானது மற்ற மூன்று நிலைகளையும் கடந்தது" ஆனால் பதஞ்சலி உண்மையில் மிகவும் விஞ்ஞானப் பூர்வமானவர். அவர் ஒருபோதும் நான்காவதை உபயோகிப்பதில்லை, ஆனால் அவா அது மூன்றையும் கடந்தது என்று கூறுகிறார். புத்தருக்கு இருந்தது போல ஓர் அழகான சிஷ்யர்களின் கூட்டம் பதஞ்சலிக்கு இல்லாதிருந்திருக்க வேண்டும். பதஞ்சலி அதிக உடல் - சார்ந்த மக்களுடன் செயல் பட்டிருக்க வேண்டும். புத்தர் அதிக மனம் - சார்ந்த மக்களுடன் செயல்பட்டிருக்க வேண்டும். அவர் (பதஞ்சலி) நான்காவது நிலை மற்ற மூன்று நிலைகளையும் கடந்தது என்று சொல்கிறார், ஆனால் அவரே அதை உபயோகிக்கவில்லை - அவர் யோகத்தைப் பற்றி எவை யெல்லாம் சொல்ல முடியுமோ அவையெல்லாம் சொல்லிக்கொண்டே இருக்கிறார். அதனால் தான் நான் அவர் தி ஆல்ஃபா அண்டு தி ஒமேகா (The Alpha and the Omega) ஆரம்பமும் முடிவும் ஆவார் என்று சொல்லிக் கொண்டிருக்கிறேன். அவர் ஒரு விஷயத்தைக் கூட விட்டு விடவில்லை. பதஞ்சலியினுடைய யோக சூத்திரங்களை இதற்கு மேல் சீர்திருத்த முடியாது.

உலகில் இரண்டு மனிதர்கள் மட்டும் முழு விஞ்ஞானத்தையும் தனியாக உருவாக்கியுள்ளார்கள். மேற்கிலே அரிஸ்டாட்டில் (Aristottle) தர்க்க விஞ்ஞானத்தை உருவாக்கினார் - தனியாக, யாருடைய ஒத்துழைப்பும் இல்லாமல், இந்த இரண்டாயிரம் வருடங்களில் எந்த சீர்திருத்தமும் செய்யபடவில்லை; தொடர்ந்து இருந்து வருகிறது. மற்றொருவர் பதஞ்சலி, முழு யோக விஞ்ஞானத்தையும் உருவாக்கினார். அது பல தடவை, ஒரு பத்து லட்சம் தடவை தர்க்க சாஸ்திரத்தை விட மிக சிறந்தது - தனியாக. அதைச் சீர்திருத்தம் செய்ய முடியாது, எந்த விஷயமும், எந்த நாளிலும் எவ்வாறு சீர்திருத்தம் செய்ய முடியும் என்பதை என்னால் காண முடியவில்லை. முழுவிஞ்ஞானமும அங்கே உளளது. நிறைவானது. முழுதும் முழுமையானது.

○

சில சமயங்களில் உங்களுடைய சொற்பொழிவில் என்னுடைய கண்களைத் திறந்து வைத்துக் கொண்டிருப்பதற்கு முடிவதில்லை அல்லது கவனிக்க முடிவதில்லை. எங்கேயோ விழுந்து விடுவது போலவும் அதிர்ச்சியோடு திரும்பி வருவது போலவும் உள்ளது. எங்கிருந்தேன் என்ற ஞாபகம் இல்லை. நான் ஆழத்திற்குச் செல்கிறேனா அல்லது உறங்குகிறேனா?

மனம் மிக நுண்ணிய மின்சார அலைகளின் மூலமாகச் செயல்படுகிறது. அதன் அமைப்பையும் வேலை செய்யும் வகையையும் புரிந்து கொள்ளப்பட வேண்டும். இப்போது ஆராய்ச்சியாளர்கள் மனம் நான்கு நிலைகளில் செயல்படுகிறது என்று சொல்கிறார்கள். சாதாரணமான, விழிப்பான மனம் ஒரு வினாடிக்கு பதினெட்டிலிருந்து முப்பது வட்டங்கள் செயல்படுகிறது - இது மனதினுடைய பீட்டா நிலையாகும் (beta state). இப்போது நீங்கள் அந்த நிலையில் இருக்கிறீர்கள், விழித்திருக்கும் போதும் உங்களுடைய விஷயங்களைச் செய்து கொண்டிருக்கும் போதும்.

அதைவிட ஆழமானது 'ஆல்ஃபா ரிதம் (alpha rhythm) சில சமயங்களில் நீங்கள் செயலற்று இருந்தீர்களானால், சாத்வீகமாக - அப்படியே தளர்வாக, கடற்கரையில், எதுவும் செய்யாமல், இன்னிசையைக் கவனித்துக்கொண்டு அல்லது ஆழ்ந்த பிரார்த்தனையோடு, அல்லது தியானத்தில் - பின்பு மனதினுடைய செயல்புரிவது குறைகிறது: ஒரு வினாடிக்கு பதினெட்டிலிருந்து முப்பது வட்டங்கள் இருந்தது. ஏறக்குறைய ஒரு வினாடிக்கு பதினான்கிலிருந்து பதினெட்டு வட்டங்களாக ஆகிறது. நீங்கள் உணர்வுள்ளராக இருக்கிறீர்கள், ஆனால் அதிக விழிப்பாக இல்லை. நீங்கள் விழித்திருக்கிறீர்கள். ஆனால் சாத்வீகமாக (எதிர்க்காமல்) ஒரு குறிப்பிட்ட வகையான ஆழ்ந்த தளர்வு உங்களைச் சூழ்ந்து கொள்கிறது.

எல்லா தியானம் பண்ணுபவர்களும் இந்த இரண்டாவதில் நுழைகிறார்கள், ஆல்ஃபா ரிதம் (alpha rhythm) அவர்கள் தியானம் பண்ணும்போது அல்லது பிரார்த்தனை பண்ணும்போது. இன்னிசையைக் கவனிக்கும் போது கூட அது நடைபெறும். அப்படியே மரங்களைப் பரந்த பசுமையைப் பார்த்துக் கொண்டிருக்கும் போது அது நடைபெறும். குறிப்பாக எதுவும் செய்யாமல், அமைதியாக உட்கார்ந்திருக்கும் போதும் அது நிகழும். ஒருமுறை அதனுடைய நுணுக்கத்தை அறிந்து கொண்டீர்களானால், நீங்கள் மனதினுடைய செயல்களின் வேகத்தைக் குறைக்கலாம். பின்பு எண்ணங்கள் வேகமாகச் செல்வதில்லை. அவைகள் அங்கிருக்கின்றன, அவை குறைந்த வேகத்தில் நகருகின்றன. வானத்தில் மேகங்கள் நகருவது போல - உண்மையில் எங்கேயோ செல்லவில்லை, அப்படியே மிதந்து கொண்டிருக்கின்றன. இந்த இரண்டாவது ஆல்ஃபா நிலை (alpha state) மிகவும் மதிப்பு வாய்ந்தது.

இரண்டாவதற்குக் கீழே மூன்றாவது நிலை ஒன்றுள்ளது, செயல்பாடு இன்னும் குறைந்து விடுகிறது. இந்த நிலை 'தீட்டா' (theta) என்று அழைக்கப்படுகிறது. ஒரு வினாடிக்கு எட்டிலிருந்து பதினான்கு வடக்கில் இரவில் நீங்கள் தூங்கும் போது, கண்கள் சொருகிக் கொண்டிருக்கும் போது, இந்த நிலை மூலம்தான் கடந்து செல்கிறீர்கள். நீங்கள் மது அருந்தும் போது அந்த கண்ணைச் சொருகுதல் (மயக்கறி பயன்) மூலம் கடந்து செல்கிறீர்கள். ஒரு குடிகாரன் நடப்பதைக் கவனியுங்கள். அவன் மூன்றாவது நிலையில் இருக்கிறான். அவன் நடக்கிறான். ஆனால் உணர்வுடன இல்லை. அவன் எங்கு செல்கிறான் என்பது அவனுக்குத் தெரியாது. அவன் என்ன செய்கிறான்... உடல் ஒரு ரோபாட் போல வேலை செய்கிறது. மனதினுடைய செயல் தூக்கத்திற்குள் நுழைவது போல மெதுவாக நடைபெறுகிறது.

ஆழ்ந்த தியானத்திலும்கூட இது நிகழும். நீங்கள் ஆல்ஃபா (alpha) விலிருந்து தீட்டாவிற்கு (theta) இறங்கி விடுவீர்கள். ஆனால் அது ஆழ்ந்த நிலைகளில் மட்டுமே நிகழும். சாதாரணமாக, தியானம் பண்ணுபவர்கள் அதைத் தொடுவதில்லை. நீங்கள் மூன்றாவது நிலையைத் தொட ஆரம்பித்தீர்களானால் மிகவும் பேரானந்தமாக உணர்வீர்கள்.

எல்லா மது அருந்துபவர்களும் இந்தப் பேரானந்த நிலையை அடைவதற்கு முயலுகின்றனர், ஆனால் அதைத் தவறவிட்டு விடுகின்றனர்; ஏனென்றால் நீங்கள் இந்த மூன்றாவது நிலையினுள் முழுவதும் விழிப்புடன் - செயலற்று, ஆனால் விழிப்புடன் செல்வீர்களானால் மட்டுமே பேரானந்த நிலையை அடைய முடியும். ஒரு மது அருந்துபவன் அதை அடைகிறான். ஆனால் அவன் பிரக்ஞையற்ற நிலையில் இருக்கிறான். அடையும் அந்த நேரத்தில் பிரக்ஞையற்றிருக்கிறான். அந்த நிலை உள்ளது. ஆனால் அதை அனுபவிக்க முடியாது, அவனால் அதில் மகிழ்வுடன் இருக்க முடியாது. அதன்மூலம் அவன் வளர்ச்சியடைய முடியாது. உலகம் முழுவதிலும் எல்லாவிதமான போதைப் பொருட்களும் கவனத்தைக் கவர்கிறதென்றால் தீட்டாவினால் (theta) ஏற்படும் கவனத்தைக் கவருதலே. ஆனால் நீங்கள் இரசாயனப் பொருள்கள் மூலம் அதை அடைய முயன்றால் ஒரு தவறான முறையைத் தேர்ந்தெடுத்துள்ளீர்கள். ஒருவர் மனதினுடைய செயல்களின் வேகத்தைக் குறைப்பதன் மூலமும், முழுதும் விழிப்புடன் இருப்பதன் மூலமும் அதை அடைய வேண்டும்.

(பின்பு) நான்காவது நிலை, அது 'டெல்டா' (Delta) என்று அழைக்கப்படுகிறது. செயல்கள் இன்னும் மெதுவாக நடைபெறுகின்றன. ஒரு வினாடிக்கு பூஜ்யத்திலிருந்து நான்கு வட்டம். மனம் ஏறக்குறைய வேலை செய்யாதது போல. சில வினாடிகளில் அது பூஜ்ய நிலையைத் தொடும்போது, முழுதுமாக அசைவற்று இருக்கிறது. அங்குதான் நீங்கள் ஆழ்ந்த தூக்கத்தில் செல்லுகிறீர்கள், கனவுகள்கூட நின்று விடுகின்றன. இதைத்தான் இந்துக்கள், பதஞ்சலி, பௌத்தர்கள் சமாதி என்றழைக்கின்றனர். உண்மையில் பதஞ்சலி உணர்வுள்ள (விழிப்புள்ள) ஆழ்ந்த தூக்கம் என்று வரையறுகிறார் - ஒரே ஒரு நிபந்தனை: அங்கே உணர்வுடன் இருக்க வேண்டும்.

மேற்கிலே இந்த நான்கு நிலைகள் பற்றியும் சமீபத்தில் ஆராய்ச்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன. அவர்கள் நான்காவது நிலையில் உணர்வுடன் இருப்பது சாத்தியமில்லை என்று கருதுகின்றனர், ஏனெனில் ஆழ்ந்த தூக்கத்தில் உணர்வுடன் இருப்பது என்பது முரண்பட்டது என்று அவர்கள் கருதுகின்றனர். இது முடியாது. ஒரு மனிதர், மிகவும் விதிவிலக்கான யோகி இதை இப்போது விஞ்ஞானப் பூர்வமாக நிரூபித்துள்ளார். அவருடைய பெயர்

சுவாமிராம். 1970-ஆம் வருடத்தில் ஓர் அமெரிக்க ஆராய்ச்சி சாலையில், மென்னிங்கர் இன்ஸ்டிடியூட் (Menninger Institute) அவர் ஆராய்ச்சியாளர்களிடம் தன்னிச்சையுடன் மனதின் நான்காவது நிலைக்குச் செல்வதாகக் கூறினார். அவர்கள், "அது முடியாதது, ஏனென்றால் நான்காவது நீங்கள் உறங்கும் போதுதான் வரும், அங்கே மனோசக்தி செயல்பட முடியாது. நீங்கள் உணர்வுடன் இருக்க மாட்டீர்கள்" என்று கூறினர். ஆனால், சுவாமி, "நான் அதைச் செய்வேன்" என்றார். ஆராய்ச்சியாளர்கள் நம்புவதற்கு மனமில்லாமல், அவநம்பிக்கையுடன் இருந்தனர், ஆனாலும் முயன்றனர்.

சுவாமி தியானம் பண்ணுவதற்கு ஆரம்பித்தார். விரைவில் ஒருசில நிமிஷங்களுக்குள் அவர் ஏறக்குறைய உறங்க ஆரம்பித்தார். இஇஜி (EEG) அறிக்கை, அவருடைய மன அலைகளின் பிரதியை எடுத்துக் கொண்டிருப்பது, அவர் நான்காம் நிலையில் இருப்பதைக் காட்டியது, மனதினுடைய செயல்கள் ஏறக்குறைய நின்றுவிட்டது. இருந்தபோதிலும் ஆராய்ச்சியாளர்கள் நம்பிக்கை கொள்ளவில்லை. ஏனென்றால் அவர் உறங்கியிருக்கலாம் என்பது விஷயமல்ல; அவர் உணர்வுடன் இருக்கிறாரா என்பதுதான் விஷயம். பின் சுவாமி அவருடைய தியானத்திலிருந்து வெளிவந்தார். அவர் அவரைச் சுற்றி சென்று கொண்டிருந்த உரையாடல்கள் எல்லாவற்றையும் தெரிவித்தார் - முழுதும் விழிப்புடன் இருந்தவர்களை விட நன்றாகக் கூறினார்.

முதல் முறையாக ஒரு விஞ்ஞான ஆய்வுக்கூடத்தில் கிருஷ்ணருடைய பிரபலமான வாக்கியம் நிரூபிக்கப்பட்டது. கிருஷ்ணர் கீதையில், "யா நிஷா ஸர்வ பூதாயாம் தஸ்யாம் ஜாக்ரதி ஸம்யாமி" - எது எல்லாவற்றிற்கும் உறக்கமோ, அங்கும்கூட யோகியானவன் உணர்வுடன் இருக்கிறான்" என்று கூறுகிறார். முதன் முறையாக அது ஒரு விஞ்ஞான தத்துவ விளக்கமாக (கோட்பாடாக) நிரூபிக்கப்பட்டது. உறக்கத்துடனும் உணர்வாக இருப்பது முடியும், ஏனென்றால் உறக்கம் உடலில் நிகழ்கிறது, உறக்கம் மனதில் நிகழ்கிறது, ஆனால் சாட்சியாக இருக்கும் ஆன்மா ஒருபோதும் உறங்குவதில்லை. ஒருமுறை நீங்கள் உடல், மன இயக்கத்தோடு ஒன்றாகவில்லை என்றால், ஒருமுறை உடலில் மனதில் என்ன சென்று கொண்டிருக்கிறது என்பதைக் கவனிப்பதற்கு நீங்கள் திறமையடைந்தால் உங்களால் உறங்க முடியாது: உடல் உறங்கச்

செல்லும், நீங்கள் விழிப்புடன் தொடர்ந்து இருந்து வருவீர்கள். உங்களுள் ஆழத்தில் ஒரு மையம் முழுதுமாக தொடர்ந்து உணர்வுடன் இருந்து விடும்.

இப்போது கேள்வி: "சில சமயங்களில் உங்களுடைய பிரசங்கத்தில், என்னுடைய கண்களைத் திறந்து வைப்பதற்கு முடியவில்லை..." அவற்றைத் திறந்து வைப்பதற்கு முயல வேண்டாம். நீங்கள் ஓர் ஆழ்ந்த ரிதத்தில் (இசைவில்) செல்வீர்களானால் அதை அனுமதியுங்கள். ஏனென்றால் என்னை நீங்கள் கவனிக்கும் போது, நீங்கள் மனதை ஒருமைப்படுத்த முயன்றால், நீங்கள் முதல் நிலையில் பீட்டாவில் (beta) தொடர்ந்து இருந்து வருவீர்கள். ஏனென்றால் மனம் செயல்பட வேண்டும். தொந்தரவு கொள்ளாதீர்கள். அது உங்களுக்கு நிகழப் போகிறது என்பதை உணர்வதற்கு நான் என்ன சொல்லுகிறேன் என்பது முக்கியமானல்ல. உண்மையில் எவையாயினும் நான் சொல்வது நீங்கள் உங்களுடைய மனதில் உள்நிலையின் ஆழம் செல்வதற்காக தயார் பண்ணுவதற்கன்றி வேறில்லை. ஆகையால் நீங்கள் எதையாவது தவற விடுவீர்களானால் அதற்காகத் தொந்தரவு கொள்ள வேண்டாம் - நீங்கள் பின்பு (டேப்) ஒலிநாடாவைக் கேட்டுக் கொள்ளலாம். நீங்கள் அதைக் கேட்கவில்லையாயினும் பரவாயில்லை.

கண்கள் மூடிக்கொள்கிறதென்றால், அவற்றை அனுமதியுங்கள். ஒரு விஷயம் ஞாபகத்தில் கொள்ள வேண்டியது என்னவென்றால்: விழிப்புடன் இருங்கள். கண்களை மூடிக்கொள்வதற்கு அனுமதியுங்கள்... உண்மையில் மிகவும் விழிப்படையுங்கள். ஏனென்றால் ஆழமாக மனதினுள் செல்வீர்களானால், அதிக விழிப்பு நிலை தேவையாக உள்ளது. நீங்கள் உணர்வு நிலையில் ஆழமாக மூழ்குகிறீர்கள். நீங்கள் உறங்கலாம்: பின் நீங்கள் சொற்பொழிவைத் தவற விடுகிறீர்கள். உன் நிலையையும்கூட தவற விட்டு விடுகிறீர்கள். பின் நீங்கள் இங்கிருப்பது பயனற்றது. "சில சமயங்களில் உங்களுடைய பிரசங்கத்தில் என்னுடைய கண்களைத் திறந்திருக்க முடியவில்லை..." தேவையில்லை. கண்களை மூடிக் கொள்ளுங்கள். உள்ளே விழிப்புடன் தொடர்ந்து இருந்து வாருங்கள் - விழிப்பாயிருங்கள்.

"....எங்கேயோ விழுந்து விடுவது போலவும் அதிர்ச்சியோடு திரும்பி வருவது போலவும் உள்ளது." அந்த எங்கேயோ, மூன்றாவது

நிலையாகும். தீட்டா (theta) இரண்டாவது ஆல்ஃபாவிற்கு (Alpha) சென்றீர்களானால், நீங்கள் எங்கு சென்றீர்கள் என்பதை அறிவீர்கள், அங்கே அதிர்ச்சி என்பது இல்லை. முதலில் இருந்து இரண்டாவதற்கு ஒருவர் சுமூகமாகச் சென்று வர முடியும், மிகவும் சுமூகமாக பீட்டாவிலிருந்து (beta) ஆல்ஃபாவிற்கு (alpha) ஏனென்றால் வித்தியாசம் செயல்படுவதிலும் செயலற்று இருப்பதிலும்தான் - நீங்கள் இரண்டாவதிலிருந்து மூன்றாவதற்குச் செல்வீர்களானால் பின்பு வித்தியாசம் மிகவும் ஆழமானது. இப்போது நீங்கள் சாதாரணமாக நகர்கிறீர்கள் விழிப்பு நிலையிலிருந்து உறக்க நிலைக்கு. பின்பு நீங்கள் ஓர் அதிர்ச்சியுடன் திரும்ப வருகிறீர்கள், பிரக்ஞை இழக்கப்பட்டுவிட்டது - அதனால்தான் நீங்கள் எங்கிருந்தீர்கள் என்பது உங்களுக்குத் தெரியவில்லை.

"நான் எங்கிருந்தேன் என்பது ஞாபகத்தில் இல்லை." நீங்கள் அப்படியே உறங்கினீர்களானால் உங்களுக்கு நினைவு இருந்திருக்கும். நீங்கள் கனவு கண்டீர்களானால் உங்களுக்கு கனவினுடைய நினைவில் இருக்கும். நீங்கள் கனவு காணவில்லையென்றால், உறங்கி விட்டீர்கள், கனவு ஒன்றும் இல்லை என்ற நினைவு உங்களுக்கு இருக்கும். ஆனால் அது உறக்கமாக இருந்தால் உங்களுக்கு ஞாபகத்தில் இருக்கும்.

அதனால்தான் காலையில் இரவில் நிறைய கனவுகள் இருந்தன அல்லது சில நாட்களில் நீங்கள், "நான் கனவுகள் இல்லாமல் மிக ஆழ்ந்து தூங்கினேன்" என்று சொல்கிறர்கள். இவை இரண்டும் நினைவுகள் - ஒன்று உடன்பாடானது, மற்றொன்று எதிர்மறையானது. கனவுகள் இருந்தால் அது உடன்பாடான நினைவாகும் - ஏதோ ஒன்று நிகழ்கிறது, குறிப்பிட்ட செயல்கள் போய்க் கொண்டிருக்கின்றன. கனவுகள் இல்லையென்றால் உங்களுக்கு எதுவுமே இல்லையென்ற அமைதியான நினைவு: உண்மையில் ஆழ்ந்த தூக்கம், ஒரு அலைகூட இல்லாத ஆழ்ந்த தூக்கம். ஆனால், "நான் மிகவும் பேரானந்தமாக இருந்தேன்" என்பது உங்களுக்கு ஞாபகத்தில் இருக்கும்.

ஆனால் நீங்கள் உறங்காமல் தியான நிலைக்குச் சென்றீர்களானால் - அவை ஒரே மாதிரியானவை, ஏறக்குறைய ஒரே மாதிரியனவை - உங்களால் எதுவுமே ஞாபகத்தில் வைத்திருக்க முடியாது. ஏனென்றால் நீங்கள் தியான நிலையில் இருப்பீர்களானால்,

தீட்டா (theta) அல்லது சில நேரங்களில் நீங்கள் நான்காவதற்குக் கூடச்செல்லலாம் - டெல்டா (delta) பின் அங்கே எந்த ஞாபகமும் கிடையவே கிடையாது. ஏனென்றால் நீங்கள் மனதின் பகுதியல்லாத எங்கோ செல்கிறீர்கள். உங்களுடைய ஞாபகம் செயல்படாத எங்கோ செல்கிறீர்கள். பாதையை விட்டு எங்கோ செல்கிறீர்கள். நீங்கள் ராஜபாட்டையில் இல்லை. உங்கள் உணர்வற்ற இருப்புத்தன்மையின் நாட்டிற்குள் நுழைகிறீர்கள்: அது ஏற்பாடுகள் இல்லாத, திட்டமற்ற, எண்ணங்கள் செயல்படாதது - எந்தக் கருத்தும் அதற்கு உபயோகிக்க முடியாது. பின் நீங்கள் காணாமல் போய்விட்டதைப் போல ஓர் அதிர்ச்சியுடன் மீண்டும் ராஜபாட்டைக்கு வருகிறீர்கள். அங்கே மைல் கல் இருக்கிறது, எல்லாம் சுத்தமாக இருக்கிறது. தேசப்படம் இருக்கிறது - நீங்கள் எங்கிருக்கிறீர்கள் என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

நீங்கள் உறங்கவில்லை, இல்லையென்றால் நீங்கள் அறிந்திருப்பீர்கள், ஏனென்றால் நீங்கள் உறக்கத்தை அறிந்துள்ளீர்கள். பல ஜென்மங்களில் நீங்கள் உறங்கியிருக்கிறீர்கள்; நீங்கள் முழுமையாக அந்த நிகழ்வுடன் பழகி உள்ளீர்கள். நீங்கள் அறுபது வருடங்கள் வாழந்தீர்களானால், இருபது வருடங்கள் உறக்கத்தில் கடந்துள்ளன. அது ஒரு சாதாரண நிகழ்வல்ல. அறுபது வருட வாழ்க்கையில் இருபது வருடங்கள் உறக்கத்தில் கடந்துளளன. ஒவ்வொரு நாளும் மூன்றில் ஒரு பகுதியான உங்களது நேரம் உறக்க நேரமாகும். நீங்கள் அதை அறிந்திருக்கிறீர்கள். இது ஒரு ஜென்மத்திற்கு மட்டுமல்ல, பல லட்சக்கணக்கான ஜென்மத்தில் (பிறவிகளில்) உறங்கிக் கொண்டிருந்திருக்கிறர்கள். ஒவ்வொரு ஜென்மத்திலும் மூன்றில் ஒரு பகுதி. உண்மையில் வேறு எந்தச் செயலும் இவ்வளவு அதிக நேரத்தை எடுக்கவில்லை. நீங்கள் எட்டு மணி நேரம் அன்பு செலுத்தவோ, அல்லது எட்டு மணி நேரம் சாப்பிடவோ, அல்லது எட்டு மணி நேரம் தியானம் பண்ணவோ எடுத்துக் கொள்வதில்லை. உறக்கம் அதிக முக்கியத்துவம் வாய்ந்த விஷயமாகும். எப்படி உங்களால் அதைப்பற்றிய உணர்வில்லாமல் இருக்க முடியும்? தெளிவில்லாமல், உணர்வுடன் இருக்கலாம். ஆனால் நீங்கள் உணர்வுடன் இருக்கிறீர்கள்: நினைவு செயல்படுகிறது.

ஆனால் நீங்கள் பாதையைவிட்டுச் செல்கிறீர்கள் ஒருபோதுமே செல்லாத இடத்திற்கு. அதனால்தான் நீங்கள் ஓர் அதிர்ச்சியுடன் வருகிறீர்கள். உங்களுடைய இருப்புத்தன்மையை (being) ஏதோ ஒன்று

தெரியாதது தொடுவதால் ஓர் அதிர்ச்சியுடன் வருகிறீர்கள். அதனால்தான் "நான் ஆழ்ந்து செல்கிறேனோ அல்லது உறங்குகிறேனா" என்பதை உங்களால் முடிவு செய்ய முடியவில்லை. சந்தோஷமடையுங்கள். உங்களால் முடிவு செய்ய முடிந்தால், அது உறக்கமாகும்; உங்களால் கண்டுகொள்ள முடியும், அது உறக்கமாகும். கண்டுகொள்ள முடியவில்லை என்றால் மேலான ஒன்றிலிருந்து வந்த ஏதோ ஒன்று உங்களை ஊடுருவிச் செல்கிறது. நீங்கள் மேலான ஒன்றினுள் ஊடுருவிச் செல்கிறீர்கள். சந்தோஷமடையுங்கள். அதில் மகிழ்ச்சியடையுங்கள். அதை அனுமதியுங்கள். ஒருநாள் அது முடியும். நீங்கள் மீண்டும், மீண்டும் அறியாதவற்றில் உள்ளே போகும்போது பின்பு நீங்கள் அந்த எல்லையுடன் பழகியவராவீர்கள். பின்பு பொதுவான வரைபடம் இல்லை. ஆனால் உங்களுடைய சொந்த தனிப்பட்ட அதைப்பற்றிய வரைபடம் இருக்கும். நீங்கள் எங்கு செல்கிறீர்கள் என்பது உங்களுக்குத் தெரியும்.

ஆகையால் ஒரு விஷயம் செய்ய வேண்டியது என்னவென்றால்: நீங்கள் கண்களை மூடும்போது அதிக விழிப்புள்ளவராகுங்கள், ஏனென்றால் அதிக விழிப்புணர்வு தேவை உள்ளது. ஆழமான இருளில் அதிக வெளிச்சம் தேவைப்படுகிறது. விழிப்புள்ள வராகுங்கள், எங்கேயோ செல்ல ஆரம்பித்தீர்களானால் - தெரியாததற்கு விழிப்புணர்வுடன் இருப்பதற்கு முயலுங்கள். விரைவில் ஒருவர் அதனுடைய லாவகத்தை அறிந்து கொள்வார். பின்பு ஒவ்வோர் இரவும் நீங்கள் உறங்கும்போது, மீண்டும் அதை முயற்சி செய்யுங்கள் - அதற்கு பயிற்சி அளியுங்கள். நீங்கள் உறங்குவதற்கு ஆரம்பிக்கும் போது, உள்ளே தொடர்ந்து விழிப்புடன் இருங்கள், என்ன நடக்கிறது என்பதைப் பார்த்துக் கொண்டே யிருங்கள். ஒருநாள் நீங்கள் பார்ப்பீர்கள்: தூக்கம் வருகிறது, உறக்கம் நுழைந்து விட்டது, விழிப்பு நிலை இன்னும் அங்கு இருந்து கொண்டிருக்கிறது. அந்த நாள்தான் எந்த ஒரு வாழ்க்கைக்கும் மிகவும் அழகிய நாளாகும். நீங்கள் தொடர்ந்து விழிப்புடன் இருந்து உறக்கத்தினுள் செல்லுவீர்களானால் நான்காவது நிலையான டெல்டாவிற்கு (delta) சென்றுள்ளீர்கள். அதுதான் உங்களுடைய இருப்புத்தன்மையின் (being) ஆழமான மையமாகும்.

நிச்சயமாக ஒருவர் அதைச் சம்பாதிக்க வேண்டும், ஒருவர் அதைக் கற்றுக்கொள்ள வேண்டும், ஒருவர் அதில் திறமையுள்ள

வராக வேண்டும், சாதாரணமாக அது நிகழாது. அது மனதின் சாதாரண நிலையல்ல. அது மனதின் அசாதாரணமான நிலையாகும். அதனால்தான் கிருஷ்ணர் ஐயாயிரம் வருடங்களுக்கு முன்பே அதைப் பிரகடனம் செய்துள்ளார். ஐயாயிரம் வருடங்களாக அதற்கு எந்த விஞ்ஞானப்பூர்வமான பிரமாணம் எதுவும் இல்லை. அது தத்துவக் கோட்பாடாக இருந்து வந்திருக்கிறது: "யா நிஷா ஸர்வ பூதாயாம் தஸ்யா ஜாக்ரதி ஸம்யாமி". ஐயாயிரம் வருடங்களுக்கு பின் இப்போது ஒருசில விஞ்ஞானப் பிரமாணங்கள் எழுந்து கொண்டிருக்கின்றன. நீங்களும் அதனுள் செல்லலாம், அது உங்களது சொந்தமான புரிந்து கொள்ளும் விஞ்ஞானப்பூர்வமான பிரமாணமாகும்போது, அது ஒரு வெளிப்படுத்துதலாக இருக்கும்.



**நீங்கள் பதஞ்சலியினுடைய யோகம் ஒரு முழுமையான ஒழுங்கு முறையாகும் என்று கூறினீர்கள். இருந்தபோதிலும் அவர் எங்குமே முத்தம் கொடுக்கும் யோகத்தைப் பற்றி பேசியதாகத் தெரியவில்லை. விளக்குவீர்களா?**

அதற்கு பதஞ்சலி ஓர் அமெரிக்கராகப் பிறந்திருக்க வேண்டும். அதன்பின்தான் அவர் முத்தம் கொடுக்கும் யோகத்தைப்பற்றி எழுதுவார். அமெரிக்காவில் மட்டும்தான் இது மாதிரி முட்டாள்தனமான விஷயங்கள் உள்ளன. எங்குமே கிடையாது; காமயோகம், முத்தம் கொடுக்கும் யோகம், ஏதாவது யோகம் - சமைப்பது. ஆனால் நீங்கள் கொஞ்சம் காத்திருக்க வேண்டும் - சில முட்டாள்கள் கட்டாயம் இருப்பார்கள்.



**ஒருவர் தனது அனைத்து அனுபவங்களின் எல்லைக்குச் செல்லாமல் எப்படி முழுமையாக இருக்க முடியும்?**

கஷ்டப்பட வேண்டாம். முழுமையாக இருங்கள், நீங்கள் ஒருபோதும் எல்லைகளுக்குச் செல்ல வேண்டாம். சாதாரணமாக, நீங்கள் அதைப்பற்றி சிந்திப்பீர்களானால், நீங்கள் முழுமையானால்,

அது நீங்கள் எல்லைகளுக்குச் சென்றதுபோல் தோற்றமளிக்கும் - ஏனென்றால் முழுமை என்பது என்ன என்று நீங்கள் அறியவில்லை. முழுமை எப்போதும் நடுவில்தான் நிகழும். அது நடுவின் நிகழ்வாகும். ஏனென்றால் முழுமை சமநிலையாகும். எல்லைகளில் ஒருபோதும் நிகழாது; எல்லைகளில் நீங்கள் ஒருபோதும் முழுமையில் இல்லை. இதைப் புரிந்துகொள்ள முயலுங்கள்.

நீங்கள் யாரோ ஒருவரை விரும்புகிறீர்கள்: நீங்கள் அன்பின் எல்லையில் இருக்கலாம், ஆனால் அது முழுமையல்ல. ஏனென்றால் அன்பிற்கு அதன் மற்றொரு பகுதி உள்ளது. அது வெறுப்பு. ஆகையால் நீங்கள் ஓர் எல்லைக்குச் சென்றிருக்கிறீர்கள், அது அன்பு; அது ஓர் எல்லை. சில சமயங்களில் அதே நபரை நீங்கள் வெறுக்கலாம். நீங்கள் மற்றொரு எல்லைக்குச் சென்றுள்ளீர்கள், நீங்கள் முழுதுமாக வெறுக்கிறீர்கள் - அல்லது அது உங்களுக்கு முழுதுமாக வெறுப்பதாகத் தோன்றுகிறது - ஆனால் அதுவும்கூட பகுதியே. முழு நிகழ்வும் அன்பு - வெறுப்பு இணைந்துதான்.

நீங்கள் ஒன்றைத் தேர்ந்தெடுத்தீர்களானால், ஓர் எல்லையைத் தேர்ந்தெடுத்துள்ளீர்கள். எனது இடது கையும், எனது வலது கையும் - அவையிரண்டும் எனக்குச் செந்தமானவை. நான் இடதைத் தேர்ந்தெடுத்தால், இடது பக்கமாகச் சாய்வேன். வலதைத் தேர்ந்தெடுத்தால் வலது பக்கமாகச் சாய்வேன். நான் எதுவுமே தேர்ந்தெடுக்கவில்லையென்றால் நான் நடுவில் நிற்பேன். பின்பு இரண்டு கைகளும் என்னைச் சாரந்தது. ஆனால் நான் அவற்றைச் சார்ந்தவன் அல்லன். நீங்கள் வெறுப்பைத் தேர்ந்தெடுத்தால் ஒரு பகுதியைத் தேர்ந்தெடுத்துள்ளீர்கள். நீங்கள் அன்பைத் தேர்ந் தெடுத்தால் மற்றொரு பகுதியைத் தேர்ந்தெடுத்துள்ளீர்கள்.

இதுதான் பிரச்சினையாகும்: நீங்கள் வெறுப்பைத் தேர்ந்தெடுத்தீர் களானால், விரைவிலோ அல்லது மெதுவாகவோ நீங்கள் அன்பு செலுத்துவீர்கள். நீங்கள் பகைவரை போதுமான அளவு வெறுத்தீர் களானால் நீங்கள் அன்பு செலுத்துவீர்கள். நீங்கள் போதுமான அளவு நண்பரிடம் அன்பு செலுத்துவீர்களானால் நீங்கள் வெறுப்பீர்கள். ஏனெனில் ஒருவர் ஓர் எல்லையில் தொடர்ந்து நீண்ட நாட்கள் இருக்க முடியாது. அதனால்தான் காதலர்கள் சண்டையிடுகின்றனர். பகைவர்கள்கூட ஆழத்தில் அன்பு செலுத்துபவர்களே. அவர்களால்

பகைவர்கள் இல்லாமல் இருக்க முடியாது; அவர்கள் பற்றியிருக்கின்றனர். அன்பு எதிரான வழியில் - ஆனால் அது அன்பே.

ஒருவர் முழுமையாக இருக்கும்போது என்ன நிகழ்கிறது? அன்பும் வெறுப்பும் இரண்டும் அங்கு அருக்கும். அன்பு வெறுப்பு இரண்டும் அங்கு இருக்கும்போது அவை ஒன்றை ஒன்று நீக்கி விடும். ஒரு வித்தியாசமான நிகழ்வு எழும். அதை புத்தர் கருணை என்று அழைக்கிறார். கருணைக்கு எந்த எதிர்நிலையும் இல்லை; அல்லது நீங்கள் "வெறுப்பின் பகுதி இல்லையென்ற போது, அன்பு முழுமையாக ஆகிறது" என்று சொல்வீர்கள்; ஆனால் அன்பு நடுவில் உள்ளது. நீங்கள் அதை எப்படியாயினும் அழைக்க விரும்புகிறீர்கள் என்பது விஷயமல்ல, ஆனால் ஓர் ஆழ்ந்த சமநிலை நிகழ்கிறது. எதிர் நிலைகள் ஒன்றை மற்றொன்று நீக்கி விடுகின்றன. அவை ஒரே கனமுள்ளவை. அவை ஒன்றை மற்றொன்று நீக்கிவிடும். நீங்கள் சமநிலையில் தொடர்ந்து இருந்து வருவீர்கள். சமநிலையில் இருப்பது முழுமையாகும். பின்பு உங்கள் முழுமையும் அதனில் உட்படுத்தப்பட்டிருக்கும்.

ஒரு புத்தர் கருணை உள்ளவராக இருக்கும்போது எதுவுமே பின்னே விடப்படவில்லை. அவர் அதனுள் முழுமையாகச் செல்கிறார். இயேசு அன்பு செலுத்தும்போது அதனுள் முழுமையாகச் செல்லுகிறார். நீங்கள் அன்பு செலுத்தும் போது உங்களின் ஒரு பகுதி வெறுப்பதற்குத் தயாராகிக் கொண்டிருக்கிறது. நீங்கள் வெறுக்கும் போது உங்களின் ஒரு பகுதி அன்பு செலுத்துவதற்குத் தயாராகிக் கொண்டிருக்கிறது. நீங்கள் பிரிவுள்ளவராக இருக்கிறீர்கள். ஒரு பிரிவுள்ள, தனிப்பட்ட குணமுள்ள ஒருவர் எப்போதும் எல்லைகளுக்குச் சென்று கொண்டிருப்பார். முழுமை பிரிவில்லாத மனதிற்கு உரியது; பிளவுபடாதது: ஒருவர் நேராக நிற்பார், நடுவில், சமநிலையில் - இந்தப் பக்கம் அல்லது அந்தப்பக்கம் சரியாமல். இது அல்லது அதுவாக அல்லாத அந்த வினாடியில் ஒருவர் முழுமையை அடைகிறார்.

உபநிஷதங்கள் அதற்கான ஒரு குறிப்பிட்ட வார்த்தையைக் கொண்டுள்ளன. அவை அதை "நேதி-நேதி" என்று அழைக்கின்றன. அவை, "இது அல்லது அதுவல்ல" என்று சொல்லுகின்றன - எதிரிடைகளுக்கிடையில் தேர்ந்தெடுக்காதீர்கள். எதிரிடைகள் சேர்ந்தாற்போல் வரட்டும். ஆசிகளாக வாட்டும். அவை ஒன்றினுள்

மற்றொன்று கரைந்து போகட்டும். தேர்ந்தெடுக்காதீர்கள். அதனால்தான் கிருஷ்ணமூர்த்தி ஒரு வார்த்தைக்குத் தொடர்ந்து முக்கியத்துவம் கொடுத்துக் கொண்டே இருக்கிறார் - "தேர்ந்தெடுக்காத உணர்வு நிலை" - ஏனென்றால் நீங்கள் தேர்ந்தெடுத்த அந்த வினாடியில் நீங்கள் எல்லையைத் தேர்ந்தெடுத்து விட்டீர்கள்.

எல்லாத் தேர்ந்தெடுப்பவையும் எல்லையே. நீங்கள் ஏதோ ஒன்றிற்கு எதிராக மற்ற ஏதோ ஒன்றைத் தேர்ந்தெடுக்கிறீர்கள். எப்பொழுதெல்லாம் நீங்கள், "இது அழகாக உள்ளது" என்று சொல்லும்போது, நீங்கள் முன்பே ஏதோ ஒன்றை அழகற்றது என்று கண்டனம் செய்கிறீர்கள். இல்லையென்றால் எப்படி உங்களால் இது அழகானது என்று சொல்ல முடியும்? இது அழகானது என்ற இந்த வலியுறுத்துவதில், இந்த விஷயத்தில், மறைந்துள்ள விஷயமானது: "ஏதோ ஒன்று அழகற்றதாக உள்ளது, கண்டனம் செய்யப்படுகிறத" என்பதாகும். நீங்கள் அந்த வினாடியில், "இந்த மனிதர் ஒரு மகான்" என்று சொல்லும்போது நீங்கள் யாரோ ஒருவரை பாபி என்று கண்டனம் செய்து விட்டீர்கள்.

பாவிகள் மறைந்து விட்டார்களானால் மகான்களும் மறைந்து விடுவார்கள். பாபிகள் இல்லா விட்டால் எப்படி மகான்கள் இருக்க முடியும்? மகான்கள் இருப்பதற்குப் பாபிகள் தேவைப்படுகின்றனர். மகான்கள் இனி இல்லையென்றால் பாபிகளும்கூட மறைந்து விடுவார்கள். யார் அவர்களை பாபிகள் என்று அழைப்பார்கள்? எப்படி நீங்கள் யாரோ ஒருவரைப் பாபி எனத் தீர்மானிப்பீர்கள்? ஒரு முழுமையான மனித சமுதாயத்தில் மகான்களும் இல்லை, பாபிகளும் இல்லை, ஏனென்றால் முழு விஷயமுமே ஆழ்ந்த சமநிலையில் இருக்கும். பாபிகளும், மகான்களும் ஒருவருக்கொருவர் எதிரிடை யானவர்கள்; அவர்கள் சேர்ந்தார்ப்போல் இருந்து வருகிறார்கள்.

சில சமயங்களில், நான் இந்தியாவில் பிரயாணம் பண்ணிக் கொண்டிருக்கும்போது, பல இடங்களில் நிறைய மக்கள் என்னிடம் மீண்டும், மீண்டும் கேள்விகள் கேட்டுள்ளனர். கேள்வியானது பார்ப்பதற்கு மிகவும் தகுந்ததாகவும், பொருத்தமானதாகவும் இருந்தன. அவர்கள் என்னிடம், "இந்தியாவில் அதிகமான மகான்கள் இருந்த போதிலும் நாடு அதிகமாக நியாய விரோதமாக இருப்பது எதனால்" என்று கேட்டனர். நான் அவர்களிடம், அது இயற்கையே என்று

கூறினேன். ஒரு நாடு அதிகமான மகான்களை உண்டாக்கும் போது, அது அதே எண்ணிக்கையில் பாபிகளையும் உண்டாக்க வேண்டும்; இல்லையென்றால் சமநிலை இழக்கப்பட்டு விடும். நாடு எல்லா இருபத்தி நான்கு தீர்த்தங்களை, எல்லா இருபத்தி நான்கு அவதாரங்களை, எல்லா இருபத்தி நான்கு புத்தர்களை உண்டாக்கியுள்ள போது பின் எல்லா பாபிகளும் எங்கு போவார்கள்? ஒரு புத்தர், எல்லா பாபிகளும் இங்கே இல்லாவிட்டால் எப்படி இருக்க முடியும்?

கடலளவு பாபிகள் இருக்கும்போது ஒரு புத்தர் இருப்பார்; வேறு வழியில்லை. ஒரு புத்தர் இருப்பதற்கு பல லட்சக்கணக்கான பாபிகள் தேவைப்படுகின்றனர். உண்மையில் அந்தப் பாவிகளின் காரணமாகத்தான் அவர் மிக ஞானமடைந்தவராகக் காணப்படுகிறார். எதிரிடையானது. ஒரு கரும்பலகையின் மீது நீங்கள் வெள்ளைச் சாக்பீஸினால் எழுதுவீர்களானால், அது வெண்மையாகத் தெரியும். வெண்மையைவிட வெண்மையாக - வெண்மையை விட அதிக வெண்மையாக. ஒரு வெள்ளைச் சுவரில் வெள்ளைச் சாக்பீஸினால் எழுதுவீர்களானால் - ஒன்றும் தெரிவதில்லை. மனித இனம் உண்மையில் முழுமையாக, சமநிலை உள்ளதாக இருந்தால், அங்கு புத்தர் கிடையாது; அது வெள்ளைச் சுவரில் வெள்ளைச் சாக்பீஸில் எழுதுவதாகும். ஓர் அதிக இருண்ட மனித இனம் தேவைப்படுகிறது. ஆகையால் நீங்கள் என்னைக் கேட்டீர்களானால், ஒரு புத்தருக்குத் தேவையில்லாத ஓர் உலகத்திலேயே நான் நம்பிக்கை கொள்கிறேன்... விஷயங்கள் சமநிலையில் இருக்கும்.

அதனால்தான் லவோத்சு மீண்டும் மீண்டும், "முற்காலத்தில் மகான்கள் இல்லை - ஏனென்றால் பாபிகளும் இல்லை" என்று சொல்லுகிறார். முற்காலத்தில் விஷயங்கள் எல்லாம் இயற்கையாக, சமநிலையாக, எது தவறு எது சரி என்று ஒரு கொள்கைகூட இல்லாத ஒரு நேரம் இருந்தது. லாவோத்சு, "சரி என்ற கொள்கை கொண்டு வந்தால் தவறு என்பதும் உடனடியாக நுழைந்து விடும்" என்கிறார். எதிரிடைகள் சேர்ந்தார்போல் இருக்கும். அவை சேர்ந்தார்ப்போல் வருகின்றன. அவை சேர்ந்தார்ப்போல் செல்லுகின்றன. அவை ஒரே நாணயத்தின் பக்கங்களாகும். ஒரே விஷயத்தின் இரண்டு பக்கங்களாகும்.

நீங்கள் தேர்ந்தெடுப்பீர்களானால், எல்லைகளைத் தேர்ந்தெடுக் கிறீர்கள். சமநிலை தேர்ந்தெடுக்க முடியாது. நீங்கள் தேர்ந்தெடுக்காமல் இருக்க வேண்டும்; பின் சமநிலை உள்ளது, இது அல்லது அதுவல்ல - நேதி-நேதி. திடீரென நடுவில் சமநிலையில் இருக்கிறீர்கள், பிரபஞ்ச இருப்பின் (existence) மகிமை உங்களுடையதாகி விடுகிறது. நீங்கள் நிறைவடைகிறீர்கள்.

கேள்வி பார்ப்பதற்கு அர்த்தமுள்ளதாகத் தெரிகிறது. ஆனால் இல்லை: "எப்படி ஒருவர் முழுமையாக இருக்க முடியும்? ஒருவர் தனது அனைத்து அனுபவங்களின் எல்லைக்குச் செல்லாமல். நீங்கள் முழுமையாக இருப்பீர்களானால் பின் நீங்கள் எல்லைகளில் இருக்க மாட்டீர்கள். நீங்கள் எல்லைகளில் இருப்பீர்களானால் முழுமையாக இருக்க மாட்டீர்கள். முழுமையாகவும், சமநிலையாகவும் இருப்பதற்கு முயலுங்கள். எல்லைகள், அவையே மறைந்து விடும். அவை உங்களுடைய உதவியினால் இருக்கின்றன. ஏனென்றால் நீங்கள் தேர்ந்தெடுப்பதனால் அவை இருக்கின்றன.

தேர்ந்தெடுக்காதீர்கள். இது நல்லது என்று சொல்லாதீர்கள். அது கெட்டது என்று சொல்லாதீர்கள். விழிப்புடன் தொடர்ந்து இருங்கள், அவ்வளவே. இவர் ஒரு மகான் என்றும் அவர் ஒரு பாபி என்றும் சொல்லாதீர்கள். விழிப்புடன் தொடர்ந்து இருந்து வாருங்கள், முழுமையை ஏற்றுக்கொள்ளுங்கள். பாபியை எந்தக் கண்டனமும் செய்யாமல், மகானை எந்த பாராட்டுதலும் இல்லாமல், தேர்ந்தெடுத்தல் இல்லாதவராகுங்கள். அந்தத் தேர்ந்தெடுத்தல் இல்லாத நிலையில் நீங்கள் சமநிலை உள்ளவராகிறீர்கள், நீங்கள் முழுமையாக இருக்கிறீர்கள்.



**நாங்கள் ஆழ்ந்த யோசனையுடனும், ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டும் உங்களது அவையோர்களாக இருக்கும்போது நீங்கள் புன்னகை செய்வீர்களா?**

அதைத்தவிர என்னால் என்ன செய்ய முடியும்?



நீங்கள் ஒருமுறை போதைப் பொருள்கள் இரசாயன - கனவு களை உருவாக்கும் என்று சொன்னீர்கள் - கற்பனை அனுபவங்கள். கிருஷ்ணமூர்த்தி, எல்லா யோகப் பயிற்சிகளும், எல்லா தியான முறைகளும் போதைப் பொருள்கள் போன்றவை - அவை இரசாயன மாற்றத்தை உண்டாக்கும், ஆகையால் அந்த அனுபவங்கள் - என்று சொல்லுகிறார் - தயவு செய்து விளக்கம் கூறுங்கள்.

கிருஷ்ணமூர்த்தி சரியே. புரிந்து கொள்வது மிகவும் கடினமானது, ஆனால் அவர் சொல்வது சரியே. எல்லா அனுபவங்களும் இரசாயன மாற்றம் மூலமே - எல்லாம் எந்த ஒரு விதிவிலக்கும் இல்லாமல். நீங்கள் (LSD) எல்.எஸ்.டி. எடுத்துக்கொள்ளும் போதும் அல்லது நீங்கள் உண்ணாநோன்பு இருக்கும்போதும், இரண்டு வழிகளிலும், உடல் இரசாயன மாற்றத்தின் மூலம் செல்கிறது. நீங்கள் மரிஜுவானா அல்லது ஒரு குறிப்பிட்ட பிராணாயாமம், ஒரு மூச்சுப் பயிற்சி செய்கிறீர்கள். இரண்டு வழிகளிலும் உடல் இரசாயன மாற்றத்தின் மூலம் செல்கிறது. இதைப் புரிந்துகொள்ள முயற்சி செய்யுங்கள்.

நீங்கள் உண்ணாநோன்பிருக்கும் போது என்ன நிகழ்கிறது? உங்களது உடல் ஒருசில இரசாயனப் பொருள்களை இழக்கிறது. ஏனென்றால் அவை உணவின் மூலம் தினமும் கொடுக்கப்பட வேண்டும். நீங்கள் அந்த இரசாயனப் பொருள்களைக் கொடுக்கவிலையென்றால், உடல் அந்த இரசாயனப் பொருள்களை இழந்து விடுகிறது. பின் இரசாயனப் பொருட்களின் சாதாரண சமநிலை இழக்கப்பட்டு விடுகிறது. ஏனென்றால் உண்ணாநோன்பு ஏற்றத்தாழ்வை உருவாக்குகிறது, நீங்கள் ஒருசில விஷயங்களை உணர ஆரம்பிக் கிறீர்கள். நீங்கள் போதுமான அளவு உண்ணாநோன்பிருந்தீர்களானால் உங்களுக்கு பிரமை ஏற்படும். நீங்கள் இருபத்தியொரு நாட்களுக்கு அல்லது அதற்கதிகமாக உண்ணாநோன்பிருந்தீர்களானால், நீங்கள் காண்பது உண்மையா அல்லது உண்மையற்றதா எனத் தீர்மானிக்க இயலாதவராகி விடுவீர்கள். ஏனென்றால் அதற்குக் குறிப்பிட்ட இரசாயனப் பொருள் தேவை, அது இழக்கப்பட்டு விட்டது.

சாதாரணமாக, திடீரென கிருஷ்ணர் உங்களைச் சாலையில் சந்திப்பாரானால், முதல் எண்ணம் உங்களுக்கு எழுவது நீங்கள் ஏதோ பிரமை, ஏதோ பொய்த்தோற்றம், ஏதோ கனவைப் பார்ப்பதாக இருக்கும். நீங்கள் உங்கள் கண்களைக் கசக்கிக்கொண்டு, சுற்றிலும்

பார்ப்பீர்கள், அல்லது நீங்கள் யாரோ மற்ற ஒருவரிடம், "இங்கே வாருங்கள், தயவு செய்து பாருங்கள். யாரோ ஒருவர் என் முன்னால் நின்று கொண்டிருக்கிறாரா கிருஷ்ணனைப் போல?" என்று கேட்பீர்கள். ஆனால் நீங்கள் இருபத்தொரு நாட்கள் உண்ணாநோன்பிருந்தால், உண்மைக்கும் கனவிற்கும் இடையில் உள்ள வித்தியாசத்தை இழந்து விடுவீர்கள். பின் கிருஷ்ணன் நின்று கொண்டிருந்தால், நீங்கள் அவர் அங்கிருப்பதாக நம்புவீர்கள்.

சிறிய குழந்தைகளைக் கவனித்திருக்கிறீர்களா? அவர்களால் உண்மைக்கும், கனவுக்கும் இடையில் வித்தியாசம் செய்ய முடியாது. இரவில் அவர்கள் ஒரு பொம்மையைப் பற்றி கனவு கண்டிருப்பார்கள். காலையில் "பொம்மை எங்கு சென்று விட்டது?" என்று அவர்கள் தேம்பிக்கொண்டும், அழுது கொண்டும் இருப்பார்கள். அந்த குறிப்பிட்ட இரசாயனப் பொருள் உங்களுக்குத் தீர்மானிக்க உதவுவது உருவாக்கப்பட வேண்டும். அதன்பின்தான் குழந்தை உண்மைக்கும் உண்மையற்றதற்கும் இடையில் வித்தியாசத்தைச் செய்ய முடியும்.

நீங்கள் மது அருந்தும் போது அந்த இரசாயனப் பொருள் அழிக்கப்பட்டு விடுகிறது.

முல்லா நஸ்ருதீன் தன்னுடைய மகனுக்குக் கற்றுக்கொடுத்துக் கொண்டிருந்தார். அவர் ஒரு மது அருந்தும் விடுதியில் உட்கார்ந்து கொண்டு, எப்போது நிறுத்த வேண்டுமென்று சொல்லிக் கொண்டிருந்தார். அதனால் அவர், "பார், அந்த மூலையில் பார், இரண்டிற்குப் பதிலாக நான்கு மனிதர்களைப் பார்த்தாயானால் நன்றாகத் தெரிந்து கொள், இதுதான் குடிப்பதை நிறுத்த வேண்டிய சமயம் என்று வீட்டிற்குச் செல். ஆனால் மகன், "அப்பா அங்கே இரண்டு மனிதர்கள் இல்லை - ஒரே ஒருவர்தான் உட்கார்ந்திருக் கிறார்!" என்றான். அப்பா முன்பே மது அருந்தியிருந்தார்.

நீங்கள் மது அருந்தும் போது என்ன நிகழ்கிறது? சில இரசாயன மாற்றங்கள் ஏற்படுகின்றன. நீங்கள் எல்.எஸ்.டி. (LSD) எடுத்துக் கொள்ளும் போது என்ன நிகழ்கிறது? - அல்லது மரிஜுவானா அல்லது மற்ற பொருட்கள்? சில இரசாயன மாற்றம், நீங்கள் பார்த்திராதவற்றைப் பார்க்க ஆரம்பிக்கிறீர்கள். விஷயங்களை உணர ஆரம்பிக்கிறீர்கள்; நீங்கள் மிகவும் உணர்வுள்ளவராக ஆகிவிடுகிறீர்கள்.

அதுதான் உபத்திரவம். மது அருந்துபவரை, மது அருந்துவதை விட்டுவிடும்படி அறிவுறுத்த முடியாது, ஏனென்றால் வாஸ்தவமான உண்மை நிலை வெறுமையாக, சலிப்பூட்டுவதாகக் காணப்படுகிறது. ஒருதடவை அவன் உண்மை நிலையை தன்னுடைய இரசாயனப் பொருள்கள் மூலம், இரசாயன மாற்றத்தின் மூலம் பார்த்து விடுவானானால்... மரங்கள் அதிகப் பசுமையாக, மலர்கள் அதிக நறுமணத்துடன் ஏனென்றால் அவன் கற்பனை செய்து கொள்வான். அவன் ஒரு மாயையான உலகத்தை உருவாக்கிக் கொள்வான். இப்போது நீங்கள் அவனிடம், "நிறுத்து. உன்னுடைய குழந்தைகள் கஷ்டப்படுகின்றன, உன்னுடைய மனைவி வேதனைப்படுகிறாள், உன்னுடைய வேலை நாய்களுக்குச் சென்று கொண்டிருக்கிறது - நிறுத்து!" என்று கூறுவீர்களானால், அவனால் நிறுத்த முடியாது. ஏனென்றால் அவனுக்கு உண்மையல்லாத உலகத்தின் ஒரு நொடி நேரக் காட்சி கிடைத்துள்ளது. ஆனால் அது அழகானது. இப்போது அவன் நிறுத்துவானானால், உலகம் காண்பதற்கு முரட்டுத்தன மானதாக, சாதாரணமானதாகக் காணப்படுகிறது. மரங்கள் அவ்வளவு பசுமையாகக் காணப்படுவதில்லை, மலர்கள் அழகாக மணம் வீசுவதில்லை; மனைவிகூட - நீங்கள் யாருக்காக சேமிக்க வேண்டு மென்று அவனுக்குக் கற்பிக்கிறீர்களோ - மிகச் சாதாரணமாக, உயிரற்றதாக, ஒரு தினப்படி செயல்முறையாகக் காணப்படுகிறது. அவன் மதுவினுடைய செல்வாக்கிற்குக் கீழே இருக்கும்போது, அவனுடைய சொந்த மனைவி ஒரு கிளியோபாட்ராவாக இருப்பாள். உலகத்திலே மிக அழகிய பெண்ணாவாள். அவன் ஒரு கனவுலகத்தில் வாழ்கிறான்.

எல்லா அனுபவங்களும் இரசாயனமே - எந்த ஒரு விதிவிலக்கும் இல்லாமல். நீங்கள் அதிகமாகச் சுவாசிக்கும் போது உடலினுள் அதிகமான பிராண வாயுவை உருவாக்குகிறீர்கள். நைட்ரஜனுடைய அளவு குறைந்து விடுகிறது. அதிகமான ஆக்சிஜன் உள் உள்ள இரசாயனத்தை மாற்றுகிறது. நீங்கள் ஒருபோதும் உணர்ந்திராத விஷயங்களை உணர ஆரம்பிக்கிறீர்கள். வேகமாகத் தர்வேஷ் நடனத்தைப் போல (dervish dance) சுற்றுவீர்களானால், துரிதமாகச் சுழன்றால், உடல் மாற்றமடைகிறது; வேகமாகச் சுழல்வதன் மூலம் இரசாயன மாற்றம் ஏற்படுகிறது. நீங்கள் தலை சுற்றுவதாக உணர்கிறீர்கள்; ஒரு புதிய உலகம் திறக்கிறது. எல்லா அனுபவங்களும் இரசாயன சம்பந்தப்பட்டதே.

நீங்கள் பசியாக இருக்கும் போது உலகம் வித்தியாசமாகக் காணப்படுகிறது. நீங்கள் திருப்தியடைந்த போது, நிறைவடைந்த போது உலகம் வித்தியாசமாகக் காணப்படுகிறது. ஓர் ஏழை மனிதனுக்கு ஒருவேறான உலகம், ஒரு பணக்கார மனிதனுக்கு ஒருவேறான உலகம். அவர்களுடைய இரசாயனப் பொருள்கள் வேறுபடுகின்றன. ஒரு புத்திசாலியான மனிதனுக்கு ஒரு வித்தியாசமான உலகம், ஒரு முட்டாள் மனிதனுக்கு ஒரு வித்தியாசமான உலகம். அவர்களுடைய இரசாயனப் பொருள்கள் மாறுபடுகின்றன. ஒரு பெண்ணுக்கு வேறான உலகம், ஓர் ஆணுக்கு வேறான ஓர் உலகம். அவர்களுடைய இரசாயனப் பொருள்கள் மாறுபடுகின்றன.

ஒருவன் பதினான்கு அல்லது பதினைந்து வயதில் பால் உணர்வில் வளர்ச்சியடைந்தவனாகும் போது ஒரு வேறான உலகம் எழுகிறது, ஏனென்றால் புதிய இரசாயனப் பொருள்கள் இரத்த ஓட்டத்தில் பாய்கிறது. நீங்கள் ஏழு வயதுக் குழந்தையிடம் பால் உணர்வு பற்றியும், புணர்ச்சி பரவச நிலை பற்றியும் பேசினால், அவன் நீங்கள் முடடாள்தனமானவர் என்று கருதுவான் - “என்ன நீங்கள் முட்டாள்தனமானவைகளைப் பேசுகிறீர்கள்?” என்பான். ஏனென்றால் அந்த இரசாயனப் பொருள்களின் ஓட்டம் இல்லை. அந்த ஹார்மான்கள் (hormones) இரத்த ஓட்டத்தினுள் இல்லை. ஆனால் பதினான்கு, பதினைந்து வயதான அந்தத் தருணத்தில் கண்களிலே புதிய இரசாயனப் பொருட்கள் நிறைந்துள்ளன - ஒரு சாதாரணப் பெண் திடீரென மாற்றமடைகிறாள்.

முல்லா நஸ்ருதீன் விடுமுறை நாட்களில் குன்றுக்குச் செல்வது வழக்கம். சில சமயங்களில் அவர் பதினைந்து நாட்களுக்குச் செல்லுவார். பத்து நாட்களிலேயே திரும்பி விடுவார். முதலாளி அவரிடம், “என்ன விஷயம்? நீங்கள் பதினைந்து நாட்களுக்கு விடுமுறை கேட்டீர்கள், ஐந்து நாட்களுக்கு முன்பே வந்து விட்டீர்கள்?” என்று கேட்டார். சில சமயங்களில் அவர் இரண்டு வாரங்களுக்கு விடுமுறை கேட்பார், நான்கு வாரங்களுக்குப் பின் வருவார். அதனால் “என்ன விஷயம்?” என்று முதலாளி கேட்டார்.

முல்லா, “அதில் குறிப்பிட்ட கணிதம் உள்ளது. குன்றிலே எனக்கொரு பங்களா உள்ளது, அந்த பங்களா ஒரு வயதான அழகற்ற பெண்ணின் கீழ் வைக்கப்பட்டுள்ளது. இது என்னுடைய அளவை.

(பிரமாணம்): நான் அந்த அழகற்ற பெண்ணை ஓர் அழகான பெண்ணாகப் பார்க்க ஆரம்பிக்கும் போது தொலைவுக்கு ஓடிவிடுவேன். ஆகையால் சில சமயங்களில் அது எட்டு நாட்களுக்குப் பின்பு நிகழும், சில சமயங்களில் பத்து நாட்கள்.... அவள் அழகற்றவள், பயங்கரமானவள். நீங்கள் அவள் அழகானவளாவாள் என சிந்தித்துப் பார்க்கவே முடியாது. ஆனால் நான் அவளைப் பற்றி சிந்திக்க ஆரம்பித்தால், நான் அவள் அழகாக இருக்கிறாள் என உணர ஆரம்பித்தால், பின் நான் இப்போது வீட்டிற்குத் திரும்பிச் செல்வதற்கான நேரம் வந்து விட்டது என்பதை அறிந்து கொள்வேன்; இல்லையென்றால் ஆபத்து உள்ளது. ஒருவரும் அறிய மாட்டார்கள். நான் போதுமான அளவு ஆரோக்கியமாக இருந்தால் பின் அது சீக்கிரமாக வரும், ஏழு நாட்களுக்குள் நான் ஆரோக்கியமாக இல்லையென்றால் பின் அது இரண்டு வாரம் எடுத்துக்கொள்ளும். நான் மிகவும் பலவீனமாக இருந்தால் மூன்று வாரங்கள் அது இரசாயனப் பொருள்களைப் பொறுத்தது" என்று சொன்னார்.

எல்லா அனுபவங்களும் இரசாயனமே - ஒரு வித்தியாசம் செய்யப்பட வேண்டும். இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று இரசாயனப் பொருள்களை உள்ளே போடுவது - ஊசி மூலம் உட்செலுத்துவது, புகை பிடிப்பது அல்லது உடலினுள் போடுவது. அவை உடலுக்கு வெளியிலிருந்து வருகின்றன. அவை இடையே புகுபவை. உலகைச் சுற்றிலும் போதைப் பொருள்கள் எடுத்துக்கொள்ளும் மனிதர்கள் அதைத்தான் செய்கின்றனர். மற்றொரு வழி, உடலை உண்ணாநோன்பினால், மூச்சுப் பயிற்சியினால் மாற்றுவது... கிழக்கிலே எல்லா யோகிகளும் அதைத்தான் செய்து கொண்டிருக்கின்றனர். அவர்கள் அதே வழியைச் சார்ந்தவர்களே; வித்தியாசம் மிகவும் சிறிய அளவில். போதைப் பொருள்கள் அருந்தும் மக்கள் போதைப் பொருட்களை வெளியிலிருந்து எடுத்துக் கொள்கின்றனர். அதுதான் வித்தியாசமாகும், அவை உடலினுடைய உயிர் இரசாயனங்களில் இடையே புகுபவை. யோகிகள் தங்களுடைய சொந்த உடலின் சமநிலையை மாற்றுவதற்கு முயல்கின்றனர், வெளியிலிருந்து இடையே புகுபவை மூலம் அல்ல. ஆனால் என்னைப் பொறுத்த வரையில் இரண்டும் ஒன்றே.

ஆனால் உங்களுக்கு ஏதாவது அனுபவமடைய வேண்டுமென்ற உந்துதல் இருந்தால், யோகிகளினுடைய பாதை தேர்ந்தெடுத்துக்

கொள்ளுங்கள் என்று நான் உங்களுக்குச் சொல்லுவேன், ஏனென்றால் அந்த வழியில் நீங்கள் சார்ந்து இல்லை, நீங்கள் அதிகச் சுதந்திரத்துடன் இருக்கிறீர்கள். அந்த வழியில் நீங்கள் ஒருபோதும் பழக்கத்திற்கு அடிமையாக மாட்டீர்கள், அந்த வழியில் உங்களுடைய உடல் அதனுடைய தூய்மையை, அதனுடைய உறுப்புகள் ஒழுங்காக அமைக்கப்பட்டு ஒன்றாயிருப்பதை நிறுத்தி வைத்துக்கொள்ளும். அந்த வழியில் குறைந்தபட்சம் நீங்கள் ஒரு சட்ட விரோதமானவராக இல்லை - போலீஸ் திடீர் சோதனை சாத்தியமில்லை. அந்த வழியில் நீங்கள் சுலபமாகக் கடந்து செல்ல முடியும்.... ஹூம்?... அது மிக முக்கியமான விஷயம்.

நீங்கள் வெளியிலிருந்து இரசாயனப் பொருட்களை எடுத்து உடலினுள் செலுத்துவீர்களானால், நீங்கள் தொடர்ந்து அவைகளுடன் இருந்து வருவீர்கள். அது கஷ்டமானது, அதிகமான கஷ்டம். தினமும் கடந்து செல்வதற்கு, உண்மையில் நீங்கள் மிக அதிகமாகச் சார்ந்திருப்பீர்கள், சார்ந்திருப்பதனால் உங்களுடைய வாழ்வை, வாழ்வின் எல்லா வசீகரத்தையும் இழந்து விடுவீர்கள், போதைப் பொருள்களின் அனுபவம் மட்டுமே உங்களது முழு வாழ்க்கை ஆகிவிடும், அதனுடைய முழு மையமாகி விடும்.

யோகத்தின் மூலம், உடலினுடைய இரசாயனத்தின் உள்மாற்றத்தின் மூலம் செய்வீர்களானால், நீங்கள் ஒருபோதும் சார்ந்து இல்லை, நீங்கள் அப்பால் செல்ல முடியும். ஏனென்றால் மதத்தின் முழு விஷயமுமே அனுபவங்களுக்கு அப்பால் செல்வதுதான். நீங்கள் அழகிய வர்ணங்களை, வானவில்லைச் சுற்றி எல்.எஸ்.டி. (LSD) மூலமாக அனுபவிக்கிறீர்களோ - அல்லது சொர்க்கத்தின் அனுபவம் யோகப் பயிற்சிகள் மூலமோ, அடிப்படையில் எந்த வித்தியாசமும் இல்லை. உண்மையில் எல்லா அனுபவங்களுக்கும், எல்லாப் பொருள் சம்பந்மான அனுபவங்களுக்கும் அப்பால் செல்லும் வகையில், சாட்சி பாவம் தொடர்ந்து இருக்கும் இடத்திற்கு வராத வரையில் எந்த அனுபவமுமே, அனுபவப்படவில்லை, அனுபவிப்பவரே தொடர்ந்து இருந்து வருகிறார், நீங்கள் மதத்தினுடைய எல்லையைத் தொடவில்லை.

கிருஷ்ணமூர்த்தி சரியே. ஆனால் அவரைக் கவனிக்கும் மக்கள் அவரைத் தப்பாகப் புரிந்து கொண்டுள்ளனர். எல்லா அனுபவங்களும்

பயனற்றவை என்று சிந்தித்துக் கொண்டு அவர்கள் சாதாரணமாகத் தொடர்ந்து இருந்து வருகின்றனர்; அவர்கள் எந்தப் பிரயத்தனமும் செய்யவில்லை. எல்லா அனுபவங்களும் பயனற்றவை என்பதை நான் அறிவேன், முடிவில் ஒருவர் அதை விட்டுவிட வேண்டும். நீங்கள் அதை விட்டு விடுமுன்பு, உங்களிடம் அது இருக்க வேண்டும். அவை படிக்கட்டுகள் போன்றவை; அவற்றைப் பின்னால் விட்டுவிட வேண்டும், ஆனால் ஒருவர் மேல்நோக்கிச் செல்ல வேண்டும். ஒருவர் அதைத் தாண்டிச் செல்லும்போதுதான் அதை விட்டுவிட முடியும். எல்லா அனுபவங்களும் குழந்தைத்தனமானவையே. ஆனால் ஒருவர் அவற்றினுள் சென்று முதிர்ச்சியுள்ளவராக வேண்டும்.

உண்மையான மத சம்பந்தமான அனுபவங்கள், ஓர் அனுபவமே இல்லை. மத சம்பந்தமான அனுபவம், அனுபவம் இல்லை: அது அனுபவமடைபவருக்கு அறிந்த / அறியாத, அறிந்துகொள்ள முடிபவை / அறிந்துகொள்ள முடியாதவை எல்லா விஷயங்களும் மறைந்து விடும். சாட்சியாய் இருக்கும் இருப்பு (self) மட்டும், ஒரு தூய்மையான - பிரக்ஞை மட்டும் தொடர்ந்து இருந்து வரும். எந்த அனுபவங்களுடனும் அந்த அசுத்தமாக்காமல் - நீங்கள் இயேசுவைப் பார்க்க மாட்டீர்கள், நீங்கள் புத்தரைப் பார்க்க மாட்டீர்கள், கிருஷ்ணர் நின்று கொண்டிருப்பதைப் பார்க்க மாட்டீர்கள்.

அதனால்தான் ஜென் மாஸ்டர்கள், "நீங்கள் புத்தரை வழியில் சந்தித்தால், உடனே அவரைக் கொன்று விடுங்கள்" என்று சொல்லுகின்றனர். புத்தரைப் பின்பற்றுங்கள், "நீங்கள் புத்தரை வழியில் சந்தித்தால் உடனே கொன்று விடுங்கள்" என்று சொல்கின்றனர். ஒரு மிகச்சிறந்த உபதேசம். ஹ்ூம்... ஏனென்றால் புத்தர் மிக அழகியவர். நீங்கள் கனவில் மயங்கி விடுவீர்கள், பின் நீங்கள் கண்களை மூடிக்கொண்டே புத்தரை அல்லது கிருஷ்ணர் புல்லாங்குழல் ஊதிக் கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்டிருப்பீர்கள். நீங்கள் ஒரு மதத்தைச் சார்ந்த கனவு காணலாம், ஆனால் இன்னும் அது ஒரு கனவுதான். உண்மை நிலையல்ல.

உண்மை நிலை உங்களது உணர்வாகும். ஒவ்வொரு விஷயமும் தாண்டிச் செல்லப்பட வேண்டும். அதை ஞாபகத்தில் கொண்டீர்களானால் பின் ஒருவர் அனுபவங்கள் மூலம் கடந்து செல்ல வேண்டும். ஆனால் ஒருவர் கடந்துதான் ஆகவேண்டும்.

ஒவ்வொருவரும் இருப்பது போல நீங்கள் அனுபவங்களுக்குப் பின்னால் மிக அதிகமாக இருப்பீர்களானால் - அது வளர்ச்சியின் ஒரு பகுதி - யோகப் பயிற்சிகளைத் தேர்ந்தெடுப்பது, போதைப் பொருட்களைவிடச் சிறந்தது. அவை மிக நுண்மையானவைகள், யோகப் பயிற்சிகள் மிகப் பண்படுத்தப்பட்டவை. இந்தியா எல்லாவிதமான போதைப் பொருட்களிடமும் முயன்றுள்ளது என்ற உண்மையை நீங்கள் தெரிந்திருக்கலாம். அந்த உலகிலே, அமெரிக்கா இப்போது வந்துள்ளதாகும். ரிக் வேதங்களில் உள்ள சோமரசத் திலிருந்து, கஞ்சா வரை இந்தியா எல்லாவற்றையும் முயன்று, இது காலத்தை வீணாக்குவது என்பதைப் புரிந்து கொண்டுள்ளது. பின் இந்தியா யோகப் பயிற்சிகளில் முயன்றுள்ளது. அநேக சமயங்களில் புத்தர் போன்ற மக்கள், மஹாவீரர், ஒரு நிலையை அடைந்தபோது அங்கே அவர்கள் யோகப் பயிற்சிகள் கூட உபயோகமற்றவை என்பதைக் கண்டு கொண்டனர்; அவை விட்டுவிடப்பட வேண்டும்.

கிருஷ்ணமூர்த்தி ஏதோ ஒன்று புதிதாகச் சொல்லவில்லை. அது எல்லாப் புத்தர்களுடைய அனுபவங்களே. ஆனால் ஞாபகத்தில் கொள்ளுங்கள், ஓர் அனுபவம் உங்களுக்கு ஓர் அனுபவமாவது நீங்கள் அதை அடையும்போது மட்டுமே. யாருமே உங்களுக்கு அதைக் கொடுக்க முடியாது; அதைக் கடன் வாங்க முடியாது. நீங்கள் இன்னும் குழந்தைத்தனமாக உங்களுக்கு சில அனுபவங்கள் தேவை என்று கருதினால், அவை யோகப் பயிற்சிகள் மூலம் பெறுவது சிறந்தது. முடிவாக அதையும்கூட விட்டுவிட வேண்டும்.

நீங்கள் எல்.எஸ்.டி. (LSD)க்கும் பிராணாயாமத்திற்கும் இடையில் தேர்ந்தெடுப்பீர்களானால் பிராணாயாமத்தைத் தேர்ந்தெடுப்பது சிறந்தது. நீங்கள் குறைந்த அளவில் சார்ந்திருக்கிறீர்கள், நீங்கள் தாண்டிச் செல்வதில் அதிகத் திறமையுள்ளவராக இருப்பீர்கள். ஏனென்றால் உணர்வு நிலை அதில் இழக்கப்பட மாட்டாது. எல்.எஸ்.டி.யால் (LSD) உணர்வுநிலை முழுதுமாக இழக்கப்பட்டு விடும்.

எப்பொழுதுமே உயர்ந்த விஷயங்களைத் தேர்ந்தெடுங்கள். எப்பொழுதெல்லாம் ஒரு சாத்தியம் உள்ளதோ, நீங்கள் தேர்ந்தெடுக்க விரும்பினால், உயர்ந்த விஷயங்களைத் தேர்ந்தெடுங்கள். எதையுமே நீங்கள் தேர்ந்தெடுக்க விரும்பாத ஒரு நேரம் வரும்... பின் தேர்வு அற்ற நிலை.

தன்-உணர்வு நீங்கள் அதை ஒரு நோய் என்று சொல்வது, தன்-விழிப்பு, தன்னை - ஞாபகத்தில் கொள்ளுதல், ஒரு காயீசயாய் இருத்தல் இவைகளுக்கிடையில் நான் குழப்பமடைந்துள்ளேன்.

ஆமாம், தன்-உணர்வு ஒரு நோயே, தன்-விழிப்பு ஆரோக்கிய மாகும். ஆகையால் என்ன வித்தியாசம், ஏனென்றால் அந்த வார்த்தை பார்ப்பதற்கு ஒரே விஷயம் போல் தோன்றுகிறது? வார்த்தைகள் ஒரே பொருளைத் தரலாம். ஆனால் நான் அவைகளை உபயோகிக்கும் போது, அல்லது பதஞ்சலி அவற்றை உபயோகிக்கும்போது, நாங்கள் அதே விஷயத்தைப் பொருள் கொள்ளவில்லை.

தன்-உணர்வில் முக்கியத்துவம் தன்மேல். தன்-விழிப்பு நிலையில் முக்கியத்துவம் விழிப்பு நிலையில் முக்கியத்துவம் விழிப்பு நிலைக்கு. நீங்கள் அதே வார்த்தையை உபயோகிக்கலாம், தன்-உணர்வு நிலை இரண்டிற்கும். முக்கியத்துவம் தன்மேல் இருந்தால் அது ஒரு நோயாகும். முக்கியத்துவம் உணர்வின் மேல் இருந்தால் அது ஆரோக்கியம். மிக நுண்மையானது, ஆனால் மிக அதிகமான வித்தியாசம்.

தன்-உணர்வு நிலை நோய் ஏனென்றால் நீங்கள் தொடர்ந்து தன்னைப்பற்றிய உணர்வுடன் இருக்கிறீர்கள். என்னைப்பற்றி மக்கள் எப்படி எண்ணுகிறார்கள், அவர்கள் என்னைப்பற்றி எப்படித் தீர்மானிக்கிறார்கள், அவர்களுடைய அபிப்பிராயம் என்ன: அவர்கள் என்னை விரும்புகிறார்களா, அல்லது இல்லையா, அவர்கள் என்னை ஏற்றுக் கொள்கிறார்களா அல்லது மறுக்கிறார்களா அவர்கள் என்னிடம் அன்பு செலுத்துகிறார்களா அல்லது இல்லையா. எப்போதும் 'என்னை', 'நான்' அகங்காரம் தொடர்ந்து மையமாக இருந்து வருகிறது. இது ஒரு நோய். அகங்காரம் மிகப்பெரிய நோயாகும்.

நீங்கள் மையத்தை, முக்கியத்துவத்தை மாற்றுவீர்களானால் - தன்னிலிருந்து மையத்தை உணர்வு நிலைக்கு: "மக்கள் என்னை மறுப்பார்களா அல்லது ஏற்றுக் கொள்வார்களா?" என்று இப்போது நீங்கள் கஷ்டப்படவில்லை, அவர்களுடைய அபிப்பிராயம் என்ன, அது விஷயமல்ல. இப்போது நீங்கள் ஒவ்வொரு சூழ்நிலையிலும் விழிப்புடன் இருக்கிறீர்கள். அவர்கள் மறுத்தாலும் அல்லது அவர்கள் ஏற்றுக் கொண்டாலும், அவர்கள் அன்பு செலுத்தினாலும் அல்லது

வெறுத்தாலும், அவர்கள் உங்களை ஒரு மகான் எனறு அழைத்தாலும் அல்லது ஒரு பாபி என்றாலும், அது விஷயமல்ல. அவர்கள் என்ன சொலகிறார்கள், அவர்களுடைய அபிப்பிராயம் என்ன என்பதெல்லாம் அவர்களுடைய வேலை, முடிவு பண்ண வேண்டியது அவர்களுடைய பிரச்சினை. நீங்கள் ஒவ்வொரு சூழ்நிலையிலும் விழிப்புடன் இருக்க முயலுகிறீர்கள்.

யாரோ ஒருவர் வருகிறார் உங்களை வணங்குகிறார், அவர் நீங்கள் ஒரு மகான் என நம்புகிறார்: நீங்கள் அவர் என்ன சொல்கிறார், அவர் என்ன நம்புகிறார் என்பது பற்றி தொந்தரவு கொள்வதில்லை. நீங்கள் விழிப்புடன் உணர்வுடன் தொடர்ந்து இருக்கிறீர்கள். அதனால் அவர் உங்களை உணர்வற்ற நிலைக்கு இழுத்துச்செல்ல முடியாது. அவ்வளவே. யாரோ ஒருவர் வந்து உங்களை அவமரியாதை செய்கிறார், பழைய செருப்பை உங்கள் மீது வீசுகிறார். நீங்கள் அவர் என்ன செய்கிறார் என்பதைப் பற்றி தொந்தரவு கொள்வதில்லை. நீங்கள் விழிப்புடன் இருக்க முயல்கிறீர்கள். அதனால் நீங்கள் பாதிக்கப்படாமல் தொடர்ந்து இருந்து வருகிறீர்கள் - அவரால் உங்களை இழுத்துச் செல்ல முடியாது.

பாராட்டு அல்லது நிந்தனை தோல்வி அல்லது வெற்றி, ஆகியவைகளில் நீங்கள் தொடர்ந்து அதே மாதிரியாக இருந்து வருகிறீர்கள். உங்களுடைய உணர்வு நிலையின் மூலம் நீங்கள் அடைந்த அமைதி எந்த வழியிலும் தொந்தரவு செய்ய முடியாது. நீங்கள் மக்களுடைய அபிப்பிராயங்களிலிருந்து விடுபட்டு விடுகின்றீர்கள்.

அதுதான் மத நம்பிக்கை உள்ள மனிதனுக்கும், அரசியல் வாதிக்கும் இடையில் உள்ள வித்தியாசமாகும். ஓர் அரசியல்வாதி தன்-உணர்வு உள்ளவன் - முக்கியத்துவம் தன்மேல், எப்போதும் மக்களுடைய அபிப்பிராயம் குறித்து கவலை கொண்டிருப்பான். அவர்களுடைய ஓட்டு அவற்றைச் சார்ந்துள்ளான். முடிவில் அவர்கள்தான் மாஸ்டர், முடிவு செய்பவர்கள். ஒரு மத நம்பிக்கை உள்ள மனிதன் தனக்கு மாஸ்டராக உள்ளான். அவனுக்காக ஒருவருமே முடிவு செய்வதில்லை. அவன் உங்களுடைய ஓட்டுக்களையோ, அபிப்பிராயங்களையோ சார்ந்து இல்லை. நீங்கள் அவரிடம் வந்தீர்களானால் ஓகே. நீங்கள் அவரிடம் வரவில்லையா அதுவும்கூட

ஓகே. அது எந்தப் பிரச்சினையையும் உருவாக்குவதில்லை. அவர் அவராக இருக்கிறார்.

இப்போது நான் உங்களுக்கு ஒரு அதிக மாறுபட்டது போல் தோன்றும் விஷயம் சொல்ல விரும்புகிறேன் - அது மாறுபட்டது போல் தோன்றும். அது ஓர் எளிமையான உண்மை. மக்கள் தன் உணர்வுடன் இருப்பவர்களின் முக்கியத்துவம் தன்மேல் - அவர்களுக்குத் தன்னிருப்பு (self) இல்லை. அதனால்தான் அவர்கள் அதிகமான தன்-உணர்வுடன் இருக்கிறார்கள். பயப்படுகிறார்கள் - யாரோ ஒருவர் தங்களுடைய இருப்பை (self) எடுத்துச் சென்று விடுவார்கள் என்று. அவர்களக்கு அவர்களுடைய தன் இருப்பு (self) இல்லை. அவர்கள் மாஸ்டர்கள் இல்லை. அவர்களுடைய தன் இருப்பு கடன் வாங்கப்பட்டது. உங்களிடமிருந்து கடன் வாங்கப்பட்டது. யாரோ ஒருவர் புன்னகை செய்கிறார். அவருடைய தன் இருப்பிற்கு (self) ஆதரவு கொடுக்கப்பட்டது. யாரோ ஒருவர் அவமரியாதை செய்கிறார்: ஒரு ஆதாரம் தூரத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டு விட்டது; அவர்களுடைய அமைப்பு அசைவு கண்டு விட்ட்து. யாரோ ஒருவர் கோபமாக இருக்கிறார். அவர்கள் பயப்படுகிறவர்கள். ஒவ்வொரு வரும் கோபப்படுவார்களானால், அவர்கள் எங்கு செல்வார்கள், அவர்கள் யாராக இருப்பார்கள்? அவர்களுடைய அடையாளம் விட்டுவிடப்படுகிறது. ஒவ்வொருவரு்ம் புன்னகை செய்தால் "நீங்கள் மிகச்சிறந்தவர்" என்று சொன்னால், அவர்கள் மிகச் சிறந்தவர்கள்.

மக்கள் தன்-உணர்வு உள்ளவர்கள். அரசியல்வாதிகள்... நான் அரசியல்வாதிகள் என்று சொல்லும்போது உண்மையில் அரசியலில் உள்ளவர்களை மட்டும் சொல்லவில்லை. எந்த வழியிலாவது அடுத்தவர்களைச் சார்ந்துள்ளவர்கள் எல்லாருமே அரசியல் வாதிகளே. அவர்கள் தன் சொந்த இருப்பு அற்றவர்கள். உட்புறம் வெறுமையாக உள்ளது. அவர்கள் எப்போதும் தங்களுடைய வெறுமையைக் கண்டு பயப்படுகிறாக்ள். யார் வேண்டுமானாலும் அவர்களை அவர்களுடைய வெறுமைக்குள் எறிந்து விடலாம் - யார் வேண்டுமானாலும் - ஒரு குரைக்கும் நாய்கூட.

மத நம்பிக்கை உள்ள ஒரு மனிதர் - தன்-உணர்வுள்ளவர் - முக்கியத்துவம் உணர்வின மேல், ஒரு தன் இருப்பு உள்ளது, ஒரு உண்மையான தன் இருப்பு. உங்களால் அந்த தன் இருப்பை (self)

அவரிடமிருந்து எடுத்துக்கொள்ள முடியாது. அவர் அதை அடைந்துள்ளார். முழு உலகமுமே அவருக்குப் புறம்பாகச் சென்றாலும், அவருடைய தன்னிருப்பு (self) அவருடனேயே இருக்கும். முழு உலகமுமே அவரைத் தொடர்ந்தாலும் அவருடைய தன் இருப்பில் எதுவுமே சேர்த்துக்கொள்ளப்படவில்லை, அதிகமாகவில்லை. உண்மையில் அவருக்கு உண்மையான, உண்மை நிலை உள்ளது - ஒரு மையம் அவரிடம் உள்ளது.

ஓர் அரசியல்வாதியிடம் மையம் இல்லை. அவர் ஒரு போலி யான மையத்தை உருவாக்க முயலுகிறார். அவர் உங்களிடமிருந்து ஏதோ ஒன்றை கடன் வாங்குகிறார். ஏதோ ஒன்று யாரோ ஒருவரிடமிருந்து, ஏதோ ஒன்று மற்ற யாரோ ஒருவரிடமிருந்து... அப்படித்தான் அவர் சமாளிக்கிறார். ஒரு போலியான தன்மையை, பல மக்களுடைய அபிப்பிராயங்களின் ஒரு தொகுதியிலிருந்து: அது அவருடைய அடையாளமாக உள்ளது. மக்கள் அவரை மறந்து விட்டால் அவர் மறைத்து விடுவார். எங்கும் இல்லை. உண்மையில் அவர் ஒருவருமாக இல்லாமல் ஆகிவிடுவார்.

நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? ஒரு மனிதர் தலைவராக உள்ளார், திடீரென முக்கியமானவராகி விடுகிறார். பின் அவர் இனி தலைவராக இல்லையென்றால்: அவர் ஒருவருமில்லாதவராகி விடுகிறார். பின் எல்லாச் செய்தித்தாள்களும் அவரை மறந்து விடுகின்றன. அவை அவர் மரணமடையும் போது மட்டுமே ஞாபகத்தில் கொள்கின்றன - அதுவும்கூட ஒரு சிறிய மூலையில். அவை ஒரு மாஜி-ஜனாதிபதியாக ஞாபகத்தில் கொள்கின்றன. ஒரு மனிதனாக அல்ல - ஒரு மாஜி - பதவி வகித்தவராக. இதை இராதாகிருஷ்ணனுடன் நிகழ்ந்ததை நீங்கள் பார்க்கவில்லையா? வி.வி.கிரியுடன் இது நிகழ்ந்ததை நீங்கள் பார்க்கவில்லையா? கிரி எங்கே? என்ன நிகழ்ந்தது? ஒரு மனிதன் அப்படியே மறைந்து விட்டார். நீங்கள் பதவியில் இருக்கும் போது, நீங்கள் செய்தித்தாள்களின முன் பக்கங்களில் எல்லாம் இருப்பீர்கள். நீங்கள் முக்கியமல்ல - பதவி.

ஆகையால் உட்புறத்தில் ஆழத்தில் ஏழ்மையாக உள்ளவர்களே எப்போதும் ஒரு பதவியைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். மக்களுடைய ஓட்டுக்களை, அபிப்பிராயங்களைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். அந்த வழியில் அவர்கள் ஒரு தன்னிருப்பை அடைகிறார்கள் - உறுதியாக. ஒரு போலியான தன்னிருப்பு (self).

மனோதத்துவ நிபுணர்கள் இந்தப் பிரச்சினையின் ஆழ்ந்த மூலத்தை அடைந்துள்ளனர். அவர்கள் மக்கள் யார் மேலானவர்களாக ஆக முயற்சி செய்கிறார்களோ அவர்கள் தாழ்வு மனப்பான்மையினால் கஷ்டப்பட்டுக் கொண்டு இருக்கிறார்கள் என்று சொல்லுகின்றனனர். உண்மையில் யார் மேலானவர்களாக உள்ளனரோ - அவர்கள் ஒரு சிறிதும் தொந்தரவு கொள்வதில்லை. அவர்கள் அந்த அளவு மேலானவர்களாக இருப்பதால் தாங்கள் மேலானவர்களாக உள்ளோம் என்பதைக்கூட உணர்வதில்லை. தாழ்வாக உள்ள ஒருவரேதான் மேலானவன் என்பதை உணர்கிறான் - அதைப்பற்றி அவன் மிகவும் சினம் கொள்கிறவனாக உள்ளான். நீங்கள் அவரை, "நீங்கள் நினைப்பது போல அவ்வளவு சிறந்தவர் அல்ல" என்று ஒரு குறிப்பு கொடுத்தீர்களானால், அவர் கோபம் கொள்வார். ஒரு மேலான மனிதர் மட்டுமே பின்புறம் கடைசி மனிதனாக நிற்பார். எல்லாத் தாழ்ந்தவர்களும் முன்னிலைக்கு வேகமாகச் செல்கின்றனர். ஏனென்றால் அவர்கள் பின்புறம் நிற்பார்களானால் அவர்கள் ஒன்றுமில்லாதவர்கள். அவர்கள் முன்பக்கத்தில் நிற்க வேண்டும். அவர்கள் தலைநகரத்தில் இருக்க வேண்டும். அவர்கள் மிக அதிகமான பணத்துடன் இருக்க வேண்டும். அவர்கள் ஒரு பெரிய காரில் சுற்ற வேண்டும். அவர்கள் இதில் அதில் இருக்க வேண்டும். தாழ்ந்த மக்கள் எப்போதும் அவர்களுடைய உடைமைகளின் மூலம் மேம்பட்ட தன்மையை நிரூபிக்க முயலுகின்றனர்.

இதை நான் சுருக்கிக் கூறுகிறேன்: மக்கள் தங்களின் இருப்புத்தன்மை (being) இல்லாதவர்கள், ஓர் இருப்புத்தன்மையை (being) பொருள்கள் வைத்திருப்பதன் மூலம் அடைய முயலுகிறார்கள் - பதவிகள், பெயர், புகழ்.

சில சமயங்களில் அதுவும்கூட நிகழ்கிறது: அமெரிக்காவில் இருந்த ஒரு மனிதன் ஏழு மனிதர்களைக் கொன்று விட்டான். அந்த ஏழு மனிதர்களும் அவனுக்குத் தெரியாதவர்கள். நீதிமன்றத்தில் அவனைக் கேட்டபோது, "ஏன்?" அவன், "நான் புகழ்பெற்றவனாக ஆக முடியவில்லை. அதனால் நான் கெட்ட பெயர் எடுக்கலாம் என்று எண்ணினேன். ஆனால் நான் முக்கியமானவனாக இருக்க வேண்டும். என்னுடைய புகைப்படம் முன்பக்கங்களில் ஒரு கொலைகாரன் என்று வெளிவந்துள்ளது. அதனால் நான் சந்தோஷமடைகிறேன. இப்போது நீங்கள் விரும்புவது என்னவாயினும் செய்யுங்கள். இப்போது நான்

முக்கியமானவன் என்ற உணர்வு எனக்குள்ளது. நீதிமன்றம் கஷ்டமடைந்தது, அரசாங்கம் கஷ்டமடைந்தது, மக்கள் கஷ்ட மடைந்தனர், செய்தித்தாள்கள் என்னைப்பற்றி பேசிக் கொண்டிருக் கின்றன - நான் எல்லா உணவு விடுதியிலும், உண்டிச்சாலைகளிலும் பார்வைக்குரியவனாக, எல்லா இடத்திலும், மக்கள் என்னைப்பற்றிப் பேசிக் கொண்டிருப்பார்கள். குறைந்தபட்சம் ஒருநாள் புகழ்பெற்வனாக, அறிந்தவனாக உள்ளேன்" என்று கூறினான்.

எல்லா அரசியல்வாதிகளும் கொலைகாரர்களே. உங்களால் பார்க்க முடியாது. ஏனென்றால் நீங்களும் கூட உள்ளே ஆழத்தில் ஒரு அரசியல்வாதியே. தற்போது ஒருசில தினங்களுக்கு முன்பாக முஜ்ஜிபீர் ரஹ்மான் கொல்லப்பட்டார். அவர் நாட்டின் தந்தையாவார். நாடடின் தந்தையாவதற்கு அவர் மிக அதிகமான உபத்திரவங்களைச் செய்துள்ளார். அவர் பலரைக் கொன்றுள்ளார் - அல்லது அவர் உருவாக்கிய சூழ்நிலையில் பலர் கொல்லப்பட்டனர். இப்போது அவர் தன்னுடைய கூட்டாளிகளினால் கொலை செய்யப்பட்டார். அவருடைய முழு மந்திரி சபையும் மீண்டும் அதிகாரத்தில் உள்ளது, மக்கள், யார் அவரைக் கொல்வதற்கு திட்டமிட்டார்களோ - அவர்கள் இப்போது ஜனாதிபதியாக, பிரதம மந்திரியாக, மந்திரியாக ஆகியுள்ளனர். அவர்கள் எல்லோரும் அவருடைய கூட்டாளிகள், யாருமே அவர்களுக்கு எதிராக எதுவும் சொல்லவில்லை. உலகம் காண்பதற்கு நம்ப முடியாததாக உள்ளது. இப்போது அவர்கள் மிகப்பெரிய மக்கள். யாரோ ஒருவர், அவர்களுடைய சொந்த மந்திரி சபையில் உள்ளவர்கள் முஷ்டாக் அகமதுவைக் கொல்ல முயலலாம்.

ஒருசில நாட்களுக்கு முன் நான் படித்துக் கொண்டிருந்தேன். அதை என்னால் நம்பவே முடியவில்லை. ஆனால் அது ஓர் உண்மை. நான் லெனினைப் பற்றிய ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தேன். யாரோ ஒருவர் அவரை பீத்தோவானின் சிம்பனியைக் கேட்பதற்காக அழைத்திருந்தார்கள். அவர் வரவில்லை எனச் சொன்னார், அதுவும் மிக அழுத்தமாக. உண்மையில் அவர் இல்லையெனச் சொல்வதில், ஏறக்குறைய எதிர்க்கும் தன்மை உள்ளவராகி இருந்தார். ஏன் அவர் இவ்வளவு கோபமடைகிறார் என்பதை அவரை அழைத்த அந்த மனிதரால் நம்ப முடியவில்லை. அவர், "ஏன்? பீத்தோவனின் சிம்பனிஸ் உலகத்திலேயே மிகச்சிறந்த உருவகங்களில் ஒன்றாகும்" என்று சொன்னான். லெனின்,

“இருக்கலாம், ஆனால் எல்லா நல்ல சங்கீதமும் புரட்சிக்குப் புறம்பானது. ஏனென்றால் அது உங்களுக்கு ஆழ்ந்த திருப்தியைக் கொடுக்கிறது. அது உங்களைச் சமாதானப்படுத்துகிறது. நான் எல்லா சங்கீதத்திற்கும் புறம்பாக உள்ளேன்” என்றார்.

உலகத்தில் மிகச்சிறந்த சங்கீதம் பரவுமானால், புரட்சிகள் மறைந்து விடும். இந்தத் தர்க்கம் பொருத்தமானது. லெனின் எல்லா அரசியல்வாதிகள் பற்றி உண்மையான ஏதோ ஒன்றைச் சொல்கிறார். உலகத்தில் உள்ள மிகச்சிறந்த சங்கீதத்தை அவர்கள் விரும்ப மாட்டார்கள். உலகில் உள்ள மிகச்சிறந்த கவிதைகளை அவர்கள் விரும்ப மாட்டார்கள். உலகத்திலுள்ள மிகச்சிறந்த தியானம் பண்ணுபவர்களை அவர்கள் விரும்ப மாட்டார்கள். அவர்கள் மக்கள் பரவசத்திலிருப்பதை, சுபிட்ச மனோநிலையில் இருப்பதை விரும்ப மாட்டார்கள் - ஏனென்றால் பின் புரட்சிகள் என்னவாகும்? போர்களுக்கு என்ன நிகழும்? உலகத்தில் சென்று கொண்டிருக்கும் எல்லாவிதமான முட்டாள்தனங்களுக்கும் என்ன நிகழும்?

மக்கள் எப்போதும் தொடர்ந்து நிம்மதியற்று இருக்கும் தேவையுள்ளது; அதன்பின்தான் அவர்கள், அரசியல்வாதிகளுக்கு உதவ முடியும். மக்கள் திருப்தியுடன் இருந்தால், போதுமென்ற மனோநிலையில், சந்தோஷமாக இருந்தால் தலைநகரங்களைப் பற்றி யார் தொந்தரவு கொள்கிறார்கள்? மக்கள் எல்லாவற்றையும் மறந்து விடுவார்கள். அவர்கள் நடனமாடுவார்கள். இன்னிசையைக் கவனித்துக் கொண்டு, தியானம் பண்ணுவார்கள். எதற்காக அவர்கள் ஜனாதிபதி ஃபோர்டு (Ford) பற்றி அதுபற்றி இதுபற்றித் தொந்தரவு கொள்ள வேண்டும்? அங்கே செய்வதற்கு ஒன்றுமில்லை. ஆனால் மக்கள் திருப்தியடையவில்லை என்றால், தளர்வுடன் இருக்கவில்லை யென்றால், மக்கள் தங்களுடைய தன் இருப்பு (self) இல்லாதவர்கள். அவர்கள் மற்றவர்களுடைய தன் இருப்பதை (self) ஆதரவளித்துக் கொண்டிருப்பார்கள். ஏனென்றால் அது ஒன்றுதான் வழி - அடுத்தவர்களுடைய ஆதரவின் மூலமாகத்தான் தங்களுடைய சொந்தத் தன் இருப்பை (self) அடைகிறார்கள்.

இதை ஞாபகத்தில் கொள்ளுங்கள்: தன்-உணர்வு - முக்கியத்துவம் தன்மேல் இருந்தால் ஆழமான நோயாகும்; ஆழத்தில் நோயுள்ளது. ஒருவர் அதிலிருந்து விடுவிக்கப்பட வேண்டும். தன்-உணர்வு

முக்கியத்துவம் உணர்வின் மேல் இருந்தால் - உலகத்திலுள்ள மிகப் புனிதமான விஷயங்களில் ஒன்றாகும். ஏனென்றால் அது தங்கள் மையத்தை அடைந்த ஆரோக்கியமான அந்த மக்களைச் சார்ந்தது. அவர்கள் உணர்வுடன், விழிப்புடன் இருக்கிறார்கள். அவர்கள் வெறுமையில் இல்லை. அவர்கள் நிறைவுடன் உள்ளார்கள்.



**ஒருவர் சுவாசத்தை எப்படிக் கவனிப்பது, அது பார்க்க முடியாமல் உணருவதாக இருக்கும்போது?**

கவனிப்பது பார்ப்பதாக இருக்கவேண்டிய தேவையில்லை. அது ஓர் உணர்வாகும். உண்மையில் அது ஓர் உணர்வாக உள்ளது. ஏனென்றால் எப்படி உங்களால் சுவாசத்தைப் பார்க்க முடியும்? நீங்கள் அதனுடைய ஸ்பரிசத்தை உணரலாம். சுவாசம் அதன் பாதையின் மூலம் செல்லும்போது நீங்கள் அதன் ஸ்பரிசத்தை உணரலாம்.

முழு விஷயமுமே பார்ப்பது என்ற கேள்வியில்லை, விழிப்புடன் இருப்பது. அது உள்ளே செல்கிறது, அது உங்களுடைய உள்ளாழ்ந்த மூலத்தை அடைகிறது, இப்போது நின்றுவிட்டது; இப்போது அது திரும்ப வருகிறது: உயர்ந்தும், தாழ்ந்தும்: இப்போது அது வெளியே சென்றுவிட்டது, முழுதுமாக வெளியே சென்று விட்டது, நின்று விட்டது; பின்பு மீண்டும் பின்புறம் நோக்கித் திரும்பச் செல்கிறது. அதனுடைய முழு வட்டமும் - உள்ளே வருவது - வெளியே செல்வது, உள்ளே வருவது - வெளியே செல்வது - ஒருவர் உணர்வுடன் இருக்க வேண்டும். நீங்கள் உணர்வீர்களானால், அதுதான் உணர்வு நிலை - ஆனால் ஒருவர் அதை உணருவதைத் தவறவிடக்கூடாது. நீங்கள் தினமும் ஒரு மணி நேரம் செய்வீர்களானால், உங்கள் முழு வாழ்க்கையுமே மாற்றமடையும்.

நீங்கள் உங்கள் சுவாசத்தை மாற்றவில்லையென்றால், இரசாயன மாற்றம் உங்களுள் நிகழ்வதில்லை. அதுதான் பதஞ்சலிக்கும், புத்தருக்கும் இடையில் உள்ள வித்தியாசமாகும். பதஞ்சலியினுடைய செயல்முறை உங்களுடைய இரசாயனத்தை மாற்றும். புத்தருடைய செயல் முறை உங்களுடைய இரசாயனத்தைத் தொடுவதே இல்லை - சாதாரணமான (வழக்கமான) சுவாசம் - அது இருப்பது போல: நீங்கள் கவனியுங்கள், உணருங்கள், பாருங்கள். உள்ளே செல்வதும்,

வெளியே வருவதும் உணர்வில்லாமல் போக விடுவதாக இருக்க வேண்டாம், அவ்வளவே. அதை மாற்றாதீர்கள். அது இருப்பது போல இருக்கட்டும். ஒரு விஷயத்தைச் சேர்த்துக் கொள்ளுங்கள். நீங்கள் தொடர்ந்து அதற்கு சாட்சியாக இருந்து வாருங்கள்.

ஒரு மணி நேரமாயினும் நீங்கள் செய்தீர்களானால், உங்கள் முழு வாழ்க்கையும் மாற்றமடையும் - எந்த இரசாயன மாற்றமும் இல்லாமல். நீங்கள் ஒரு புலன்களைக் கடந்த அனுபவமாகி விடுவீர்கள், ஒரு புலன்களைக் கடந்த உணர்வாகி விடுவீர்கள். நீங்கள் புத்தர்களைப் பார்க்க மாட்டீர்கள். நீங்கள் ஒரு புத்தராகி விடுவீர்கள். அதுதான் ஞாபகத்தில் கொள்ள வேண்டிய விஷயமாகும். புத்தரைப் பார்ப்பது முககியமல்ல... நீங்கள் ஒரு புத்தராக ஆகாதவரையில்.



### சாட்சியால் இருப்பது ஒரு சிரத்தையற்ற நிகழ்வாக இருக்க வேண்டுமென்ற தேவை உள்ளதா?

இல்லை, ஆனால் அது சாந்தமானதாக இருக்க வேண்டும் - சிரத்தையற்றதாக அல்ல, ஆனால் சாந்தமானதாக, வித்தியாசம் மிகவும் அதிகமானது. ஏதாவது ஒன்று சிரத்தையற்றதாக இருந்தால் நீங்கள் அலட்சியமாக அதைப் பார்க்கிறீர்கள், கவனிப்பதில்லை, அலட்சியமாக உள்ளீர்கள். ஆனால் நீங்கள் சார்ந்தும்கூட இல்லை. நீங்கள் ஒரே சிந்தனையாக இல்லை; நீங்கள் அதைப்பற்றி நிதானமற்றும் இல்லை. நீங்கள் உத்வேகத்துடன் இல்லை. நீங்கள் அலட்சியமான, உத்வேகமில்லாத இரண்டு எல்லைகளையும் தவிர்ப்பீர்களானால் - அங்கே சாந்தம், அமைதி, ஒரு சாந்தமான, உறுதியான உணர்வு இருக்கிறது.

சாட்சியாய் இருப்பது சிரத்தையற்றதாக இருக்க வேண்டிய தேவையில்லை. உண்மையில் அது சிரத்தையற்றதாக இருந்தால் அது இனி சாட்சியாக இருப்பதாக இல்லை; நீங்கள் அலட்சியமாகி விட்டீர்கள். நீங்கள் கவனிக்கவில்லை. நீங்கள் குளிர்ந்தோ அல்லது உஷ்ணமாகவோ இருப்பதை நன்றாக அறிந்துள்ளீர்கள். சாந்தம் நடுவில் உள்ளது. சாந்தம் உஷ்ணமோ, குளிர்ச்சியோ அல்ல; அது இரண்டிற்கும் இடையில் நடுப்புள்ளியில் உள்ளது. நீங்கள் ஆர்வத்துடன் உள்ளீர்கள். ஆனால் உத்வேகத்துடன் இல்லை; நீங்கள்

கவனத்துடன் இருக்கிறீர்கள், அலட்சியமாக இல்லை, ஆனால் நீங்கள் பாதிக்கப்படவில்லை.

கஷ்டமே... ஏனென்றால் நீங்கள் இரண்டு உணர்வுகளை அறிந்துள்ளீர்கள் - குளிர்ச்சி, உஷ்ணம். நீங்கள் மூன்றாவது உணர்வை அறியவே மாட்டீர்கள். ஏனென்றால் நீங்கள் ஒரு எல்லையிலிருந்து மற்றொரு எல்லைக்கு நகர்ந்து கொண்டே இருக்கிறீர்கள். நீங்கள் யாரோ ஒருவரை வெறுப்பீர்கள் அல்லது விரும்புவீர்கள். கருணை: அது என்னவென்று நீங்கள் அறியவில்லை. கருணை, ஒரு வார்த்தையே காணுவதற்குப் பொருளற்றதாக உள்ளது. அது ஒரு சாந்தமான வார்த்தை.

ஒரு புத்தரிடம் வருவீர்களானால், அவர் உங்களை வரவேற்பார், ஆனால் அது ஓர் ஆர்வமிக்க வரவேற்பாக இராது - அது சித்தையற்றதாக இராது. அது ஒரு சாந்தமான வரவேற்பு. அவர் உங்களைத் தன்னுடைய இதயப்பூர்வமாக வரவேற்பார். ஆனால் அவர் உத்வேகமடைய மாட்டார். நீங்கள் அங்கு இல்லையென்றால், அவர் வருத்தமாக உள்ளார் என்பது இல்லை, உங்களது இல்லாமையினால், இல்லை. அவர் எப்போதும் எவ்வளவு சந்தோஷமாக உள்ளாரோ அவ்வளவு சந்தோஷமாக உள்ளார். நீங்கள் அங்கு இருப்பீர்களானால் அவர் சந்தோஷமாக இருக்கிறார். நீங்கள் அங்கு இல்லையென்றாலும் அவர் சந்தோஷமாகவே இருக்கிறார். அவருடைய சந்தோஷம் மாறுதலில்லாதது அதனால்தான் அது சாந்தமானது.

உங்களுடைய நண்பர் உங்களைப் பார்ப்பதற்கு வந்தால், நீங்கள் உத்வேகமடைகிறீர்கள் - நீங்கள் உஷ்ணமடைகிறீர்கள். ஞாபகத்தில் கொள்ளுங்கள். நீங்கள் உஷ்ணமாக தொடர்ந்து அதிக நேரம் இருக்க முடியாது. ஏனென்றால் உஷ்ணம் களைப்படையச் செய்யும். சீக்கிரத்தில் நீங்கள், "எப்போது இந்த மனிதர் செல்லுவார்" என்று சிந்திக்க ஆரம்பிப்பீர்கள். முதலில் நீங்கள் உஷ்ணமாகிறீர்கள்; பின் நீங்கள் குளிர்ச்சியாகிறீர்கள். முதலில் நீங்கள் சந்தோஷமடைகிறீர்கள். ஏனென்றால் ஒரு நண்பர் வந்துள்ளார்; பின்பு நீங்கள் அவர் சென்றதும் சந்தோஷமடைகிறீர்கள். ஒரு புத்தர் தொடர்ந்து சந்தோஷமாக இருந்து வருகிறார். ஒரு நண்பர் வந்தார் அல்லது இல்லை என்பது விஷயமல்ல. அவருடைய சந்தோஷம் மாறுதலில்லாதது. அவர் சாந்தமாக இருக்கிறார்.

ஒரு சாந்தமான அன்பைப் புரிந்து கொள்வது உண்மையில் ஒரு மிகச்சிறந்த அனுபவமாகும் - கடினமானது, ஏனென்றால் உங்களுடைய மனம் சாந்தமான அன்பை, சிரத்தையற்ற அன்பாக அர்த்தம் சொல்லும். நீங்கள் சாந்தமான வார்த்தையை அறியமாட்டீர்கள். நீங்கள் சிரத்தையற்றதை அறிவீர்கள். நீங்கள் புத்தரைச் சிரத்தையற்றவராக இருப்பதாகக் காணுவீர்கள். அவர் அப்படி இல்லை. எல்லா ஞானமடைந்த மக்களும் சாந்தமானவர்கள். சாந்தமானவர்கள், ஏனென்றால் நீங்கள் அவரைத் தொந்தரவு செய்ய முடியாது - எந்த வழியிலும்; நீங்கள் அவர்களை அதிக சந்தோஷமாக்க முடியாது. நீங்கள் அவர்களை சந்தோஷமற்றவர்களாக ஆக்க முடியாது. அவர்கள் சாந்தமாக உள்ளனர். ஏனென்றால் அவர்கள் மையங்கொண்டுள்ளனர்.



**நீங்கள் எங்களுக்கு உடனடியாக வலியில்லாமல் கொல்லக்கூடிய ஏதோ ஒன்றை ஏன் கொடுக்கவில்லை. அதற்குப் பதிலாக இந்த முடிவில்லாத வேதனைகளின் மூலம் செல்ல வேண்டுமா?**

உங்களுக்கு நான் அதைக் கொடுக்கிறேன், ஆனால் நீங்கள் அதைக் கவனிப்பதில்லை. நான் உங்களுக்கு அளிக்கவில்லை என்ற கேள்வியில்லை. நான் உங்களுக்கு முழுதுமான விஷத்தைத்தான் கொடுக்கிறேன். அது உங்களை உடனடியாகக் கொன்று விடும். ஆனால் நீங்கள் என்னைக் கவனிப்பதில்லை.

நீங்கள் ஏதோ ஒன்று தவறுதலானது எந்து சிந்தித்துக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள், நீங்கள் தவறாக உள்ளீர்கள் என்று சிந்தித்துக் கொண்டே இருக்கிறீர்கள். சில சமயங்களில் நீங்கள், "விவகாரங்களின் நிலையை எப்படி அழிப்பது? எப்படி இதற்கப்பால் செல்வது?" என்றுகூட ஆசைப்படுகிறீர்கள். ஆனால் நீங்கள் அதில் மிக அதிகமாக முதலீடு செய்து விட்டீர்கள். நீங்கள், "எப்படி இதற்கப்பால் செல்வது?" என்று எண்ணுகிறீர்கள். ஆனால் அதற்கப்பால் செல்ல நீங்கள் விரும்பவில்லை.

உங்களுக்கு நான் விஷம் கொடுக்கிறேன். நான் கொடுக்கும் முழுதுமே எப்படி மரணமடைவது என்ற கலையே அல்லாமல் வேறு

ஒன்றும் இல்லை. ஆனால் விஷத்தை உங்கள் மேல் கட்டாயப்படுத்த முடியாது; இல்லையென்றால் அதற்காக நீதிமன்றத்தைச் சந்திக்க வேண்டும் - நான் கஷ்டத்தில் இருக்க நேரிடும். நான் உங்களுக்கு அளிக்க முடியும். பின்பு நீங்கள் அதை எடுத்துக்கொள்ள வேண்டும். நீங்கள் அதை தவறவிட்டு விடுகிறீர்கள்.

நீங்கள் உங்கள் மீது கட்டாயப்படுத்தப்பட வேண்டுமென்று விரும்புகிறீர்கள். நீங்கள் அதை மிகச் சுலபமாகக் கிடைக்க வேண்டுமென்று விரும்புகிறீர்கள். மரணம் யாராலும் கட்டாயப்படுத்த முடியாது. நான் சொல்லம் இந்த மரணம் மனமுவந்து ஏற்றுக்கொள்ளும் ஒரு மரணம். அது முழு மனதுடன் ஏற்றுக்கொள்ளும் மரணமாக இருக்க வேண்டும். நீங்கள் தயாராக இருந்தால் அது நிகழும்; நீங்கள் தயாராக இல்லையென்றால் நிகழாது.

என்னைப் பொறுத்த வரையில் நான் எப்போதும் தயாராக இருக்கிறேன். நீங்கள் மரணமடையத் தயாராக இருந்தால், நான் உங்களுக்கு உதவத் தயாராக இருக்கிறேன். ஆனால் நீங்கள் மரணமடையத் தயாராக இல்லை. அடி ஆழத்தில், மரணத்திற்குப் பின்பும் நீங்கள் உயிர் வாழ்வீர்கள் என்று சிந்தித்துக் கொண்டிருக் கிறீர்கள்.

நீங்கள் தியானம் பண்ணுகிறீர்கள். நீங்கள் அது மரணத்திற்குப் பின்னும்கூட உயிர் வாழ்ந்திருக்கும் என்ற முறையிலேயே தியானிக்கிறீர்கள். நீங்கள் அதை ஒரு செயல்முறையாக உபயோகித்து வருகிறீர்கள். உங்களுடைய அடிப்படையான உண்மை நிலை தொடப்படவில்லை. நீங்கள் எப்போதும் அதைப்பற்றிக் கவனமுடன் இருந்து வருகிறீர்கள். ஆனால் நீங்கள் அதை ஒரு மரணமாகச் செய்வீர்களானால் - தியானம் மரணமாக - பின் நீங்கள் அதிலிருந்து உயிர் வாழ முடியாது. யாரோ மற்ற ஒருவர் அதிலிருந்து வெளிவருவார், நீங்களல்ல. நீங்கள் போய் விட்டீர்கள். ஒரு புதிய இருப்புத்தன்மை (being) உங்களிலிருந்து வெளிவந்துள்ளது - புதுஐமயாக, இளமையாக, தூய்மையாக. உங்களால் அதை அறிந்து கொள்ளக்கூட முடியாது. ஒரு தொடர்பற்ற நிலை உள்ளது. நீங்கள் முழுதுமாக விட்டுவிடப்படுகிறீர்கள். ஏதோ ஒன்று புதியது திடீரென மேலே வந்துள்ளது - அவை ஒன்றுடன் ஒன்று சம்பந்தப்பட்டதில்லை.

இது புரிந்து கொள்வதற்கு மிகவும் கடினமானது. அந்தப் புதிய இருப்புத்தன்மை (being) உங்களுக்குப் பின்னால் மறைந்துள்ளது.

ஆனால் மேல் ஓடு, உங்களை மூடிக்கொண்டிருப்பது மிகவும் கடினமாக உள்ளது. நீங்கள் ஒரு விதை போல உள்ளீர்கள். உள்ளே ஆழத்தில் எல்லாம் மறைந்துள்ளன. முழு மரமும் - பூக்கள், பழங்கள் எல்லாம் - ஆனால் மேல் ஓடு மிகவும் கடினமாக உள்ளது. மேல் ஓடு மரணமடைய முன்வரவில்லை. மேல் ஓடு மரணமடைந்தால் மரம் பிறக்க முடியும். மரம் மேல் ஓட்டிலிருந்து முற்றிலும் வேறான ஒன்றாகும். அது அதனுடன் செல்வதற்கு ஒன்றுமில்லை. மேல் ஓடு பாதுகாப்பு மட்டுமே - ஆனால் பாதுகாப்பு முழுதுமாகி விடாது.

உங்களுடைய அகங்காரம் ஒரு மேல் ஓட்டைப் போன்றது. அகங்காரம் மரணமடையுமானால், நீங்கள் வளர்ச்சியடைவீர்கள் - நீங்கள் ஒரு கடவுளாகி விடுவீர்கள்! அகங்காரத்துடன தொடர்ந்து இருந்து வருவீர்களானால் நீங்கள் வருந்துபவராகி விடுவீர்கள். அகங்காரமற்று இருக்கும்போது, நீங்கள் முழுதுமான பேரானந்த நிலையில் இருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் அதை அறிந்ததில்லை; மேல் ஓடு ஒருபோதும் அதைப்பற்றிக் கேள்விப்பட்டதில்லை. நீங்கள் மேல் ஓட்டின் மூலம் என்னைக் கவனித்து வருகிறீர்கள். அதனால்தான் என்னிடம், "மரணமடைவதற்கு ஏதாவது கொடுங்கள்" என்று கேட்டுக்கொண்டே இருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் அதை விரும்பவில்லை.

ஒவ்வொரு நேரமும் நான் மரணமடைவதற்கு ஏதோ ஒன்று கொடுத்துக் கொண்டிருக்கிறேன். உண்மையில் வேறு எதையும் நான் கொடுக்கவில்லை. மதத்தினுடைய முழு விஞ்ஞானமுமே மரணம் என்ற விஞ்ஞானமே. அது உங்களுக்கு எப்படி முழுமையாக மரணமடைவது என்பதைக் கற்றுக் கொடுப்பதற்கே, அதனால் எதுவுமே விடப்படவில்லை. முழு மேல் ஓடும் பூமியில் மறைந்து விடுகிறது. கரைந்து விடுகிறது. மரம் முளை விடுகிறது.

ஆனால் நீங்கள் யாரோ ஒருவர் அதை உங்களுக்காகச் செய்ய வேண்டுமென்று எண்ணுகிறீர்கள்? அது முடியாதது. நீங்கள் தற்கொலை செய்துகொள்ள வேண்டும். உங்களைக் கொலை செய்ய முடியாது. அதை ஞாபகத்தில் கொள்ளுங்கள். 'தற்கொலை' என்ற வார்த்தை மிக அழகியது. நான் உடலில் தற்கொலை பண்ணிக் கொள்வதைப் பற்றிப் பேசவில்லை; நான் மனதில், அகங்காரத்தில் தற்கொலை பண்ணிக் கொள்வதை பண்ணிக்கொள்வதைப் பற்றி

பேசுகிறேன். ஒரு மனமற்ற அகங்காரமற்றவராகுங்கள். முழு பிரபஞ்ச இருப்பாவதற்கு (existence) முடியும். நீங்கள் லட்சக்கணக்கான பிறவிகளில் அதை சுமந்து வந்து கொண்டிருக்கிறீர்கள். அது உங்களுள் இருந்து கொண்டிருக்கிறது. அது முன்பே அங்கிருக்கிறது, ஒரு சரியான நிலம், மேல் ஓடு மறைகிறது... மரம் அதனுடைய எல்லா மகிமையுடனும், அழகுடனும் அங்குள்ளது.



**உங்களுடைய வார்த்தைகள் எங்கிருந்து வருகின்றன? அவற்றை நீங்கள் எப்படி சம்பந்தப்படுத்துகிறீர்கள்? (விவரிக்கிறீர்கள்)**

அவற்றை சம்பந்தப்படுத்துவதற்கு ஒருவருமே இல்லை. அவை எங்கிருந்தோ வருகின்றன. ஒருவரும் அதை நிர்வகிக்கவில்லை. அவற்றை நிர்வகிக்க நான் அங்கே இல்லை. நீங்கள் ஒரு கேள்வி கேட்கிறீர்கள். அதற்கு மறுமொழி எங்கிருந்தோ வருகிறது. அவை என்னுடைய வார்த்தைகள் அல்ல. கேள்விகள் உங்களுடையவை. பதில் என்னுடையதல்ல. கேள்விகள் உங்கள் மனதிலிருந்து வருகின்றன. பதில்கள் என்னுடைய மனத்லிருந்து வரவில்லை. மனம் அதைப் பெறுவதற்கு மட்டுமே உபயோகிக்கப்படுகிறது. ஆனால் அது அங்கிருந்து வரவில்லை. சாதனம் மூலமாகாது.



52. பின்பு ஒளியைத் தடுத்துள்ள மறைப்பை அகற்றுவது வருகிறது.

53. பின்பு மனம் ஒருமுனைப்படுவதற்குத் தயாராகுகிறது.

54. யோகத்தின் ஐந்தாவது அங்கம் ப்ரத்யாஹாரம் - மூலத்திற்குத் திரும்புவது - கவனத்தைத் திருப்பும் வெளிப்புறத்திலுள்ள பொருள்களைத் துறப்பதன் மூலம் மனதினுடைய புலன்களைக் கட்டுப்படுத்தும் ஆற்றலைப் புதிப்பிப்பது.

55. பின்பு எல்லாப் புலன்களையும் முழுமையாக வசப்படுத்தும் தன்மை வருகிறது.

சி.எஸ். லூயிஸ் (C.S.Lewis) மனிதன் நீக்கப்பட வேண்டிய பொருளாகும் என்று சொல்லுகிறார். பி.எஃப். ஸ்கின்னர் (B.F. Skinner) 'நல்ல விடுதலை' என்று சொல்லுகிறார். ஷேக்ஸ்பியரின் ஹேம்லட்டில் மனிதனைப் பற்றி, "எப்படி ஒரு தெய்வம் போல இருக்கிறான்" என்று சொல்லப்பட்டுள்ளது. பாவ்லோவ் (Pavlov), "எப்படி ஒரு நாய் மாதிரி இருக்கிறான்" என்று சொல்லுகிறார். கஷ்டம் என்னவென்றால் மனிதன் இரண்டும் - கடவுளைப் போல, நாயைப் போல இரண்டும். மனிதன் ஏகமாக இருந்தால் - நாயைப் போல அல்லது கடவுளைப் போல - அங்கே பிரச்சினை இல்லை. பிரச்சினை எழுவது ஏனென்றால் முரண்பட்டவுடன் போல் மனிதன் தோன்றுகிறான்: மேல் தளத்தில், ஒரு நாயைவிட மோசமானவன். மையத்தில் பிரகாசமுள்ளவன், எந்தக் கடவுளையும்விட அதிகப் பிரகாசமுள்ளவன்.

வெளியிலிருந்து மனிதனைப் பார்ப்பீர்களானால் மனிதன் நீக்கப்பட்டால், அங்கே சில தீங்குள்ளது என்று நீங்கள் சொல்லமாட்டீர்கள் - "அது நல்லது, நல்ல விடுதலை ஸ்கின்னர் (skinner) சரியே. பூமி மேம்பட்டிருக்கும் அதிக அமைதியுடன். இயற்கை சந்தோஷமாக இருக்கும்." ஆனால் மனிதனை ஆழமாகப் பார்ப்பீர்களானால் அவனுடைய எல்லையற்ற ஆழத்தில், பூமியில் மனிதன் இல்லாமல் அமைதியாக இருக்கலாம். ஆன்னால் அந்த அமைதி உயிரற்றது, அதனுள் எந்த சங்கீதமும் இல்லாமல் - அதனுள் எந்த ஆழமும் இல்லாமல். மலர்கள் அங்கே இருக்கும், ஆனால் யார் அவற்றின் அழகை அறிவார்கள்? பறவைகள் பாடிக்கொண்டே இருக்கின்றன. ஆனால் யார் கவிதை நயத்தோடு, இரகசியமானதைப் பாடுகின்றன என்று சொல்லுவார்கள்? மரங்கள் பசுமையுடன் இருக்கின்றன. ஆனால் அதே நேரத்தில் பசுமையாக இல்லை. ஏனென்றால் அந்தப் பசுமை மனித இதயத்தினால் ஓர் ஆழமான எதிரொலியாக அங்கீகரிக்கப்பட வேண்டும்.

மனிதனுடன் பாராட்டுதல் மறைந்து விடும். மனிதனுடன் பிரார்த்தனை மறைந்து விடும். மனிதனுடன் கடவுள் மறைந்து விடுவார். பூமி அங்கே இருக்கும். ஆனால் கடவுளற்றதாக. அமைதி, ஆனால் அது இடுகாட்டு அமைதியாக. அமைதி இதயத்தின் துடிப்புடன் கூடியதாக இராது. அது பூமி முழுவதிலும் பரவியிருக்கலாம். அது விரிந்திருக்கலாம், ஆனால் அது ஆழத்தைத் தவற விட்டிருக்கும். ஓர் அமைதி ஆழமில்லாமல் இனி அமைதியாக இல்லை. உலகம் புனிதமற்றதாக இருக்கும்; இனி தெய்வீகமானதாக இராது.

தெய்விகத்தை மனிதன் உருவாக்குகிறான், ஏனென்றால் மனிதனின் பின்னால் ஆழத்தில் தெய்விகம் மறைந்துள்ளது. மனிதனால் ஆலயங்கள் இல்லாமல் வாழ முடியாது. சர்ச்சுகள் இல்லாமல், மசூதிகள் இல்லாமல், ஏனென்றால் மனிதன் அவனே ஒரு கோயிலாவான். அவன் கோயில்களை உருவாக்கிக் கொண்டே இருப்பான் - நாஸ்திகர்கள்கூட கோயில்களை உருவாக்குகிறார்கள். க்ரெம்ளின் (Kremlin) கோயிலைப் பாருங்கள். க்ரெம்ளின் முன்னால் கடந்து செல்லும் கம்யூனிஸ்டுகள், அல்லது லெனின் அழகான கல்லறை முன்பு, கடவுள் நம்பிக்கை கொண்டவர்கள் வழிபடும் மற்ற கடவுள் போல வழிபடுகிறார்கள். மனிதனால் கடவுள் இல்லாமல் வாழ முடியாது. ஏனென்றால் அடி ஆழத்தில் அவன் ஒரு கடவுள்.

பிரச்சினை, கஷ்டம் எழுவது ஏனென்றால் மனிதன் இரண்டும்: இரண்டு எல்லைகளுக்கு இடையில் ஓர் இணைப்புப் பாலமாகும். பொருளுக்கும், மனதிற்கும் இடையில், புனிதமற்றதற்கும், புனிதத்திற்கும் இடையில் வாழ்விற்கும் மரணத்திற்கும் இடையில், அது அழகும்கூட: இரகசியத்துடன் முரண்பட்டது போன்ற தோற்றத்துடன், மனிதன் ஒரு புதிர் மட்டுமல்ல. அவன் ஓர் இரகசியமாகக்கூட ஆகிறான்.

என்ன செய்வது? நீங்கள் பாவ்லோவுடன் (Pavlov) அவருடைய சீடர் பி.எஃப். ஸ்கின்னருடன் (B.F. Skinner) தீர்மானிப்பீர்களானால். மனிதனை அறிந்து கொள்ளாமல் நீங்கள் தீர்மானித்து விட்டீர்கள். மனிதனைப் புரிந்து கொள்ளாமல், அவனை அறிந்து கொள்வதற்கு ஒரு முயற்சிகூடச் செய்யாமல். நீங்கள் மிக விரைவில் புத்தருடன், மகாவீரருடன், கிருஷ்ணருடன், இயேசுவுடன், பதஞ்சலியுடன் தீர்மானித்து விடுவீர்களானால், உங்களுடைய ஏற்றுக்கொள்ளும்

தன்மை முதிர்ச்சியடையாதது ஏனென்றால் பின், மனிதன் ஒரு கடவுள்'' என்பது தொடர்ந்து ஒரு நம்பிக்கையாக இருந்து விடும். அது ஒருபோதும் உண்மையாகாது. நீங்கள் எந்த ஒன்றுடனாவது தீர்மானிக்க அவசரப்பட்டால், பின்பு நீங்கள் தவற விடுவீர்கள். மனிதனை அறிந்து கொள்வதற்கு ஓர் ஆழ்ந்த பொறுமை தேவைப்படுகிறது.

மனிதனை ஸ்தூலமாக அறிந்து கொள்வதற்கு எந்த வழியும் இல்லை. நீங்கள் விஞ்ஞானிகள் தூண்டப்படட்டு போல மனிதனை ஸ்தூலமாக அறிந்துகொள்ள முயன்றீர்களானால், நீங்கள் பாவ்லோவ் செய்த தவறுபோல செய்கிறீர்கள் - மனிதன் நாய்போல காணப்படுகிறான். மனிதனை அறிந்து கொள்வதற்கு ஒரே வழி, உங்களுள் உள்ள மனிதனை அறிந்து கொள்வதுதான். மனிதனுக்கு முன் எதிரெதிராக வருவதற்கு ஒரே வழி உங்களைச் சந்திப்பதுதான்.

உங்களுள் மிக அதிகமான சக்தியை நீங்கள் சுமந்து கொண்டிருக் கிறீர்கள். நீங்கள் அதனுடன் பரிச்சயம் அடையவில்லையென்றால், அதை வெளியில் மற்றவர்களிடம் இருப்பதைப் பார்ப்பதற்கு உங்களால் முடியாது. இதை ஒரு பிரமாணமாக ஞாபகத்தில் வையுங்கள். உங்களை நீங்கள் எந்த அளவு அறிந்து கொள்கிறீர்களோ அந்த அளவு மற்றவர்களை உங்களால் அறிந்து கொள்ள முடியும். ஒரு சிறிதும் அதைவிட அதிகமாக இல்லை - முடியாது. அறிபவர் முதலில் அறிந்தவராக இருக்க வேண்டும். அதன்பின்தான் அறிந்த தன் இரகசியம் ஊடுருவிச் செல்லும். நீங்கள், உங்கள் அழத்தை அறிய வேண்டும். அதன்பின்தான் அடுத்தவர்களுடைய ஆழத்தை அறிவதற்கு உங்கள் கண்கள் பொருத்தமாகின்றன.

உங்கள் இருப்புத்தன்மையின் (being) மேற்பரப்பில் நீங்கள் தொடர்ந்து இருந்தீர்களானால், பின் முழு பிரபஞ்ச இருப்பும் (existence) மேற்பரப்பாகவே இருந்து வரும். நீங்கள் உங்களைக் கடலில் உள்ள ஓர் அலை மட்டுமே அறிந்து கொள்ளவே இல்லை. மற்ற எல்லா அலைகளும் அலைகளாகவே தொடர்ந்து இருந்து வருகின்றன. ஒருமுறை உங்களது இருப்புத்தன்மையினுள் (being) பார்ப்பீர்களானால், நீங்கள் கடலாகி விடுகிறீர்கள் - நீங்கள் கடலாக இருந்து வருகிறீர்கள். நீங்கள் அதை அறிந்து கொண்டீர்கள் - மற்ற எல்லா அலைகளும் மறைந்து விட்டன. இப்போது கடல் மட்டும் அசைந்து கொண்டிருக்கிறது. இப்போது ஒவ்வோர் அலைகளுக்கும்

பின்னால் - அழகானது, அழகற்றது, சிறியது, பெரியது. அது பொருளில்லை. அதே கடல் இருக்கிறது.

யோகம் உங்கள் சொந்த இருப்புத்தன்மையின் உள்ளாழ்ந்த ஆழத்தினுடன் ஒத்துப்போகும் ஒரு முறையாகும். உங்கள் ஆன்மாவின் தன்னிலையாகும். அது எல்லையற்றதாகும். நீங்கள் அதனுள் நுழையலாம், ஆனால் நீங்கள் ஒருபோதும், "நான் எல்லாம் அறிந்துள்ளேன்" என்று சொல்லும் ஒரு நிலைக்கு வரமுடியாது. நீங்கள் போய்க்கொண்டே இருக்கிறீர்கள்.... அது எல்லையற்றது. நீங்கள் ஆழத்தில் அதனுள் இருக்கலாம், ஆயினும் எப்போதும் தொடர்ந்து அதிகம் இருந்து வருகிறது. நீங்கள், "இப்போது நான் எல்லைக்கு வந்து விட்டேன்" என்று சொல்லும்போது, அந்த நிலை ஒருபோதும் வருவதில்லை. உண்மையில் எல்லைகள் இருப்பதில்லை. பிரபஞ்சத்தில் அவை இருப்பதில்லை. வெளிப்பக்கம் எல்லைகள் இல்லை; பிரபஞ்ச இருப்பு (existence) எல்லையற்றது. அவை உங்கள் தன்னிலையினுள் இல்லை. எல்லைகள் எப்போதும் உண்மையல் லாதவை. ஆழமாக நீங்கள் செல்லும்போது எல்லையற்றது அதிகமாகத் திறக்கப்படுகிறது.

ஒருமுறை நீங்கள் அதனுள் விழுந்துவிட்டால், ஒருமுறை நீங்கள் அதனோடு பறந்து விட்டால், இப்போது நீங்கள் அறிகிறீர்கள். இப்போது சிறியது மறைந்து விட்டது, எல்லைகள் மறைந்து விட்டன, வரம்புகள் மறைந்து விட்டன. இப்போது நீங்கள் யாரோ ஒருவரின் கண்களினுள் பார்க்கலாம், எல்லையற்றது அங்கே காத்திருப்பதை அறியலாம். முதன் முறையாக, அன்பு உண்டாவது சாத்தியமாகிறது. உங்களுடைய ஆழத்தை அறியும் போதுதான் அன்பு சாத்தியமாகிறது. கடவுள் மட்டுமே அன்பு செலுத்துகிறார்கள். கடவுள் மட்டுமே அன்பு செலுத்த முடியும். அன்பு என்ற பெயரில் அவர்கள் சண்டையிடு கின்றனர். அவர்களுடைய சண்டையிலும்கூட அவர்கள் அன்பு செலுத்துகிறார்கள்; இல்லையென்றால் சாத்தியமில்லை.

நீங்கள் உங்களுடைய இருப்புத்தன்மை (being) தெய்விகமானது என்று அறியும்போது, முழு பிரபஞ்ச இருப்பும் (existence) உடனடியாக உருமாற்றமடைகிறது. அது இனி பழைய பிரபஞ்ச இருப்பாக இல்லை, பழையதாக, தினப்படி வாழ்க்கையாக, சாதாரணமானதாக இல்லை. அதற்குப் பின்னால் சாதாரணமானது எதுவும் இருப்பதில்லை. எல்லாம்

அசாதாரணமான (சிறப்பான) வர்ணங்களை, ஒரு மாபெரும் மகிமை எடுத்துக் கொள்கின்றன. சாதாரணமான கூழாங்கற்கள் வைரங்களாகின்றன - ஒவ்வொரு இலையும் உயிருள்ளதாக, மிக அதிகமான வாழ்வு அதன்பின் அதனுள், அதன்கீழ், அதற்கப்பால் மறைந்துள்ளதாகிறது. முழு பிரபஞ்ச இருப்பும் (existence) தெய்வீகமாகிறது. உங்களுடைய கடவுளை நீங்கள் அறியும் அந்த வினாடியில் கடவுள் எங்குமிருப்பதை நீங்கள் மட்டுமே அறிகிறீர்கள். அறிவதற்கு அதுதான் ஒரே வழி.

முழு யோகமுமே ஓர் ஆராய்ச்சி முறையாகும். அது மறைந்துள்ளதை எப்படி வெளிப்படுத்துவது, உங்களுள் உள்ள கதவுகளை எப்படித் திறப்பது, கோயிலாக உள்ள உங்களுள் நுழைவது எப்படி, எப்படி உங்களைக் கண்டுபிடிப்பது என்பதைப் பற்றியது. நீங்கள் அங்கே இருந்து கொண்டிருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் அதைக் கண்டுபிடிக்கவில்லை. அந்தச் செல்வம் உங்களால் ஒவ்வொரு வினாடியும் சுமந்து கொண்டிருக்கப்பட்டுள்ளது. உங்களது ஒவ்வொரு மூச்சிலும் உள்ளே அல்லது வெளியே அந்தச் செல்வம் அங்கே உள்ளது. நீங்கள் உணர்வுடன் இல்லாமல் இருக்கலாம். ஆனால் நீங்கள் ஒருபோதும் அதைத் தவறவிடவில்லை. நீங்கள் முழுவதும் தெரியாதிருக்கலாம், ஆனால் நீங்கள் ஒருபோதும் அதை இழக்கவில்லை. நீங்கள் அதை முழுவதும் மறந்திருக்கலாம். ஆனால எந்த வழியிலும் அதை இழப்பதற்கில்லை - ஏனென்றால் நீங்கள் அதுவே.

ஒரே கேள்வி என்னவென்றால், எப்படி அதைக் கண்டுபிடிப்பது. அது மூடப்பட்டுள்ளது. யோகம் படிப்படியாக, மெதுவாக, ஆழ்ந்த இரகசியத்தில் செல்ல முயலுகிறது. எட்டு நிலைகளில் யோகம் கண்டுபிடிப்பை முழுமையாக்குகிறது. ஆரம்ப நிலைகள் பகிரங்க யோகம் (behirang) வெளிப்பக்கம் உள்ள யோகம் என்று அழைக்கப்படுகிறது. யமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யாஹாரம் - இந்த ஐந்து படிகளும் வெளியிலுள்ள யோகம் என்று அறியப்படுகிறது. இந்த மூன்றும், கடைசி மூன்று தாரணை, தியானம், சமாதி - அந்தரங்க யோகம் இப்போது சூத்திரம்.

**தத: க்ஷியதே ப்ரகாசாவரணம்**

பின்பு ஒளியைத் தடுத்துள்ள மறைப்பை அகற்றுவது வருகிறது.

நான்கு படிகளும் எடுக்கப்பட்டுள்ளன. ஐந்தாவது வெளிப்பக்கம் உள்ள யோகத்தின் நான்கிற்கும் கடைசி மூன்று உள்பக்கம் உள்ள யோகத்திற்கும் இடையில் ஒரு பாலம் போல வேலை செய்கிறது. ஐந்தாவது வெளிப்பக்க யோகத்தின் பகுதி ஒரு பாலம் போல செயல்படுகிறது - ப்ரத்யாஹாரம்: இந்த வார்த்தை "மூலத்திற்குத் திரும்புவது" என்று பொருள்படுகிறது. மூலத்தை அடைவது அல்ல, மூலத்திற்குத் திரும்புவது. திருப்பும் செயல்முறை ஆரம்பித்து விட்டது. இப்போது சக்தி இனி வெளிப்பக்கம் செல்வதில்லை, சக்தி இனி பொருட்களில் ஆர்வமில்லாததாக உள்ளது - சக்தி ஒரு திருப்பம் கொண்டு விட்டது, சுற்றித் திரும்புவது. அது உள்பக்கம் திரும்பி உள்ளது. இதைத்தான் இயேசு கன்வர்சன் என்று அழைக்கிறார். பின்னே வருவது.

சாதாரணமாக சக்தி வெளிப்பக்கம் செல்கிறது. நீங்கள் பார்ப்பதற்கு விரும்புகீர்கள். நீங்கள் முகர்வதற்கு விரும்புகிறீர்கள். நீங்கள் தொட்டு உணர்வதற்கு விரும்புகிறீர்கள். சக்தி வெளியே செல்கிறது. யார் உங்களுள் மறைந்துள்ளார் என்பதை நீங்கள் முழுதுமாக மறந்து விட்டீர்கள். நீங்கள் கண்களாக, காதுகளாக, மூக்காக, கைகளாக ஆகி விட்டீர்கள். யார் இந்தப் புலன்களின் பின்னால் மறைந்திருப்பது என்பதை, யார் உங்களுடைய கண்கள் மூலமாகப் பார்ப்பது என்பதை. நீங்கள் கண்கள் அல்ல. உங்களுக்கு கண்கள் உள்ளன, சரி, ஆனால், நீங்கள் கண்கள் அல்ல. கண்கள் ஜன்னல்கள் மட்டுமே. யார் ஜன்னல்களுக்குப் பின்னால் நிற்பது? யார் கண்களின் மூலமாகப் பார்ப்பது? நான் உங்களைப் பார்க்கிறேன். கண்கள் உங்களைப் பார்க்கவில்லை. கண்கள் தாங்களாகவே பார்க்க முடியாது. நான் வெளியே பார்த்துக்கொண்டு ஜன்னலின் பக்கத்தில் நிற்கவில்லை என்றால் கண்கள் தாங்களாகவே பார்க்க முடியாது.

இது உங்களுக்குக்கூட பல தடவை நிகழும். நீங்கள் ஒரு புத்தகத்தைப் படித்துக்கொண்டே இருக்கிறீர்கள். நீங்கள் பக்கங்களைப் படிக்கிறீர்கள். திடீரென நீங்கள் ஒரு வார்த்தைகூட படிக்கவில்லை என்பதை உணர்கிறீர்கள். கண்கள் அங்கு இருக்கின்றன. ஆனால் நீங்கள் அங்கு இல்லை. கண்கள் ஒரு வார்த்தையிலிருந்து மற்றொன்றிற்கு நகர்ந்து கொண்டே இருக்கின்றன. ஒரு வரியிலிருந்து மற்றொன்றிற்கு, ஒரு பாராவிலிருந்து மற்றொன்றிற்கு, ஒரு பக்கத்திலிருந்து மற்றொன்றிற்கு, ஆனால் நீங்கள் அங்கே இல்லை.

திடீரென நீங்கள், "கண்கள் மட்டுமே நகர்ந்து கொண்டிருக்கின்றன. நான் அங்கில்லை" என்று கவனமடைகிறீர்கள். நீங்கள் ஆழ்ந்த வலியில், வேதனையில் உள்ளீர்கள். பின்பு கண்கள் திறந்திருக்கும். நீங்கள் பார்க்க மாட்டீர்கள். அவை மிக அதிகமான கண்ணிரால் நிறைந்திருக்கும். அல்லது நீங்கள் அதிக சந்தோஷமாக இருந்தால், அவ்வளவு சந்தோஷத்தினால் கவனம் கொள்வதில்லை. திடீரென உங்களது கண்கள் அதிக உற்சாகத்தினால் நிறைந்திருக்கும். அவை பார்ப்பதில்லை.

நீங்கள் கடைத்தெருவில் இருக்கிறீர்கள், யாரோ ஒருவர், "உங்கள் வீடு தீப்பற்றியுள்ளது" என்று சொல்லுகிறார் - நீங்கள் ஓட ஆரம்பிக்கிறீர்கள். நீங்கள் நிறைய மக்களைத் தெருவில் பார்க்கிறீர்கள். ஒருசில மக்கள், "குட்மார்னிங். எங்கே போகிறீர்கள்? ஏன் நீங்கள் இவ்வளவு அவசரத்தில் உள்ளீர்கள்? என்ன நிகழ்ந்தது?" என்று சொல்லுகிறார்கள். உங்கள் கண்கள் பார்த்துக்கொண்டே இருக்கின்றன, உங்கள் காதுகள் கேட்டுக்கொண்டே இருக்கின்றன, ஆனால் நீங்கள் அங்கே இல்லை. உங்கள் வீடு தீப்பற்றிக் கொண்டது... உங்களுடைய முனனிலை அங்கே இல்லை. அதிகம் இல்லை. அப்புறம் உங்களைக் கேட்டார்களானால், "யார் உங்களிடம் கேட்டார்கள் என்பதை ஞாபகம் வைத்துள்ளிர்களா, "எங்கே போகிறீர்கள்? ஏன் இவ்வளவு வேகமாகச் செல்கிறீர்கள்?" உங்களால் ஞாபகப்படுத்த முடியாது. நீங்கள் அந்த மனிதரைப் பார்த்திருக்கலாம், அவர் என்ன சொன்னார் என்பதைக் கேட்டிருக்கலாம். ஆனால் நீங்கள் அங்கே இல்லை.

காதுகள் அவையாகவே கேட்க முடியாது. கண்கள் அவையாகவே பார்க்க முடியாது. உங்களுடைய முன்னிலை தேவைப்படுகிறது. நீங்கள் விளையாட்டு மைதானத்தில் கால்பந்து ஆடிக்கொண்டிருக்கலாம். ஹாக்கி அல்லது வாலிபால் அல்லது ஏதோ ஒன்று. விளையாட்டு உச்சத்தில் இருக்கும் போது நீங்கள் உங்கள் கால்களில் இடித்துக் கொள்கிறீர்கள். இரத்தம் ஓட ஆரம்பிக்கிறது... ஆனால் நீங்கள் அவ்வளவு ஆழமாக விளையாட்டில் ஒன்றுபட்டிருக்கிறீர்கள். நீங்கள் உணரவில்லை. அது வலிக்கிறது. ஆனால் அதை உணர்வதற்கு நீங்கள் அங்கே இல்லை. அரை மணி நேரத்திற்குப் பின்பு விளையாட்டு (ஆட்டம்) நிறுத்தப்படுகிறது. உடனடியாக உங்களுடைய கவனம் பாதங்களின் மேல் செல்கிறது.

இரத்தம் வழிகிறது - இப்போது அது வலிக்கிறது. அரை மணி நேரத்திற்கு இரத்தம் ஓடிக்கொண்டிருந்தது. ஆனால் அது வலிக்கவில்லை - நீங்க அங்கே இல்லை.

இதை ஆழமாகப் புரிந்துகொள்ள வேண்டும். புலன்கள் தங்கள் அளவில் சக்தியற்றவை, நீங்கள் ஒத்துழைக்கவில்லையென்றால். யோகாவின் முழுக் கலையுமே அதுதான். நீங்கள் ஒத்துழைக்க வில்லையென்றால் புலன்கள் மூடிக்கொள்ளும். நீங்கள் ஒத்துழைக்க வில்லையென்றால் மாற்றம் ஆரம்பமாகும். நீங்கள் ஒத்துழைக்க வில்லையென்றால் பிரத்யாஹாரம் உள்ளே வரும். அதைத்தான் மணிக்கணக்காக, வருடக்கணக்காக அமைதியாக உட்கார்ந்திருக்கும் மக்கள் செய்கின்றனர் - அவர்கள் தங்களுக்கும், தங்களுடைய புலன்களுக்கும் இடையில் உள்ள ஒத்துழைப்பை விட்டு விடுவதற்கு முயன்று கொண்டு இருக்கின்றனர். சக்தி பார்ப்பதில், கேட்பதில், தொடுவதில் தொடர்ந்து இல்லையென்றால், சக்தி உள்நோக்கிச் செல்ல ஆரம்பிக்கிறது. அதுதான் பிரத்யாஹாரம். மூலத்தை நோக்கி நகர்தல், எந்த இடத்திலிருந்து வந்தீர்களோ அதை நோக்கி நகருதல், மையத்தை நோக்கி நகருதல், இப்போது நீங்கள் இனி புற எல்லைக்கு நகர்ந்து செல்வதில்லை.

இது ஆரம்பமாகும். முடிவு சமாதியில் உள்ளது. பிரத்யாஹாரம் சக்தி வீட்டை நோக்கிச் செல்வதன் ஆரம்பமாகும். நீங்கள் வீட்டை அடைந்தபோது, வந்து சேர்ந்தபோது சமாதி உள்ளது. நான்கு - யாமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யாஹாரம் ஐந்தாவது அதற்காகத் தயாரிப்பு பண்ணுவதாகும். பிரத்யாஹாரம் ஆரம்பமாகும், திரும்புவது; சமாதி முடிவாகும்.

"பின்பு ஒளியைத் தடுத்துள்ள மறைப்பை அகற்றுவது வருகிறது."

கடைசி சூத்திரம் பிராணாயாமத்தைப் பற்றியது. பிராணாயாமம் பிரபஞ்சத்துடன் இசைவுடன் இருப்பதைப் பெறுவதற்கு ஒரு வழியாகும். ஆனால் நீங்கள் தொடர்ந்து வெளிப்பக்கம் இருந்து வருகிறீர்கள். நீங்கள் அந்த ஒரு வழியில், அந்த இசைவில் சுவாசிக்கும் போது முழுமையுடன் இணக்கமாகிறீர்கள். நீங்கள் முழுமையுடன் சண்டையிடுவதில்லை. நீங்கள் சரணடைந்து விட்டீர்கள். நீங்கள் இனி முழுமையின் பகைவனாக இல்லை. நீங்கள் ஒரு காதலராக ஆகிவிட்டீர்கள். அதுதான் ஒரு மத நம்பிக்கை உள்ள மனிதர் என்று

கருதுவதாகும். இப்போது அவர் போராட்டத்தில் இல்லை. இப்போது அவர் பிரபஞ்ச இருப்புடன் (existence) இயங்கிக் கொண்டிருக்கிறார். இப்போது முழுமையினுடைய குறிக்கோளுடன் இணக்கத்துடன் உள்ளார். அங்கே ஏதாவது இருக்குமானால், அவருக்குத் தனிப்பட்ட அடைய வேண்டிய இலக்கு இல்லை, முழுமையினுடைய இலக்கே அவருடைய. அவர் நதியுடன் மிதந்து கொண்டிருக்கிறார், மேல் ஓட்டத்துடன் சண்டையிடவில்லை.

உண்மையில் நீங்கள் மிதக்கும்போது நீங்கள் மறைந்து விடுகிறீர்கள், ஏனென்றால் அகங்காரம் சண்டையிடும் போதுதான் இருக்க முடியும். எதிர்ப்பு இருக்கும் போதுதான் அகங்காரம் இருக்க முடியும். முழுமைக்கு எதிராக சில தனிப்பட்ட குறிக்கோள் உங்களுக்கு இருக்கும் போதுதான் அகங்காரத்தினால் இருக்க முடியும். எப்படி அகங்காரம் இருக்கிறது என்ற இதைப் புரிந்து கொள்வதற்கு முயற்சி செய்யுங்கள். மக்கள் என்னிடம் வந்து, "நாங்கள் அகங்காரத்தை விட்டுவிட விரும்புகிறோம்" என்று சொல்லுவார்கள். நான் அவர்களிடம், "நீங்கள் அகங்காரத்தை விட்டுவிட விரும்பினால், அதை உங்களால் விட்டுவிட முடியாது. ஏனென்றால் நீங்கள் யார் அதை விடுவதற்கு? இது யார், யார் சொல்லுவது, "நான் விட்டுவிட விரும்புகிறேன்" என்று. இதுதான் அகங்காரம். நீங்கள் அகங் காரத்துடனும் கூட சண்டையிடுகிறீர்கள்" என்று சொல்லுகிறேன்.

நீங்கள் எளிமையாக இருப்பதாக பாசாங்கு செய்யலாம், நீங்கள் உங்கள் மேல் பணிவைக் கட்டாயப்படுத்தலாம், ஆனால் அகங்காரம் இருக்கும். நீங்கள் ஓர் அரசனாக இருந்திருக்கலாம். இப்போது நீங்கள் ஒரு பிச்சைக்காரனாகி இருக்கலாம். ஆனால் அகங்காரம் உள்ளது. அது அரசனாக இருந்தது, இப்போது அது எளிமையான பிச்சைக்காரனாக இருக்கும். உங்களுடைய நடக்கும் முறையில், பார்க்கும் முறையில் அதைக் காண்பிக்கும். நீங்கள் செல்லும் முறையில் அதை வெளிப்படையாக அறிவிப்பீர்கள். நீங்கள் பேசும் முறையில் - நீங்கள் வெளிப்படையாகத் தெரிவிப்பீர்கள். நீங்கள், "நான் உலகத்திலேயே மிகவும் எளிமையான மனிதன்" என்று சொல்லலாம். அது எந்த வித்தியாசத்தையும் உண்டாக்காது. முன்னால் நீங்கள் உலகத்திலேயே பெரிய மனிதன். இப்போது நீங்கள் எளிய மனிதன் - ஆனால் நீங்கள் அசாதாரணமானவர். நீங்கள் அங்கே இருக்கிறீர்கள்.

நீங்கள் அகங்காரத்துடன் சண்டையிட ஆரம்பித்தீர்களானால், நீங்கள் ஒரு நுண்ணிய அகங்காரத்தை உருவாக்குகிறீர்கள். அது அதிக ஆபத்தானது, ஏனென்றால் அந்த நுண்ணிய அகங்காரம், ஒரு பக்தியுள்ள அகங்காரம். அது மத நம்பிக்கை உள்ளதாக பாவனை செய்யும். ஆரம்பத்தில் அது இந்த - உலகத்தைச் சார்ந்ததாக மட்டும் இருக்கும். இப்போது அது அந்த - உலகத்தைச் சார்ந்ததாகும் - மிகப்பெரியது - சக்தி வாய்ந்தது - நுண்ணியது - அடக்கியாளும் சக்தி மிகவும் ஆபத்தானது. அதிலிருந்து வெளிவருவது கஷ்டமானது. நீங்கள் ஒரு சிறிய ஆபத்திலிருந்து மிகப்பெரிய ஒன்றிற்கு நகர்ந்துள்ளீர்கள். நீங்கள் பொறியினுள் அதிகமாகச் சிக்கிக்கொண்டு உள்ளீர்கள். நீங்கள் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டுள்ளீர்கள், ஒரு பலமான வழியிலும் கூட.

பிராயாணாமம் தொடர்ந்து, தப்பாக, "சுவாசத்தைக் கட்டுப்படுத்துதல்" என்று மொழி பெயர்க்கப்பட்டு வருவது கட்டுப்படுத்துதல் இல்லை. பிராணாய்ாமம் பிரபஞ்சத்துடன் புறத் தூண்டுதல் இன்றி தானே இயங்குகிற ஒரு முறையாகும். அது ஒரு கட்டுப்படுத்துதலே இல்லை. எல்லாக் கட்டுப்படுத்துதலும் அகங்காரத்தைச் சார்ந்தது. இல்லையென்றால் யார் கட்டுப்படுத்துவது? அகங்காரம் கட்டுப்படுத்துபவர், திறமையாகக் கையாளுபவர். இதை நீங்கள் புரிந்து கொண்டால் அகங்காரம் மறைந்து விடும் - அதை விட்டுவிட வேண்டிய தேவையில்லை.

உங்களால் ஒரு பொய்த் தோற்றத்தை விட்டுவிட முடியாது. நீங்கள் ஓர் உண்மையை மட்டுமே விட்டுவிட முடியும் - அகங்காரம் உண்மையல்ல. நீங்கள் மாயை விட்டுவிட முடியாது. பொய்த்தோற்றத்தை விட்டுவிட முடியாது. ஏனென்றால் முதலில் அவை இல்லை. நீங்கள் புரிந்துகொள்ள மட்டும் வேண்டும். பின் அவை மறைந்து விடும். ஒரு கனவை விட்டுவிட முடியாது. நீங்கள் இது ஒரு கனவு என்ற விழிப்படைந்தீர்களானால், கனவு மறைந்து விடும். அகங்காரம் மிக நுண்ணிய கனவாகும். அது நான் பிரபஞ்சத்தில் இருந்து தனித்துள்ளவன் என்ற கனவாகும், முழுமைக்கு எதிராக சில குறிக்கோளை அடைய வேண்டுமென்ற கனவாகும். நான் தனிப்பட்டவன் என்ற கனவாகும். நீங்கள் விழிப்படைந்த அந்த வினாடியில், கனவு மறைந்து விடுகிறது.

நீங்கள் முழுமைக்கு எதிராக இருக்க முடியாது. ஏனென்றால் நீங்கள் முழுமையான பகுதியாவீர்கள். நீங்கள் முழுமைக்கு எதிராக மிதக்க முடியாது. ஏனென்றால் எப்படி நீங்கள் மிதப்பீர்கள்? அது என்னுடைய சொந்தமான கை எனக்கு எதிராகச் செய்வதைப்போல முட்டாள்தனமானது. எந்த வழியிலும் முழுமைக்கு எதிராகச் செய்வதற்கு இல்லை. ஒரே ஒரு வழி உள்ளது. முழுமையுடன் இருப்பது.

நீங்கள் சண்டையிடும் போதும்கூட உங்களால் எதிராகச் செல்ல முடியாது - அது உங்களுடைய கற்பனையே. இருந்த போதிலும் நீங்கள் முழுமைக்கு எதிராகச் செல்வதாக அல்லது முழுமையிலிருந்து தனிப்பட்டு இருப்பதாக அல்லது நீங்கள் உங்களுடைய சொந்த ஒரு வித்தியாசமான கோணத்துடன் இருப்பதாகச் சிந்தித்தாலும் அது ஒரு கனவே. உங்களால் அதைச் செய்ய முடியாது. அது ஓர் ஏரியிலுள்ள சிற்றலை ஏரிக்கு எதிராகச் செல்ல வேண்டுமென்று எண்ணுவது போலாகும். முழுதுமாக முட்டாள் தனமானது - அது எப்பொழுதாவது நிகழ்வதற்கு மிகக் குறைந்த சாத்தியம்கூட இல்லை. ஏரியிலுள்ள ஒரு சிற்றலை தன்னுடைய சொந்தத்திற்கு எங்கேயோ செல்வது எப்படி முடியும்? அது தொடர்ந்து ஏரியின் பகுதியாகவே இருந்து வரும். அது எங்கேயோ செல்லுகிறதென்றால், அது ஏரியினுடைய மனோ சக்தியினால்தான் இருக்க முடியும், அப்படித்தான் அது செல்ல முடியும்.

ஒருவர் புரிந்து கொள்ளும்போது, ஒருவர் அறிந்து கொள்கிறார். ஒருவர், "நான் மிகப்பெரிய கனவில் இருந்தேன், இப்போது கனவு மறைந்து விட்டது. நான் இல்லை. நான்தான் கனவும், கனவு காண்பவரும், இரண்டும். இப்போது முழுமை இருக்கிறது" என்று சிரிக்கத் தொடங்குகிறார்.

பிராணாயாமம் சூழ்நிலைய்ை உருவாக்குகிறது, அதில் திரும்புவது சாத்தியமாகிறது, ஏனென்றால் இப்போது எங்குமே செல்வதில்லை. சண்டையிடுவது நின்று விட்டது. பகைவன் மறைந்து விட்டான். இபபோது நீங்கள் உங்களுடைய சொந்த இருப்புத் தன்மையின் (being) பக்கம் மிதக்க ஆரம்பித்து விட்டீர்கள் - அது உண்மையில் செய்வதல்ல, அது ஒரு மிதப்பலாகும். நீங்கள் சண்டையிடுவதை நிறுத்தி விட்டால், நீங்கள் வெளியில் செல்வதை

நிறுத்தி விட்டால், உட்புறம் மிதக்க ஆரம்பித்து விட்டீர்கள். அது இயற்கையே.

பிராணாயாமத்திற்குப் பின்னால் பதஞ்சலி, “பின்பு ஒளியைத் தடுத்துள்ள மறைப்பை அகற்றுவது வருகிறது” என்று சொல்லுகிறார். இந்தச் சூத்திரம் கூறு செய்யப்பட வேண்டும், பகுத்தாராயப்பட வேண்டும், புரிந்து கொள்ளப்பட வேண்டும், ஏனென்றால் நிறைய விஷயங்கள் இந்தச் சூத்திரத்தைச் சார்ந்துள்ளன.

பதஞ்சலி, பிராணாயாமத்திற்குப் பின்னால் உள்ஒளி அடையப்படுகிறது என்று சொல்லவில்லை. பதஞ்சலியைப் பற்றிக் கூறும் அநேக உரையாளர்கள் தவறான மனப்பான்மை கொண்டு உள்ளனர். இந்தச் சூத்திரம் மறைப்பு விட்டுவிடப்பட்டது ஒருவர் ஒளியை அடைந்து விட்டார் என்று சொல்லுவதாக அவர்கள் கருதுகின்றனர். அது சாத்தியமில்லை. அது நிகழுமானால் பின்பு தாரணை,தியானம், சமாதியைப் பற்றி என்னாவது? பிரத்யாஹாரத்தில் நீங்கள் குறிக்கோளை அடைந்து விட்டது என்று அது நிகழுமானால், உங்களுடைய உள்ளாழ்ந்த மூலத்தைச் சென்றடைந்தால், உள்ஒளியை அறிகிறீர்கள். பின் தாரணை, தியானம், சமாதி இருப்பதன் நோக்கம் என்ன? பின்பு நீங்கள் என்ன செய்வீர்கள்? இல்லை, பதஞ்சலி அதைக் குறிக்கவில்லை, சூத்திரம் தெளிவாக உள்ளது. பதஞ்சலி, “மறைப்பை அகற்றுவது” என்று சொல்லுகிறார். ஒளியை அடைவதில்லை - இவை இரண்டு விஷயங்கள்.

மறைப்பை அகற்றுவது ஓர் எதிர்மறையான சாதனை - அது ஒளியை அடைவதற்கான சாத்தியத்தை உருவாக்குகிறது. ஆனால் மறைப்பை அகற்றுவதுவே ஒளியை அடைவதாகாது. அநேக விஷயங்கள் இன்றும் அங்கே செய்ய வேண்டியவை உள்ளன. உதாரணமாக, நீங்கள் மூடி கண்களுடன் தொடர்ந்து இருந்து வந்திருக்கிறீர்கள்; உங்கள் கண் இமைகள் சூரிய வெளிச்சத்தின் மேல் ஒரு மறைப்பாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன. பல லட்சக்கணக்கான பிறவிகளுக்குப் பின் நீங்கள் உங்கள் கண்களைத் திறக்கிறீர்கள். மறைப்பு இனி அங்கில்லை. ஆனால் உங்களால் ஒளியைப் பார்க்க முடியாது. நீங்கள் இருளோடு இசைவிக்கப்பட்டு விட்டீர்கள். சூரியன் உங்களுக்கு முன்னால் உள்ளது, மறைப்பு அதை மறைக்கவில்லை, ஆனால் உங்களால் அதைப் பார்க்க முடியாது.

மறைப்பு மறைந்து விட்டது, ஆனால் நீண்ட பழக்கமான இருள் உங்களுடைய கண்களின் ஒரு பகுதியாகி விட்டது. முரடான, மறைப்பான கண் இமைகள் இனி அங்கில்லை, ஆனால் நுண்ணிய மறைப்பான இருள் இன்னும் அங்குள்ளது.... நீங்கள் அநேக பிறவிகளில் இருளில் வாழ்ந்து விட்டீர்களானால், சூரியன் உங்களுடைய கண்கள் கூசும்படியான மிக அதிகமான பிரகாசத்துடன் இருக்கும். உங்கள் கண்கள் மிகப்பலவீனமாக இருப்பதால், அவற்றால் அதிக வெளிச்சத்தைத் தாங்கிக்கொள்ள முடியாது. அது மீண்டும் இருளாகி விடுகிறது. சூரியனை ஒரு சில வினாடிகளுக்கு பார்ப்பதற்கு முயலுங்கள். நீங்கள் உங்கள் கண்களில் இருள் விழுவதைப் பார்ப்பீர்கள். நீங்கள் அதிகமாக முயன்றால், நீங்கள் குருடாகக் கூட ஆகலாம். மிக அதிகமான வெளிச்சம்கூட இருளாகி விடும்.

நீங்கள் எவ்வளவு பிறவிகளில் இருளில் வாழ்ந்துள்ளீர்கள் என்பது உங்களுக்குத் தெரியாது. நீங்கள் எந்த ஒளியையும் அறிந்திருக்கவில்லை. ஓர் ஒளிக்கீற்றுக்கூட உங்கள் இருப்புத் தன்மையில் (being) ஊடுருவவில்லை. இருள் மட்டும்தான் ஒரே அனுபவம். ஒளியை அறியாததால் அதைத் தெரிந்து கொள்வதற்கு முடியாது. மறைப்பை அகற்றுவதனால் அதை உங்களால் அடையாளம் காண முடியாது.

பதஞ்சலி இதை நன்கறிவார். அதனால்தான் அவர் சூத்திரத்தை அந்த மாதிரி முறைப்படுத்திக் கூறியிருக்கிறார்: "தத: க்ஷியதே ப்ரகாசாவரணம்" - பின்பு ஒளியைத் தடுத்துள்ள மறைப்பை அகற்றுவது. ஆனால் ஒளியை அடைவதல்ல. இது ஓர் எதிர்மறையான அடைதலாகும்.

இதற்கு மற்றொரு வழியில் விளக்கம் சொல்கிறேன். நீங்கள் நோயுற்றிருக்கிறீர்கள், மருந்து உதவும் - நோய் மருந்தின் மூலமாக மறைந்து விட்டது - ஆனால் அது நீங்கள் ஆரோக்கியத்தை அடைந்து விட்டதாகப் பொருளில்லை. நோயுற்ற நிலை மறைந்திருக்கலாம், இப்போது இனி நோய் உடலில் இல்லை, ஆனால் ஆரோக்கியம் இன்னும் தோன்றவில்லை. திரும்பப் பெறுவதற்கு நீங்கள் ஓய்வு கொள்ள வேண்டும். நோய் மறைந்து விட்டது என்பது ஆரோக்கியத்தை அடைந்து விட்டதாகி விட்டது என்பதான கட்டாயமில்லை. ஆரோக்கியம் ஓர் உடன்பாடான நிகழ்வாகும். நோய்

எதிர்மறையான நிகழ்வாகும். நீங்கள் டாக்டரிடம் செல்லுகிறீர்கள். அவர் எந்த வியாதியையும் கண்டுபிடிக்கவில்லை என்பது சாத்தியமாகலாம் - அது நீங்கள் ஆரோக்கியமாக இருக்கிறீர்கள் என்பதைக் குறிப்பதல்ல. நீங்கள், "நான் ஆரோக்கியமாக இருப்பதாக உணரவில்லை, நான் என்னுள் ஓர் ஆரோக்கிய நிலை எழுவதாக உணரவில்லை. வாழ்வின் உற்சாகத்தை உணரவில்லை" என்று சொல்லிக்கொண்டே இருக்கிறீர்கள்.

டாக்டர் நோயைக் கண்டுபிடிக்கலாம். அவரால் ஆரோக்கியத்தைக் கண்டுபிடிக்க முடியாது. அவருக்கு நீங்கள் ஆரோக்கியமாக இருக்கிறீர்களா அல்லது இல்லையா என்பதைக் கண்டுபிடிப்பதற்கு எந்த வழியும் இல்லை. டாக்டரால் நீங்கள் ஆரோக்கியமாக இருக்கிறீர்கள் என்று ஒரு சான்றிதழ் உங்களுக்கு அளிக்க முடியாது. நீங்கள் நோயுற்றவராக இல்லை என்ற ஒரு சான்றிதழ் மட்டுமே அவரால் உங்களுக்கு அளிக்க முடியும். நோயில்லாமல் இருப்பது என்பது ஆரோக்கியமாக இருப்பதாக இருக்க வேண்டிய கட்டாயமில்லை. உறுதியாக, நோயில்லாமல் இருப்பது என்பது ஆரோக்கியமாக இருப்பதற்கு ஓர் அடிப்படையான நிபந்தனையாகும் - நீங்கள் நோயுள்ளவராக இருந்தால் உங்களால் ஆரோக்கியமாக இருக்க முடியாது - ஆனால் நீங்கள் நோயுற்றவராக இல்லையென்றால் அது நீங்கள் ஆரோக்கியமாக இருக்கிறீர்கள் என்ற கட்டாயமில்லை. ஆரோக்கியம் ஒருவகையில் உடன்பாடானது.

இது பல நிலைகளில் நிகழ்கிறது. ஒரு மனிதர் - வயதானவர், நோயுள்ளவர், வாழ்க்கையில் களைப்படைந்தவர் - வாழ வேண்டுமென்ற பேராவலை இழந்தவர், புத்தர் அதைத் தன்ஹா என்றழைக்கிறார். அவர் வாழ வேண்டுமென்ற ஆர்வத்தை இழந்து விடுகிறார். நீங்கள் அவருக்குச் சிகிச்சை செய்து கொண்டே இருக்கிறீர்கள் - நீங்கள் அவர் முழுதும் சரியாகும் வரை உதவலாம். மருந்து எவ்வளவு தூரம் உதவ முடியுமோ அவ்வளவு உதவலாம், அவர் இனி நோயுற்றவராக இல்லை - ஆனால் நீங்கள் கஷ்டப்படுகிறீர்கள். அவர் இனி நோயுற்றவராக இல்லை. வாழவேண்டுமென்ற ஆவல் மறைந்து விட்டது. நோய் இல்லை, மருத்துவமனை அவரை வெளியே அனுப்புவதற்குத் தயாராக உள்ளது. ஆனால் அவருக்கு வாழ வேண்டுமென்ற ஆவல் இல்லை. அவர் ஆரோக்கியமாக இல்லை. அவர் மரணமடைவார். யாருமே

அவருக்கு உதவ முடியாது. ஆரோக்கியமாக இருப்பது உடன்பாடான நிகழ்வாகும்; நோயுற்று இருப்பது எதிர்மறையான நிகழ்வாகும்.

பதஞ்சலி இனி மறைப்பு அங்கில்லை என்று சொல்லுகிறார். அது நீங்கள் ஒளியை அறிந்து விட்டீர்கள் என்று குறிப்பதில்லை. இன்னும் மூன்று படிகள் காத்திருக்கின்றன. காலப்போக்கில் நீங்கள் உங்கள் இருப்புத் தன்மையின் (being) கண்களை உணருவதற்கு, அறிவதற்கு, ஒளியைக் கிரகித்துக் கொள்வதற்கு பழக்கப்படுத்த வேண்டும். சில சமயங்களில் அது வருடங்கள் எடுத்துக் கொள்ளும்.

"பின் ஒளியைத் தடுத்துள்ள மறைப்பை அகற்றுவது வருகிறது" ஆகையால் நான் உள்ஒளி அடையப்பட்டு விட்டது என்று சொல்லும் அந்த எல்லா உரை எழுதுபவர்களுடன் வேறுபடுகிறேன் - பொருள் அதுவல்ல. இப்போது இடைஞ்சல்கள் இல்லை, தடைகள் மறைந்து விட்டன, ஆனால் தூரம் இன்னும் இருக்கிறது. நீங்கள் இன்னும் கொஞ்சம் நடக்க வேண்டும், இப்போது முன்பைவிட அதிகக் கவனத்துடன், ஏனென்றால் நீங்களும்கூட அதே பிழையில் விழுந்து விடலாம். நீங்கள், "எல்லாம் அடையப்பட்டாகி விட்டது, தடை உடைக்கப்பட்டு விட்டது, மறைந்து விட்டது, இப்போது நான் வீட்டை அடைந்து விட்டேன்" என்று கருதலாம். பின்பு நீங்கள் குறிக்கோளை அடையும் முன்பாக முடிவு செய்து விட்டீர்கள்.

அநேக யோகிகள் ஐந்தாவதுடன் முடிவு செய்து விட்டார்கள். பின்பு அவர்களால் என்ன நிகழ்கிறது என்பதைப் புரிந்துகொள்ள முடியவில்லை. தடைகள் இனிமேல் இல்லை. ஆனால் அவர்கள் ஆழமான திருப்தியுடன் கூட இல்லை. உண்மையில், நீங்கள் மிகவும் அகங்காரத்துடன் இருந்தீர்களானால் இங்கே நின்று விடுவீர்கள். இந்தச் சூத்திரத்துடன், ஏனென்றால் தடைகளுடன் அகங்காரத்திற்குச் சண்டையிடுவதற்கு ஏதோ ஒன்று உள்ளது. மறைப்பு: நீங்கள் அதனுள் ஊடுருவ முயற்சிக்கிறீர்கள், அதை அகற்றுவதற்கு. அது அகற்றப்படுமானால் பின் அங்கு ஒன்றுமில்லை. இது நீங்கள் ஏதோ ஒன்றுடன் சண்டையிட்டுக் கொண்டிருக்கிறீர்கள், திடீரென அது மறைந்து விட்டது போல - உங்களுடைய முழு வாழ்க்கையின் அர்த்தமுமே அதனுடன் மறைந்து விடுகிறது. இப்போது உங்களுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை.

உலகத்தில் ஆழமான போட்டியுடன் மற்றவர்களுடன் சண்டையிடும் மனிதர்கள் உள்ளனர் - வியாபாரத்தில், அரசியலில், இது அல்லது அது. பின் அவர்கள் களைப்படைந்து விடுகின்றனர். அவர்கள் கொஞ்சம் புத்திசாலித்தனமாக இருந்தால் அவர்கள் களைப்பிற்கு உட்பட்டாக வேண்டும். பின்பு அவர்கள் மறைப்பாக உள்ள தங்களுடைய சொந்த அகங்காரத்துடன் சண்டையிட ஆரம்பித்து விடுகிறார்கள். ஒருநாள் அந்த மறைப்பும் மறைந்து விடுகிறது, பின் சண்டையிடுவதற்கு ஒன்றுமில்லை. சண்டையிடு வதற்கு ஒன்றுமில்லாத போது அகங்காரத்திற்கு ஒரு அங்குலம் நகர்வது கூட முடியாததாகி விடுகிறது. ஏனென்றால் அகங்காரத்தின் முழுப் பயிற்சியும் யாரோ ஒருவருடன் சண்டையிடுவதுதான் - யாரோ ஒருவருடனோ அல்லது உங்களது சொந்த அகங்காரத்துடனோ ஆனால் சண்டையிடுவது. சண்டையிடுவதற்கு ஒன்றுமில்லை யென்றால், தடைகள் இனி இல்லை, ஒருவர் நின்று விடுகிறார். இப்போது எங்கும் செல்ல வேண்டியதில்லை... ஆனால் இன்னும் மூன்று படிகள் காத்திருக்கின்றன.

**தாரணாசு ச யோக்யதா மனஸ:**

*பின்பு மனம் ஒருமுனைப்படுவதற்குத் தயாராகிறது.*

தாரணை மன ஒருமைப்பாடு மட்டுமல்ல. 'மன ஒருமைப்பாடு' ஒரு சிறிய ஒரு நொடி நேரக் காட்சியைக் கொடுக்கிறது. ஆனால் தாரணை மன ஒருமைப்பாட்டைவிட ஓர் உயர்ந்த (முக்கியமான) கொள்கையாகும். ஆகையால் நான் அதை உங்களுக்கு விளக்கு கிறேன்.

இந்திய வார்த்தை தர்மம்கூட தாரணையிலிருந்து வந்தது. தாரணையின் பொருள்: கொள்திறன் என்பதாகும். ஒரு கருப்பையாவதற்கான திறனாகும். பிராணாயாமத்திற்குப்பின் நீங்கள் முழுமையுடன் இணக்கமுடன் இருக்கும்போது நீங்கள் ஒரு கருப்பையாகிறீர்கள் - ஒரு மிக அதிக கொள்திறனாகிறீர்கள். உங்களால் முழுமையும் கொள்ள முடியும். நீங்கள் மிகவும் பரந்துள்ளதாக இருப்பதால் எவ்வகைப் பொருளாயினும் கொள்ளலாம். ஆனால் தாரணை ஏன் தொடர்ந்து 'மன ஒருமைப்பாடு' என்று மொழி பெயர்க்கப்பட்டுள்ளது? ஏனென்றால் 'மன ஒருமை' அதனுள் ஒரு

சிறிய நொடி நேரக் காட்சியைக் கொடுக்கிறது. மன ஒருமைப்பாடு என்றால் என்ன? நீண்ட நேரத்திற்கு ஒரே எண்ணத்துடன் தொடர்ந்து இருந்து வருவது, மன ஒருமைப்பாடாகும். ஒரே ஓர் எண்ணத்தை நீண்ட நேரத்திற்குத் தாங்கி நிற்பதாகும்.

நான் உங்களை ஒரு குரங்குள்ள படத்தில் மனதை ஒருமுகப்படுத்த சொல்வேனானால், நீங்கள் குரங்கு என்ற எண்ணத்தில் தொடர்ந்து இருந்து வருவதற்கு முயலுவீர்கள். குரங்கினுடைய படம் மட்டுமே வேறு ஒன்றும் இல்லை - அது உங்களுக்கு மிகவும் கடினமானது. ஆயிரத்தொரு விஷயங்கள் குறுக்கிடுகின்றன. உண்மையில் குரங்கு மட்டும அங்கே இல்லை. வேறு எல்லாப் பொருளும் அங்கே இருக்கும். குரங்கு மீண்டும், மீண்டும் மறைந்து விடும்.

எதையும் கொள்வதற்கு மனதிற்கு கஷ்டமாகி விடுகிறது. மனது மிகவும் குறுகலானது. அது ஏதோ ஒன்று மட்டும் ஒருசில வினாடிகளுக்குக் கொண்டிருக்க முடியும். பின் அது அதை இழந்து விடும். அது பரந்ததல்ல, அதனால் ஒரு பொருளுடன் நீண்ட நேரத்திற்கு இருக்க முடியாது. அது மனித இனத்தின் ஆழமான பிரச்சினைகளில் ஒன்றாகும். நீங்கள் ஒரு பெண்ணைக் காதலிக்கிறீர்கள் அல்லது ஓர் ஆணை; அடுத்த நாள் மனம் யாரோ ஒருவரிடம் செல்கிறது. ஒருநாள் உங்களால் கொண்டிருக்க முடியாது. உங்களால் அதே மனிதருடன் நீண்ட காலம் அன்போடிருக்க முடியாது. மணிகள்கூட அதிகம். உங்கள் மனம் உலக முழுவதிலும் அலைந்து கொண்டே இருக்கிறது.

பல நாட்களாக நீங்கள் ஒரு காரின் மேல் மிக்க ஆவல் கொண்டிருந்தீர்கள். நீங்கள் போராடியுள்ளீர்கள். எப்படியோ நீங்கள் சமாளித்து விட்டீர்கள். இப்போது கார் உங்களுக்கு ஓட்டுவதற்கு அங்கு உள்ளது - ஆனால் முடிந்து விட்டது. இப்போது மனம் மீண்டும் எங்கேயோ செல்கிறது - அடுத்த வீட்டுக்காரரினுடைய காருக்குச் செல்கிறது - அதே அடுத்த காருக்கும்கூட நிகழும். அதே எப்போதுமே நிகழ்ந்து கொண்டிருக்கிறது; உங்களால் கொண்டிருக்க முடியவில்லை. நீங்கள் ஒரு நிலையை அடைந்த போதிலும்கூட சீக்கிரம் அதை இழந்து விடுகிறீர்கள்.

தாரணை என்பது கொள்ளும் திறனாகும். ஏனென்றால் நீங்கள் கடவுளை அறிய விரும்பினால், நீங்கள் அவரைக் கொண்டிருப் பதற்குத் திறமை அடைந்திருக்க வேண்டும். நீங்கள் உங்களுடைய உள்ளாழ்ந்த இருப்புத்தன்மையை அறிய விரும்பனிால் நீங்கள் அதற்கு ஒரு கருப்பை ஆவதற்கான திறனை உருவாக்க வேண்டும். மன ஒருமைப்பாடு அதனுடைய பகுதியாகும். தாரணை ஒரு மிகப்பரந்த உலகமாகும். அது மிகமிகப் பரந்ததாகும். அது மன ஒருமைப்பாட்டைவிட அதிகம் கொண்டுள்ளது. மன ஒருமைப்பாடு அதன் ஒரே ஒரு பகுதியாகும்.

"பின்பு மனம் ஒருமுனைப்படுவதற்குத் தயாராகிறது."

நான் அதை மொழி பெயர்க்க விரும்புகிறேன். "பின்பு மனம் ஒரு கருப்பையாகிறது". நான் ஒரு கருப்பை என்று சொல்லும்போது நான் பொருள் கொள்வது: ஒரு பெண் ஒரு குழந்தையை ஒன்பது மாதங்களுக்குத் தன் சொந்த இருப்பில் கொண்டிருக்கும் போது, அவள் அதை ஒரு விதை போல சுமந்து கொண்டிருக்கிறாள். இந்துக்கள் பெண்களைப் பூமி என்றழைக்கின்றனர். ஏனென்றால் அவள் குழந்தையைச் சுமந்துகொண்டு இருக்கிறாள். ஒரு குழந்தையின் விதையை, பூமி ஒரு மிகப்பெரிய ஓக் மரத்தின் விதையைப் பல மாதங்களுக்குச் சுமந்து கொண்டிருப்பது போல.

விதை நிலத்தினுள் ஆழத்தில் இருக்க முடிவு செய்தபோது, பயம் எல்லாவற்றையும் இழந்து விடுகிறது. பூமியில் இனி ஓர் அன்னியராக இல்லை. பாதுகாப்புடன் இருப்பதாக உணர ஆரம்பிக்கிறது... ஞாபகத்தில் கொள்ளுங்கள். ஒரு விதை முதலில் பாதுகாப்புடன் இருப்பதாக உணர வேண்டும். அதன்பின்தான் ஓடு உடையும். இல்லையென்றால் ஓடு உடையாது. இந்தப் பூமி தாய்மையாக உள்ளது என்று விதை உணர ஆரம்பிக்கும்போது - இப்போது தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும் தேவை இல்லை. ஓட்டைச் சுற்றியுள்ள கவசத்தைச் சமந்து கொண்டிருக்க வேண்டிய தேவையில்லை - அது தளர்வாகி விடுகிறது. காலப்போக்கில் ஓடு உடைந்து பூமியினுள் மறைந்து விடுகிறது. இப்போது விதை இனி அன்னியரல்ல; ஒரு தாயைக் கண்டுகொண்டுள்ளது. பின் முளை வெளிவருகிறது.

இந்தியாவில் நாம் பெண்களை புவி தத்துவமாகவும், ஆணை ஆகாச தத்துவமாகவும் அழைக்கிறோம் - ஏனென்றால் ஆண்

அலைந்து திரிபவன். அவனால் அதிகம் கொண்டிருக்க முடியாது. அது தினமும் நடைபெறுகிறது. ஒரு பெண் ஒரு ஆணைக் காதலித்தாளானால், அவள் அவளுடைய வாழ்க்கை முழுதும் காதலில் தொடர்ந்து இருந்து வருவாள். அவளுக்கு அது சுலபமானது - ஓர் எண்ணத்தை ஆழமாக வைத்திருப்பது எப்படி என்பதையும் அதனுடன் தொடர்ந்திருப்பதையும் அவள் அறிவாள். ஆண் ஒரு நாடோடி, ஓடி அலைந்து திரிபவன். பெண்கள் இல்லாதிருந்தால் உலகத்தில் வீடுகள் இல்லாது போயிருக்கும் - அதிகபட்சம் கூடாரம் - ஏனென்றால், ஆண் அலைந்து திரிபவன். அவன் ஒரே இடத்தில் எப்போதுமே வாழ விரும்புவதில்லை. அவன் கல் மாளிகைகளை, பளிங்கு மாளிகைகளை உருவாக்குவதில்லை. அது மிகவும் அசைவற்றது. அவன் ஒரு நாடோடியின் கூடாரம் வைத்திருப்பான், அதனால் எந்த வினாடியும் அதை அப்புறப்படுத்தி விட்டு ஏதோ ஓரிடத்திற்குச் சென்று விடுவான்.

பெண்கள் இல்லையென்றால் ஆணும் இருந்திருக்க மாட்டான். வீடு பெண்ணினால்தான் உள்ளது. உண்மையில் முழு நாகரிகமும் பெண்களின் காரணமாகத்தான் இருக்கின்றது. ஆண் ஒரு நாடோடியாக, நகர்ந்து கொண்டிருப்பவனாக தொடர்ந்து இருந்து வந்திருப்பான். இன்னும் அவனுடைய மனதில் அது தொடர்ந்து இருந்து கொண்டிருக்கிறது. அவன் ஒரு வீட்டில் வாழ்ந்த போதிலும், அவனது இருப்பு நகர்ந்து கொண்டே உள்ளது. அவனால் கொண்டிருக்க முடியாது. அவனுக்கு ஒரு கருப்பையாவதற்கான திறனில்லை.

இது என்னுடைய உணர்வாகும். பெண்கள் ஆண்களைவிட மிகச்சுலபமாக தியானத்தில் செல்ல முடியும். ஓர் ஆளுக்கு இது கடினமானது; அவனுடைய மனது அதிகமாக அலைபாயும். புதிய வலைகளை நுழைப்பதற்கு தந்திரம் செய்யும். எப்போதும் நகர்ந்து கொண்டே இருக்கும். எப்போதும் ஹிமாலயாவிற்குச் செல்ல வேண்டுமென, கோவாவிற்கு, நேபாளத்திற்கு, காபூலுக்கு - எங்கேயோ செல்ல வேண்டுமென சிந்தத்துக்கொண்டே இருக்கிறது. ஒரு பெண்ணினால் முடிவு செய்ய முடியும். அவளால் தொடர்ந்து ஒரு இடத்தில் இருக்க முடியும். நகர வேண்டுமென்று உள்ளே உந்துதல் இல்லை.

மனம் பின்பு ஒரு கருப்பையாவதற்குத் தகுதியாகிறது - ஏனென்றால் கருபபையின் மூலம்தான் ஒரு புதிய உயிர் உங்களுக்குப் பிறக்க முடியும். நீங்கள் உங்களுக்குப் பிறந்து கொள்ள போகிறீர்கள். நீங்கள் உங்களை உங்களுடைய கருப்பையில் சுமக்கிறீர்கள். மன ஒருமைப்பாடு அதன் பகுதியாகும். மன ஒருமைப்பாட்டைக் கற்றக்கொள்வது அழகிய ஒன்றாகும். நீங்கள் ஓர் எண்ணத்துடன் நீண்ட நேரம் தொடர்ந்திருப்பீர்களானால், நீங்கள் உன்னதமான ச.[illegible]யத்துடன், அந்த ஒன்றுடன், நீண்ட காலத்திற்கு தொடர்ந்திருக்கத் திறமையுள்ளவராகிறீர்கள் - ஏனென்றால் உங்களால் அந்த ஒன்றுடன் தொடர்ந்து நீண்ட காலம் இருக்க முடியவில்லையென்றால், நீங்கள் வெளிப்பொருட்களால் கவனத்தைத் திருப்பப்பட்டிருக்கிறீர்கள். ஒரு கார், பின்பு மற்றொரு கார், ஒரு வீடு, பின்பு மற்றொரு வீடு, ஒரு பெண், பின் மற்றொரு பெண். இந்தப் பதவி, பின்பு மற்றொரு பதவி. நீங்கள் பொருட்களினால் கவனத்தைத் திரும்பப்பட்டுள்ளீர்கள். உங்களால் வீட்டிற்குத் திரும்ப வருவதற்கு முடிவதில்லை.

ஒரு பொருளும் உங்களைத் தடுக்கவில்லையென்றால், பின்புதான் திரும்புவது சாத்தியம். மனம் ஆழ்ந்த பொறுமையில் தொடர்ந்திருப்பது, ஒருதாய் பால, காத்திருக்கும், தொடர்ந்து எங்கும் செல்லாமல் இருக்கும். அந்த மனம்தான் தன்னுடைய சொந்த தெய்வீகத்தை அறிந்து கொள்ளும். யோகத்தின் ஐந்தாவது அங்கம் பிரத்யாஹாரம் - மூலத்திற்குத் திரும்புவது - கவனத்தைத் திருப்பும் வெளிப்புறத்திலுள்ள பொருள்களைத் துறப்பதன் மூலம் மனதினுடைய புலன்களைக் கட்டுப்படுத்தும் ஆற்றலைப் புதுப்பிப்பது.

வெளிப்பக்கம் உள்ள பொருள்களினால் ஏற்படும் மனத் தடுமாற்றத்தை உதறித்தள்ளவில்லை என்றால் உங்களால் உட்புறம் செல்ல முடியாது. ஏனென்றால் அவை உங்களை மீண்டும், மீண்டும் அழைத்துக்கொணடே இருக்கின்றன. இது, நீங்கள் தியானம் பண்ணிக் கொண்டிருக்கிறீர்கள், ஆனால் உங்கள் தியான அறையில் நீங்கள் உங்களுடைய தொலைபேசியை வைத்திருப்பது போல: அது மீண்டும், மீண்டும் ஒலித்துக்கொண்டே இருக்கிறது - எப்படி உங்களால் தியானம் பண்ண முடியும்? நீங்கள் உங்களுடைய தொலைபேசியை அப்பால் கொக்கியில் மாட்டி வைக்க வேண்டும்.

அது தொலைபேசி என்ற கேள்வியில்லை. லட்சக்கணக்கான பொருட்கள் உங்களைச் சுற்றி உள்ளன - நீங்கள் தியானம்

பண்ணுவதற்கு முயலும்போது, லட்சக்கணக்கான தொலைபேசிகள் தொடர்ந்து ஒலித்துக்கொண்டு இருக்கின்றன. உங்களுடைய மனதின் ஒரு பகுதி, "என்ன செய்து கொண்டிருக்கிறாய்? இது கடைத்தெருவிற்குச் செல்ல வேண்டிய நேரம், ஏனென்றால் மிக்கச் செல்வமுள்ள வாடிக்கையாளர்கள் வருகின்ற நேரம். உன்னுடைய நேரத்தை இங்கே ஒன்றும் செய்யாமல் உட்கார்ந்து கொண்டு ஏன் வீணாக்கிக் கொண்டிருக்கிறாய்?" என்று சொல்லுகிறது. மனதின் மற்றொரு பகுதி ஏதோ மற்ற ஒன்றைச் சொல்லுகிறது - மனதில் அங்கே ஆயிரத்தொரு பகுதிகள், துண்டுகள் உள்ளன. அவை எல்லாம் உங்களுடைய கவனத்தைக் கவருவதற்கு தொடர்ந்து ஒலித்துக் கொண்டே இருக்கின்றன. இது தொடருமானால் பிரத்யாஹாரம் சாத்தியமில்லை. எப்படி உங்களால் உட்புறமாகச் செல்ல முடியும்? ஒருவர் மேற்பரப்பிலுள்ள விருப்பங்களைக் கவனத்தைத் திருப்புவைகளை விட்டுவிட வேண்டும். அதன்பின் தான் திரும்புவது சாத்தியமாகும்.

யோகத்தின் ஐந்தாவது அங்கம் - பிரத்யாஹாரம் - மூலத்திற்குத் திரும்புவது - கவனத்தைத் திருப்பும் வெளிப்புறத்திலுள்ள பொருட்களைத் துறப்பதன் மூலம் மனதினுடைய புலன்களைக் கட்டுப்படுத்தும் ஆற்றலைப் புதுப்பிப்பது". "கவனத்தைத் திருப்புவதைத் துறப்பதன் மூலம்". எப்படி ஒருவர் கவனத்தைத் திருப்புவதைத் துறப்பார்? நீங்கள், "நான் பணத்தின் மேல் உள்ள விருப்பத்தைத் துறப்பேன்னூ என்று ஒரு பிரதிக்ஞை எடுப்பீர்களா? அல்லது, "என்னுடைய பெண்களின் மேல் உள்ள விருப்பத்தை", "ஆணின் மேல்," ஒரு பிரதிக்ஞை எடுப்பதன் மூலம் மட்டும் அது சாத்தியமில்லை. உண்மையில் நீங்கள் பரிதிக்ஞை எடுத்தீர்களானால் எதிர்மறையானதுதான் நிகழும். நீங்கள், "பெண்களின் மேல் உள்ள என்னுடைய விருப்பத்தைத் துறக்கிறேன்" என்று சொல்லுவீர்களானால், பின்பு உங்கள் மனம் பெண்களின் படங்களினால் அதிக அளவு நிறைக்கப்பட்டிருக்கும். நீங்கள் அதிகம் கற்பனை செய்து கொள்வீர்கள். உண்மையில் நீங்கள் மனோசக்தியின் மூலம் துறந்தீர்களானால், நீங்கள் அதிகக் குழப்பமடைவீர்கள். அநேக மக்கள் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறார்கள்.

வயதான சந்நியாசிகள் என்னிடம் வந்து அவர்கள் எப்பொழுதும், "காமத்துடன் என்ன செய்வது? அது மனதில் ஒலித்துக்கொண்டே

இருக்கிறது. அது முன்பைவிட அதிகமாக ஒலித்துக் கொண்டிருக் கிறது. நாங்கள் துறந்து விட்டோம். அதனால் இப்போது என்ன செய்வது?'' என்று சொல்லுவார்கள். நீங்கள் மனோசக்தியினால் புரிந்து கொள்ளாமல் அதிகமாகத் துறப்பீர்களானால் நீங்கள் அதிகக் கஷ்டத்தில் இருப்பீர்கள். புரிந்துகொள்வது தேவை; மனோசக்தி தேவையில்லை. மனோசக்தி அகங்காரத்தின் பகுதியாகும்.

நீங்கள் மனோசக்தியின் மூலம் ஏதோ ஒன்றை முயலுவீர் களானால், நீங்கள் முனபே இரண்டாகப் பிரிக்கப்பட்டு விட்டீர்கள் - நீங்கள் சண்டையிட ஆரம்பித்து விட்டீர்கள். நீங்கள், "நான் பெண்களிடம் விருப்பத்துடன் இல்லை'' என்று சொல்லுவீர்களானால் அதை ஏன் சொல்லுகிறீர்கள்? அதில் உண்மையில் நீங்கள் விருப்பத்துடன் இல்லாவிட்டால் - முடிந்தது. அதைச் சொல்வதில் என்ன நோக்கம் உள்ளது? நீங்கள் இனி விருப்பத்டன் இல்லையென்றால், நீங்கள் இனி விருப்பத்துடன் இல்லை. முடிந்தது. அதை ஏன் விளம்பரப்படுத்துகிறீர்கள்? ஏன் ஒரு வெளிக்காண்பிப்பவ ராகிறீர்கள்? இல்லை. தேவை வேறுவிதமாக உள்ளது. நீங்கள் இன்ம் முடிக்கவில்லை. உண்மையில் நீங்கள் ஆழமாகக் கவரப் பட்டுள்ளீர்கள்.

நீங்கள் ஏமாற்றம்கூட அடைந்துள்ளீர்கள். ஒவ்வொரு முறையும் நீங்கள் உறவு முறைகளில் இருக்கும்போது ஏமாற்றமடைகிறீர்கள். எமாற்றம் அங்கே உள்ளது, கவர்ச்சி அங்குள்ளது, இரண்டும் அங்கே உள்ளன, அதுதான் துக்கமாகும். இப்போது நீங்கள் சில புகலிடங்களைத் தேடுகிறீர்கள், எங்கு அதைத் துறக்க முடியுமோ. நீங்கள் சமுதாயத்தைத் தேடுகிறீர்கள். நீங்கள் பெண்களிடம் உள்ள விருப்பத்தைப் பெரிய கூட்டத்தின் முன்னால் துறப்பீர்களானால், பின்பு உங்கள் அகங்காரம், "இப்போது அந்த திசையில் செல்வது நல்லதல்ல'' என்று சொல்லும். ஏனென்றால் சமுதாயம் முழுவதும் நீங்கள் பிரமச்சரிய விரதம் எடுத்துள்ளீர்கள் என்பதை அறியும். இப்போது அது உங்கள் அகங்காரத்திகுப் புறம்பானது. இப்போது அதற்காக நீங்கள் போராட வேண்டும்.

நீங்கள் யாருடன் சண்டையிடுகிறீர்கள் - உங்களுடைய சொந்தக்காமம், உங்களுடைய மனோசக்தி. உங்களுடைய சொந்தக் காமத்திற்கெதிராக. இது உங்களடைய இடது கை உங்களது வலது

கையுடன் சண்டையிடுவதைப் போல் உள்ளது. இது முட்டாள் தனமானது. இது அறிவில்லாதது. நீங்கள் ஒருபோதும் வெற்றி பெற்றவராக இருக்க முடியாது.

ஒருவர் எப்படித் துறக்க முடியும்? புரிந்து கொள்வதன் மூலம்தான் துறக்க முடியும். ஒருவர் முதிர்ச்சியடைவதன் மூலம் துறக்க முடியும். ஒரு பிரதிக்ஞையால் அல்ல. நீங்கள் ஏதாவது ஒன்றைத் துறக்க விரும்பினால், அதன்மூலம் வாழ்ந்து விடுங்கள். பயமடையாதீர்கள். பீதியடையாதீர்கள். அதனுள் உள்ள ஆழ்ந்த விஷயத்திற்குச் செல்லுங்கள். அதனால் நீங்கள் புரிந்து கொள்வீர்கள். ஒரு தடவை, ஒரு பொருள் புரிந்து கொள்ளப்பட்டால், மனோசக்தியின் எந்த முயற்சியும் இல்லாமல் அது விட்டுவிடப்படும். மனோ சக்தி உட்படுத்தப் பட்டிருந்தால் நீங்கள் கஷ்டத்தில் இருப்பீர்கள். மனோசக்தி உங்களுள் அதிகத் துக்கம் - உருவாக்கும் நிகழ்வாகும்.

மறைமுகமாக புரிந்து கொள்வதனால், வாழ்க்கை ஒரு பள்ளிக்கூடம், கடந்து செல்ல வேண்டியது என்பதை நன்றாக அறிந்து கொள்ளலாம். ஆனால் அவசரப்படாதீர்கள். பணத்திற்காகத் தயங்குகின்ற ஆசை இன்னும் இருப்பதாக உணர்ந்தால், பிரார்த்தனை பண்ணாமல் இருப்பது நல்லது. பணத்தைச் சேகரியுங்கள், அதை முடித்து விடுங்கள். அது முட்டாள்தனமானது. அதனால் உங்களுக்குப் புத்திசாலித்தனம் இருக்குமானால் நீங்கள் சீக்கிரம் முடித்து விடுவீர்கள். உங்களுக்குப் போதுமான அளவு புத்திசாலித்தனம் இல்லையென்றால் பின்பு நீங்கள் கொஞ்சம் அதிகக்காலம் எடுத்துக் கொள்வீர்கள். அனுபவம் உங்களுக்கு புத்திசாலித்தனத்தைக் கொடுக்கும். அனுபவம்தான் ஒரே வழியாகும். வேறு எந்தக் குறுக்கு வழியும் இல்லை. அது நீண்ட காலமெடுக்கலாம், ஆனால் எதுவுமே செய்ய முடியாது - மனிதன் உதவியற்றவனாக உள்ளான். அவன் அனுபவத்தின் மூலமாக புத்திசாலித்தனத்தை அடைய வேண்டும். நீங்கள் அறிந்துள்ள வெளிப்படையான எல்லாவற்றையும் விட்டுவிட வேண்டும். உண்மையில், சொல்லப்போனால் விட்டுவிடப்பட்டது சரியல்ல. அது தானாகவே விடப்படுகிறது.

கவனத்தைத் திருப்பும் வெளிப்பொருள்களைத் துறப்பதனால் ஒருவர் பிரத்யாஹாரத்தில் திறமையடைகிறார். வீட்டிற்குத் திரும்புகிறார். இப்போது அங்கு இனி வெளி உலகத்தில் எந்த

விருப்பமும் இல்லை. அதனால் நீங்கள் ஆயிரத்தொரு திசைகளில் செல்வதில்லை. இப்போது நீங்கள் உங்களை அறிய விரும்புகிறீர்கள். தன்னை அறிந்துகொள்ள விரும்புவது மற்ற எல்லா விருப்பங் களையும் இடம் மாற்றி விடும். இப்போது ஒரே ஒரு ஆசை விடப்பட்டுள்ளது. தன்னை அறிந்து கொள்வது.

**தத: பரமா விஷ்யதே இந்திரியாணாம்**

பின்பு எல்லாப் புலன்களையும் முழுமையாக வசப்படுத்தும் தன்மை வருகிறது.

நீங்கள் வீட்டிற்குத் திரும்பிக் கொண்டிருக்கும் போது, உட்புறம் திடீரென நீங்கள் வசப்படுத்துபவராகி விடுகிறீர்கள். இதுதான் செய்முறையின் அழகாகும். நீங்கள் தொடர்ந்து வெளிப்புறம் செல்லுவீர்களானால் ஓர் அடிமையாக இருப்பீர்கள். ஓர் அடிமைக்கு லட்சக்கணக்கான விஷயங்கள் உள்ளன. உங்களுடைய அடிமைத் தனம் எல்லையற்றது, ஏனென்றால் உங்கள் ஆசையின் விஷயங்கள் எல்லையற்று உள்ளன.

இது நிகழ்ந்தது: நான் ஒரு பல்கலைக்கழகத்தில் ஆசிரியராக இருந்தேன். எனக்கு அடுத்து ஒரு பேராசிரியர் வசித்து வந்தார். நான் அந்த மாதிரி கருமித்தனமான மனிதரைச் சந்தித்ததே இல்லை. அவர் உண்மையில் அசாதாரணமனவர். அவருக்குப் போதுமான பணம் இருந்தது. அவருடைய தந்தை அதிகம் விட்டுச் சென்றிருந்தார். அவரும் அவருடைய மனைவியும் மாத்திரமே வாழ்ந்தார்கள். போதுமான பணம், பெரிய வீடு, எல்லாப் பொருள்களும் - ஆனால் அப்படிப்பட்ட ஒரு சைக்கிள் அவர் உபயோகிப்பது நகரம் முழுவதுமே அறிந்திருந்தது.

அந்த சைக்கிள் ஏதோ ஓர் அதிசயம். யாராலுமே அதை உபயோகிக்க முடியாது. அதை உபயோகிக்க முடியாத அளவிற்கு அது பாழாயிருந்தது. அவர் சைக்கிளை ஒருபோதும் பூட்டி வைப்பதில்லை என்பது நகர முழுவதிற்கும் தெரிந்திருந்தது. ஏனென்றால் அதற்குத் தேவையிருக்கவில்லை - யாருமே அதைத் திருட மாட்டார்கள். மக்கள் முயன்றார்கள். அதைத் திரும்பக் கொடுத்து விட்டார்கள். அவர் திரைப்பட அரங்கிற்குச் செல்லுவார். வெளிப்பக்கமே விட்டுச் செல்வார். அவர் வாடகை நிலையத்தில் அதை வைக்க மாட்டார். ஏனென்றால்

ஒரு அணா செலுத்தப்பட வேண்டும். அவர் அதை எங்கு வேண்டுமானாலும் விட்டு விடுவார். மூன்று மணி நேரத்திற்குப் பின்னால் அவர் வருகின்றபோது, அது அங்கிருப்பதைக் கண்டு கொள்வார். அதற்கு மட்கார்டு இல்லை, ஹாரன் இல்லை, செயின் கவர் இல்லை. அது அப்படி ஒரு சத்தத்தை உண்டாக்கும். பேராசிரியர் வருகிறார் என்பதை நீங்கள் ஒரு மைலிலிருந்து கேட்கலாம்.

காலப்போக்கில் என்னுடன் நட்பு கொண்டார். நான் அவரிடம், "இது மிக அதிகம், எல்லோரும் உங்கள் சைக்கிளைப் பற்றி சிரிக்கிறாகள், ஏன் நீங்கள் அதிலிருந்து விடுபடக்கூடாது" என்று யோசனை கூறினேன்.

அவர், "என்ன செய்வது? அதை விற்பதற்கு முயன்று கொண்டிருக்கிறேன். ஆனால் அதை வாங்குவதற்கு யாருமே தயாராயில்லை" என்றார்.

"அதை யாருமே வாங்குவதற்குத் தயாராக இல்லை. ஏனென்றால் அது எதற்குமே பயனற்றது! நீங்கள் போய் அதை ஒரு நதியில் எறிந்துவிட வேண்டியதுதான் - யாரோ ஒருவர் அதைத் திரும்பக் கொண்டு வராமல் இருப்பதற்காகக் கடவுளுக்கு நன்றி செலுத்த வேண்டும்!"

அவர், "நான் அதைப் பற்றிச் சிந்திக்கிறேன்" என்றார். ஆனால் அவர் அ்தைச் செய்யவில்லை.

அவருடைய அடுத்த பிறந்த நாள் வந்தபோது, நான் ஒரு புதிய, இருப்பதிலேயே மிகச்சிறந்த சைக்கிளை வாங்கி அவருககுப் பரிசாக அளித்தேன். அவர் மிகவும் சந்தோஷமடைந்தார். அடுத்த நாள் நான் அவரை அந்தப் புதிய சைக்கிளில் பார்ப்பதற்காகக் காத்துக் கொண்டிருந்தேன். ஆனால் அவர் மீண்டும் அந்தப் பழையதிலேயே இருந்தார். அதனால் நான், "என்ன விஷயம்?" என்று கேட்டேன்.

அவர், "நீங்கள் எனக்குக் கொடுத்துள்ள அந்த சைக்கிள் மிகவும் அழகாக உள்ளது. அதை என்னால் உபயோகிக்க முடியவில்லை" என்றார்.

அது பூஜை செய்யப்படும் பொருளாகி விட்டது. தினமும் அவர் அதைச் சுத்தம் செய்வார். அதை அவர் சுத்தம் செய்வதை நான் பார்ப்பேன். அவர் அதைச் சுத்தம் செய்வார், மெருகேற்றுவார்,

செல்வார்... எப்போதும் அது அவருடைய வீட்டில் காட்சிப்பொருளாக இருந்து வந்தது; அவர் தன்னுடைய சைக்கிளில் ஓடிக் கொண்டிருந்தார் – நான்கு, ஐந்து மைல்கள் கல்லூரிக்குச் செல்வது; நான்கு ஐந்து மைல்கள் கடைத்தெருவிற்கு வருவது – முழு நாளும். அதை உபயோகிப்பதற்கு அவரை இசையச் செய்வது முடியாததாக இருந்தது. அவர், “இன்று மழை பெய்கிறது”, “இன்று அதிக உஷ்ணமாக உள்ளது”. “இப்பொழுதுதான் அதற்கு மெருகேற்றினேன்” மாணவர்கள் எப்படி உள்ளார்கள் என்பதை நீங்கள் அறிவீர்கள். அவர்கள் குறும்புக்காரர்கள் – யாரோ ஒருவர் அதில் கீறல்கள் ஏற்படுத்துவார்கள். நான் கல்லூரிக்கு வெளிப்பக்கம் விட வேண்டும். யாரோ ஒருவர் கீறல் ஏற்படுத்தி அதை அழித்து விடுவார்கள்” என்று சொல்லுவார்.

அதை அவர் ஒருபோதும் உபயோகிக்கவில்லை. எனக்குத் தெரிந்த வரையில் அவர் இன்னும் அதை பூஜை பண்ணி வருகிறார் என்பதே. பொருட்களைப் பூஜை பண்ணிக் கொண்டிருக்கும் மக்கள் உளளனர். அந்தப் பேராசிரியரிடம் நான், “நீங்கள் சைக்கிளின் அதிகாரி அல்ல, சைக்கிள் உங்களுடைய அதிகாரியாகி விட்டது. உண்மையில் நான் உங்களுக்கு ஒரு சைக்கிளைப் பரிசாக அளித்தேன் என்று எண்ணிக் கொண்டிருந்தேன் – இபபோது நான் சைக்கிளிடம், “நான் உனக்குப் பேராசிரியரைப் பரிசாக அளித்துள்ளேன்” என்று சொன்னேன். சைக்கிள் அதிகாரியாக உள்ளது.

நீங்கள் பொருள்களுக்கு ஆசைப்பட்டால், நீங்கள் ஒருபோதும் வசப்படுத்துபவராக மாட்டீர்கள், அதுதான் வித்தியாசம். நீங்கள் ஓர் அரண்மனையில் இருக்கலாம். ஆனால் நீங்கள் அதை உபயோகித்தால், அது பொருளில்லை. நீங்கள் ஒரு குடிசையில் இருக்கலாம். நீங்கள் அதை உபயோகிக்கவில்லை என்றால், குடிசை உங்களை உபயோகிக்கும், வெளிப்பக்கமிருந்து பார்க்கும் மக்களுக்கு நீங்கள் ஏழையாக காணப்படலாம். ஆனால் நீங்கள் அப்படி இல்லை. நீங்கள் பொருள்களுடன் அதே சிந்தனையாக உள்ளீர்கள். ஒரு மனிதன் துறவியாக இருப்பவன், அரண்மனையில் வாழலாம். ஒரு மனிதன் துறவியாக இல்லாமல் குடிசையில் வாழலாம். துறவியாக இருப்பதன் தன்மை உங்களுடைய வசப்படுத்தும் தன்மையைச் சார்ந்ததுதான். நீங்கள் பொருள்களை உபயோகிப்பீர்களானால், நல்லது; ஆனால் நீங்கள் உபயோகிக்கப்படுவீர்களானால், நீங்கள் மிகவும் முட்டாள்தனமாக நடந்து கொள்கிறீர்கள்.

பதஞ்சலி, "பின்பு எல்லாப் புலன்களையும் முழுமையாக வசப்படுத்தும் தன்மை வருகிறது" என்று சொல்கிறார் - புலன்களுடைய பொருள்கள்... பிரத்யாஹாரத்தின் மூலம் மட்டுமே, நீங்கள் உங்களுடைய வாழ்க்கையில் அதிக முக்கியத்துவம் வாய்ந்த பொருளாகிறீர்கள். அதற்கு எதையுமே ஒப்பிட முடியாது. உங்களுடைய சொந்த ஆன்ம-ஞானத்திற்காக எல்லாப் பொருள்களும் தியாகம் பண்ணப்படும பொழுது, நீங்கள் உங்களுடைய உள்ளே உள்ள இராஜ்ஜியம், வெளியே உள்ள இராஜ்ஜியம் இவற்றுக்கிடையில் தேர்ந்தெடுக்க வேண்டுமானால், நீங்கள் உங்களது உள்ளே உள்ள இராஜ்ஜியத்தைத் தேர்ந்தெடுப்பீர்களானால் - அந்த நேரத்தில், முதன் முறையாக, நீங்கள் ஓர் அடிமையாக இல்லை. நீங்கள் ஓர் வசப்படுத்துபவராகி விட்டீர்கள். இந்தியாவில் நாம் சந்நியாசிகளுக்கு சுவாமி என்ற வார்த்தையை உபயோகித்து வருகிறோம் - சுவாமி என்பதன் பொருள், "வசப்படுத்துபவர், புலன்களை வசப்படுத்துபவர் என்பதாகும். இல்லையென்றால், நீங்கள் எல்லோரும் அடிமைகளே - உயிரற்ற பொருள்களின் அடிமைகள். ஸ்தூல உலகத்தின் அடிமைகள்.

நீங்கள் ஒரு வசப்படுத்துபவராக ஆகவில்லை என்றால், நீங்கள் அழகாக இருக்க முடியாது. நீங்கள் அவலட்சணமாக இருக்கிறீர்கள். நீங்கள் தொடர்ந்து அவலட்சணமாக இருந்து வருகிறீர்கள். நீங்கள் ஒரு வசப்படுத்துபவராக ஆகவில்லையென்றால், நீங்கள் தொடர்ந்து நரகமாக இருந்து வருகிறீர்கள். தனக்குத்தானே வசப்படுத்துவதாக இருப்பது சொர்க்கத்தில் நுழைவதாகும். அதுதான் அங்கே ஒரே ஒரு சொர்க்கமாகும்.

பிரத்யாஹாரம் உங்களை அந்த வசப்படுத்துபவராகச் செய்கிறது. பிரத்யாயாரம் என்றால்: இப்போது நீங்கள் பொருள்களை நோக்கிச் செல்லவில்லை, பின்தொடரவில்லை, தேடவில்லை. உலகத்தினுள் சென்று கொண்டிருந்த அதே சக்தி இப்போது மையத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது. சக்தி மையத்தை அடையும்போது, உண்மைக்கு மேல் உண்மையாக வெளிப்படுத்தப்படுகிறது. நீங்கள் முதன் முறையாக உங்களுக்கு வெளிப்படுத்தப்படுகிறீர்கள் - நீங்கள் யார் என்பதை அறிகிறீர்கள். அந்த ஞானம், நான் யார் என்பது உங்களை ஒரு தெய்வமாகச் செய்கிறது.

மனிதனைப் பற்றி, "எப்படி தெய்வம் மாதிரி இருக்கிறான்" என்று சொல்லும் ஷேக்ஸ்பியரின் ஹேம்லட் சரியானதே. மனிதனைப் பற்றி, "எப்படி நாய் மாதிரி இருக்கிறான்" என்று பாவ்லோவ் தவறாகச் சொல்கிறார். ஆனால் நீங்கள் பொருள்களைப் பின்தொடருவீர்களானால் பாவ்லோவ் சொல்வது உண்மையே, ஹேம்லட் தவறானது. நீங்கள் பொருள்களைப் பின்தொடர்வீர்களானால் பின்பு ஸ்கின்னர் சொல்வது உண்மையே, லுயிஸ் சொல்வது தவறாகும். நீங்கள் எதுவாக இருக்க விரும்புகிறீர்களோ அதை நீங்கள்தான் தேர்ந்தெடுக்க வேண்டும். நீங்கள் உட்புறம் செல்வீர்களானால் நீங்கள் ஒரு கடவுளாகிறீர்கள். நீங்கள் வெளிப்புறம் செல்வீர்களானால் பாவ்லோவ் சொல்வது உண்மையே.

மறுபடி சொல்கிறேன்: சி.எஸ். லுயிஸ், "மனிதன் நீக்கப்பட வேண்டிய பொருளாகும்" என்று சொல்லுகிறாள். பி.எஃப்.ஸ்கின்னர், 'நல்ல விடுதலை' என்று சொல்லுகிறார். ஷேக்ஸ்பியரின் ஹேம்லட், "எப்படி ஒரு தெய்வம் போல இருக்கிறான்" என்று சொல்லுகிறது. பாவ்லோவ், "எப்படி ஒரு நாய் மாதிரி இருக்கிறான்" என்று சொல்லுகிறார். நீங்கள்.......

○

**மனிதன், மிருகத்திற்கும் தெய்விகத்திற்கும் இடையில் ஒரு பாலம் என்று நீங்கள் சொன்னீர்கள். இந்தப் பாலத்தில் நாங்கள் எங்கிருக்கிறோம்?**

*நீங்கள் பாலத்தின் மேல் இல்லை. நீங்கள் பாலமே. இதைப் புரிந்துகொள்ள வேண்டும். நீங்கள் பாலத்தின் மீது இருப்பதாக எண்ணுவீர்களானால், விஷயத்தைத் தவற விட்டுவிட்டீர்கள் - இது, அகங்காரம் முழு விஷயத்தையுமே தவறான அர்த்தம் கொள்வதாகும். நீங்கள் பாலமாக உள்ளீர்கள். நீங்கள் கடந்து செல்ல வேண்டும், தாண்டிச் செல்லவேண்டும். நீங்கள், நீங்கள் இருப்பது போல பாலமாகவே உள்ளீர்கள். உங்களைப் பின்னால் விட்டுவிட வேண்டும். நீங்கள் உங்களுக்கு அப்பால் செல்ல வேண்டும்.*

*இதை நீங்கள் சரியாகப் புரிந்து கொண்டீர்களானால், பின்பு ஒரு விஷயம் மிகத் தெளிவாகிறது. நீங்கள் மிக அதிகமாக இருப்பீர்களானால், நீங்கள் ஒரு மிருகமாகிறீர்கள். அப்போதும்கூட பாலம் மறைந்து விடுகிறது. அகங்காரம் அதிகமாகக் குவிக்கப்படும் போது, பின்பும்கூட நீங்கள் ஒரு பாலமாக இல்லை, பாலம் இல்லை - நீங்கள் மிருகமாகி விட்டீர்கள். நீங்கள் இல்லையென்றால், மீண்டும் பாலம் மறைந்து விடுகிறது - பின்பு நீங்கள் தெய்வீகமாக உள்ளீர்கள். அகங்காரம் மட்டுமே இருக்குமாவால், நீங்கள் ஒரு நாயாக இருக்கிறீர்கள். அகங்காரம் நாயாகும். நீங்கள் முழுதுமாக மறைந்து விட்டீர்களானால், பின்பு தொடர்ந்து இருந்து வரும் அமைதி தெய்வீகமாகும், கடவுளாகும்.*

*எல்லைகள் இல்லாமல், எல்லையற்று தொடர்ந்து இருக்கும் வெறுமையை, தொடர்ந்திருக்கும் சூன்யத்தை, தொடர்ந்திருக்கும் வெளியை (ஆகாசத்தை) - அதைத்தான் புத்தர் நிர்வாணம் என்று அழைக்கிறார். நிர்வாணம் என்ற வார்த்தையின் பொருள்: நீங்கள்*

முடிவடைந்து விட்டீர்கள் என்பதாகும். நிர்வாணம் என்ற வார்த்தைக்கு நேரான பொருள்: நீங்கள் தீச்சுடரை அணைக்கும்போது - சுடர் மறைந்து விடுகிறது. அதிகமான இருள், வெளிச்சம் இல்லை. அகங்காரத்தின் சுடர் மறைந்து விடும்பொழுது - நீங்கள் எல்லையற்றதாகிறீர்கள். இப்பொழுது உங்களை எந்த இடத்திலும் கண்டுபிடிக்க முடியாது - பின்பு நீங்கள் தெய்விகமாகி விட்டீர்கள்.

இந்த அகங்காரம், அகங்காரமற்ற இரண்டு நிலைகளுக்கு இடையிலும் - பாலம் உள்ளது. அது நீங்கள் எந்த அளவு அகங்காரம் உள்ளவராக இருக்கிறீர்கள் என்பதைப் பொறுத்தது: உங்களுக்கு அதிகம் இருக்குமானால் நீங்கள் மிருகத்தின் பக்கம் சாய்ந்துள்ளீர்கள். உங்களுக்கு அதிகம் இல்லையென்றால், நீங்கள் தெய்விகத்தின் பக்கம் சாய்ந்துள்ளீர்கள். ஒரு கயிறு மிருகத்திற்கும், தெய்விகத்திற்கும் இடையில் இழுக்கப்பட்டுள்ளது - ஆனால் நீங்கள் அந்தக் கயிறாவீர்கள். அதனால் நீங்கள் பாலத்தில் எங்குள்ளீர்கள் என்று கேட்காதீர்கள். ஏனென்றால் அகங்காரம்தான் அதைக் கேட்கிறது. நீங்கள்தான் பாலம் என்பதைப் புரிந்து கொள்ள முயலுங்கள். அது தாண்டிச் செல்லப்பட வேண்டும், கடந்து செல்லப்பட வேண்டும். நீங்கள் உங்களுக்கு அப்பால் செல்ல வேண்டும்.

நீங்கள் சுதந்திரமாக இருக்க முயலாதீர்கள். ஏனென்றால் அது நுண்ணிய அகங்காரத்தின் உந்துதலாக இருக்கும். அகங்காரத்தினின்று சுதந்திரமாக இருக்க முயலுங்கள் - ஏனென்றால் சுதந்திரம்கூட அகங்காரத்திற்கு உந்துதலாகி விடும். ஆனாலும்கூட நீங்கள் ஒருபோதும் சுதந்திரமாக இருப்பதில்லை. ஏனென்றால் அகங்காரம் ஒரு பந்தமாகும். சுதந்திரம் உங்களுடையதாக இருக்கப் போவதில்லை. நீங்கள் இல்லாத பொழுதுதான் சுதந்திரம் அங்கே இருக்கிறது.

இந்த 'நான்' என்ற உணர்வை மறைவதற்கு அனுமதியுங்கள். வேறெதுவும் செய்யத் தேவையில்லை. மறைவதற்கு அனுமதியுங்கள்... ஏனெனில் அது அப்படிப்பட்ட ஒரு போலியான விஷயமாக இருப்பதால், அதைத் தொடர்ந்து உருவாக்கிக் கொண்டே இருக்க வேண்டும், அதன்பின்தான் அது தொடர்ந்திருக்கும். ஒவ்வொரு வினாடியும் நீங்க அதனுடன் ஒத்துழைக்க வேண்டும். இது, ஒரு சைக்கிள் ஓட்டுபவர் சைக்கிளை பெடல் செய்து கொண்டே இருப்பது போல. அவர் நிறுத்துவாரானால், சைக்கிள் நின்று விடும்.

தொடர்ந்து பெடல் செய்து கொண்டிருப்பது சைக்கிளுக்குத் தேவைப்படுகிறது. அகங்காரத்திற்குத் தொடர்ந்து ஒத்துழைப்பு தேவைப்படுகிறது. நீங்கள் அதற்கு எதிராக எதுவும் செய்யத் தேவையில்லை. நீங்கள் விழிப்படையுங்கள், ஒத்துழையாதீர்கள். விழிப்படையுங்கள், எப்படி அகங்காரம் எழுகிறது, அதனுடைய வழிகள் எப்படி நுண்மையாக உள்ளன என்பதைக் கவனித்துக்கொண்டே இருங்கள், கவனியுங்கள், ஒத்துழையாதீர்கள் - அது போதுமானது: அகங்காரம் பட்டினியால் மரணமடையும், சைக்கிள் நின்று விட்டது. பெடல் செய்யாமல், அதனால் தொடர முடியாது.

நீங்கள் என்னிடம் வந்து எப்படி அகங்காரத்தை நிறுத்துவது (தடுப்பது) என்று கேட்பது, நீங்கள், சைக்கிள் ஓட்டுபவர் போல. பெடல் பண்ணிக்கொண்டே சப்தமிட்டுக்கொண்டு தெருவில் உள்ள மக்களை, "எப்படி நிறுத்துவது?" என்று கேட்டுக்கொண்டு பெடல் பண்ணிக் கொண்டே இருப்பதைப் போல் உள்ளது. பெடல் செய்யாதீர்கள். சைக்கிள் தானாகத் தொடர முடியாது. உங்கள் உதவி தேவைப் படுகிறது.

உங்களுடைய துக்கம் இருப்பது அதற்கு நீங்கள் உதவுவதால் தான். உங்களுடைய துன்பம் இருப்பது ஏனென்றால் நீங்கள் அதன் பின்னால் உள்ளீர்கள். அதற்கு உணவளித்துக் கொண்டுள்ளீர்கள். உங்களுடைய நரகம் இருப்பது உங்களடைய ஒத்துழைப்பினால். ஒருமுறை அதை நீங்கள் புரிந்து கொண்டால், ஒத்துழைப்பு கலைந்து விடுகிறது (பிரிந்து போய்விடுகிறது); நீங்கள் இந்த முழுதுமான துக்ககரமான ஆட்டத்தில் இனி பகுதியாக இல்லை; நீங்கள் ஒருபக்கமாக நின்று கவனிக்கிறீர்கள். எதிர்பாராத, பெரும் ஒலியுடன் வெடிப்பு - இனி அகங்காரம் அங்கே இல்லை, இனி எந்த சைக்கிளும் இல்லை, பெடல் செய்வதற்கு எதுவும் இல்லை. அந்த நேரத்தில்தான் பாலம் கடக்கப்படுகிறது.



**ஒரு மாஸ்டரும், சீடரும் காதலர். இருவரும் இருப்புத்தன்மைக்கு இருப்புத்தன்மை (being to being) சந்திப்பது முடியும் என்று சில சமயங்களில்,**

**நீங்கள் சொல்கிறீர்கள், சில சமயங்களில் நாம் முற்றிலும் தனிமையாக உள்ளோம். எப்போதும் சேர்ந்திருப்பது முடியாது என்றும் சொல்கிறீர்கள். மற்றொருவரை இருப்புத்தன்மைக்கு இருப்புத்தன்மை (being to being) சந்திக்க விரும்புவது ஆசையா, மனதின் பொய்யான ஒன்றா, அதை விட்டுவிட வேண்டுமா? உங்களால் முடிந்தால், தயவு செய்து விளக்கம் சொல்லுங்கள்.**

*ஆமாம், விளக்கம் சொல்வது கடினம்தான். எல்லா விளக்கங்களும் கடினம்தான், ஏனென்றால் முதலிடத்தில் பிரச்சினைகள் போலியானவை (பொய்யானவை). ஒரு பிரச்சினை பொய்யாக இருக்கும்போது எப்படி விளக்குவது? நீங்கள் ஏதோ ஒன்றைத் தவறாகக் கேட்கிறீர்கள். விளக்கம் சொல்வது கடினமாகிறது. அதனால் அது சரியே - எல்லாப் பிரச்சினைகளும் விளக்கம் சொல்வதற்குக் கஷ்டமே. உண்மையில், நீங்கள் புரிந்து கொள்ளும் பொழுது, அங்கே பிரச்சினை இல்லை. ஆகையால் ஒரு பிரச்சினை தீர்க்கப்பட முடியாது, இங்கே நான் உங்களுடைய பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு முயலவில்லை. நான் உங்களுடைய முட்டாள்தனத்திற்கு சம்பந்தப்பட்டவன் அல்ல. உங்களுக்கு புரிந்து கொள்வதற்கு, சொல்லிக் கொடுப்பதற்கு முயன்று கொண்டிருக்கிறேன், உங்களுடைய பிரசசினைகளைத் தீர்ப்பதற்கல்ல. அவற்றைத் தீர்க்க முடியாது, ஏனென்றால் அவை முழுதுமாகத் தவறானவை.*

*எல்லாப் பிரச்சினைகளும், ஒரு மனிதன் அதிகக் காய்ச்சலுடன் - நூற்று ஏழு டிகிரி - முட்டாள்தனமான விஷயங்களைக் கேட்டுக் கொண்டே இருப்பது போல உள்ளது. அவன், "இந்த நாற்காலி ஏன் ஆகாயத்தில் பறந்து கொண்டிருக்கிறது?" என்று கேட்கிறான். அதற்கு எப்படி விளக்கம் சொல்வது? அவனுடைய காய்ச்சல் இறக்கப்பட வேண்டும் (கீழே கொண்டு வரப்பட வேண்டும்) அதுதான் ஒரே வழி. அதைத்தான் நான் செய்து கொண்டிருக்கிறேன். என்னுடைய முழு முயற்சியும் அதைப் பற்றியதுதான். உங்களுடைய காய்ச்சலைக் கொஞ்சம் கீழே கொண்டு வருவது. நீங்கள் புரிந்து கொண்டீர் களானால், காய்ச்சல் இறங்கும்போது, நாற்காலி இனிமேல் பறப்பதில்லை. பின்பு நீங்கள், உங்களைப் பார்த்து எவ்வளவு முட்டாள்தனமாக இருந்தீர்கள் என்று சிரிக்க ஆரம்பிக்கிறீர்கள்.*

இது கடினமானது, இது ஏறக்குறைய விளக்க முடியாதது, ஏனென்றால் முதலில் எவையேனும் நீங்கள் கேட்பது தவறாகப் போகப் போகிறது. உங்களால் சரியான கேள்வி கேட்க முடியாது. ஏனென்றால் நீங்கள் ஒரு சரியான கேள்வி கேட்பீர்களானால், அதைக் கேட்க வேண்டிய தேவையில்லை. ஒரு சரியான கேள்வி எப்பொழுதும் அதனுள் சரியான விடையைச் சுமந்து கொண்டிருக்கிறது - ஏனென்றால் உண்மையான விஷயம் சரியானது. நீங்கள் உங்கள் கேள்விகளில் சரியாக இருந்தீர்களானால், நீங்கள் முன்பே புரிந்துகொண்டு விட்டீர்கள். இருந்தபோதிலும் நான் முயற்சி செய்கிறேன். நான் உங்கள் காய்ச்சலைக் கொஞ்சம் கீழே கொண்டு வர முயற்சி செய்கிறேன். அது ஒரு விளக்கம் அல்ல.

"ஒரு மாஸ்டரும் சீடரும், காதலர் இருவரும் இருப்புத்தன்மைக்கு இருப்புத்தன்மை (being to being) சந்திப்பது முடியும் என்று சில சமயங்களில் நீங்கள் சொல்லுகிறீர்கள். சில சமயங்களில் நாம் முற்றிலும் தனிமையாக உள்ளோம். எப்போதும் சேர்ந்திருப்பது முடியாது என்றும் சொல்லுகிறீர்கள்" இரண்டும் உண்மையே. நாம் முழுதும் தனிமையில் இருக்கிறோம். சேர்ந்திருப்பது சாத்தியமில்லை - இது முழுதும் உண்மையே. அந்த மற்றொரு விஷயம்கூட முழுதும் உண்மையே, இதைப்போல. காதலர் இருவர் இருப்புத்தன்மைக்கு இருப்புத்தன்மை (being to being) சந்திக்கின்றனர். மாஸ்டரும் சீடரும் இருப்புத் தன்மைக்கு இருப்புத்தன்மை (being to being) சந்திக்கின்றனர். அதனுடைய அனுபவம் உங்களுக்கு இல்லாததால், முரண்பாடு எழுகிறது.

காதலர்கள் இருவர் சந்திக்கும் போது அவர்கள் இரண்டு காதலர்கள் அல்ல - அன்பு மட்டுமே இருக்கிறது. இரண்டு மறைந்து விட்டது, காதலர்கள் மறைந்து விட்டனர். ஏனென்றால் காதலர்கள் இருக்கும் போது, அங்கே இரண்டு இல்லை, அவர்கள் இனி காதலர்கள் இல்லை. அன்பு மட்டுமே உள்ளது. அந்த இரண்டும் ஒரு நதியின் இரண்டு கரைகள் போலாகி விடுகின்றன. உண்மையில் நதி இரண்டு கரைகளையும் தொட்டுக்கொண்டு ஓடுகிறது. நதியில்லாமல் கரைகள் தனிமையாக உள்ளன, தனியாக, சந்திக்க முடியாது. நதி ஓடும்பொழுது கரைகள் நதியின் மூலமாக நதியில் சந்திக்கின்றன.

மாஸ்டரும், சீடரும் சந்திக்கும் பொழுது அங்கே மாஸ்டர் இல்லை, சீடரும் இல்லை. அவர்கள் இருவர் அல்ல. இருமை இனி

அங்கில்லை. மீண்டும் ஒன்று அதனுடைய முழுமையான தனிமையில், அதனுடைய முழுமையான ஏகாந்தத்தில் இருக்கிறது. இரண்டு சந்திக்க முடியாது. ஆனால் இரண்டு மறைந்து விடுமானால் பின் அங்கே அந்த வினாடி (நேரம்) உள்ளது.

இது கடினமானது, அதை என்னவென்று அழைப்பது. நான் அதை சந்திக்கும் நேரம் என்று அழைப்பேனானால், நீங்கள் தவறாகப் புரிந்து கொள்வீர்கள். ஏனென்றால் எல்லா சந்திப்புகளுக்கும் இரண்டின் இருப்பு இருப்பதாக எண்ண வேண்டியுள்ளது. நான் அதை சந்திப்பு என்று அழைக்கவில்லையென்றால், பின்பு என்னால் அதை வேறு ஏதோ ஒன்றென அழைப்பது முடியாது. இதுதான் மொழியுடன் உள்ள கஷ்டமாகும். ஆனால் நீங்கள் புரிந்து கொள்ளலாம். நீங்கள் இணக்கத்துடன் என்னைக் கவனிப்பீர்களானால் - கவனிப்பிற்கு எந்த வழியும் இல்லை - நீங்கள் என்னுடன் ஆழ்ந்த இணக்கத்துடன் இருந்தீர்களானால், ஒரு பிரச்சினையை என்னுடன் விவாதிக்க முயற்சி செய்யாமல், ஆனால் இன்னும் சரியாகச் சொல்லப்போனால் விளக்க முடியாததை விளக்குவதில் எனக்குள்ள கஷ்டத்தைப் புரிந்துகொள்ள முயன்றால், ஓர் ஆழ்ந்த இணக்கத்துடன் அதுதான் நம்பிக்கை என்பது, பின்பு நீங்கள் புரிந்து கொள்கிறீர்கள். பின்பு வார்த்தைகள் இடைஞ்சல்கள் இல்லை, ஏமாற்றுவதில்லை, பின் அவை தடைகள் ஆவதில்லை. அவை சுட்டிக்காட்டுபவைகளாக இருக்கின்றன. பின்பு அவை ஒரு நிச்சயமான முக்கியத்துவம் உள்ளவையாக இருக்கின்றன - பொருள் இல்லை - முக்கியத்துவம் உள்ளவை - ஏனென்றால் அவற்றின் மூலம் உங்களுக்கு ஒரு நொடி நேரக் காட்சி கிடைக்கும்.

அவை முரடானவை என்பதை நீங்கள் அறிவீர்கள். எல்லா வார்த்தைகளும் முரடானவை - மொழி முரடானது - அனுமதி நுண்ணியது - நீங்கள் இணக்கத்துடன் புரிந்து கொண்டீர்களானால், ஆழ்ந்த நம்பிக்கையில், ஆழ்ந்த உண்மையுடன் (விசுவாசத்துடன்) பின்பு வார்த்தைகள்கூட அமைதியின் தன்மை கொண்ட ஏதோ ஒன்றைச் சுமந்து கொண்டிருக்கின்றன.

என்னைக் கவனியுங்கள்: இரண்டு சந்திக்க முடியாது - அது முடியாதது. இரண்டு சந்திக்கும் ஆனால் பின்பு இரண்டின் தன்மை மறைந்து விடும். இருப்புத்தன்மைக்கு இருப்புத்தன்மை (being to being) சந்திப்பது என்று நான் சொல்லுகின்ற பொழுது, நான்

இப்பொழுது காதலரும் இல்லை, காதலியும் இல்லை. அவர்கள் இழக்கப்பட்டு விடுகிறார்கள், மறைந்து விடுகிறார்கள், வேறு ஏதோ ஒன்று ஒன்றாய் இருத்தல் அவர்களுடைய இருப்புத்தன்மைகளுள் (beings) ஊடுருவுகிறது. அந்த ஆழ்ந்த அமைதியில் அன்பு இருக்கிறது, காதலர்கள் இல்லை - என்ற பொருளில் சொல்கிறேன்.

ஒரு சீடரும், மாஸ்டரும் ஒன்றாக இருக்கும்பொழுது, சீடர் இழக்கப்படுவதற்குத் தயாராக இருந்தால்... ஏனென்றால் மாஸ்டர் முன்பே இழக்கப்பட்டவராவார். அவர் வெறுமையானவர். சீடர் மாஸ்டருடைய அந்த வெறுமையுடன் கூட மிதப்பதற்குத் தயாராக இருந்தால் - எந்த உரிமையும் கேட்கவில்லை என்றால், எந்த ஆசையும் இல்லாமல், ஏனென்றால் அவை உங்களை மறைந்து போவதற்கு அனுமதிக்காது. சந்தேகம் இல்லாமல், உறுதியற்ற நிலையில்லாமல் - சீடர் வெறுமையின் பகுதியாகத் தயாராக இருந்தாரானால், வெறுமை இருவரையும் சூழ்ந்து கொள்ளும். அது சூழ்ந்து கொள்வதாகிறது. அந்த வெறுமையின் மேகத்தில் இருவரும் இழக்கப்பட்டு விட்டார்கள். அதுதான் இருப்புத் தன்மைக்கு இருப்புத்தன்மையின் இடையில் சந்திப்பதாகும். அது, அது ஒரு சந்திப்பு, மிகச்சிறந்த சந்திப்பு என்ற பொருளில்; அந்த சந்திப்பே இல்லை ஏனென்றால் அங்கே சந்திப்பதற்கு இருவர் இல்லை.

ஒருமுறை, நான், நீங்கள் முழுதுமாக ஏகாந்தத்தில் உள்ளீர்கள் என்று சொல்லுகிறேன். மற்றொரு முறை சந்திப்பதற்கு சாத்தியம் உள்ளது என்று சொல்லுகிறேன். இது பார்ப்பதற்கு முரண்பட்டது போல் தோன்றுகிறது. எப்பொழுது அந்த சாத்தியம் திறக்கப்படுகிறது? நீங்கள் மற்றவரைச் சந்திக்க முயற்சி செய்யாமல் இருக்கும்பொழுது, அதன்பின்தான். நீங்கள் மற்றவரை இருப்புத்தன்மைக்கு இருப்புத்தன்மை (being to being) சந்திக்க முயற்சி செய்யும்போது, அதிக முயற்சியே முழு விஷயத்தையும் கெடுத்து விடும் - ஏனென்றால் யார் அந்த முயற்சியைச் செய்வது? நீங்கள் யாரோ ஒருவரை இருப்புத்தன்மைக்கு இருப்புத்தன்மை சந்திக்க முயற்சி செய்வீர்களானால், கரைந்து போவதற்கு, கரைந்து போவதற்கான அதிக முயற்சியே தடையாகி விடுகிறது. சந்திப்பதற்கு அதிக முயற்சி எடுத்துக் கொள்வது, சந்திப்பதற்கு ஆசைப்படுவது, வேற்றுமையை உருவாக்குகிறது.

அதனால்தான் நான், நீங்கள் முழுதுமாக தனிமையில் இருக்கிறீர்கள் என்று சொல்லுகிறேன். மற்றவரும்கூட முழுதும் தனிமையில் இருக்கும்போது அங்கே சந்திப்பது ஏற்படுகிறது – நீங்கள் அதற்குத் தயாராக இருக்கிறீர்கள் என்பதில்லை. நீங்கள் எந்த முயற்சியும் செய்தீர்கள் என்பதல்ல, நீங்கள் அதைத் திறமையாகக் கையாளுகிறீர்கள் என்பதல்ல. அது மிகவும் பரந்தது, உங்களால் அதைத் திறமையாகக் கையாள முடியாது. அது மிகப்பெரியது. உங்களால் அதைப் பற்ற முடியாது. அது உங்களைப் பற்றிக் கொள்வதற்கு அனுமதிக்க மட்டுமே முடியும். நீங்கள் உங்களை அதுபற்றிக் கொள்வதற்கு அனுமதிக்க மட்டுமே முடியும்.

கடவுளைத் தேடுவதற்கு முடியாது. கடவுள் உங்களைப் பற்றிக் கொள்வதற்கு நீங்கள் அனுமதிக்க மட்டுமே முடியும். நீங்கள் அவர் உங்களைத் தேடுவதற்கு, ஆராய்வதற்கு அனுமதிக்க மட்டுமே முடியும். அன்பு அல்லது கடவுள் மிகப்பெரிய, மிகச்சிறந்த நிகழ்வாகும். நீங்கள் மிகச் சிறியவர். நீங்கள் முயன்றீர்களானால், தோற்று விடுவீர்கள். உங்களுடைய மிக அதிகமான முயற்சியே தோல்வியாகும். முயற்சி செய்யாதீர்கள்.

உங்களுடைய ஏகாந்தத்தில் பளிங்கு போல் தெளிவாக இருங்கள், உங்களுடைய ஏகாந்தத்தில் தூய்மையாக இருங்கள். அமைதியாக, நிலைத்து, வேரூன்றி, மையங்கொண்டு இருங்கள். திடீரென ஏதோ ஒன்று உங்களுள் புகுந்து விடுகிறது. நீங்கள் இனிமேல் அங்கே இல்லை. பாலம் மறைந்து விட்டது. அகங்காரம் இனிமேல் இல்லை. முதல் முறையாக அது எதிர்பாராத வகையில் தொடர்ந்து உங்களை எடுத்துக் கொள்கிறது. மாஸ்டர் சீடரினுள் புகுவாரானால் அல்லது காதலர் காதலியினுள், அல்லது காதலி நண்பருள் – எப்பொழுதெல்லாம் இது நிகழ்கிறதோ, நீங்கள் எதிர்பாராத வகையில் எடுத்துக் கொள்ளப்படுகிறீர்கள். இது எப்பொழுதுமே ஒரு வியப்பாகும். உங்களால் அது நிகழ்ந்தது என்பதை நம்பவே முடியாது. அது மிகவும் நம்பவே முடியாதது, முடியாத விஷயம். ஆனால் அது நிகழ்கிறது.



**வாழ்க்கை ஒரு பேரானந்தமான பிரபஞ்ச விளையாட்டென்றால், ஏன் எல்லா உயிர்களும் வேதனைப் படுகின்றன?**

தயவு செய்து நீங்கள் எல்லா உயிர்களையும் மறந்து விடுங்கள். உங்களுக்குத் தெரியாது. நான் வேதனைப்படவில்லை. நீங்கள் வேதனைப்படலாம். எல்லா உயிர்களைப் பற்றியும் பேசாதீர்கள். நீங்கள் உங்களைப் பற்றிக்கூட அறிந்துகொள்ளவில்லை. எப்படி உங்களால் மற்றவர்களைப் பற்றி அறிந்து கொள்ள முடியும்? உங்களைப் பற்றிப் பேசுங்கள். ஏனென்றால் விஷயங்கள் முன்பே மிகச் சிக்கலாக உள்ளன. நீங்கள் எல்லோரையும் பற்றி பேச ஆரம்பிக்கும் போது, விஷயங்களை நீங்கள் புரிந்து கொள்வதற்கு ஏறக்குறைய முடியாததாகச் செய்கிறீர்கள். இதை மட்டும் சொல்லுங்கள். நான் ஏன் வேதனைப்படுகிறேன்? வாழ்க்கை ஒரு பேரானந்தமான பிரபஞ்ச விளையாட்டென்றால், பின் நான் ஏன் வேதனைப்படுகிறேன்? - இந்த அளவு மட்டும் போதுமானது. எல்லா உயிர்களையும் மறந்து விடுங்கள் - அது உங்களுடைய வேலையில்லை. அவர்கள் வேதனைப்பட விரும்பினால் வேதனைப்படட்டும். நீங்கள், தயவு செய்து உங்களுக்கு மட்டும் முடிவு செய்யுங்கள். அதுவும்கூட மிக அதிகம், சுலபமானதல்ல.

நீங்கள் ஏன் வேதனைப்படுகிறீர்கள்? ஏனென்றால் நீங்கள் இருப்பதானால், இருப்பது வேதனை, இல்லாமல் இருப்பது வேதனையில்லை. அகங்காரம் வேதனைப்படுகிறது. முழுமை, பிரபஞ்ச விளையாட்டு, அது அழகானது. அது மிகப்பெரிய கொண்டாட்டம் - வினாடிக்கு வினாடி, உயரமான, மிக உயரமான சிகரங்களுக்குச் செல்லுதல். நீங்கள் வேதனைப்படுகிறீர்கள் என்றால், நீங்கள் அதனுடைய பகுதியாக இல்லை. அகங்காரம் ஒருபோதும் முழுமையின் பகுதியாக இல்லை. அகங்காரம் தனித்திருப்பதற்கு முயலுகிறது. அகங்காரம் தனது சொந்தத் திட்டங்களை வைத்துக் கொள்ள, அதனுடைய சொந்தக் கருத்துகளை வைத்துக்கொள்ள, அதனுடைய சொந்தக் குறிக்கோளை வைத்துக்கொள்ள முயலுகிறது.

நீங்கள் முழுமையின் பகுதியானால் வேதனையில்லை. திடீரென நீங்கள் நீரோட்டத்துடன் மிதக்க ஆரம்பித்து விடுகிறீர்கள். நீங்கள் இனி நீந்துவதுகூட இல்லை. ஏனென்றால் பின்பும்கூட அங்கு முயற்சிதான் உள்ளது. நீங்கள் அப்படியே நீரோட்டத்துடன் மிதந்து கொண்டிருக்கிறீர்கள். அது எவையாயினும் நடத்துமானால், அதுவே குறிக்கோளாகும். நீங்கள் தனிப்பட்ட குறிக்கோளை விட்டுவிட்டீர்கள்; முழுமையின் விதியை நீங்கள் ஏற்றுக்கொண்டு விட்டீர்கள். பின்பு

நீங்கள் சுலபமாக வாழலாம், நீங்கள் சுலபமாக மரணமடையலாம், அங்கே எதிர்ப்பு இல்லை.

தடைதான் வேதனையாகும் - உங்களால் முழுமைக்கு எதிராக வெற்றி பெற முடியாது. அதனால் ஒவ்வொரு வினாடியும் நீங்கள் தடை செய்கிறீர்கள், நீங்கள் தோல்வி அடைகிறீர்கள். நீங்கள் வேதனையடைகிறீர்கள். அது தோல்வியின் ஏமாற்றம், பின்பு நீங்கள் உதவியற்றவராக, நம்பிக்கையற்றவராகிறீர்கள், எல்லா இடத்திலும் நீங்கள் உணர்கிறீர்கள். "மனிதன் தீர்மானிக்கிறான், கடவுள் முடிவு செய்கிறார்" என்ற ஒரு பழமொழி உள்ளது. இதைபபோல வேறு எங்குமே ஒரு அதிக முட்டாள்தனமான பழமொழியை நீங்கள் காணமாட்டீர்கள்.

கடவுள் ஒருபோதும் முடிவு செய்வதில்லை. ஆனால் நீங்கள் தீர்மானிக்கும் அந்த நேரத்தில் உங்களுக்குக் கஷ்டத்தை நீங்களே உருவாக்குகிறீர்கள். ஏனென்றால் எல்லாத் தீர்மானங்களும் தனிப்பட்டவையே. அது, கங்கை வங்காள விரிகுடாவில் விழாமல், அரபிக் கடலில் விழுவதற்கு விரும்புவதைப் போல உள்ளது. அது வங்காள விரிகுடாவில் விழ வேண்டும். அப்படித்தான் முன்பே முழுமை அதைத் தீர்மானத்திருந்தது. இப்போது கங்கை, "நான்அரபிக்கடலில் விழ விரும்புகிறேன்" என்று தீர்மானிக்கிறது. அது மேற்கு நோக்கி பின் செல்வதில் வெற்றி கொள்ளாத பொழுது, அது எல்லா முயற்சிகளும் பயனற்றவை என்று உணர்ந்துகொண்டே இருககிறது. அது கிழக்கு நோக்கிச் செல்கிறது, அதற்கு (கங்கைக்கு) மனிதன் தீர்மானிக்கிறான், கடவுள் முடிவு செய்கிறார் என்ற எண்ணம் எழுந்தது. கடவுள் முடிவு செய்வதற்கு ஏன் தொந்தரவு கொள்ள வேண்டும்? கடவுள் ஒருபோதும் எதையும் முடிவு செய்யவில்லை. ஆனால் நீங்கள் தீர்மானித்த அந்த நேரத்தில், நீங்கள் முடிவு செய்வதற்கான சாத்தியத்தை உருவாக்கி விட்டீர்கள்.

ஒரு குறிக்கோளும் இல்லாமல் வாழ்வதற்கு முயலுங்கள், பின்பு பாருங்கள்: வேதனை மறைந்து விடுகிறது. உங்களுடைய அகங்காரம் இல்லாமல் வாழ்வதற்கு முயலுங்கள். அங்கே வேதனை இல்லை. வேதனை ஒரு மனோபாவமாகும். அது உண்மையல்ல. நீங்கள் நோயுற்றிருக்கிறீர்கள். உடனே நீங்கள் நோயுடன் சண்டையிட ஆரம்பிக்கிறீர்கள். வேதனை எழுகிறது. நீங்கள் அதை ஏற்றுக்

கொள்வீர்களானால், வேதனை மறைந்து விடுகிறது. பின்பு நீங்கள் இதைக் கடவுள் தீர்மானித்துள்ளார் என்று அறிகிறீர்கள். அதனுள் ஏதோ விஷயம் இருக்கும். அது உங்களுடைய வளர்ச்சிக்குத் தேவையாக இருக்கும். அதுதான் இயேசுவிற்குச் சிலுவையில் நடந்தது. அவர் கொல்லப்படுவதற்கு முன்னால் ஒரு வினாடி மனித மனம் அவருடைய இருப்புத்தன்மையில் (being) எழுந்தது. அவர் ஆகாயத்தைப் பார்த்து, "என்ன இது, நீங்கள் என்ன செய்வதற்கு முயலுகிறீர்கள்? ஏன் நீங்கள் என்னைத் தனிமையில் விட்டு விட்டீர்கள்?" என்று சொன்னார்: மனித மனம்.

இயேசு அழகானவர். அவர் மனிதர், அவர் கடவுள், இரண்டும் - மனித இனத்தின் எல்லா பலவீனத்துடன் கடவுளின் எல்லா மிகச்சிறந்த தன்மைகளுடன். ஒரு சந்திக்கும் புள்ளி, பாலம் மறைந்து குறிக்கோள் தோன்றும் இடத்தில், பாலம் விட்டு விடப்படும் கடைசிப்புள்ளி. அவர் கோபமடைந்தார், முறையிட்டார். அவர், "நீங்கள் எனக்கு நம்பிக்கைத் துரோகம் செய்து விட்டீர்கள்" என்று சொன்னார். இந்தக் கடைசி நேரத்தில் எல்லோரும் ஓர் அதிசயத்திற்காகக் காத்திருந்தனர் - இயேசுகூட ஆழத்தில் ஓர் அதிசயத்திற்காகக் காத்திருந்திருக்கலாம் - சிலுவை மறைந்து விடும், தேவதூதர்கள் இறங்கலாம், அவர் கடவுளின் ஒரே குமாரன் என்பதை உலகம் முழுவதுமே அறியும். அந்த அகங்காரம்: "ஏன் நீங்கள் எனக்கு நம்பிக்கைத் துரோகம் செய்தீர்கள்? ஏன் நீங்கள் இதைப் பார்ப்பதற்குக் கட்டாயப்படுத்துகிறீர்கள்? உங்கள் மகன் சிலுவையில் அறையப்படுகிறான் - எங்கிருக்கிறீர்கள்?"

அந்த நேரத்தில் அவருடைய மனதில் அவநம்பிக்கை நுழைந்திருக்கும். நான் இதை அழகியது என்று சொல்லுகிறேன் - இது இயேசு இரண்டும். மனிதனுடைய மகன், கடவுளுடைய மகன் என்பதைக் காண்பிக்கிறது. அதுதான் இயேசுவின் அழகாகும், முறையீடுமாகும். ஏன் மனித சமுதாயத்தின் ஒரு பெரும் பகுதி கிறிஸ்துவர்களாக ஆகியுள்ளார்கள்? புத்தரைப் பார்ப்பீர்களானால், அவர் ஒரு கடவுளாகப் பார்க்கப்படுகிறார், மனித இனத்தின் எந்தக் குற்றங்குறைகளும் இல்லாமல். மகாவீரரைப் பார்ப்பிர்களானால், அவர் மிகச்சிறந்தவர், முழுவதும் மிகச்சிறந்த தன்மை உடையவர். கிருஷ்ணரைப் பார்ப்பீர்களானால், உங்களுள் அவநம்பிக்கை உருவாக்கும் ஒரே ஒரு விஷயத்தைக்கூட உங்களால் கண்டுபிடிக்க முடியாது. ஆனால் இயேசு? - பலவீனங்கள் நடுங்குதல், எல்லா

சந்தேகங்களுடன், உறுதியற்ற நிலை, தயக்கம், மனித இனம் கீழ்நோக்கிச் சரியும் எல்லா இருளுடன் பின்பு திடீரென ஒரு வெடிப்பு, இனி அவர் சாதாரண மனிதர் இல்லை.

அந்தக் கடைசி நேரத்தில் அவர் இன்னும் ஜோசப், மேரியினுடைய மகனாகவே இருந்தார்; எல்லாச் சந்தேகங்களும் எழுந்தன - இயற்கை. நான் எதுவும் அவருக்கு எதிராகச் சொல்ல வில்லை - இயற்கையே, முழுதும் இயற்கையே, அது அப்படித்தான் இருக்க வேண்டும். அதன்பின்பு அவர் விஷயத்தைப் புரிந்து கொண்டார். "நான் என்ன சொல்லுகிறேன்? கடவுள் என்னை மறக்கவில்லை, நான்தான் அவரை மறுக்கிறேன். என்னுடைய எதிர்பார்ப்புகள் நிறைவேற்றப்படவில்லை." ஒரு மின்னலின் ஒளியினால் அவர் உடனடியாகப் புரிந்து கொண்டார். "நான் என்னுடைய அகங்காரத்தைப் பற்றிக் கொண்டிருக்கிறேன். நான் அதிசயங்கள் நடப்பதற்குக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். நான் காப்பாற்றப்பட வேண்டுமென்று கேட்கிறேன்! நான் யார், ஏன் முழுமை என்னைப்பற்றி தொந்தரவு கொள்ள வேண்டும்?" அவருடைய முகத்தில் ஒரு புன்னகை வந்திருக்க வேண்டும், மேகங்கள் மறைந்து விட்டன. அவர் தளர்வடைந்தார். அவர், "உங்களுடைய விருப்பம் நிறைவேற்றப்படட்டும். தயவு செய்து என்னைப்பற்றி தொந்தரவு கொள்ளாதீர்கள். என்னுடைய முட்டாள்தனமான மனதைக் கவனிக்காதீர்கள். என்ன செய்ய வேண்டும் என்பதற்கு அபிப்பிராயம் தெரிவிப்பதற்கு நான் யார்? நீங்கள் அங்கு இருக்கும் பொழுது நான் ஏன் தொந்தரவு கொள்ள வேண்டும்?" என்று சொன்னார்.

அவர் தடை செய்வதைத் தளர்த்தியபோது இயேசு கிறிஸ்துவானார். இனி அவர் மரியம், ஜோசப்பினுடைய மகன் இல்லை, அவர் கடவுளுடைய மகனாகி விட்டார். புறமாற்றமும், நிலை மாற்றமும், (இயல்பு மாற்றமும்) முழுவதையும் ஏற்றுக்கொள்ளும் ஒரு புதிய இருப்புத்தன்மை பிறந்தது. இப்போது அங்கு பிரச்சினை இல்லை. கடவுள், அவர் சிலுவையில் அறையப்பட வேண்டுமென்று விரும்பினால் - அந்த வழியில் விஷயங்கள் இருக்கப் போகின்றன - அதுதான் அதிசயமாகும்! உண்மையில், சிலுவை அதிசயத்தை நிரூபித்தது. கிறிஸ்துவ மதம், சிலுவையின் காரணமாகத்தான் உள்ளது. கிறிஸ்துவின் காரணமாக அல்ல. அன்று அவர் காப்பாற்றப் பட்டிருந்தால், நாம் அவரை ஒரு மிகப்பெரிய மந்திரவாதி அல்லது

ஏதோ ஒன்று என்பதுபோல ஞாபகத்தில் வைத்திருப்போம். ஆனால், அந்த ஆழ்ந்த சரணாகதியில், எல்லாக் குறைகளும் மறைந்து விட்டன. இருப்புத்தன்மைக்கும் இருப்புத்தன்மை (being to being) சந்திப்பது நிகழ்ந்தது. அவர், கடவுள் உடைமையாக்கிக் கொள்ளவதற்கு அனுமதித்தார். அப்படித்தான் - மரணத்தின் மூலம் - சரணாகதியின் மூலம் - அவர் உயிர்த்தெழுந்தார். அவர் இனி அதே ஜீவனில்லை - முற்றிலும் புதிய, ஒரு கன்னித்தன்மை நுழைந்தது. பழையது சென்று விட்டது, புதியது பிறந்துள்ளது, இரண்டிற்கிடையிலும் எந்தத் தொடர்பும் இல்லை.

நீங்கள், என்னிடம் வாழ்க்கை ஒரு பேரானந்தமான பிரபஞ்சத்தின் விளையாட்டென்றால், பின்பு ஏன்.... பின்பு ஏன் அங்கே வேதனை உள்ளது? ஏனென்றால் நீங்கள் பிரபஞ்சத்தின் விளையாட்டில் பகுதியாக இல்லை. நீங்கள் உங்களுடைய சிறிய நாடகத்தை வைத்துக் கொண்டுள்ளீர்கள். அதை நடிக்க விரும்பு கிறீர்கள். நீங்கள் முழுமையின் பகுதியாக இல்லை. நீங்கள், உங்களுடைய சொந்த ஒரு சிறிய உலகத்தை உருவாக்க முயலுகிறீர்கள். ஒவ்வோர் அகங்காரமும் அதனுடைய சொந்த உலகத்தை உருவாக்குகிறது, அதுதான் பிரச்சினையாகும்.

முழுமையுடன் மிதந்து செல்லுங்கள், வேதனை மறைந்து விடும். வேதனை அறிகுறியாகும். அது நீங்கள் முழுமையுடன் சண்டையிட்டுக் கொண்டிருக்கிறீர்கள் என்பதைக் காண்பிக்கிறது, அவ்வளவே. நீங்கள் முற்பிறவியில் செய்த பாவங்களுக்காக வேதனைப்படவில்லை. நீங்கள் இப்பொழுது தொடர்ந்து கொண்டிருக்கும் பாவங்களுக்காக வேதனைப்படுகிறீர்கள், உடனடியாக செய்பவற்றுக்காக. பாபம் எளிமையானதும், சண்டையிடுவதற்கு ஏற்றுக்கொள்வதற்கல்ல.

'சின்' (Sin) இந்த வார்த்தை அழகானது. அது 'தனித்துள்ள' என்று பொருள்படும் - மூலத்திலிருந்து வருகிறது. 'பாபம்' என்ற வார்த்தைதானே, தனித்துள்ள என்று பொருள்படும் மூலத்திலிருந்து வருகிறது. நீங்கள் தனித்துள்ளீர்கள். அதுதான் ஒரே ஒரு பாபமாகும். ஒருமுறை நீங்கள் இணைந்து விட்டால் பாவம் மறைந்து விடுகிறது. கிறிஸ்துவ மதம் முழுவதும் பாபம் என்ற கொள்கையைச் சார்ந்துள்ளது - மனிதன் கடவுளிலிருந்து தனித்திருக்கும் போது, அவன் ஒரு பாபியாய் இருக்கிறான். பதஞ்சலியினுடைய கொள்கை அப்படியே

எதிரிடையானது - எதிரிடையானது, ஆனால் பூர்த்தி செய்வதாகும். அவர் 'யோகம்' என்பதில் மீண்டும் ஒன்று சேர்ந்திருப்பது என்று வலியுறுத்துகிறார். பாபமும் யோகமும்: பாபம் என்பது தனித்திருப்பது. யோகம் என்பது மீண்டும் ஒன்று சேர்ந்திருப்பது. நீங்கள் முழுமையுடன் மீண்டும் ஒன்று சேர்ந்திருப்பீர்களானால், அங்கே வேதனையில்லை. முழுமையிலிருந்து அதிகம் தூரத்திற்குச் செல்வீர்களானால், நீங்கள் அதிகம் வேதனைப்படுகிறீர்கள். நீங்கள் அதிகம் இருந்தீர்களானால் நீங்கள் அதிகம் வேதனையடைவீர்கள்.



**சில சமயங்களில், நீங்கள் ஒரு கனவு போல உணர்வுள்ளது....**

அது உண்மையே. இப்போது நீங்கள் அந்த உணர்வை ஆழமாக்க வேண்டும். அதனால் சில சமயங்களில் நீங்களே உங்களை ஒரு கனவாக உணர்வீர்கள். இந்த உணர்வை ஆழமாக்கிக் கொண்டே இருங்கள். இருக்கும் எல்லா விஷயங்களும் ஒரு கனவு என்று நீங்கள் அறியும் நேரம் வரும். ஒருமுறை நீங்கள் இருக்கும் எல்லா விஷயங்களும் ஒரு கனவு என்று அறியும்பொழுது, நீங்கள் விடுதலையடைகிறீர்கள்.

இந்துக்களின் கொள்கை மாயை என்பதன் பொருள் அதுதான். அது எல்லா விஷயங்களும் உண்மையல்ல என்று சொல்வதில்லை. அது எல்லா விஷயங்களும் ஒரு கனவு என்று சொல்கிறது. அது உண்மை அல்லது உண்மையல்ல என்ற கேள்வியில்லை. நீங்கள் கனவை எப்படி வரையறுப்பீர்கள் - உண்மை அல்லது பொய். அது உண்மையல்லவென்றால் எப்படி இருக்க முடியும்? அது உண்மையென்றால் எப்படி மிகச் சுலபமாக மறைந்து விடுகிறது - நீங்கள் உங்கள் கண்களைத் திறந்தபோது அது இனி அங்கே இல்லை? ஒரு கனவு உண்மைக்கும், பொய்க்கும் இடையில் ஏதோ ஓரிடத்தில் உள்ளது. அதற்கு உண்மையின் ஏதோ கொஞ்சம் உள்ளது. அதற்குப் பொய்யான ஏதோ கொஞ்சம்கூட உள்ளது. ஏனென்றால் அது இருக்கிறது, அது உண்மையாக இருக்க வேண்டும் - கனவு ஒரு பாலமாக உள்ளது - இந்தக் கரையிலும் இல்லை, அந்தக் கரையிலும் இல்லை, இங்கேயும் இல்லை, அங்கேயும் இல்லை.

நீங்கள் கனவை உண்மையாக எடுத்துக் கொண்டீர்களானால் உலகியலாகி (பற்றுள்ளவராக) விடுகிறீர்கள். நீங்கள் கனவை பொய்யாக எடுத்துக் கொண்டீர்களானால், நீங்கள் இமாலயத்திற்குப் தப்பிச்செல்ல ஆரம்பிப்பீர்கள். நீங்கள் பற்றற்றவராகி விடுவீர்கள். இரண்டு நோக்கும் எல்லைகளே. கனவு நடுவில் உள்ளது. அது உண்மை, உண்மையற்றது, இரண்டும். அதிலிருந்து தப்ப வேண்டிய தேவையில்லை - அது பொய்யானது - அதைப் பற்றியிருக்க வேண்டிய தேவையில்லை - அது பொய்யானது. நீங்கள் உங்களுடைய வாழ்க்கை முழுவதையு கனவுகளுக்கு அர்ப்பணம் பண்ணத் தேவையில்லை. அவை பொய்யானவை. அவற்றைத் துறக்க வேண்டிய தேவையில்லை ஏனென்றால் எப்படி உங்களால் பொய்களைத் துறக்க முடியும்? அவை அதற்குத் தகுதியில்லாதவை.

அப்படித்தான் என்னுடைய சந்நியாசக் கொள்கை எழுந்தது. இ ஒரு கனவு என்று நீங்கள் அறிந்து கொண்டு, கனவில் வாழ்கிறீர்க நீங்கள் உலகத்தில் வாழ்கிறீர்கள், அது ஒரு கனவு என்று அறிந் கொண்ட. நீங்கள் வாழ்கிறீர்கள், ஆனால் உலகம் உங்களுள் வாழா நீங்கள் உலகத்தினுள் செல்கிறீர்கள், ஆனால் உலகம் உங்களு செல்வதில்லை. நீங்கள் தொடர்ந்து பகுதியாக இருந்து வருகிறீர்க உண்மையில், நீங்கள் அதை அதிகம் அனுபவிக்கிறீர்கள் ஏனென்றால் அது ஒரு கனவு, நீங்கள் இழப்பதற்கு எதுவும் இல்லை நீங்கள் குற்ற உணர்வோடு இல்லை. உண்மையில், நீங்க குழந்தைகளைப் போல விளையாட ஆரம்பிக்கிறீர்கள் - ஏனென்றா அது ஒரு கனவு! நீங்கள் அதை அனுபவிக்கலாம், நீங்கள் அதி மகிழ்வுடன் இருக்கலாம். அதைப்பற்றி குற்ற உணர்வுடன் இருப்பதற் ஒன்றும் இல்லை. ஒரு கொண்டாட்டமான வாழ்க்கை, உலகத்தி உதறித் தள்ளுவதான வாழ்க்கை, வாழ்ந்து கொண்டிருந்த போதிலு தனிமையாக, ஏனென்றால் நீங்கள் ஏதேனும் ஒன்று ஒரு கனவு என் அறியும்பொழுது நீங்கள் அதை எந்தக் குற்ற உணர்வும் இல்லாமல் அனுபவிக்கலாம், எந்தப் பிரச்சினையும் இல்லாமல் நீங்கள் அதிலிருந்து தூரத்திற்குச் செல்லலாம்.

நீங்கள் ஒரு திரைப்பட அரங்கிற்குச் செல்கிறீர்கள். நீங்கள் ஒரு திரைப்படத்திற்குச் செல்கிறீர்கள். அவையெல்லாம் ஒரு கனவாகும். மூன்று மணி நேரத்திற்கு நீங்கள் அதை அனுபவிக்கிறீர்கள். பின்பு விளக்குகள் எரிகின்றன - நீங்கள் அது ஒரு விளையாட்டு,

திரையின்மேல் ஓர் ஆட்டம், ஒளியும் நிழலும் என்பதை ஞாபகத்தில் கொண்டுள்ளீர்கள். இப்போது திரையரங்கு காலியாக உள்ளது. நீங்கள் வீடடிற்கு வந்துள்ளீர்கள். நீங்கள் அதை மறந்து விடுகிறீர்கள். உலகம் முழுவதுமே ஒரு பரந்த திரையின் மேல் உள்ள ஒரு திரைப்படமாகும். நீங்கள் புரிந்து கொண்ட பொழுது, உங்கள் கண்கள் திறக்கப் பட்டுள்ளன. நீங்கள் அது ஒரு கனவு என்பதை அறிந்துள்ளீர்கள் - அதை அனுபவிப்பதில் தவறு ஒன்றும் இல்லை. அதில் ஓர் அழகிய கனவு, ஆனால் இப்போது நீங்கள் வீட்டில் இருக்கிறீர்கள்.

இது கடினமானது. பற்றுடன் (லௌகிகமாக) இருப்பது சுலபமானது, ஏனென்றால் நீங்கள் அதை நீங்கள் உண்மையாக எடுத்துக் கொள்கிறீர்கள். பற்றற்று இருப்பது, ஒரு துறவியாகி இமாலயத்தில் இருப்பதும்கூட சுலபமானது. ஏனென்றால் நீங்கள் அதைப் பொய்யானது என்று விட்டு விடுகிறீர்கள். ஆனால் உண்மையில், வாழ்ந்து கொண்டு, அது பொய்யானது என்பதை நன்றாகத் தெரிந்து கொண்டு வாழ்வது, அது ஒரு கனவு என்று அதை அறிந்துகொண்டு, அதுதான் உலகத்திலேயே மிகவும் அதிகக் கஷ்டமான விஷயமாகும் - அதைக் கடந்து செல்வதன் மூலம், அதிகக் கஷ்டமான விஷயம், உங்களுக்கு வளர்ச்சியடைவதற்கு உதவுகிறது.

பற்றுள்ள் மக்கள் மிகவும் கபடமானவர்கள். ஆனால் புத்திசாலிகள் இல்லை. பற்றற்ற மக்கள் எளிமையானவர்கள், ஆனால் புத்திசாலிகள் இல்லை, உலகத்தைத் துறந்து,கோயில்களுக்கு, இமாலயத்திற்குச் சென்ற மக்கள் - அவர்கள் எளிமையானவர்கள், கபடமானவர்கள் அல்ல, ஆனால் அவர்களும்கூட புத்திசாலிகள் இல்லை, ஏனென்றால் நீங்கள் எல்லாவிதமான சூழ்நிலைகளினுள்ளும் செல்லும் பொழுது மட்டுமே புத்திசாலித்தனம் வளர்ச்சியடைகிறது - ஆனால் உணர்வுடன். நீங்கள் நரகத்திற்குச் செல்லலாம். ஆனால் முழுவதும் விழிப்பான மனதுடன், பின் புத்திசாலித்தனம் வளர்ச்சியடைகிறது. புத்திசாலித்தனம் வளர்ச்சியடைவதற்கு சவால் தேவைப்படுகிறது. நீங்கள் சவாலை விட்டு விடுவீர்களானால், நீங்கள் கெட்டு விடுவீர்கள், நீங்கள் வளர்ச்சியடைய மாட்டீர்கள். அதனால்தான் நான் வற்புறுத்துகிறேன். உலகத்தில் இருங்கள், உலகத்தினுடையதாகி விடாதீர்கள்.

o

நான் இன்றும் இழக்கப்படவில்லை? என்பது எப்படி?

அந்தக் கேள்விக்கு யாருமே உங்களுக்குப் பதிலளிக்க முடியாது. நீங்கள் இழக்கப்பட்டு விட்டீர்கள். நீங்கள் அறிந்திருக்க வேண்டும். நீங்கள் கண்ணாமூச்சி ஆட்டம் விளையாடிக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் அறிந்துள்ளீர்கள் என்பதை நான் அறிவேன். நீங்கள் இழக்கப்பட வேண்டுமென விரும்புகிறீர்கள். அதனால் நீங்கள் இழக்கப்பட்டுள்ளீர்கள். நீங்கள் இழக்கப்பட வேண்டாமென முடிவு செய்த அந்த நேரத்தில், யாருமே உங்களுக்கு இடைஞ்சல் செய்யவில்லை, யாருமே வழியைத் தடுக்கவில்லை. ஆனால் நீங்கள் கொஞ்சம் அதிகக் கனவில் இருக்க விரும்புகிறீர்கள். உங்களுடைய முழுப் பிரார்த்தனையும், "கடவுளே நான் ஞானமடைவேனாக, ஆனால் உடனடியாக இல்லை" என்பதாக உள்ளது. அது உங்களது பிரார்த்தனை: "நான் விழிப்படைவேனாக, ஆனால் கொஞ்சம் காத்திருங்கள்" என்பதாகும்.

சிலோனில் இது நிகழ்ந்தது. ஒரு மிகச்சிறந்த ஞானி மரணத்தருவாயில் இருந்தார். அவர் லட்சக்கணக்கான மக்களுக்கு மாஸ்டராவார். அவர் மரணப்படுக்கையில் உள்ளார் என்பதை அறிந்து அவர்கள் எல்லாம் குழுமினர். அவருடைய வாழ்க்கை முழுதும் – அது நீண்ட வாழ்க்கை, அவர் ஏறக்குறைய நூறு ஆண்டுகள் வாழ்ந்தார் – அவர் ஞானமடைவதைப் பற்றி கற்பித்துக் கொண்டிருந்தார். அவர் மரணமடையும் அன்று, தன்னுடைய குடிசையிலிருந்து கடைசி தரிசனத்திற்காக வெளிவந்தார். அவர், "இப்பொழுது நான் பிரிந்து செல்ல உள்ளேன். யாராவது ஒருவர் என்னுடன் புறப்படுவதற்குத் தயாராக உள்ளீர்களா? என்று சொன்னார். இன்று நான் கற்பிக்கப் போவதில்லை. இன்று நான் உங்களை என்னுடன் எடுத்துச்செல்லத் தயாராக உள்ளேன். யாரோ ஒருவர் தயாராக இருப்பவர் எழுந்து நிற்கவும்" என்றார்.

மக்கள் ஒருவரை ஒருவர் பார்ப்பதற்கு ஆரம்பித்தனர்... ஆயிரக்கணக்கான மக்கள், ஆனால் ஒருவருமே எழுந்து நிற்கவில்லை. மாஸ்டர் காத்திருந்தார். அவர், "தாமதமாகிக் கொண்டிருக்கிறது. நான் விடை பெற்றுக்கொள்ள வேண்டும். என்னுடைய முழு வாழ்க்கையும் உங்களிடம் ஞானமடைவதைப் பற்றி பேசிக் கொண்டிருந்ததில் வீணாகி விட்டதாகக் கருத வேண்டுமா?

இப்போது நான் அதை உங்களுக்குக் கொடுக்கிறேன்! நீங்கள் எந்த முயற்சியும் செய்யத் தேவையில்லை. நான் உங்களை என்னுடன் எடுத்துச் செல்கிறேன். யாராவது ஒருவர் தயாராக உள்ளீர்களா?'' என்று சொன்னார்.

ஒரு மனிதன் அரை மனதுடன் எழுந்து நின்றான்.அவன், "தயவு செய்து காத்திருங்கள்! எப்படி ஞானமடைவது என்பதைச் சொல்லுங்கள். ஏனென்றால் நீங்கள் பிரிந்து செல்ல உள்ளீர்கள். நான் உங்களைத் தொடர்வதற்கு இன்னும் தயாராக இல்லை. உலகத்தில் நிறைய விஷயங்கள் செய்வதற்கு உள்ளன. என்னுடைய மகன் இப்பொழுதுதான் பல்கலைக்கழகத்திற்குச் சென்றுள்ளான், என்னுடைய மகளுக்குத் திருமணம் செய்ய வேண்டும், என்னுடைய மனைவி நோயுற்றிருக்கிறாள், யாராவது ஒருவர் கவனித்துக் கொள்ள வேண்டும்... எல்லா விஷயங்களும் முடிந்த பொழுது, நானும்கூட வருகிறேன். அதனால் தயவு செய்து ஒரு வழிமுறையை எனக்குக் கொடுங்கள்'' என்று சொன்னார்.

மாஸ்டர் சிரித்துவிட்டு அவர், "வாழ்க்கை முழுவதும் நான் வழிமுறைகளைக் கொடுத்துக் கொண்டிருந்தேன்'' என்று சொன்னார்.

நீங்கள் ஏன் வழிமுறைகளுக்குப் பின்னால் ஒளிந்து கொள்கிறீர்கள்? மக்கள் எப்பொழுதும் ஒரு வழிமுறைகளைக் கேட்கிறார்கள். ஏனென்றால் ஒரு வழிமுறையில் நீங்கள் சுலபமாக தள்ளிப் போடலாம், ஏனென்றால் ஒரு வழிமுறை செய்யப்பட வேண்டும் - அது நேரத்தை எடுக்கும். அது செய்வது அல்லது செய்யாதது அல்லது அரைமனதாக அல்லது ஒத்திப்போடுவது உங்களைப் பொறுத்தது. ஒரு வழிமுறை ஒரு யுக்தியாகும். நீங்கள் ஒரு வழிமுறையைப் பற்றி கேட்கும்பொழுது, நீங்கள் ஏதோ ஒன்று சார்ந்திருப்பதற்கு கேட்கிறீர்கள். ஆகையால் நீங்கள் ஒத்திப்போடலாம், ஏனென்றால் வழிமுறை செய்யப்பட வேண்டும்.

உலகம் முழுவதிலும் இரண்டு பிரிவுகள் இருந்து வருகின்றன. ஒரு பிரிவு ஞானமடைதல் திடீரென ஏற்படுகிறது என்று சொல்லுகிறது. மற்றொரு பிரிவு ஞானமடைதல் படிப்படியாக (நிதானமாக) ஏற்படுகிறது என்றுசொல்லுகிறது. ஞானமடைதல் திடீரென நிகழ்கிறது கவனிக்கப்படுவதில்லை. அவர்களுக்கு அதிகமான பின்பற்றுபவர்கள் இல்லை, ஏனென்றால் இந்தி மக்களுடன் உங்களால் எப்படி இருக்க

முடியும்? அவர்கள், நீங்கள் தயாராக இருந்தால், அது உடனடியாக நிகழும் என்று சொல்கிறார்கள். மக்கள் எப்பொழுதும் மற்ற வழியைப் பின்பற்றுகின்றனர், நிதானமாக, ஏனென்றால் நிதானத்துடன் உங்களுக்குப் போதுமான அளவு ஒத்திப் போடுவதற்கு இடம் உள்ளது. போதுமான அளவு காலம் உள்ளது. அவசரம் இல்லை. அது இங்கேயே - இப்பொழுதே என்ற கேள்வியில்லை - நாளை, நாளை கவனித்துக் கொள்ளும், மற்றொரு பிறவி, அடுத்த பிறவி... நீங்கள் போய்க்கொண்டே இருக்கலாம்.

மாஸ்டர் யாரோ ஒருவரை கூட்டிச் செல்லத் தயாராக இருந்தார். ஆனால் ஒருவருமே செல்வதற்குத் தயாராக இல்லை. நீங்கள் என்னை, "நான் இன்னும் இழக்கப்படவில்லை அது எப்படி?" என்று கேட்கிறீர்கள். நீங்கள் அறிவீர்கள். நான் உங்களிடம், உடனடியாகச் சாத்தியம் உள்ளது - நீங்கள் உங்கள் இருப்புத்தன்மையிலிருந்து குதித்தீர்களானால், இழக்கப்படுகிறீர்கள் என்று சொன்னால் - நீங்கள் உடனே என்னிடம் எப்படி என்று கேட்டீர்கள். நீங்கள் ஒரு வழிமுறையைப் பற்றிக் கேட்பீர்கள்.

இதைப் போன்றுள்ளது - உங்கள் வீடு தீப்பற்றிக் கொண்டுள்ளது. யாரோ ஒருவர் உங்களிடம், "அதை விட்டு வெளிவாருங்கள். வீடு தீப்பற்றிக் கொண்டுள்ளது. நீங்கள் எரிந்து விடுவிர்கள்" என்று சொல்லுகிறார். உண்மையில், நீங்கள் வீடு தீப்பற்றிக் கொண்டுள்ளதைப் பார்ப்பீர்களானால், தீச்சுடர் கண்களுக்குப் புலப்படுமானால், நீங்கள் எப்படி என்று கேட்க மாட்டீர்கள். எப்படி வெளி வருவது என்று கேட்பீர்களா? நீங்கள் குதித்து விடுவீர்கள். நீங்கள் பால்கனியிலிருந்து குதித்து விடுவீர்கள். நீங்கள் ஜன்னலில் இருந்து குதித்து விடுவீர்கள். நீங்கள் எவ்விடத்திலிருந்தாவது குதித்து விடுவீர்கள் - நீங்கள் வழியைக் கண்டுபிடித்துக் கொள்வீர்கள். ஏனென்றால் சரியான வழியைக் கண்டுபிடிக்க வேண்டும் என்பது இப்பொழுது கேள்வியில்லை - எந்த வழியும் சரியானதே. ஒருவர் முன் வழியாக வரவேண்டும் என்பது ஆசாரம் என்ற கேள்வியில்லை. வீடு தீப்பற்றிக் கொண்டிருக்கும் பொழுது நீங்கள் ஜன்னல் வழியாகக் குதிக்கிறீர்கள். நீங்கள் உங்கள் வாழ்க்கையை ஆபத்திற்கு உட்படுத்துகிறீர்கள். ஏனென்றால் ஒரு வினாடி அதிகம் வீட்டினுள் இருந்தால் நீங்கள் எரிந்து விடுவீர்கள். மூன்றாவது மாடியிலிருந்து குதிப்பது எரிந்து போவதைவிட, வாழ்க்கையில் முடமாக இருப்பது பரவாயில்லை. நீங்கள் அதைவிட்டுக் குதிக்காதீர்கள்.

ஆனால் நீங்கள், "ஆமாம் வீடு தீப்பற்றிக் கொண்டுள்ளது என்பதை நான் அறிவேன். ஆனால் நான் மத நூல்களைக் கலந்து ஆலோசிப்பேன். நான் குருமார்களைக் கேட்பேன், நான் தேடுவேன், எப்படி வெளிவருவது என்ற ஓர் ஆராய்ச்சி முறையைக் கண்டுபிடிப்பேன் என்று சொல்வீர்களானால், இது எதைக் காண்பிக்கிறது? இது வீடு தீப்பற்றிக் கொண்டுள்ளதை நீங்கள் உணரவில்லை என்பதைக் காண்பிக்கிறது. நீங்கள் வீடு தீப்பற்றிக் கொண்டுள்ளது என்ற அந்த மனிதரை ஒப்புக் கொள்ளலாம். ஆனால் ஆழத்தில் எவ்விடத்திலும் நீங்கள் எந்தத் தீயையும் பார்க்கவில்லை. நீங்கள் இந்த வீட்டினுள் சுகமாக இருக்கிறீர்கள். தீ இன்னும் உங்களுக்கு ஓர் அனுபவமாக ஆகவில்லை. தீயை இன்னும் நீங்கள் உணரவில்லை.

புத்தர் அவருடைய அரண்மனையை விட்டு வெளிவந்து விட்டார். அவருடைய வயதான வேலைக்காரன், அவருக்கு மிகவும் உண்மையுள்ளவன், அவனுடைய பெயர் சன்னா. நகரத்திற்கு வெளியே, தலைநகரத்திற்கு வெளியே ஓட்டி வந்தான். அவர் எங்கே போகிறார் என்பதை அறியாமல். பின்பு இராஜ்யத்திற்கு வெளியே புத்தர், "என்னுடைய நகைகளை, விலைபெற்ற உடைகளை எடுத்துக்கொள்" என்றார். அவருடைய முடியை வெட்டிக் கொண்டார். அழகிய சுருள்கள், அவர், "இவற்றையெல்லாம் எடுத்துக்கொள், இவற்றை எல்லாம் என் மனைவியிடம் கொடுத்துவிடு. நான் உலகத்தைத் துறக்கிறேன்" என்று சொன்னார்.

சன்னா அழ, தேம்ப ஆரம்பித்து விட்டான். அவன், "என்ன செய்கிறீர்கள்? நீங்கள் இளவயதினர். நீங்கள் உலகத்தை நான் எவ்வளவு அறிந்துள்ளேனோ அந்த அளவு அறியவில்லை. ஒவ்வொருவரும் ஓர் அரண்மனையை வைத்துக்கொள்ள ஆசைப்படு கின்றனர். ஒவ்வொருவரும் ஓர் அரசராக ஆசைப்படுகின்றனர். உங்களுக்கு ஓர் இராஜ்ஜியம் உள்ளது. நீங்கள் அதைவிட்டுச் செல்கிறீர்கள்! தவறாக எடுத்துக் கொள்ளாதீர்கள். ஆனால் நீங்கள் முட்டாள்தனமாக நடந்து கொள்கிறீர்கள் என்று நான் கருதுகிறேன். நான் ஒரு வயதான மனிதன், உங்கள் தந்தையைவிட வயதானவன். நான் சொல்வதைக் கவனியுங்கள். திரும்பி வாருங்கள். நீங்கள் பைத்தியமா? என்ன செய்கிறீர்கள்?" என்று சொன்னான்.

புத்தர், "சன்னா உன்னால் பார்க்க முடியாது, அரண்மனை தீயைத் தவிர வேறில்லை. உன்னால் பார்க்க முடியாது. இராஜ்ய முழுவதுமே தீப்பற்றிக் கொண்டுள்ளது. நான் அதை விட்டுவிடவில்லை. நான் தப்பித்துக் கொண்டுள்ளேன். நான் அதைத் துறக்கவில்லை. நான் என்னைப் பாதுகாத்துக் கொள்கிறேன், அவ்வளவே" என்று சொன்னார்.

சன்னா பின்பக்கம் பார்த்தான். அவன் எங்குமே தீயைப் பார்க்கவில்லை. இராஜ்ஜியம் முழுவதுமாக அமைதியில் இருந்தது. அது நடு இரவு, பௌர்ணமி இரவு, எல்லோரும் உறங்கிக் கொண்டிருந்தனர்... எங்கே தீ உள்ளது? உறக்கத்தில் உங்களால் அதைப் பார்க்க முடியாது. நீங்கள் கொஞ்சம் விழிப்படைய ஆரம்பிக்கும் போது மட்டுமே (பார்க்க முடியும்)

அதனால் என்னைக் கேட்காதீர்கள். ஏன் நீங்கள் இன்னும் இழக்கப்படவில்லை என்று இப்படித்தான் நீங்கள் இருக்க விரும்புகிறீர்கள். நீங்கள் இழக்கப்பட விரும்பினால், நீங்கள் இழக்கப்படுவீர்கள். நீங்கள் அது அப்படியிருக்க விரும்பவில்லை என்றால் அங்கே கேள்வியில்லை - உடனடியாக, இந்த வினாடியில் நீங்கள் அதிலிருந்து வெளியில் இருக்கலாம். ஆனால் மற்ற ஒருவருமே உங்களை அதிலிருந்து வெளியே கொண்டு வர மாட்டார்கள். அதனால்தான் உங்களுடைய சுதந்திரம் தொடப்படாததாக உள்ளது. நீங்கள் ஆட்டத்தைத் தொடர விரும்பினால்? - தொடருங்கள். நீங்கள் ஆட்டத்தைத் தொடர விரும்பவில்லை என்றால், நீங்கள் அதற்கு வெளியே குதித்து விடுங்கள்.. ஒருவருமே பாதையைத் தடங்கல் செய்யவில்லை. ஒருவருமே வழியைத் தடைசெய்யவில்லை.

நீங்கள் முடிவு செய்த அந்த நேரத்தில் முடிவு தீர்க்கமாகும். அந்த வினாடியில் நீங்கள் உணர்வில் ஆழ்ந்த அந்த வினாடியில், நீங்கள் அதன் பொய்யான தன்மையைப் பார்ப்பீர்கள். நீங்கள் அதிலிருந்து வெளிவந்து விடுகிறீர்கள் - அதே வினாடியில். ஒரே ஒரு வினாடிகூடத் தேவையில்லை. அது காலம் என்ற கேள்வியில்லை, அது புரிந்து கொள்ளுதல் என்ற கேள்வியாகும்.

○

**நான் இரண்டிற்கும் இடைப்பட்டு இருப்பதாக உணர்கிறேன். இந்த உலகத்தில் இல்லை, அந்த உலகத்திலும் இல்லை. ஒரு நாயாக, ஒரு கடவுளாக, அதைவிட்டு எப்படி வெளிவருவது?**

நீங்கள் அதைவிட்டு வெளிவந்தீர்களானால் ஒரு நாயாகி விடுவீர்கள். நீங்கள் இழக்கப்பட்டால், முழுதுமாக இழக்கப்பட்டால் - யாருமே விடப்படவில்லை. யார் அதிலிருந்து வெளிவருவார்கள்? - நீங்கள் ஒரு கடவுளாகி விடுகிறீர்கள். அதனால் எப்படி அதிலிருந்து வெளிவருவது என்று என்னைக் கேட்காதீர்கள். அகங்காரம்தான் எப்படி அதிலிருந்து வெளிவருவது என்று கேட்கிறது. நீங்கள் இரண்டிற்கும் இடைப்பட்டிருக்கிறீர்கள்? அழகியது, நல்லது. கொஞ்சம் அதிகமாக இழந்து விடுங்கள் - இரண்டிற்கு இடைப்பட்டவராகி விடுங்கள். கொஞ்சம் அதிகம் இழந்து விடுங்கள்! நீங்கள் கொஞ்சம் இழந்துள்ளீர்கள்: நாயின் பாதிப்பகுதி இழக்கப்பட்டு விட்டது.

இந்தியாவில் நமக்கு மனித இனத்தின் முழுப்பாதையைப் பற்றிய அழகிய கட்டுக் கதைகள் உள்ளன. அதிக அடையாளமான, அர்த்தமுள்ள கதைகளில் ஒன்று கடவுளடைய அவதாரம் - நரசிம்மம் - பாதி மனிதன், பாதி சிங்கம் என்று அறியப்படுகிறது. இந்துக் கடவுள்களின் அவதாரங்களில் ஒன்று நரசிம்மம் - பாதி மனிதன், பாதி சிங்கம். இதுதான் இரண்டிற்கும் இடையில் உள்ள நிலையாகும். பாதி நாய், பாதி கடவுள் என்று நீங்கள் சிந்திக்க ஆரம்பிக்கும் பொழுது, நீங்கள் கடவுள்இல்லை. நாயும் இல்லை என்று உணர ஆரம்பிக்கும் பொழுது, எல்லாம் இழக்கப்பட்டு விடுகிறது. எல்லைகள் தெளிவாக இல்லை. பாலத்தின் நடுவில் இருப்பதாக நீங்கள் உணரும் போது, இதுதான் நரசிம்ம நிலை: பாதி மனிதன், பாதி சிங்கம்.

நீங்கள் அதிலிருந்து வெளிவர முயலுவீர்களானால், நீங்கள் முழுதும் சிங்கமாகிறீர்கள். ஏனென்றால் நீங்கள் பின்பு அதிகத் தீவிரமாகிறீர்கள். நீங்கள் பின்னே விழுந்து விடுகிறீர்கள். அதிலிருந்து வெளிவருவது என்பது பின்னே செல்வது. அதிலிருந்து வெளிவருவது என்பது அதிலிருந்து வெளியே இறங்குவது. அது முன்னேற்றம், வளர்ச்சி அல்ல. தேவையில்லை. அதிகமாக இழக்கப்படுங்கள். எதற்காக நீங்கள் இரண்டிற்கும் இடையில் இருப்பதற்குப் பயப்படு கிறீர்கள்? ஏனென்றால் நீங்கள் கொஞ்சம் இழக்கப்பட்டுவிட்டதாக

உணர்கிறீர்கள். இனி முழுவதும் ஒத்திருப்பது தெளிவாக இல்லை; உங்களுடைய சொந்த உருவத்தை முழுமையாகப் பார்க்க முடியாது. எல்லைகள் தெளிவாக இல்லை. உங்களுடைய முகம் இனி நிச்சயமானதாக இல்லை. உங்களுடைய வாழ்க்கை அதிக ஓட்டமுள்ளதாகிறது. அது இனி ஒரு கல் போல இல்லை. அது அதிகமாக, தண்ணீரைப் போல வடிவம் ஏதும் இல்லாமல், தோற்றம் ஏதும் இல்லாமல் உள்ளது. நீங்கள் பயப்படுகிறீர்கள்.

பயப்படும் ஒன்று உங்களுள் இருப்பது நாயாகும். ஏனென்றால் நீங்கள் ஒரு சில அடிகள் அதிகம் செல்வீர்களானால், நாய் முழுதும் இழக்கப்பட்டு விடுகிறது.

முதலில் ஒருவர் பயணத்தை ஆரம்பிக்கும் பொழுது, ஒருவர் உறைந்த தண்ணீரைப்போல, பனிக்கட்டியைப் போல குளிர்ந்து, கல் போல உள்ளார். ஒருவர் நகரும் போது உறைந்த தன்மை இளகுகிறது. பனிக்கட்டி தண்ணீராகிறது. இதுதான் இரண்டிற்கும் இடையில் உள்ள நிலையாகும். நரசிம்ம நிலையாகும், பாதி வழி. இன்னும் முன்னோக்கிச் செல்லுவீர்களானால்... நீங்கள் ஆவியாகி விடுவீர்கள். நீங்கள் திரவமான தண்ணீர் மட்டுமல்ல, நீங்கள் ஆவியாகி விடுகிறீர்கள். நீங்கள் இனிமேல் காணப்படுவதில்லை. நீங்கள் அப்படியே மறைந்து விடுகிறீர்கள். நீங்கள் மறைந்து போவதற்குப் பயப்படுவீர்களானால் நீங்கள் பின்னே விழுந்து விடுகிறீர்கள். நீங்கள் உறைந்து போவதற்கு முயலுகிறீர்கள். அதனால் நீங்கள் ஒரு வடிவத்தை, ஓர் உருவத்தை, ஒரு பெயரை எடுத்துக் கொள்ளலாம். - நாம-ரூபம், நாமமும் ரூபமும். பின்பு உங்களுக்கு அடையாளம் உள்ளது. நீங்கள் யார் என்பதை அறிகிறீர்கள்.

ஒரு நாய் மாத்திரமே அது யார் என்பதை அறிகிறது - எல்லாம் நிலைத்திருக்கின்றன, நிச்சயமாக உள்ளன. நீங்கள் பாதையில் சென்று கொண்டிருப்பீர்களானால், எல்லா விஷயங்களும் அப்புறப்படுத்தப் பட்டுள்ளன - மலைகள் இனி மலைகளாக இல்லை, நதிகள் இனி நதிகளாக இல்லை. மிக அதிகமான ஒழுங்கின்மை, குழப்பம் எழுகிறது. குழப்பத்திலிருந்து மட்டுமே நடனமாடும் நட்சத்திரங்கள் பிறக்கின்றன. ஞாபகத்தில் கொள்ளுங்கள். குழப்பத்திலிருந்து மட்டுமே கடவுள் காணப்படுகிறார். பின்பு மூன்றாவது நிலை. ஆவியாதல், பின்னால் ஓர் அடையாளமும் விட்டுவிடாமல் முழுதும் மறைந்து

போவது. ஓர் அடிச்சுவடுகூட விட்டுவிடாமல். நீங்கள் எங்கும் இல்லை. நீங்கள் எங்குமில்லாதவராகி விட்டீர்கள். இந்த நிலையை நான் கடவுளின் நிலை என்று அழைக்கிறேன்.

அதனால்தான் உங்களால் கடவுளைப் பார்க்க முடியாது. நீங்கள் தேடிக்கொண்டே இருக்கிறீர்கள். ஒருநாள் நீங்கள் இழக்கப்பட்டு விடுகிறீர்கள். அப்படித்தான் கடவுளைக் கண்டுகொள்ள வேண்டும். எங்கேயோ நின்று கொண்டிருக்கும் கடவுளை உங்களால் சந்திக்க முடியாது. ஏனென்றால், யார் சந்திப்பது? இன்னும் நீங்கள் அங்கு சந்திப்பதற்கு இருப்பீர்களானால், கடவுள் சாத்தியமில்லை. நீங்கள் இனி அங்கே இல்லாதபோது, யார் சந்திப்பது? நீங்கள் கடவுளை ஒரு பொருளாக சந்திக்க முடியாது? நிங்கள் அவரை உங்களுடைய உள்ளாழ்ந்த மூலத்தில் சந்திக்கலாம். ஆனால் அது நீங்கள் உருகும் போதே சாத்தியமாகிறது. நீங்கள் தண்ணீரைப்போல திரவமாக இருக்கும்பொழுது, நீங்கள் ஆவியாகிறீர்கள் - நீங்கள், எந்த விலாசமும், எந்தப் பெயரும் எந்த உருவமும் இல்லாமல், மறைந்துள்ள மேகமாக, எங்கிருக்கிறீர்கள் என்பதும் அறியப்படாமல் ஆகாயத்தில் நகரும் ஒரு மேகமாகிறீர்கள்.

அதுதான் பயம்: ஏனென்றால் அது ஒரு மிகப்பெரிய மரணமாகும். இறந்த காலம் முழுவதற்கும் ஏற்படும் மரணமாகும். எவையெல்லாம் நீங்கள் விட்டுவிட வேண்டுமோ, அவை சிலுவையில் அறையப்பட வேண்டும். மரணத்திற்கு முன் மரணமடையுங்கள், அது ஒன்றுதான் கடவுளாவதற்கு ஒரே வழியாகும். இரண்டிற்கும் இடையிலுள்ள நிலைக்குப் பயப்படாதீர்கள். இல்லையென்றால் நீங்கள் பின்னால் விழுந்து விடுவீர்கள். நீங்கள் மீண்டும் பனிக்கட்டியைப் போல கெட்டியாகிறீர்கள் (படிகமாகிறீர்கள்) உங்களுக்கு ஒரு நாம-ரூபம், பெயர் உருவம் உள்ளது, அடையாளம் உள்ளது, ஆனால் நீங்கள் தவறவிட்டு விட்டீர்கள்.



**உடன்பாடு இருக்கிறதென்றால் எதிர்மறையானால், வெளிச்சம் இருக்கிறதென்றால் இருளினால், ஆனால் எப்படி ஒருவர் எல்லாவற்றிற்கும் மேலான ஒரு மாஸ்டராகத் தொடர்ந்து ஓர் அடிமையில்லாமல் இருக்க முடியும்.**

ஒரு வழி உள்ளது. நீங்கள் உங்களுக்கு மாஸ்டராகுங்கள். பின்பு நீங்கள் அடிமையும், நீங்கள் மாஸ்டரும். பின்பு குறிப்பிட்ட ஒருவகையில் நீங்கள் அடிமை - உங்கள் உடல், உங்கள் புலன்கள், உங்கள் மனம் - குறிப்பிட்ட ஒருவகையில் நீங்கள் மாஸ்டர் - உங்களுடைய உணர்வு நிலை, விழிப்பு நிலையில். எப்பொழுதெல்லாம் ஒரு மாஸ்டர் இருக்கிறாரோ, அப்போது அடிமை இருக்க வேண்டும்.

இதுவரையில் நீங்கள் ஒரு மாஸ்டராவதற்கு முயன்றீர்கள். உங்களைச்சுற்றி அடிமைகளை உருவாக்கியுள்ளீர்கள். ஒவ்வொருவரும் மாஸ்டராவதற்கு யாரோ ஒருவரை அடிமையாக உருவாக்குவதற்கு முயற்சி செய்கின்றனர். கணவன் ஒரு மாஸ்டராவதற்கு முயலுகிறார். மனைவியை ஓர் அடிமையாக்குவதற்குக் கட்டாயப் படுத்துகிறார். மனைவிகூட அவளுடைய சொந்த நுண்ணிய பெண்மையின் வழியில் மாஸ்டராவதற்கு முயற்சி செய்கிறாள். கணவனை அடிமையாக்குவதற்குக் கட்டாயப்படுத்துகிறாள். ஒரு நுண்ணிய அரசியல் தொடர்கிறது. உங்களுடைய எல்லா உறவு முறைகளும் நுண்ணிய திறமையான திட்டங்களாகும். மற்றவர் அடிமையாவதற்கு எப்படிக் கட்டாயப்படுத்துவது. அதனால் நீங்கள் மாஸ்டராகலாம் என்பதே. எல்லா முயற்சிகளும் அரசியலே. ஒருவர் அவரே மாஸ்டராக முயலுகிறதோடு மற்றவரை அடிமையவதற்கு கட்டாயப்படுத்த முயலுகிறாரோ அந்த மனதை அரசியல் என்று அழைக்கிறேன்.

மதம் முழுவதும் ஒரு வித்தியாசமான பரிமாணமாகும். நீங்கள் வேறு யாரோ ஒருவரை ஓர் அடிமையாவதற்குக் கட்டாயப்படுத்த மாட்டீர்கள். ஆயினும் நீங்கள் ஒரு மாஸ்டராகிறீர்கள். நீங்கள் இரண்டுமாகிறீர்கள். உங்கள் உடல், உங்களுடைய முரடான பகுதிகள், உங்களுடைய பூமியின் பகுதி, அடிமையாகிறது; உங்களுடைய ஆகாசப்பகுதி மாஸ்டராகிறது. ஒரு புத்தர் இரண்டும்: மாஸ்டர் - மிகச்சிறந்தவர். அடிமைகூட மிகச் சிறந்தவர். அது உங்களுடைய சொந்த அடிமையும் உங்களுடைய சொந்த மாஸ்டரும் சந்திப்பதாகும், பின்பு எந்த முரண்பாடு இல்லை. ஏனென்றால் உடல் உங்களுடைய நிழலாகும். ஒருமுறை நீங்கள், "நான் மாஸ்டர்" என்று சொல்லும் பொழுது உடல் உங்களைத் தொடர்கிறது. அது தொடர வேண்டும். அது தொடர்வது அதற்கு இயற்கையே.

உண்மையில், உடல் மாஸ்டராவதற்கு அனுமதிக்கப்படும் பொழுது நீங்கள் அடிமையாக உள்ளீர்கள். அது இயற்கைக்கு மாறான வாழ்க்கை நிலையாகும். அது, நிழல் உங்களை நடத்துவது போலாகும். நீங்கள் ஒரு சாக்கடையில் விழுகிறீர்கள். ஏனென்றால் நிழலிற்கு உணர்வு இல்லை. நிழல் விழிப்புடன் இருக்க முடியாது. உண்மையில், நிழல் இல்லாதிருப்பதாகும். உங்கள் உடல் உங்களை நடத்திச் செல்லுமானால்: இதுதான் வேதனையாகும். நீங்கள் உங்கள்உடலை நடத்திச் செல்லும்பொழுது வேதனை மறைந்து விடுகிறது. நீங்கள் பேரானந்தமாக, சுகமாக, சுலபமாக உணர ஆரம்பிக்கிறீர்கள்.

ஆமாம் எல்லா இடத்திலும் எதிர்மறைதான் உள்ளது. வெளிச்சம் இருந்தால் இருள் உள்ளது. அன்பு இருந்தால் வெறுப்பு உள்ளது. மாஸ்டர் இருந்தால் ஓர் அடிமையும் இருக்க வேண்டும். இல்லையென்றால் எப்படி மாஸ்டராகும் சாத்தியம் உள்ளது? ஆகையால் மிகச்சிறந்த விஷயம் ஒரு மனிதனுக்கு நிகழ்வது: அவன் இரண்டுமாகிறான் - மாஸ்டர் அடிமை சேர்ந்தாற்போல. அதுதான் மிகச்சிறந்த இணக்கம் சாத்தியமானது.



**உங்கள் அருகில் இருப்பதற்கு ஆசைப்படுவது, தொலைவில் செல்லாமல் இருப்பதுகூட ஒரு பந்தமா?**

அது சார்ந்தது, ஏனென்றால் பந்தம் ஒரு சூழ்நிலையில் ஒருபோதும் இல்லை, அது மனோபாவத்தில் உள்ளது. நீங்கள் தொலைவிற்குச் செல்ல விரும்புகிறீர்கள், முடியவில்லை, பின்பு அது ஒரு பந்தமாகும். நீங்கள் பிரிந்து செல்ல விரும்பவில்லை. கேள்வி எழாது. எதிரானதும்கூட உண்மையே. நீங்கள் என் அருகில் இருப்பதற்கு விரும்புகிறீர்கள், உங்களால் முடியவில்லை; பின்பு தொலைவிற்குச் செல்வதும்கூட ஒரு பந்தமே. என் அருகில் இருக்க விரும்புகிறீர்கள். நீங்கள் சுலபமாக இருக்கிறீர்கள், பிரச்சினை இல்லை; கேள்வி எழுவதில்லை. பந்தம் அல்லது சுதந்திரம் (விடுதலை) மனோபாவங்களாகும். அவை சூழ்நிலைகளில் இல்லை.

நான் சொல்வதைப் புரிந்து கொண்டீர்களா? நீங்கள் என் அருகில் இருக்க விரும்பினால் ஏதோ உள்ளே உள்ள மனதை ஆக்கிரமித்துக் கொண்டிருப்பது கட்டாயப்படுத்திக் கொண்டே இருக்கிறது.

"தொலைவிற்குச் செல்! இங்கே இருக்காதே" என்று. நீங்கள் இங்கிருக்க விரும்புகிறீர்கள். ஆனால் ஏதோ பிசாசு உள்ளிருப்பது கட்டாயப்படுத்திக் கொண்டே இருக்கிறது. "தொலைவிற்குச் செல்" என்று - அது ஒரு பந்தமாகும், தொலைவிற்குச் செல்வது பந்தமாகும். நீங்கள் தொலைவிற்குச் செல்ல விரும்புகிறீர்கள். ஏதோ ஒரு பயம் உங்களுள் இருப்பது, "தொலைவிற்குச் செல்லாதே! நீ தொலைவிற்குச் செல்வாயானால். தொடர்பை இழந்து விடுவாய், நீ மாஸ்டரை இழந்து விடுவாய், மாஸ்டருடன் உள்ள தொடர்பு... தொலைவிற்குச் செல்லாதே" என்று வற்புறுத்துகிறது - ஒரு குறிப்பிட்ட பயம் உங்களை இங்கே இருப்பதற்குக் கட்டாயப்படுத்திக் கொண்டே இருக்கிறது. நீங்கள் தொலைவிற்குப் போக விரும்புகிறீர்கள் - பின்பு அது பந்தமாகும்.

பந்தம் என்றால் என்ன? பந்தம் என்பது ஏதேனும் ஒன்று நீங்கள் செய்ய வேண்டியதை ஒரு மனதை ஆக்கிரமித்துக் கொள்வதாக, வற்புறுத்துவதாக இருப்பது: நீங்கள் ஒருபோதும் அதைச் செய்ய விரும்பவில்லையானாலும் நீங்கள் அதைச் செய்ய வேண்டும். நீங்கள் உங்களுக்கு எதிராகச் செல்ல வேண்டும். பின்பு அது ஒரு பந்தமாகும் - அது என்னவாயினும். நீங்கள் அப்படியே மிதப்பீர்களானால், நீங்கள் எப்பொழுதும் அதைத்தான் செய்ய விரும்புகிறீர்கள், நீங்கள் அதை உங்கள் முழு இருதயத்துடன் செய்கிறீர்கள், உங்கள் முழு இருப்புத்தன்மையுடன் (being) அது விடுதலையாகும். அது ஒரு முரண்பட்டது போல இருந்தாலும் உண்மையானது என்பதை இப்போது நான் கூறுகிறேன்: நீங்கள் மனதை ஆக்கிரமித்துக் கொண்டிருப்பதற்கான சுதந்திரத்தில் இருந்தால், உங்கள் சுதந்திரத்தில் பந்தம் உள்ளது; நீங்கள் அடிமையாக முழுமையான ஏற்றுக் கொள்ளுதலுடன் இருந்தீர்களானால், உங்களுடைய பந்தத்தில் சுதந்திரம் உள்ளது. அது சார்புடையது. அது மனோபாவம், சூழ்நிலையல்ல. அதனால் நீங்கள் அதைப்பற்றி, அது எதுவென்று அறிந்து கொள்ள வேண்டும்.

நீங்கள் தொலைவிற்குச் செல்ல விரும்பினால், தொலைவிற்குச் செல்லுங்கள், தொலைவில் மிதந்து கொண்டிருங்கள், எந்தக் கஷ்டத்தையும் உருவாக்காதீர்கள். ஆனால் நீங்கள் குழப்பமடைந்துள்ளீர்கள்; நீங்கள் எப்பொழுதும் முரண்பாட்டில் உள்ளீர்கள் - அதுதான் கஷ்டமாகும். உங்களின் ஒரு பகுதி இங்கிருக்க

விரும்புகிறது; உங்களின் மற்றொரு பகுதி தொலைவிற்குச் செல்ல விரும்புகிறது. நீங்கள் தொலைவில் இருக்கும்பொழுதும், ஒரு பகுதி மீண்டும் இங்கு திரும்பி வருவதற்கு விரும்பும். இது சென்று கொண்டே இருக்கிறது.

நீங்கள் உங்களுள் உள்ள ஏதேனும் ஒன்றைத் தீர்மானிக்க வேண்டும். நீங்கள் முரண்பாட்டை, கூட்டத்தை விட்டுவிட வேண்டும். நீங்கள் ஒன்றுடன் இருக்க வேண்டும். உங்களுடைய ஒன்றாய் இருத்தல் சுதந்திரம் (விடுதலை)யாகும். உங்களடைய பிளவுபட்ட நிலை பந்தமாகும். நீங்கள் ஒன்றாக இருக்கும்போது ஒருவருமே உங்களை அடிமையாகச் செய்ய முடியாது - ஒருவருமே! நீங்கள் சிறையில் அடைபட்டிருக்கிறீர்கள், நீங்கள் விலங்கிடப்பட்டிருக் கிறீர்கள், ஆனால் உங்களை சுதந்திரமற்றவராகச் செய்ய முடியாது. உங்கள் உடல் விலங்கிப்பட்டிருக்கலாம். உங்கள் ஆன்மா உயரத்தில் எழும்பியுள்ளது. அதற்கு அங்கே எந்தப் பிரச்சினையும் இல்லை. எப்படி உங்கள் பிரார்த்தனை பந்தத்தில் இருக்க முடியும்? உங்களுடைய தியானம் பந்தத்தில் இருக்க முடியும்? உங்களுடைய அன்பு எப்படிப் பந்தத்தில் இருக்க முடியும்? உண்மையில், ஆனம்ாவின் வரையறை என்பது, ஓர் அடிமையாக இருப்பதற்குக் கட்டாயப்படுத்த முடியாதது.

ஆனால் உங்களுக்கு எந்த ஆன்மாவும் இல்லை. நீங்கள் ஒரு கூட்டமாக உள்ளீர்கள். மக்களில் அநேகர் உள்ளே ஒருங்கிணைந்து இல்லை. அதுதான் கஷ்டமாகும். நீங்கள் இங்கே இருப்பீர்களானால், நீங்கள் பந்தத்தில் இருப்பதாக உணர்கிறீர்கள். நீங்கள் தொலைவிற்குச் செல்வீர்களானால் பந்தத்தில் இருப்பதாக உணர்கிறீர்கள். எங்கெல்லாம் நீங்கள் செய்கிறீர்களோ, நீங்க உங்கள் முரண்பாட்டை உங்களுடன் எடுத்துச்செல்கிறீர்கள். அதனால் கேள்வி என்னருகில் இருப்பது என்பதல்ல அல்லது என்னிடமிருந்து தொலைவில் இருப்பதல்ல, அது கேள்வியே அல்ல. கேள்வி: இங்கே ஒருங்கிணைந்து அல்லது தொலைவில் ஒருங்கிணைந்து இருப்பது.

நீங்கள் இங்கிருக்க வேண்டும், அல்லது தொலைவிற்குச் செல்ல வேண்டும் என்று நான் ஏதொன்றும் சொல்லவில்லை - எனக்கு 'ஷுட்' (should) என்ற வார்த்தை இல்லை. அது உங்களுக்குத்தான். நீங்கள் என்னுடன் மிதக்க முடியுமானால் மிதக்கலாம். நீங்கள் என்னிடமிருந்து தொலைவில் மிதக்க விரும்பினால் அழகியது. தொலைவில் மிதந்து

கொள்ளுங்கள். எனக்கு எந்தக் கவனமும் செலுத்த வேண்டாம். உங்களுடைய உள்உள்ள இருப்புத்தன்மைக்கு (being) முழு கவனத்தையும் செலுத்துங்கள். எங்கெல்லாம் அது சுலபமாக மிதக்கிறதோ, எங்கெல்லாம் அதற்குத் தடையில்லாமல் செல்ல முடிகிறதோ, அது உங்களுடைய குறிக்கோள் ஆகட்டும்.



**ஒருவர் பொய்யான பிரச்சினைகளை பொய் என்று அடையாளம் காண்பது எப்படி என்பதை எவ்வாறு கற்றுக் கொள்வது?**

அடையாளம் கண்டுகொள்வதற்குக் கற்றுக்கொள்ள வேண்டிய தேவையில்லை. ஏனென்றால் எல்லாப் பிரச்சினைகளும் பொய்யானவை. பிரச்சினைகள் தன்னளவில் பொய்யானவை. நீங்கள் உண்மையாக இருக்கும்பொழுது, எல்லாப் பிரச்சினைகளும் மறைந்து விடுகின்றன. நீங்கள் உண்மையற்றவராக (பொய்யாக) இருக்கும் பொழுது ஆயிரத்தொரு பிரச்சினைகள் எழுகின்றன.

எப்பொழுதெல்லாம் ஒரு மனிதன் புத்தரிடம் வருகிறானோ, இது வழக்கமாக நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. அவர், "தயவு செய்து ஒரு வருடத்திற்கு எந்தக் கேள்வியும் கேட்காதீர்கள். ஒரு வருடம் தொடர்ந்து என்னுடன் அமைதியாக இருங்கள், என்னுடன் தடையற்று இருந்து வாருங்கள். உங்களுடைய கதவுகளைத் திறந்து வையுங்கள். சூரிய ஒளி உள்ளே செல்லட்டும். ஒரு வருடத்திற்கு எந்தப் பிரச்சினைகளும் இல்லை, எந்தக் கேள்விகளும் இல்லை. தொடர்ந்து அமைதியாக இருந்து வாருங்கள், தியானம் செய்யுங்கள். ஒரு வருடத்திற்கும் பின்பு நீங்கள் கேட்கலாம்" என்று சொல்லுவார்.

ஒருநாள், ஒரு குறிப்பிட்ட மனிதர், ஒரு மிகச்சிறந்த சாதகர் வந்தார். அவருடைய பெயர் மலிங்கபுத்தா. ஒரு மிகச்சிறந்த பிராமணப் பண்டிதர்; ஐந்நூறு சீடர்களுடன் புத்தரிடம் வந்தார். அவருக்கு அநேக கேள்விகள் இருந்தன. நிச்சயமாக (கட்டாயமாக) ஒரு மிகச்சிறந்த பண்டிதருக்கு அநேக கேள்விகள், பிரச்சினைகள் இருக்க வேண்டும். புத்தர் அவர் முகத்தைப் பார்த்து, "மலிங்க புத்தா இதுதான் நிபந்தனை – இதை உங்களால் நிறைவேற்ற முடியுமானால் அதன் பின்புதான் என்னால் பதில் சொல்ல முடியும். உங்களைச் சுற்றி மனதில்

அடுக்கிற்கு மேல் அடுக்காக கேள்விகள் உள்ளன என்பதை நான் பார்க்கிறேன். ஒரு வருடம் காத்திருங்கள். தியானம் செய்யுங்கள், அமைதியாக இருங்கள். உங்களுடைய உள்ளே உள்ள பேச்சுக்கள் நிறுத்தப்படும் போது, இனி நீங்கள் உங்கள் மனதினுள் பேசிக்கொள்வது இல்லாதபோது, பின்பு நீங்கள் ஏதாவது கேட்கலாம், நான் பதில் சொல்லுகிறேன். இந்த வாக்குறுதி அளிக்கிறேன்'' என்று சொன்னார்.

மலிங்கபுத்தா கொஞ்சம் தொந்தரவு அடைந்தார் - ஒரு வருடம், அப்படியே அமைதியாக, பின்பு இந்த மனிதர் பதில் சொல்லப் போகிறார். அந்த விடைகள் சரியோ அல்லது இல்லையோ யார் அறிவார்? அதனால் ஒரு வருடம் முழுவதும் வீணாக்கப்பட்டு விடலாம். அவருடைய பதில்கள் அர்த்தமில்லாததாக இருக்கலாம். என்ன செய்வது? அவர் குழப்பமடைந்தார். அவர் ஒப்பந்தம் செய்து கொள்வதற்குத் தயங்கினார்; அது அபாயகரமானது.

புத்தரின் மற்றொரு சீடர் சாரிபுத்தா (அவர் அருகில் அமர்ந் திருந்தார்) சிரிக்க ஆரம்பித்தார் - ஒரு சத்தமான, பைத்தியக்காரத் தனமான சிரிப்பு, மலிங்கபுத்தா அதிகக் குழப்பமடைந்தார். அவர், ''என்ன விஷயம்? ஏன் அவர் சிரிக்கிறார்?'' என்றார்.

. சாரிபுத்தா, ''இந்த மனிதர் சொல்வதைக் கேட்காதீர்கள். அவர் ஒரு ஏமாற்றுபவர், அவர் என்னையும்கூட ஏமாற்றி விட்டார். நான் வந்த பொழுது - உங்களக்கு ஐந்நூறு சீடர்கள் மட்டுமே - எனக்கு ஐயாயிரம் சீடர்கள் இருந்தனர்'' என்று சொன்னார். அவர் (சாரிபுத்தா) ஒரு மிகச்சிறந்த பிராமணர், நாடு முழுதும் பிரபலமடைந்திருந்தார். ஒரு மிகச்சிறந்த பெயர் பெற்ற ஆசான். ''உங்களக்கு ஒரு சில ஆயிரம் கேள்விகள் இருக்கலாம் - எனக்கு லட்சக்கணக்கில் இருந்தன. இந்த மனிதர் என்னை தடுக்கி விழச் செய்தார்: (எனக்கு சுட்டிக்காட்டினார்) இந்த மனிதர், ''ஒரு வருடத்திற்குக் காத்திருங்கள். அமைதியாய் இருங்கள், தியானம் செய்யுங்கள். பின்பு கேளுங்கள். நான் பதில் சொல்கிறேன்'' என்று சொன்னார். ஒரு வருடத்திற்குப் பிறகு கேள்விகள் இல்லாமல் போய்விட்டன. அதனால் நான் ஒருபோதும் கேட்கவில்லை. அவர் ஒருபோதும் பதிலளிக்கவில்லை. நீங்கள் கேட்க விரும்பினீர்களானால், உடனடியாகக் கேளுங்கள்! நான் அதே ஆட்டத்தில் இருந்து கொண்டிருக்கிறேன். அவர் என்னை முட்டாளாக்கி விட்டார்'' என்று சாரிபுத்தா சொன்னார்.

புத்தர், "நான் என்னுடைய வாக்குறுதியினின்று வழுவ மாட்டேன். நீங்கள் கேட்டீர்களானால் நான் பதில் சொல்லுகிறேன். நீங்கள் கேட்கவில்லை என்றால் நான் என்ன செய்வது?" என்று சொன்னார்.

ஒரு வருடத்திற்குப் பின், மலிங்க புத்தா தியானம் பண்ணினார்... அமைதியானார்... உள்ளே உள்ள பேச்சுகள் மறைந்து விட்டன. உள்ளே உள்ள சலசலத்த பேச்சு இல்லை. அவர் அந்த வருடம் முடிந்து விட்டதைப் பற்றி முற்றிலும் மறந்து விட்டார். யார் தொந்தரவு கொள்வார்கள்? அங்கே கேள்விகள் இல்லாதபோது, யார் விடைகளுக்காக தொந்தரவு கொள்வார்கள்? ஒருநாள், திடீரென புத்தர், "மலிங்க புத்தா இதுதான் இந்த வருடத்தின் கடைசி நாள். நீங்கள் ஒரு வருடத்திற்கு முன்பு இங்கு வந்தது இந்த நாள்தான். நான் உங்களுக்கு ஒரு வருடத்திற்குப் பிறகு எவையாயினும் நீங்கள் கேட்பதற்கு நான் பதிலளிக்கத் தயாராக உள்ளேன் என்று வாக்களித்தேன். இப்போது நான் தயாராக உள்ளேன்! நீங்கள் தயாராக உள்ளீர்களா?" என்று கேட்டார்.

மலிங்க புத்தா சிரிக்க ஆரம்பித்தார். அவர், "நீங்கள் என்னையும்கூட முட்டாளாக்கி விட்டீர்கள். சாரிபுத்தா சரியே. இப்போது கேள்விகள் இல்லை. என்னால் ஏதொன்றையும் கண்டுபிடிக்க முடியவில்லை. நான் அதிகம் உள்ளே போகும்போது, நான் அங்கே கேள்விகள் இல்லை என்பதை அதிகம் காண்கிறேன். அதனால் நான் என்ன கேட்பது? எனக்கு கேட்பதற்கு ஒன்றும் இல்லை" என்று சொன்னார்.

உண்மையில், நீங்கள் பொய்யாக இருப்பீர்களானால், கேள்விகளும், பிரச்சினைகளும் உள்ளன. அவை உங்களுடைய பொய்யாக இருக்கும் நிலையினால் வெளிவருகின்றன. உங்கள் கனவுகள், உங்கள் உறக்கம் அவற்றை உருவாக்குகின்றன. நீங்கள் உண்மையாக, நம்பத்தக்கவராக, அமைதியாக, முழுமையாக ஆகும்போது அவை மறைந்து விடுகின்றன.

இது என்னுடைய தீர்மானமான முடிவாகும்: மனதின் ஒருநிலை உள்ளது, கேள்விகள் மட்டும் இருக்கிறது, பதில்கள் மட்டும் உள்ள மனதின் ஒருநிலை உள்ளது - அவை சேர்ந்தாற்போல் இருப்பதில்லை. நீங்கள் இன்னும் கேட்கிறீர்கள் என்றால், உங்களால் பதிலைப் பெற்றுக்கொள்ள முடியாது. நான் அதைக் கொடுத்துக் கொண்டே

இருக்கலாம். ஆனால் உங்களால் அதைப் பெற்றுக்கொள்ள முடியாது. உங்களுள்ளே கேள்விகள் விட்டுவிடப்பட்டால், அதைக் கொடுக்க வேண்டுமென்ற தேவை எனக்கில்லை: நீங்கள் அதை முன்பே (ஏற்கனவே) பெற்றுக்கொண்டு விட்டீர்கள். எந்தக் கேள்வியும் பதிலளிக்கப்பட வேண்டியதில்லை. கேள்விகள் இல்லாத மனதின் ஒருநிலை அடையப்பட வேண்டும். கேள்விகள் கேட்காத மனதின் ஒரு நிலை மட்டுமே பதிலாகும்.

அதுதான் தியானத்தைப் பற்றியதாகும். கேள்விகளை விட்டுவிடுவது, உள்ளே உள்ள பேச்சுக்களை விட்டுவிடுவது. உள்ளே உள்ள பேச்சுக்கள் நிறுத்தப்படும்போது, எல்லையற்ற அமைதி... அந்த எல்லையற்ற அமைதியில், எல்லா விஷயங்களும் பதிலளிக்கப்படும், தீர்க்கப்படும் - சொற்களால் தெரிவிக்காமல், சாதாரணமாகத் தீர்க்கப்படும். பிரச்சினைகள் இராது. பிரச்சினைகள் ஒரு பேதலிக்கும் மனோபாவமாகும். இப்போது மனம் இனி இல்லை, பேதலிப்பது போய்விட்டது... அங்கே கேள்விகள் இல்லை. எல்லாமே எளிமையாக உள்ளன. அங்கே இரகசியம் உள்ளது, ஆனால் அங்கே பிரச்சினை இல்லை. எதுவுமே தீர்க்கப்படவில்லை: ஆனால் தீர்ப்பதற்கு எதுவுமே இல்லை. எல்லாமே ஓர் இரகசியமாக, ஒரு மிகச்சிறந்த ஆச்சரியம் உங்களைச் சூழ்ந்து கொள்கிறது. எப்பொழுதெல்லாம் நீங்கள் பார்க்கிறீர்களோ, ஆழத்திற்கு மேல் ஆழமாக அதிசயங்கள் திறக்கப்படுகின்றன. உங்களுக்கு விடை கிடைத்து விட்டது என்பதால் அல்ல! இல்லை. உங்களுக்கு கேள்வியில்லை, அவ்வளவே. உங்களுக்கு கேள்விகள் இல்லாதபொழுது, வாழ்க்கை முழுவதுமே அதனுடைய முழு இரகசியத்தில் கிடைக்கிறது - அதுதான் பதிலாகும்.

ஒருவர் பொய்யான பிரச்சினைகள் பொய் என்று அடையாளம் காண்பது எப்படி என்பதை எவ்வாறு கற்றுக்கொள்வது? என்று கேட்காதீர்கள். ஒருவர் எப்படி பொய்யான பிரச்சினைகளை அடையாளம் காணுவார்? நீங்கள் பொய்யாக இருக்கிறீர்கள். அப்படியே இருக்கிறீர்கள். மாற்றம் இல்லாமல். உங்களுடைய இல்லாமையில் (நீங்கள் இல்லாத நேரத்தில்) எல்லாவிதமான பிரச்சினைகளும் எழுகின்றன. நீங்கள் இருக்கும் நேரத்தில் அவை மறைந்து விடும். விழிப்புணர்வு, பிரச்சினைகள் இல்லாமல் கேள்விகள் இல்லாமல் உள்ளது. விழிப்பற்ற நிலை, கேள்விகளுடன், பிரச்சினைகளுடன் உள்ளது - கணக்கற்ற கேள்விகள், கணக்கற்ற

பிரச்சினைகள். ஒருவராலும் அவற்றைத் தீர்க்க முடியாது. நான் உங்களுக்குப் பதில் சொல்லியபோதும் கூட, விடைகளிலிருந்து நீங்கள் அதிகக் கேள்விகளை உருவாக்குவீர்கள். அது ஒரு விடையாக இருந்து, அது இன்னும் அதிகக் கேள்விகளைக் கேட்பதற்கு ஒரு காரணத்தைக் குறிப்பிடுவதாக இருக்கும்.

உள்ளே உள்ள பேச்சுகளை விட்டு விடுங்கள். பின்பு பாருங்கள். ஆரம்பத்திலிருந்தே எதுவுமே மறைத்து வைக்கப்படவில்லை. எல்லாமே தெளிவாக உள்ளது. ஆனால் உங்கள் கண்கள் மூடப்பட்டுள்ளன என்ற ஜென் பழமொழி உள்ளது.



**நீங்கள் பித்துப் பிடித்தவராக உள்ளீர்கள், நீங்கள் என்னையும் பித்துப் பிடித்தவனாக்குகிறீர்கள்.**

சொல்லப்பட்டதில் முதல் பகுதி உண்மையானது, நான் பித்துப் பிடித்தவன். ஆனால் இரண்டாவது இன்னும் உண்மையல்ல. நான் உங்களை பித்துப் பிடித்தவனாக்குவதற்கு முயலலாம். ஆனால் நீங்கள் பித்துப் பிடித்தவனாக்கப்படவில்லை. ஏனென்றால் நீங்கள் அதிக புத்திசாலியாக உள்ளீர்கள். அதுதான் உங்களது கஷ்டமாகும். இன்னும் கொஞ்சம் பைத்தியமாக இருந்தால் விஷயங்கள் வித்தியாசமாக இருக்கும். நீங்கள்கூட அதிகமாக இந்தப் புத்திசாலித்தனம் என்று சொல்லப்படுகின்றதில் நிலைத்துள்ளீர்கள். நீங்கள் அதிலிருந்து அப்புறப்படுத்தப்பட வேண்டும்.

பாருங்கள், இயேசு உயிருடன் உள்ளபோது மக்களுக்குப் பித்துப் பிடித்தவராகக் காணப்பட்டார். புத்தர் பித்துப் பிடித்தவராகக் காணப்பட்டார். அவர்கள் சமுதாயத்தின் புத்திசாலித்தனத்தை நிராகரித்தார்கள் என்ற வகையில் பித்துப் பிடித்தவர்கள் ஆனார்கள். ஓர் இராஜ்ஜியத்தை விட்டு அதிலிருந்து தப்பிச் செல்வது என்பது பித்துப் பிடித்ததாகும் - ஒவ்வொருவரும் இராஜ்ஜியத்தை நோக்கிச் செல்கின்றனர். புத்தர் விட்டுச் சென்றார். பித்துப் பிடித்தது. அவர் பல மக்களைப் பித்துப் பிடித்தவராக்கினார்.

எப்பொழுதுமே அதுதான் ஒரு புத்தரின் வேலையாகும் - மக்களை பித்துப் பிடித்தவராக்குவது - ஏனென்றால் சமுதாயம்

உங்களை மிக மிக புத்திசாலித்தனத்தில் நீங்கள் ஏறக்குறைய பைத்தியமாகவே உள்ளீர்கள். நீங்கள் மிகச்சாதாரணமானவராக, அதிகமாகக் கெட்டுப்போய், பழக்கங்களாக, பழையதாக உள்ளீர்கள். உங்களால் மட்டுமே அப்படிப்பட்ட முட்டாள்தனமான விஷயங் களைச் சிந்திக்க முடியும். ஏனென்றால் சமுதாயம் முழுவதும் அவை புத்திசாலித்தனமான முயற்சிகள் என்று எண்ணுகின்றன... உதாரணமாக ஒரு மனிதன் பணத்தைப்பற்றி தொடர்ந்து எண்ணிக் கொண்டிருக்கிறான். நீங்கள் அவனைப் புத்திசாலி என்று அழைக்கிறீர்கள். அவன் பைத்தியம், ஏனென்றால் உண்மையிலேயே புத்திசாலியானவன் எப்படித் தொடர்ந்து பணத்தைப் பற்றிச் சிந்திக்க முடியும்? மிகச்சிறந்த விஷயங்கள் சிந்திப்பதற்கு உள்ளன. யாராவது ஒருவர் தொடர்ந்து கௌரவம், அதிகாரம், எப்பொழுதும் மக்களுடைய ஒப்புதலுக்காக எதிர்பார்த்திருப்பது பற்றி சிந்திப்பாரானால்; பைத்தியமாவார். ஏனென்றால் ஒரு புத்திசாலியான மனிதர் தன்னுடன் சந்தோஷமாக இருக்கிறார். எதற்காக அவர், மற்றவர்கள் அவரைப்பற்றி என்ன சொல்கிறார்கள் என்பதற்காக தொந்தரவு கொள்ள வேண்டும். அவர் தன்னுடைய சொந்த வாழ்க்கையை வாழ்கிறார். அவர் மற்றவர்களுடைய வாழ்க்கையை, அவர்களுடைய சொந்த வாழ்க்கையாக இருப்பதற்கு அனுமதிக்கிறார். அவர் ஒருவருடைய வாழ்க்கையிலும் தலையிடுவதில்லை. அவர் தன்னுடைய வாழ்க்கையில் ஒருவரும்கூட தலையிட அனுமதிப் பதில்லை.

மிகச்சிறந்த விஷயங்கள் சாத்தியமாகும். நீங்கள் கற்களைச் சேகரித்துக் கொண்டே இருக்கிறீர்கள். மிகச்சிறந்த விஷயங்கள் சாத்தியமாகும் - கடவுள் சாத்தியமாவார். நீங்கள் பணம், அதிகாரம், கௌரவம் என்ற முறையிலேயே சிந்தித்துக் கொண்டே இருக்கிறீர்கள். நீங்கள் பொருளற்றவற்றுக்காக உங்கள் வாழ்க்கை முழுவதையுமே வீணாக்கிக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் புத்திசாலி என்று கருதுகிறீர்கள். நீங்கள் புத்திசாலி இல்லை. உண்மையில், சமுதாயம் முழுவதுமே பைத்தியமாக உள்ளது. நீங்கள் புத்திசாலியாக இருப்பதற்கு பைத்தியமாக இருக்க வேண்டும். இல்லையென்றால் நிங்கள் சமுதாயத்திலிருந்து தொலைவிற்குச் செல்ல வேண்டும்.

எல்லாப் புத்தர்களும், இயேசுவும் உங்களைப் பித்துப் பிடித்தவராக்குவதற்கு முயலுகின்றனர். அவர்கள் உங்களை

உண்மையிலேயே புத்திசாலிகளாகச் செய்வதற்கு முயலுகின்றனர். ஆனால் அது பார்ப்பதற்கு பித்துப் பிடித்தது போலக் காணப்படுகிறது. இயேசு அவருடைய சீடர்களுக்கு, "யாரோ ஒருவர் உங்களை முகத்தில் அறைந்த பொழுது, மற்றொரு கன்னத்தையும் கூட கொடுங்கள்" என்று சொல்லும்பொழுது அது முழுதும் பித்துப் பிடித்ததே. யார் இந்த மனிதரைக் கவனிப்பார்கள்? அவர் என்ன சொல்லுகிறார்? அவர், "யாராவது ஒருவர் உங்களுடைய மேல் சட்டையை எடுத்துக்கொண்டால், உங்களுடைய உள்சட்டையையும் கூட கொடுத்து விடுங்கள்" என்று சொல்லுகின்றார். இது பித்துப் பிடித்ததே. ஆனால் அவர் அதைப்பற்றி தொந்தரவு கொள்வது என்பது மதிப்புள்ளதல்ல, என்று சொல்லுகிறார். அவன் உங்கள் மேல் சட்டையை எடுத்துக் கொள்கிறான். அவன் அதிக மரியாதையற்ற வனாக இல்லை - அவன் உங்கள் உள்சட்டையை விரும்புகிறான். ஆனால் அதை எடுத்துக்கொள்ள முடியவில்லை - ஒரு மரியாதை மிக்க மனிதன். அவனுக்கு முகத்தைக் காட்டுங்கள். அவனுள் கொஞ்சம் ஹிம்சை இன்னும் தாமதித்துக் கொண்டிருக்கலாம். அவன் அதிலிருந்து விடுதலையடையட்டும். அவனுக்கு மற்றொரு கன்னத்தைக்கூட காட்டுங்கள், அவன் முடித்துவிட்டு விடுதலை யடையட்டும் - நீங்களும்கூட விடுதலையடையுங்கள். இல்லை யென்றால் அவன் மறுபடி வரவேண்டும். அதனால் அது முடிக்கப்பட்டு மூடப்படட்டும். அவர் முழுதுமான புத்திசாலித்தனமானதைப் பேசுகிறார், ஆனால் பைத்தியமாகத் தெரிகிறது.

ஆமாம், நான் உங்களைப் பித்துப் பிடித்தவராக்குகிறேன். நான் பித்துப் பிடித்தவனாக உள்ளேன் - அது நிச்சயமானது - ஆனால் மற்றொரு பகுதி நிச்சயமற்றதாக உள்ளது. நீங்கள் உங்களுடைய புத்திசாலித்தனத்தைப் பற்றிக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் நான் முடிந்த முயற்சிகள் எல்லாம் செய்துகொண்டே இருக்கிறேன். நீங்கள் என்னைச் சுற்றிக்கொண்டே இருப்பீர்களானால், ஏதோ ஒருநாள் அல்லது மற்றதில் நீங்கள் அடைவீர்கள். நீங்கள் பித்துப் பிடித்த நிலைக்குச் சரணடைய வேண்டும். மதத்தைப் பற்றியது அவ்வளவுதான். புத்திசாலித்தனமானது என்று சொல்லப்படும் இந்த உலகத்தில் பைத்தியமாவதுதான் புத்திசாலியாவதற்கான ஒரே வழியாகும், ஏனென்றால் உலகம் பைத்தியமாக உள்ளது.

○

**மகாவீரர், புத்தர், ரஜினீஷ் ஏன் ஸ்தூலமாக பாடுவது, நடனமாடுவது இல்லை?**

அவர்கள் எப்பொழுதுமே அதைச் செய்து கொண்டிருக் கிறார்கள். ஆனால் சில ஆழமான கண்கள் பார்ப்பதற்கு உங்களுக்குத் தேவைப்படுகிறது.

நீங்கள் ஒருபோதும் உண்மையான கேள்விகளைக் கேட்ப தில்லை. மக்கள், "எங்கு கடவுள் மறைந்துள்ளார்?" என்று கேட்டுக் கொண்டே இருக்கிறார்கள். அவர்கள் ஒருபோதும் அவர்களுடைய கண்கள் திறந்திருக்கின்றனவா அல்லது இல்லையா என்பதைக் கேட்பதில்லை. அவர்கள், "அவரை நான் எங்கே தேடுவது?" என்று கேட்கிறார்கள். அவர்கள் ஒருபோதும், "நான் எப்படி அவருக்குக் கிடைக்கக் கூடியதாக இருப்பது. அதனால் அவர் என்னைத் தேடுவார்?" என்று கேட்பதில்லை.

நீங்கள் புத்தர், மகாவீரர், ரஜினீஷ் ஏன் நடனமாடுவதில்லை என்று கேட்கிறீர்கள். அவர்கள் எல்லா நேரமும் நடனமாடிக் கொண்டிருக் கிறார்கள். அவர்களுடைய முழு இருப்புத் தன்மையுமே (being) ஒரு நடனமாகும், ஆனால் அதைப் பார்ப்பதற்கு உங்களுக்கு வேறு சில கண்கள் தேவையாக உள்ளன. உங்களிடம் சரியான கண்கள் இல்லை. அவற்றை உருவாக்குங்கள்.

❍

உங்களுடைய பழைய வாக்குறுதிகளை மாற்றிக்கொள்ள விரும்புகிறீர்களா? ஒருவகையில் அது இதைப்போன்றது: "நான் வந்திருப்பது கற்றுக் கொடுப்பதற்கல்ல. ஆனால் உங்களைச் சிரிக்கச் செய்வதற்கே. சிரியுங்கள், சரணாகதி நிகழும்... இப்போது எந்த வாக்குறுதியும் தேவையில்லை.

நான் இதைச் சுலபமாக கையெழுத்துப் போட்டு விடுவேன். இது முற்றிலும் உண்மையானது - முதல் பகுதியைவிடச் சிறந்தது.

❍❊❍